# ராம் ராம்

## (ஆஞ்சநேயர் சரிதம்)

டி.பி. இராமானுஜம்

உடையவர் அரங்கம்
107 - F, சங்கீதா காலனி
அண்ணா முதன்மைச் சாலை,
கலைஞர் கருணாநிதி நகர், சென்னை - 600 078
தொலைபேசி : 4713969

# நூல் விவர அட்டவணை

| | |
|---|---|
| நூலின் பெயர் | ***ராம் ராம்*** |
| ஆசிரியர் பெயர் | டி பி இராமானுஜம் |
| பொருள் | **இதிகாசக் கதை** |
| பதிப்பாண்டு | முதற்பதிப்பு, 2001 |
| உரிமை | ஆசிரியர்க்கு |
| மொழி | தமிழ் |
| படிகள் | 1000 |
| அளவு | டெம்மி |
| தாள் | 13 7 கி கி வெள்ளைத் தாள் |
| கட்டமைப்பு | சாதா பைண்டிங் |
| அச்சு எழுத்து | 12 புள்ளி |
| மொத்தப் பக்கங்கள் | I - X + 526 = 536 |
| விலை | ரூ **60**/- |
| பதிப்பாளர் | ***உடையவர் அரங்கம்***<br>107 - F, சங்கீதா காலனி<br>அண்ணா முதன்மைச் சாலை,<br>கலைஞர் கருணாநிதி நகர்,<br>சென்னை - 600 078<br>தொலைபேசி 4713969 |
| கணினி அச்சு | ***எஸ்.ஆர். கிராஃபிக்ஸ்***<br>75(29/2) சீனிவாசபெருமாள்<br>சந்நிதி முதல் தெரு, இராயப்பேட்டை,<br>சென்னை - 600 014 ☎ 8207951 |
| அச்சிட்டோர் | ***மூவேந்தர் அச்சகம்***<br>75(29/2) சீனிவாசபெருமாள்<br>சந்நிதி முதல் தெரு, இராயப்பேட்டை,<br>சென்னை - 600 014<br>☎ 8267189 |

# கனிவுரை

திரு. ***எம்.சி. ராமமூர்த்தி,***
எம்.ஜி.ஆர். புரொடக்ஷன்ஸ், சென்னை

எம்.ஜி.ஆர். புரொடக்ஷன்ஸ் என்ற எங்கள் தோட்டத்தில், காய்த்துக் குலுங்கும் கனிமரம், நண்பர் டி.பி. இராமானுஜம்.

இவர் ஆக்கிய 'அற்புதர் இராமானுஜர்' என்னும் நாடக நூல், கலைத் துறை வித்தகர்களால் அற்புதம் எனப் பாராட்டப் பெற்றது.

'பாண்டுரங்கன் தரிசனம்' என்னும் இவரது நாடக நூலும், பக்தியைப் பரிமாறுகின்ற பாண்டமாக இருக்கிறது. இதைத் தொலைக்காட்சித் தொடராக, நான் தயாரித்துக் கொண்டிருக்கிறேன்.

இவரது மற்றொரு நாடக நூலான 'ஆழ்வாரும் ஆண்டாளும்' திருப்பாவையைத் தித்திக்கத் தித்திக்கச் சொல்கிறது. ஆண்டாளின் வரலாற்றை, அமுதாகத் தந்திருக்கிறார்.

மெய்ப்பொருள், மேதினியின் எந்தத் திசையில் இருந்தாலும், அதைக் கொண்டாடிக் கூத்தாடும் குணம், கலைத் துறையினர்க்கு உண்டு. அந்தப் பண்புதான், இவரை இயேசுவின் கதையை எழுத வைத்திருக்கிறது. 'ஞானசௌந்தரி' என்னும் இவரது நாடக நூலைக் குறிப்பிடுகிறேன்.

பிரபந்தம் பேசிய வாய், இயேசுவின் பெருமையையும் பேசியது. இந்த எண்ணம் எல்லோர்க்கும் இருந்துவிட்டால், மத மாச்சர்யமின்றி இங்கேயே சொர்க்கத்தைக் கண்டுவிடலாம்.

இப்பொழுது ஆஞ்சநேயர் கதையை, 'ராம் ராம்' என்ற தலைப்பிலே, நாடக நூலாகத் தந்திருக்கிறார். பட்டை தீட்டிய வைரமாக, இந்த நூல் ஜொலிக்கிறது.

அந்த ராமதூதனை அறிந்துகொண்டால், ராமனை அறிந்து கொள்ளலாம். காமனை வென்று விடலாம். ராமன் புகுந்த நெஞ்சில், காமம் புக முடியாது. லோபம் தலை காட்ட முடியாது. ஆஞ்சநேயர் கதை, தொண்டு உள்ளத்தை, நமக்கு அணியாகக் கொண்டு வந்து சேர்க்கும். புலன் அடக்கத்தைப் பொக்கிஷமாகக் கருத வைக்கும். பணி செய்து வாழ்ந்தால், நம்மைப் பிணைக்கும் பிணி ஏதும் வராது என்பதை உணர வைக்கும்.

பிரம்மச்சாரியான ஆஞ்சநேயரின் வரலாற்றை, இன்னொரு பிரம்மச்சாரி எழுதுவதே பொருத்தமானது. அந்த வகையிலே, நண்பர் இராமானுஜம், முழுத் தகுதியோடு, மூண்டெழுந்த ஈடுபாட்டோடு, எந்த விவரமும் சிதறிப் போகாமல், எல்லா முத்துக்களையும் எடுத்துக் கோத்து, அழகு மாலையாகத் தந்திருக்கிறார்.

கம்பனையும், வால்மீகியையும், துளசியையும், நூல் முழுக்கப் பரக்கப் பார்க்க முடிகிறது.

எங்கள் முற்றத்தில் உள்ள சிற்பம், கலை எழிலைத் தெறிப்பது கண்டு மகிழ்கிறேன்.

இந்த நூல், களத்திலே வெற்றி பெற, இலக்கிய வட்டத்திலே, தன் இலச்சினையைப் பொறித்திட, என் வாழ்த்தை, என் பங்காகத் தருகிறேன். இறைவன் பங்கையும், இவர் பெறவேண்டுமென்று, அந்த இறைவனை யாசிக்கிறேன்.

# நெகிழ்வுரை

திரு. **வா.திருமலை எம்.ஏ.,**
துணைப் பொது மேலாளர் (ஓய்வு) இந்தியன் ஓவர்சீஸ் வங்கி - சென்னை.

இந்த நூலின் ஆசிரியர், திரு.டி.பி. இராமானுஜம் அவர்கள், நாற்பது ஆண்டுகளுக்கு மேலாகவே, எழுத்தை ஒரு வேள்வியாக எண்ணித் தொண்டாற்றி வருபவர். 'எழுதுகோல் தெய்வம்; இந்த எழுத்தும் தெய்வம்' என்று சொன்னவன் பாரதி. அதனை நெஞ்சிற் பதித்துக் கொண்டு, கொஞ்சமும் பாதை மாறாமல், நாலு பத்து ஆண்டுகளாக நடை போடுபவர்.

இவர் எந்த நூலை எழுதினாலும், அந்தந்த வரலாற்றில் புதைந்துள்ள சில பல சுவையான பகுதிகளைத் தேர்ந்தெடுத்து, நாடக வடிவில், தமக்கே உரித்தான பழகு தமிழில், அழகு நடையில் வடித்தளிக்கும் ஆற்றல் பெற்றவர்.

இந்த நூல், இவருடைய முந்தைய நூற்களைவிட, அதிகப் பக்கங்களுடன், கூடுதல் செய்திகளைச் சுவையாகச் சொல்லும் திறன் படைத்ததாக மிளிர்கின்றது. இதை முழுமையாகப் படித்து முடித்தவுடன், எனக்குக் கம்பனுடைய காவியத்தில், காற்பகுதியைப் படித்த உணர்வே வந்தது. கவிச் சக்கரவர்த்தி, கம்ப நாட்டாழ்வானின் மந்திரச் சொற்களைக் கொண்டே, கதையைச் சொல்லி, நல்விருந்து படைத்திருக்கிறார்.

ஆஞ்சநேயரின் வரலாற்றினை விரிவாகப் பேசுவதற்காக, இவர், பல்வேறு நூற்களைப் புரட்டிப் படித்து, அவற்றின் சாரத்தை, இங்கு எழுத்துக்களாகக் கோத்திருக்கிறார்.

அனுமன் ஒரு நைஷ்டிகப் பிரம்மச்சாரி. ஆசிரியரும் அப்படியே. எனவே, இவர் இந்த வரலாற்றை எழுதுவதில், ஒரு பொருத்தம் உண்டு எனப் பிறர் போலவே நானும் எண்ணுகிறேன்.

கதையில், இந்த நைஷ்டிகப் பிரம்மச்சாரியை, சுவர்ச்சலாதேவி என்ற பெண் சுற்றிச் சுற்றி வந்தாள் என்றும், பின்னர் அனுமன் மூலம் ஒரு புத்திரனையும் பெற்றெடுத்தாள் என்றும், கதையின் இடையில் ஒரு கனமான முடிச்சினைப் போட்டு, இறுதியில் அதனை அவிழ்க்கும்பொழுது, அனுமனின் பிரம்மச்சரிய விரதத்திற்கு, எந்த விதச் சேதாரமும் ஏற்படவில்லை என்பதனை, அந்த ஆரணங்கு மூலம் சொல்லும் திறன், அனுபவிக்கத்தக்கது. படிப்பவர்கள் முதலில் திடுக்கிட்டாலும், பின்னர் மகிழ்ச்சியில் திளைக்க வைக்கும் வண்ணம், இப்பகுதி அமைந்திருக்கிறது.

'வாழ்வில் எந்தவொரு விளைவும் எதிர் விளைவை விளைவிக்கும்' எனும் அறிவியல் கோட்பாட்டை, நூலின் தொடக்கப்பகுதியில் பார்க்க முடிகிறது. ராவணன் வீழ்ச்சிக்கு, அவனே குழி தோண்டினான் என்பதை, ஆசிரியர், பல்வேறு சம்பவங்கள் மூலம் மெய்ப்பிக்கிறார்.

அது மட்டுமல்ல, வரம் அளிக்கும் வல்லமை பெற்ற அந்த மூவர், சிவன், விஷ்ணு, பிரம்மா ஆகியோர், எப்படி ஒருவரையொருவர் விட்டுக் கொடுக்காமல், அதே நேரத்தில், தம்மிடம் சரணம் சொல்லி வருபவர் ரணங்களைப் போக்கும் உபாயங்களைச் சொல்லி, அபாயங்களை விலக்குகிறார்கள் என்னும் பகுதியைப் படிக்கும் பொழுது, தற்கால ஜனநாயக முறையின் பரிணாம வளர்ச்சி, அதிலிருந்துதான் தொடங்கி இருக்குமோ என எண்ணத் தோன்றுகிறது.

இந்த நூலின் தலைப்பு 'ராம் ராம்!'. எத்துணை மதுரமான மந்திரச் சொற்கள்! இதனைச் சொன்ன நா தித்திக்கும்! எழுதிய கை மணக்கும்! இந்த இந்தியத் திருநாட்டில், வடகோடி இமயத்தில் இருந்து, தென்கோடி குமரி முனைவரை, மக்கள் மறவாமல், மனதால் சிந்தித்து, வாயால் வந்திக்கும் சொற்கள் இவை என்றால், அது மிகை அன்று.

வெல்க இவர் முயற்சி! வாழ்க! வளர்க!

# மகிழ்வுரை

***'இலக்கியச்சுடர்' மூவேந்தர் முத்து***

ஆசிரியர், தமிழ் மூவேந்தர் முரசு, சென்னை - 14.

தொண்டு செய்து, தெய்வ நிலைக்கு உயர்ந்தவர் ஆஞ்சநேயர். ஆம்! வலிமை மிக்கவர்; இளமை குன்றாதவர்; மனத்தூய்மை மிக்கவர்; மனம் நாடும் மணம் கொள்ளாதவர்; ஆன்மீக ஆற்றல் கொண்டவர்; உடல் வலிமை மட்டுமின்றி உள்ள வலிமையும் கொண்டவர்; இறவாமை எய்து சிரஞ்சீவியாக விளங்குபவர்; இராமனையே உயிர்-உணர்வில் கலந்து இன்புறுபவர்.

'சஞ்சீவி'யைக் கொணர்ந்தவர்; கடலைத் தாண்டியவர். சீரார் இராமபிரானின் துணைவியார், சீதா பிராட்டியார் இலங்கையிலிருந்து, இராவணனின் காவலில் இருந்து மீள்வதற்கு, பேருதவியாக நின்றவர். இதயத்தைப் பிளந்து காட்டியபோது, 'இராமபிரான்' திருவுருவம் மட்டுமே காட்சி தந்திடத்தக்க தனிப்பெரும் சான்றோர் அனுமான் எனப்படும் ஆஞ்சநேயர். அவர், நம் தமிழ் இனத் தோன்றல் அஞ்சனாதேவியின் மைந்தன். அனுமன் இன்றேல் 'இராமாயணம்' எனப்படும் 'இராமகாவியம்' இல்லை. அத்தகு சிறப்பெல்லாம் விளங்கப்பெற்ற ஆஞ்சநேயர், இராமபிரானின் ஆன்மநேயர் அவருடைய வரலாறு பற்றி, இனிய தமிழில், புதிய

கோணத்தில் எளிய நடையில் எழுதியுள்ளார் திரு. டி.பி. இராமானுஜம் அவர்கள்.

இந்நாளில் எங்கு காணினும் 'ஆஞ்சநேயர்' கோயில்களும் அங்கே சென்று வணங்கும் பக்தர்களும் எண்ணற்க்ரிது. அவர் கருத்தெல்லாம் இவ்ஆஞ்சநேயர் அருளான 'ரா[illegible] ராம்' என்னும் நூல் பயன்தரத்தக்கது என்பதோடு திரு. டி.பி. இராமானுஜம் அவர்களைப் பாராட்டுவதில் பெருமையுறுகிறேன்.

# நன்றியுரை

'ராம் ராம்' என்ற ஆஞ்சநேயரின் சரிதமாகிய இந்த என் நூலுக்கு, 'குளிர் அருவி வேங்கடத்து என் கோவிந்தன்' ஆசியும், பொருள் உதவியும் கிடைத்திட்ட பேறு பெற்றிருக்கிறேன்.

அந்த 'வேங்கடத்துச் செங்கண்மால் சேவடி'க்கு, என் சிரம் தாழ்ந்த வணக்கங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அவன் கோயிலின் வாசல், படியாய்க் கிடந்து, அவன் பவளவாயைக் காண்பதுபோல், அங்கு இருந்து பணியாற்றி மகிழும், திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாருக்கு, இந்த நூல் வெளிவர உறுதுணையாக இருந்தமைக்காக, என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

'குரு பிரம்மம்' என்ற வாசகப்படி,

இறை அருட்கலைச் செல்வர், திரைப்பட இயக்குநர், திரு. கே. சங்கர் அவர்களுக்கு, என் குரு வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழகம் கண்ட தவப்புதல்வர், தென்றலாக வீசிய தேனினும் இனிய நாயகர், வான் மழை, வள்ளல் உருவெடுத்து வந்ததுபோல் வந்த வரலாற்று நாயகர், நம் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். அவர்களின் வழித்தோன்றல், திரு. எம்.சி. ராமமூர்த்தி அவர்கள், என்பால் கொண்ட அன்பின் காரணமாக நல்லதொரு கனிவுரை, இந்நூலுக்கு வழங்கியிருக்கிறார்கள்.

அவர்களுக்கும், எப்பொழுதும் என் எழுத்துக்கு நல்ஆதரவை நல்கும், அவர்களின் துணைவியார் விஜயலட்சுமி அம்மையாருக்கும், என் வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முறைப்படி தமிழ் கற்று, அதில் முதுகலைப் பட்டம் பெற்று, தமிழ் வித்தகர் மு.வ. அவர்களின் நல் மாணவராகத் திகழ்ந்து, தமிழ் மலையாக இருக்கின்ற அன்பர் திருமலை அவர்கள், ஆஞ்சநேயரைப் பேசுகின்ற அருட் தொண்டைப் பாராட்ட வேண்டும் என்ற எண்ணத்திலே, இங்கு பலபடத் தமிழைப் பழச்சுளைகளாக உதிர்த்திருக்கிறார்கள். என் நெஞ்சு மகிழ, நெகிழ்வுரை தந்திருக்கிறார்கள். அவர்களுக்கும் நன்றி தெரிவித்து மகிழ்கிறேன்.

தமிழ் எழுதும் எழுத்தாளருக்கெல்லாம், தக்க துணையாக இருப்பவர், மூவேந்தர் முத்து அவர்கள். அந்த இலக்கியச்சுடரின் ஒளியில்; நானும் நல்ல தடம் கண்டு, இந்நூலை வெளியிட்டுள்ளேன். நல்வழிகாட்டிய அந்த 'மூவேந்தர்', நல்லதொரு பாராட்டுரையும் இந்நூலுக்கு வழங்கியிருக்கிறார்கள்.

அவர்களுக்கு நன்றி தெரிவிக்கின்ற இனிய கடமையையும், இதய பூர்வமாக இங்கு ஆற்றுகிறேன்.

மூவேந்தர் முத்து அவர்களின் புதல்வியார், திருமதி. பிரபாவதி அவர்களுக்கும், புதல்வர். மாறன் அவர்களுக்கும், மற்றும் மூவேந்தர் அச்சகத்தில் பணி புரியும் பண்பாளர்கள், உமாகாந்தன் அவர்களுக்கும், மணவாளன் அவர்களுக்கும், உமாமகேஸ்வரி அவர்களுக்கும், அவர்களின் நல் ஆதரவிற்காக, என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஒளி அச்சுப் பணியினைப் பாராட்டும்படி செய்த, எஸ்.ஆர். கிராஃபிக்ஸ் நிறுவனத்திற்கு என் நன்றி. முகப்பு ஓவியம் வரைந்து சிறப்பித்த ஓவியர் ஜமால் அவர்களுக்கும் நன்றி.

இப்புத்தகத்தின் கையெழுத்துப் பிரதியைப் பார்த்த உடனேயே, ஐம்பது புத்தகங்களுக்கான பணத்தை, முன்கூட்டியே அளித்திட்ட புரவலர்கள், லிபியா ராமானுஜம், காசினி வேந்தினி தம்பதியர்க்கு, என் நன்றியைக் கூறி மகிழ்கிறேன்.

ஆஞ்சநேயர் சிவாம்சம் என்பது, வடநாட்டில் வழங்கி வரும் நம்பிக்கை. ராமரும் ஆஞ்சநேயரும் சிறுவர்களாக இருந்தபோதே, அயோத்தி அரண்மனையில், நட்புக் கொண்டிருந்தனர் என்று, வடபுலத்து நூற்கள் கூறுகின்றன. அதையே, இங்கு நான் எடுத்தாண்டிருக்கிறேன். ராமர் புகழைப் பேசப் பிறந்தவர், தன் இளமைக் காலத்திலேயே, அந்த இலட்சிய புருஷரைப் பற்றிப் படர்ந்து விட்டார் என்பதுதானே பொருத்தமாக இருக்கும்; கதையில் கனிச் சுவையைச் சேர்க்கும்.

இந்நூலைப் படைப்பதற்கான மன ஆற்றலையும், உடல் ஆரோக்கியத்தையும் எனக்கு அளித்திட்ட இறைவனைத் துதித்துப் போற்றி, இங்கு, என் உரையை, நிறைவு செய்கிறேன்.

**- ஆசிரியர்**

# ராம் ராம்

## (ஆஞ்சநேயர் சரிதம்)

### காட்சி - 1

*அச்சுதன் துயிலும் அணி திருப்பாற்கடல்*

[திருமகள் காலடியில் அமர்ந்திருக்கப் பாம்புப் படுக்கையில், தன் வலக்கையைத் தலைக்குக் கீழ் வைத்து, அறிதுயில் கொள்ளும் கோலத்தில் பரந்தாமன் காட்சி அளிக்கிறார்.

தேவர்களும், தானவர்களும், சித்தர்களும், வித்தியாதரர் களும், இயக்கர்களும், கந்தர்வர்களும், நாகர்களும், இங்கு வந்து, திரண்டு, கலக்கத்தோடு கைபிசைந்து நிற்கின்றனர்]

**திருமகள் :** *கலக்கத்தோடு நீங்கள் எல்லாம் இங்கு வந்திருப்பதன் காரணம் என்ன?*

**ஒரு முனிவர் :** பகவான் உறக்கத்திற்கு ஊறு செய்கின்றோமோ என்று அஞ்சுகிறோம்.

**திருமகள் :** *அது கள்ள உறக்கம். உறக்கத்திலும் உலகையெல்லாம் பார்க்கின்ற அதிசய உறக்கம். அறிதுயில்!*

**ஒரு தேவர் :** *அதை அறிவோம் தாயே. எங்கள் ஒவ்வொருவர் கண்களாலும், பகவான் எல்லாவற்றையும் பார்க்கிறார்.*

*இந்தப் பாற்கடலில் ஆடும் பவித்திரமான அலைகள், அறம் நிலைக்கும்; மறைகள் ஓங்கும்; உலகம் பிழைக்கும்; உவகை தழைக்கும் என்று சொல்வன போல, ஆர்ப்பரித்து ஆடுகின்றன தாயே!*

**ஒரு தானவர் :** ஓடி வந்த காலோடு , உடைந்த மேனியோடு, வாடிய முகத்தோடு, வந்து நிற்கும் எங்களுக்கு, இங்கு வீசுகின்ற குளிர் தென்றல், தண்ணீர்த் துளிகளை மாத்திரம் எங்கள்மீது எடுத்து வீசவில்லை. எங்களுக்கு வாழ்வு உண்டு என்ற வரத்தையும் வீசிச் செல்கிறது - தாயே!

**ஒரு சித்தர் :** தெய்வம் அதுவா, இதுவா என்று ஐயுறும் அறிஞர்கட்கும், காயமது உலர்த்தித் தவம் புரிவோர்க்கும், யோகியர்க்கும், சுருதியைப் பேசும் ஞானியர்க்கும், அகப்படாத தெய்வம், சரண் என்று வந்திருக்கும் எங்களுக்கு, அரண் என, அபயம் அளிக்கும் இறை என, இங்கு தெரிகின்ற காட்சியைத் தெவிட்டாமற் காண்கின்றோம்.

**ஒரு வித்தியாதரர் :** பாற்கடல் மேல், ஒரு கருங்கடல் பரந்து கிடப்பதுபோலக், கோலம் கொண்டிருக்கும், இந்தத் தரிசனத்தைப் பார்த்த பிற்பாடு, எங்கள் குறை நீங்கிப் போகாதா? எங்கள் பகை மாய்ந்து போகாதா?

**ஓர் இயக்கர் :** இந்தச் சிவந்த சேவடி மலரானைத் தொழுத கைகள், தோல்வி கண்டு துவளுமோ?

**ஒரு கந்தர்வர் :** மின் ஒளி காட்டும் இந்தப் பீதக ஆடை, எங்களுக்கு வெற்றிக் கொடியாகத் தெரிகிறது தாயே!

**ஒரு மண்ணுலகத்தோன் :** தாமரை பூத்த உந்தியுடையவர், தர்மம் பூத்திருக்க வழி செய்யாமலா போய்விடுவார்?

**ஒரு நாகன் :** தென் திரைக்கடலில் எழும் தினகரன் போல், திகழ் ஒளி ஆர மார்புடையவர், தீமை என்னும் இருளை, அழிக்காமலா இருந்து விடுவார்?

**ஒரு தேவர் :** மலை போன்ற திண் தோள்களை உடையவர், நிலை பெயர்ந்து எழுந்துவிட்டால், அதர்மம் அடங்கி, ஒடுங்கி, முடங்கி விடாதா?

**வேறொருவர் :** பாவையர் பதறும் இவர் பவள வாய்ச் சிரிப்பு, எதிரிகளை எரிக்கும் நெருப்புத் தெறிப்பு ஆயிற்றே!

**மற்றொருவர் :** வில்லாகக் கிடக்கும் தன் புருவத்தை, இவர் தன் கையில் எடுத்துக் கொண்டால், பகைவர், புகையாகி மறைந்தொழிவரே!

**பிறிதொருவர் :** இவர் குளிர் மதிவதனம், எதிரிகளுக்குக் கொதிக்கும் நெருப்புக் கோளம்!

**மற்றொருவர் :** இவர் கையிலுள்ள சங்கும், சக்கரமும், வில்லும் வாளும், தண்டாயுதமும், பக்தன் கண்களுக்கு அழகாகத் தெரி கின்றன. பகைவனுக்கோ அச்சுறுத்த அவை இருக்கின்றன.

**திருமகள் :** இப்படிப் பகவானைத் துதித்துப் பேசுவதால், எனக்கொன்றும் துன்பமில்லை. இதைக் கேட்டு, உங்க ளோடு சேர்ந்து, நானும் மகிழ்கிறேன். வந்த நோக்கத்தைத் தெளிவாகச் சொல்லிவிட்டால், வழி பிறக்கும்; உங்கள் வாட்டம் தீரும்.

தேவேந்திரா! உள்ளங்கையைத் திறந்து காண்பிப்பது போல, உங்கள் உள்ளத்தை உறுத்துவது எது என்பதைத் தெரிவித்து விடு.

**தேவேந்திரன் :** இந்த உலகினையெல்லாம் படைத்துக் காத்து, அழித்து, உண்டு உமிழ்ந்து அளந்து, தோண்டியெடுத்து ஆண்டு கொண்டிருப்பவருக்கு, விண்டுரைக்க வேண்டுமா?

காற்றாகிக், கனல் ஆகி, நீரோடு நிலன் ஆகி, எண்ணிலா உயிர்களாகிச் சூரிய சந்திரச் சுடர்களாகிச், சுருதியாகிச், சிவன் பிரம்மனாய்த் தோற்றம் ஆகி, அலகிலா விளையாட்டு ஆடுவாருக்குத் தெரியாதது எது?

பகவானை அறிந்தார் யாருமில்லை. அவர் அறியாதது எதுவுமில்லை. இருந்தாலும், அழுகின்ற குழந்தை போல, எங்கள் வேதனையை வெளிப்படையாகக் கூறுகிறோம்.

இரக்கம் இல்லா அரக்கனான ராவணன் என்பவன், ஊழி நெருப்புப்போல, எங்களை எரிக்கின்றான்; தர்மத்தை அரிக்கின்றான். பெற்ற தாய் என எமைப் பேணும் பெரு மானே! துன்பம் வந்தபோது, உம் திருவடி சேர்வதல்லால், வேறு எங்கு போவோம் நாங்கள்?

எங்களுக்கு அபயம் அளித்து, அந்த அரக்கனை அழித்துத் தர்மத்தை அரியணை ஏற்றுங்கள்.

எங்கள் வேண்டுதல் இதுவே. எங்கள் சிந்தை நோய் தீர்க்கும் மருந்து இதுவே. எங்களுக்கு வாழ்வு தரும், நல் அமுதாகிய சுவை விருந்தும் இதுவே.

**பகவான் :** *(கண் விழித்தபடி) சிவனார்க்கு, இந்தச் சேதியைத் தெரிவித்து விட்டீர்களா?*

[அனைவரும் இதுகேட்டு, மௌனமாக இருக்கின்றனர்]

**பகவான் :** *கயிலை மலைக்குச் சென்று, அக்கண்ணுதலானை வழிபட்டு, உங்கள் குறையைக் கூறி இறைஞ்சுங்கள். அந்த இறைவன் உங்கட்கு இனியன செய்வார்!*

## காட்சி -2

*கயிலை மலை*

[திருப்பாற்கடலில் திரண்டிருந்த கூட்டத்தார், திருமால் சொற்படி, கயிலை மலையில் குவிகின்றனர்.]

**ஒருவர் :** உலகமெலாம் குலைந்து நடுங்க, கொதித்து வரும் ஆல *காலத்தை அமிழ்தாக மிடற்றில் அடக்கிவைத்த அண்ணலே! சரணம்! சரணம்!*

**இன்னொருவர் :** *காலனைக் காலால் உதைத்த காலகாலனே! சரணம்! சரணம்!*

**வேறொருவர் :** தன் உடம்பின் இடத்து தேவியை, முடியிடத்தில் *கங்கையைத் தரித்திருக்கும்* தயாளனே! நின் தாள் சரணம்!

**பிறிதொருவர் :** தவமாமுனிவர் சூழ்ந்திருக்கும் உன்முன் கை கூப்பி நிற்கின்றோம். எங்களைக் கை தூக்கி விடவேண்டும்.

**மற்றொருவர் :** பவளமலைபோல் ஜ்வலிக்கும், நின் மழு ஆயுதம் இருக்க, உன் அடியார்களாகிய எங்களுக்குப் பகை *வரலாமா?*

**வேறொருவர் :** எந்தாயே! எருது ஏறும் எம் இறைவா! ஏழு உலகும் தந்தவரே! எழிற் கொன்றைத்தார் அணிந்தவரே! இந்த ஜெகம் உய்ய, அருள் செய்யுங்கள். வஞ்சகர் வீழ, வழி செய்யுங்கள்.

**சிவனார் :** தேவேந்திரா! திருமால் உங்களையெல்லாம் இங்கு அனுப்பி வைத்தாரா?

**தேவேந்திரன் :** ஆம் இறைவா!

**உமையவள் :** சிவனார் உங்களுக்கெல்லாம் வாழ்வு தருவார் என்று சொல்லித், திருமால் உங்களையெல்லாம் இங்கு வழியனுப்பி வைத்திருக்கிறார். இல்லையா?

**தேவேந்திரன் :** ஆம் தேவி!

**உமையவள் :** காக்கும் தெய்வம் அவர்தானே! இவர் இடுகாட்டில் கருக்கும் தெய்வந்தானே!

**தேவேந்திரன் :** இடி எனக் குமுறும் மேகம், மழையைக் கொடுத்து, உயிர்களை வாழ வைக்கவில்லையா? கருணை பொழிவதில், சங்கரர் ஒரு சாகரம் தேவி!

**உமையவள் :** (சிவனாரை நோக்கி) முந்திரிக்கொட்டை போல, ஆலகாலத்தை விழுங்கினீர்கள்! இப்பொழுது எந்தச் சிக்கலுக்கும், நீங்கள்தான் தீர்வென்று சிக்கிக் கொண்டீர்கள்!

**சிவனார் :** இவர்கள் எதற்காக வந்திருக்கிறார்கள் என்பதை, இன்னும் இவர்கள், வாய்விட்டு உரைக்கவில்லையே. சரணந்தான் சொல்லி முடித்திருக்கிறார்கள். இவர்களுடைய ரணம் என்னவென்று இன்னும் தெரியவில்லை.

[இப்பொழுது பயங்கரமான இடிச்சத்தம் கேட்கிறது. தேவர்களும் மற்றவர்களும் இது கேட்டுப் பதறுகின்றனர். சில தேவர்கள் அங்கு ஓடி வருகின்றனர்.]

**ஓடி வந்த ஒரு தேவர் :** அந்த அரக்கன் ராவணன், தேவ லோகத்தை இப்பொழுது நிர்மூலப்படுத்துகிறான். தேவ கன்னியரைச் சிறையெடுக்கிறான். அமராவதி நகரம் சூறையாடப்படுகிறது.

**ஒரு முனிவர் :** அந்தப் பாதகன், மண்ணுலகிலும், எங்களைப் போன்ற முனிவர்களை, யாகம் செய்ய விடுவதில்லை.

தேவர்களுக்கும் தெய்வத்திற்கும் ஆகுதியைக் கொடுத்து, அவர்களுக்கு வலிமையைச் சேர்த்து விடாதீர்கள் - என்று உறுமுகிறான். யாக குண்டத்தை அழிக்கப் பேய்களை ஏவி விடுகிறான்.

**தேவேந்திரன் :** இறைவா! இந்த இடரை நீக்கவே இங்கு வந்து நிற்கின்றோம்.

*திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளே! அந்த ராவணன் இருக்கும் திக்கை நோக்கி, ஒரு புறம் நீ பார்த்தாலே போதும், அதர்மம் பஸ்பமாகிவிடும்! தர்மம் பயிராகிவிடும்!*

**சிவனார் :** அந்தப் பிரம்மன், அந்த ராவணனுக்கு, வரங்களைக் கொடுத்து, அவனை மலை என வளர்த்து விட்டான்.

இளைத்தவர்கள்தான் தர்மம் பேசுவார்கள். வலுத்தவன் அதற்குக் கட்டுப்படமாட்டான். வேண்டாத வலிமையைச் சேர்த்துக் கொண்டவன், வேண்டாத சுமை என நீக்கப்படவேண்டும்.

*பிரம்மனைப் போய்ப் பாருங்கள். அவர் காட்டுகின்ற வழி, தர்மத்தை மீட்கும் வழியாக இருக்கும்.*

## காட்சி -3

*சத்தியலோகம்*

[பிரம்மனிடம் முறையிட, தேவர்களும் பிறரும் வந்து நிற்கின்றனர்]

**தேவேந்திரன் :** சத்தியமாகச் சொல்கிறோம். சிவனார் சொல்லித் தான், இங்கு சத்தியலோகம் வந்து, தங்களிடம் முறையிடு கிறோம்.

பிரம்ம தேவரே! அந்த ராவணனுக்கு வரங்களைக் கொடுத்து, அவனைப் பிசாசு ஆக்கியது நீங்கள்தான் என்று சிவனார் கூறுகிறார்.

**பிரம்மன் :** தவத்திற்குப் பலனைக் கொடுப்பது முறைதானே? அவன் அறத்திற்கு மாறாக நடந்தால், அதற்கு நான் எப்படிப் பொறுப்பாவேன்?

அவனுடைய உக்கிரமான தவத்தைப் பார்த்து, எந்த இறைவனாலும் அலட்சியமாக ஒதுங்கிப் போக முடியாது!

## காட்சி -4

*அடர்ந்த காடு*

*முன்னர் நடைபெற்ற நிகழ்ச்சி*

[அடர்ந்த காட்டில், யாக நெருப்பு எரிந்து கொண்டிருக்க, ஒற்றைக் காலில் நின்றபடி, ஒற்றைத் தலையோடு, கண் மூடித் தவம் செய்து கொண்டிருக்கிறான் ராவணன் ]

(பிரம்மன் குரல், இப்பொழுது பின்னணியாகக் கேட்கிறது )

**பிரம்மன் குரல் :** *இப்படி ஒற்றைக் காலில் நின்றபடி, ஒற்றைத் தலையோடு, ஓராயிரம் ஆயிரம் ஆண்டுகள், உண்ணாவிரதம் இருந்து, உக்கிரமாகத் தவம் செய்து கொண்டிருந்தான் ராவணன்.*

*ராவணனுக்குப் பத்துத் தலைகள்! அவன் தசக்கிரீவன்!*

*ஒன்பது தலைகளை, ஒன்பதாயிரம் ஆண்டுகள் தவம் செய்து, ஆகுதியாக, ஒவ்வொன்றாகச் செந்தீயில் அரிந்து போட்டுவிட்டான்.*

*இன்னும் பிரம்மாவாகிய நான் வரம் தர வில்லையென்று, எஞ்சியிருக்கும் ஒரு தலையையும் அரியப் போகும் பொழுது, அவன் முன் தோன்றி, அவன் கேட்ட வரத்தைத் தந்தேன்.*

*மனிதரை ஒரு பொருட்டாக மதியாமல், மற்ற தேவாதி தேவர்களால், தெய்வங்களால், தனக்கு மரணம் நேரக் கூடாது என்று வேண்டினான். உவந்து அளித்தேன்.*

## காட்சி -5

*சத்தியலோகம்*

**பிரம்மன் :** இதுதானே நடந்தது.

*இதற்குப் பிறகு சிவனார், அவன் பித்தத்தை அதிகரிக்கச் செய்யவில்லையா? அவன் சித்தம் போல் வரம்*

*அருளவில்லையா? அவன் பாடிய சாமகானத்திற்கு மயங்கி, ஒரு பாராட்டு மொழியோடு நிறுத்தியிருக்கலாம். அதை விடுத்து, சந்திரஹாசம் என்னும் தெய்வீக வாளையே அவனுக்கு வழங்கி, அவனைக் கட்டு அறுத்த மூர்க்கனாக்கி விட்டார். அந்தச் சம்பவங்களை நினைத்துப்பார்த்தால்...*

## காட்சி -6

*கயிலை மலை அடிவாரம்*

*முன்னர் நடைபெற்ற நிகழ்ச்சி*

**ராவணன் :** *இந்தக் கயிலை மலையின் சிகரங்களில், என் புஷ்பக விமானம் பறக்கக் கூடாதா?*

*பறக்கக் கூடாது என்று தரை இறக்கிக் காட்டிவிட்டான் அந்தச் சிவன்! எவனுக்கும் வராத இந்தத் துணிவு, சிவனுக்கு வந்துவிட்டது!*

*எனக்கிது மானக்கேடு! இந்த மலையைப் பெயர்த்தெடுக்காவிட்டால், எனக்குத் தோள்கள் இருந்து என்ன பயன்?*

*காக்கைகள் உட்கார்ந்து எச்சம் இடவா, திண் தோளைப் பெற்றிருக்கிறேன்?*

[இவ்வாறு சொல்லியபடித், தன் கையை மலையின் அடியிற் செலுத்தி, மலையை அசைக்கின்றான்.]

## காட்சி -7

*கயிலை மலை*

*முன்னர் நடைபெற்ற நிகழ்ச்சி.*

[ராவணனின் முயற்சியால் மலை குலுங்குகிறது. மோனத் தவத்தில் இருக்கும் முனிவர்கள் பதறி, அங்கும் இங்கும் ஓடுகின்றனர்.

மலையின் ஆட்டத்தால், உமையவள் தள்ளாடிச், சிவனாரைத் தழுவிக் கொள்கிறாள். எக்காளமாகச் சிரிக்கிறான் ராவணன்.]

**ஒரு முனிவர் :** *(பதறியபடி) இறைவா! ஈசா! உன் மலையை அசைத்துப் பார்க்கிறானே! இதற்கு நீ இசைவு அளிக்கலாமா?*

**இன்னொரு முனிவர் :** *உமையவள் பதறுகிறாள்! முக்கண் இருந்தும், இதைப் பார்க்க மறுக்கலாமா?*

**வேறொரு முனிவர் :** எங்கெங்கோ ஆட்டம் போட்டவன், இங்கு வந்து விட்டான் இப்பொழுது.

*அம்பலத்திலும், அனல் காட்டிலும் ஆடுகின்ற உன்னிடம், அவன் ஆட்டம் காட்டலாமா?*

**சிவனார் :** என் கால் பெருவிரல் நுனியால், இம்மலையை அழுத்துகிறேன். மலையின் அடியில் அகப்பட்டு, அவன் நிலைகுலைந்து கதறுவான்!

*அவனுக்கு உடலும் கறுப்பு! உள்ளமும் கறுப்பு! இந்த வெள்ளி மலை அவனை நசுக்கிக் கசக்கப் போகிறது!*

[இவ்வாறு கூறிவிட்டுச் சிவனார், தன் ஒரு கால் பெருவிரலை அழுத்த, மலையின் அடியில் அகப்பட்டுக் கொள்கிற ராவணன், இந்தப் பளு தாங்கமாட்டாது வெருவிக் கதறுகிறான்.]

## காட்சி -8

*லங்கையில் ராவணன் அரண்மனை.*

முன்னர் நடைபெற்ற நிகழ்ச்சி.

[ஒரு வீரன், பதறியபடி ஓடி வருகிறான்.]

**வீரன் :** *ஆபத்து! ஆபத்து! நம் மாமன்னர், லங்கேஸ்வருக்கு ஆபத்து!*

*அமைச்சர் பெருமானே! கயிலை மலையின் அடியில், நம் மன்னர் சிக்கிக் கொண்டார்!*

*சிவனாரின் கோபத்திற்கு ஆளாகி, வாயிலே குருதி பொங்கி வழிய, வதைபட்டுக் கொண்டிருக்கிறார்! காலம் தாழ்த்தினால், மன்னரைக் காப்பாற்ற முடியாமற் போய்விடும்.*

[இதைக் கேட்டு, அமைச்சர் அங்கிருந்து விரைகிறார் ]

## காட்சி -9

*கயிலை மலை அடிவாரம்*

*முன்னர் நடைபெற்ற நிகழ்ச்சி*

[மலை அடிவாரத்திற்கு ஓடி வருகின்ற அமைச்சர், ராவணனின் நிலை கண்டு கலங்குகிறார் ]

**அமைச்சர்** : *மன்னா! தெய்வ குற்றம், நம்மைத் தீயைப்போல் எரித்துவிடும்.*

*நெற்றியிலே நீறணிந்த தாங்கள், அந்தத் திருநீறு தெரிவிக்கும் தெய்வமாம் சிவனோடு மாறுபடலாமா?*

*வரம் கேட்க வேண்டியவனிடம், போர்க்களம் காண்பதா?*

*லங்கை நாடும், நகரும், நாங்களும், தாங்களும், உய்வதற்கு வழி ஒன்றுதான் உண்டு.*

*இசைக்கு வசப்படார் எவருமிலர்.*

*சாமகீதம் பாடி, அந்த சர்வேஸ்வரனின் மனதைக் குளிரச் செய்யுங்கள்.*

*அவன் திருச்செவி குளிர்ந்தால், அரசியாரின் திருமாங்கல்யம் பிழைக்கும்.*

## காட்சி -10

*கயிலை மலை*

*முன்னர் நடைபெற்ற நிகழ்ச்சி*

[ராவணன் உருக்கமாகச் சாமகீதம் பாட, தவமுனிவர்கள் மகிழ்வோடு, இசைக்கேற்றபடி கைத்தாளமிடுகின்றனர்.

உமையவள் முகம் மலர்கிறது. சிவனாரின் கால் பெருவிரல், தன் அழுத்தத்தை நிறுத்துகிறது. சிவனாரின் தலையும் மார்பும், இசையின் தடம் பற்றி அபிநயமாகக் குலுங்குகின்றன.]

## காட்சி -11

*கயிலை மலை அடிவாரம்*

*முன்னர் நடைபெற்ற நிகழ்ச்சி*

[கயிலை மலையின் அடியிலிருந்து விடுபட்டு நிற்கிறான் ராவணன். தன் எதிரே நிற்கும் சிவனாரைக் கை குவித்து வணங்குகிறான்.]

***சிவனார் :*** *ராவணா! பன்னரும் சாமகீதம் பரிவுடன் பாடி நீ, என்னை வென்று விட்டாய்.*

*உன் தோள் ஆற்றல் தோற்றுவிட்டது.*

*உன் தேனிசை, என்னை உருக்கி, உன்முன் கொண்டு வந்து நிறுத்திவிட்டது.*

*நீ வேண்டுவதற்கு முன்னரே, உனக்கு வேண்டிய வரத்தைத் தந்து அருளுகிறேன்.*

*நீ மூவ்வகை உலகும் ஆள்வாய்! மூன்றரைக் கோடி ஆண்டும் வாழ்வாய்!*

*எவ்வகைப் படையும் வெல்லும், சந்திரஹாசம் என்னும் இந்த வாளையும், உனக்குத் தந்தேன்!*

இந்த வாள் உன் கையில் இருக்கும்பொழுது, வெற்றி மாலை உன் கழுத்தில்தான் இருக்கும்!

[வாளைப் பெற்றுக் கொள்கிற ராவணன், கண்ணீர் சிதறப் பேசுகிறான்.]

**ராவணன் :** (தடுமாற்றத்தோடு) என் ஈசனிடம் பேச, எனக்கு வார்த்தைகள் கிடைக்கவில்லை.

**சிவனார் :** கண்ணீர் பேசும்பொழுது, வாய் வல்லமையோடு பேசாது. சாமவேதம் பேசியநீ, இப்போது ஊமையைப்போல் பரிதவிக்கிறாய்.

இந்தப் பக்தி இருக்குமட்டும், யாருக்கும் பழுதில்லை.

[சிவனார் அங்கிருந்து மறைந்து விடுகிறார்.]

## காட்சி - 12

*கயிலை மலை*

[தேவர்களும், முனிவர்களும், மற்றையோரும், சிவனார் முன் திரண்டிருக்கின்றனர்.]

**சிவனார் :** இப்படிக் கானத்தால் கட்டிப் போட்டு, என்னிடமிருந்து வரம் பெற்றுவிட்டான் அந்த ராவணன்.

**தேவேந்திரன் :** அந்த ராவணனுக்கு வலிமை சேர்த்ததில், யாருக்கு எவ்வளவு பங்கு என்று தெய்வங்களாகிய நீங்கள் பட்டி மன்றம் நடத்திக் கொண்டிருக்கிறீர்கள்.

எங்கள் வாழ்வு பறிபோய்க் கொண்டிருக்கிறது ஈசா!

**சிவனார் :** உங்கள் அவலநிலை எனக்குப் புரிகிறது. வரம் கொடுத்த பிரம்மனுக்கும், விளைவு என்ன என்பதை உணர்த்த வேண்டும் என்பதற்காக, உங்களை அவரிடம் அனுப்பி வைத்தேன்.

பொதுவாக, வேதத்தை நெஞ்சின் நாதமாகக் கொள்வோர், பழி பாவம் செய்ய அஞ்சுவார்கள்.

எந்த விதிக்கும் விலக்கு உண்டல்லவா? அந்த விலக்காக, விலங்காக, இப்பொழுது அந்த ராவணன் திரிந்து கொண்டிருக்கிறான்.

தர்மம் தவறியவன், களையாகக் கருதப்பட்டுக் களையப்படவேண்டும்.

இது நடக்கும். உறுதியாக நடக்கும். என் இடப் புறத்தில் அமர்ந்திருக்கும் இல்லாள்மீது ஆணையிட்டுச் சொல்கிறேன்- ராவண சம்ஹாரம் சர்வ நிச்சயம்.

[உடனே எல்லோரும், 'சிவ! சிவ!' என்று கோஷித்தபடி, தலைமேல் கைகுவித்து, மெய்சிலிர்க்க வணங்குகின்றனர்.]

**தேவேந்திரன் :** *ஈசா! இறைவா! என் இதயத்தில் பேசும் நேசா! எப்பொழுது இந்தத் திருநாள் வரப்போகிறது?*

*உன் நெற்றிக் கண் எப்பொழுது அவனை நோக்கித் திறக்கப் போகிறது?*

*எங்களுக்கு வாழ்வு உண்டு என்று வாயாற் சொல்லி விட்டாய். நாங்கள் நன்றாக வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்று எங்கள் வாயாற் சொல்ல வேண்டாமா?*

*அந்த ராவணனை என்று வதம் செய்யப் போகிறீர்கள்?*

**சிவனார் :** *வரம் கொடுத்த நானே, அவன் வாழ்நாளை முடிப்பதா? அது முறையாகாது. (உடனே எல்லோரும் 'போச்சு' என்று கூறியபடி, வேதனையோடு, தலைமேல் கை வைக்கின்றனர்.)*

**தேவேந்திரன் :** *(கோபத்தோடு) இப்படி முன்னுக்குப் பின் முரணாகப் பேசுவதால்தான், உனக்கு நாடு நகரம் இல்லாமல், இடுகாடு கிடைத்திருக்கிறது என்று பாவிகள் பேசுகிறார்களே! அது உண்மையோ என்ற உறுத்தல் இப்போது எமக்கு ஏற்படுகிறது!*

**சிவனார் :** *கோபப்படாதே இந்திரா! நான் பேசி முடிக்கு முன்பே, நீ பேச ஆரம்பித்து விட்டாய்!*

*தேவமங்கையரோடு சுகித்திருக்கும் சுகம், உனக்குத் தடைப்படக்கூடாது!*

இதுதான் உன் வேதனை என்பது,. கௌதம மகரிஷி உட்பட, எல்லோருக்கும் தெரியும்.

உங்களுக்கு ஒரு வழி சொல்கிறேன். உங்கள் அனைவரின் வாட்டத்தையும் தீர்க்கிறேன்.

திருமாலைப் போய்ப் பாருங்கள்!

அக்கிரமம் எல்லை மீறும் பொழுதெல்லாம், அவதாரம் எடுத்து, அதைக் களைந்திருக்கிறார், அந்த விஷ்ணு பகவான்!

அந்த வரலாறு கையில் இருக்கும்பொழுது இப்படிக் கைபிசைந்து நிற்பானேன்?

**தேவேந்திரன் :** ஈசா! உன்னைக் கோபிக்க நான் யார்?

ஆனால், அடிபட்ட உள்ளக் கொதிப்போடு பேசுகிறேன். எங்களை ஏன் இப்படி அங்கும் இங்கும் பந்தாடுகிறீர்கள்?

அந்த நாராயணன்தான், எங்களை இங்கு அனுப்பி வைத்தார்.

**சிவனார் :** அதற்குக் காரணம் இருக்கிறது.

**தேவேந்திரன் :** காரண காரியங்களைத் தெளிவாகச் சொல்வது, தெய்வத் தன்மைக்கு மாறுபட்டது இல்லையே?

**சிவனார் :** (சிரித்தபடி) நேரம் வரும்போது, அதை நீ தெரிந்து கொள்வாய்.

**உமையவள் :** அவர்கள் உயிர் வாதைபட்டுக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் சமத்காரமாக உரையாடிக் கொண்டிருக்கிறீர்கள்.

தேவேந்திரா! எல்லோரையும் அழைத்துக்கொண்டு, அந்த நாராயணரின் சேவடி சேருங்கள். தர்மம் காக்க, அவர் எடுத்த அவதாரங்கள், வேதவரிகளின் அற்புதமான விளக்கங்கள்!

## காட்சி - 13

**உமையவள் :** பிரளய ஜலத்தில் மூழ்கியிருந்த பூமியை, வராக அவதாரம் எடுத்து, தன் தெற்றிப் பற்களால் தூக்கிக் கொண்டு, வெளிக் கொணர்ந்தார்.

அப்பொழுது அதை எதிர்த்த, இரண்யாஷனை வதம் செய்தார்.

[உமையவளின் இந்தப் பேச்சு ஒலிக்கப் பூமி மீட்கப்படுவது காட்டப்படுகிறது.]

## காட்சி -14

**உமையவள் :** தூணைப் பிளந்து, நரசிங்கமாக வெளிப்பட்டு, பாவி இரணியனை, வாயிற்படியில் வைத்துத் தன் மடியிலே கிடத்தித், தன் நகங்களால் கீறிக் கொன்றார்!

[இந்தப் பேச்சும் ஒலிக்க, இக்காட்சி காட்டப்படுகிறது.]

## காட்சி -15

**உமையவள் :** வாமன அவதாரம் எடுத்து வந்து, பின் விஸ்வரூபம் காட்டிப் பூமியையும் ஆகாயத்தையும் இரண்டு அடியால் அளந்துவிட்டு, மூன்றாவது அடிக்கு இடம் கேட்கப் பலிச் சக்கரவர்த்தி, தன் தலையைக் கொடுக்கிறான்.

[இந்தப் பேச்சும் ஒலிக்க, இக்காட்சி காட்டப்படுகிறது.]

## காட்சி -16

*கயிலை மலை*

**உமையவள் :** (கூடியிருப்போரிடம்) இப்படிப் பல அவதாரங்களை அந்தத் திருமால் எடுத்திருப்பது, உங்களுக்கு நன்றாகவே தெரியும்.

சில சமயங்களில், உண்மைகள் மறக்கப்பட்டு விடுகின்றன.

*உணர்ச்சிக் கொந்தளிப்புக்கள், உங்களை ஆட்டிப் படைத்து விடுகின்றன.*

*நாராயணா!- என்று கூவிச் செல்லுங்கள். வாழ்வு தாராயோ!- என்று கையேந்தி நில்லுங்கள்.*

*விரித்த கைகளிலே விழுந்து கிடப்பார் ஓர் அவதாரமாக! ராவண சம்ஹார மூர்த்தியாக!*

## காட்சி - 17

*திருப்பாற்கடல்*

**திருமால் :** *(இங்கு வந்து சேர்ந்திருக்கும் தேவர்களிடம், முனிவர்களிடம்)*

*ராவண சம்ஹாரம், ஏற்கனவே நிச்சயிக்கப்பட்டு விட்டது.*

*இதற்கு முன்னுரை பலர் எழுதிவிட்டார்கள். முடிவுரையை மாத்திரம், என்னை எழுதச் சொல்லியிருக் கிறார் சிவனார்.*

*அந்த ராவணனுக்கு, இதுவரை சாபம் கொடுத்தவர்கள் தான், அவன் சம்ஹாரத்தைத் தொடங்கி வைத்துவிட்டார்கள் என்று கூறுகிறேன்.*

*அவர்கள் எடுத்து வீசுகின்ற ஆயுதமாகப் பாய்ந்து போய், அவன் கதையை முடிக்கப் போகிறேன்; தர்மத்தை வாழவைக்கப் போகிறேன்.*

*என் செயலை நினைவூட்ட, எனக்கு யாரும் தேவையில்லை.*

*உங்கள் நோவால், நீங்கள் துடித்துப் பேசுவதைத் தவறென்று நானும் கொள்ளவில்லை.*

*தர்மம் வெல்லும்!- இந்த நம்பிக்கையை நீங்கள் இழந்து விட்டால், நீங்கள் எங்களை அவமதிக்கிறீர்கள், என்று அர்த்தம்!*

சோதனையில் வேதனைப்படலாம்; நாதனையே ஐயப்படக் கூடாது.

நல்லதே நடக்கும்! அல்லது செய்பவன் அழிந்தொழிவான்!

இந்தச் சட்டத்தைத் திட்டமாக்கித் தந்திருக்கிறது தெய்வம்.

இதை நம்பியவர்கள் வெம்பிப் போக மாட்டார்கள்.

ராவண சம்ஹாரத்தில், எனக்கு முன்னோடியாகச் செயல்பட்டவர்களை, நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டாமா?

தெரிந்திருந்தாலும், மீண்டும் நினைவுபடுத்துவதிலே, தோஷம் ஒன்றுமில்லையே!

## காட்சி-18

*கயிலை மலை அடிவாரம்*
*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

[புஷ்பக விமானம் தரை இறங்கி இருக்க, ராவணன், இதற்கு என்ன காரணம் என்று தெரியாது திகைக்கிறான்.]

**ராவணன் :** *(தனக்குள் பேசிக் கொள்கிறான்)* வெற்றிகொள் வேந்தனான என் புஷ்பக விமானம், இந்தக் கயிலை மலையில் பறக்க முடியாது தடைப்பட்டதற்கு என்ன காரணம்?

[இப்பொழுது நந்திதேவர் அங்கு வருகிறார்.]

**நந்திதேவர் :** ராவணா! அனந்த சயனத்தில் இருக்கும் திருமாலும், அழகிய கமலப்பூவில் இருக்கும் திருமகளும், அயனாகிய பிரம்மனும், திரிபுரத்தை அழல் செய்து எரித்த சங்கரனும், அவன் மங்கை உமையம்மையும், மகிழ்ந்து இனிது நடமாடுகின்ற புனிதமான இடம் இது.

சிவன் இருக்கும் இந்த மலையில், நீ நடப்பதற்கே அஞ்ச வேண்டும். பறக்கலாமா? உடனே இந்த ரதத்தை எடுத்துச்

சென்று விடு. இல்லையெனில், சிவனின் சினத்தில் பொசுங்கி விடுவாய்!

**ராவணன் :** நந்தியே! சுமக்கத்தான் நீ இருக்கிறாய்! வேறு சுகமான கற்பனைகளில், உன்னைப்பற்றி, நீ நினைத்துக் கொள்ளாதே. உனக்குப் பேசத் தெரிந்ததால், எனக்குப் புத்தி சொல்ல ஆரம்பித்து விட்டாயா?

குரங்கு போன்ற முகத்தை வைத்துக் கொண்டு, என் எதிரில் வந்து நிற்கவே,

நீ அஞ்ச வேண்டும்!

எந்தத் துணிவில், இப்படி என்னிடம் பேசுகிறாய்?

**நந்திதேவர் :** (கோபத்தோடு) மதி கெட்ட ராவணா! உன் அழிவை, உன் நாக்கே ஆர்ப்பரிப்போடு அழைத்து விட்டது!

என்னைக் குரங்கு முகம் என்று பழித்தாயே, அந்தக் குரங்குகளால், உன் குலம் அழியும்! உன் நகர் எரியும்!

**ராவணன் :** சாபமிடுகிறாயா?

**நந்திதேவர் :** வேதம் பொய்த்தாலும், சாபம் பொய்க்காது!

## காட்சி-19

இமவனம்
முன்னர் நடந்த நிகழ்ச்சி

[ராவணன், அழகிய பெண் வடிவாகத் திகழும் வேதவதியிடம், காம மயக்கத்தோடு பேசுகிறான்.]

**ராவணன் :** அழகான இந்த இமவனத்திலே, அற்புதமான ஓவியம்போலத் திகழும் நங்கையே! நீ யார்?

**வேதவதி :** வேத ஒலியிற் பிறந்தவள் நான்! வேதவதி என் நாமம்.

**ராவணன் :** நாமம் எதுவாகவும் இருக்கட்டும். நான் உன் மேல் கொண்ட காமம், இந்தக் கானகத்தை விடப்பெரியது!

**வேதவதி :** சீ! மூடனே! மை தவழ்ந்த அந்தக் கார் வண்ணனைத் திருமாலைக் கண்ணுற, செய்தவம் புரியும் சிந்தையள் நான்!

**ராவணன் :** உன்னை நோக்கி, உலகம் செய்ய வேண்டிய தவத்தை, நீ ஏன் செய்கிறாய்?

இதோ பார் பெண்ணே! நான் லங்கை மன்னன் ராவணன். புலன்களை வென்ற புலஸ்தியன் பேரன்!

இப்போது என் புலன்களைப் புரட்டிப் போடும் நீ, என்னை ஏற்றுக் கொண்டால், இம்மூன்று உலகங்களுக்கும் தலைவி ஆகலாம்!

மயில் காஷாயம் கட்டித் திரியலாமா? மங்கை நீயும், இப்படித் தவக்கோலம் கொள்ளலாமா?

**வேதவதி :** (கோபத்தோடு) அறிவற்றவனே! உன் வார்த்தைகள், என் செவியில், கனலாய் விழுகிறது.

ஒன்று சொல்கிறேன் கேள்! உறுதிபடச் சொல்கிறேன் கேள்! நீ உய்வதற்காகச் சொல்கிறேன்!

படமெடுத்தாடும், அந்தப் பாம்பில் துயிலும் பரம்பொருளே, எனக்குப் புருஷன்!

கையில் ஆழி உடைய, அந்தக் கருணாகரனே, எனக்குக் கணவன்!

அந்த மழை வண்ணனே, மாமலர்மேல் செய்யாள் உறையும் அந்தத் திருமார்பினனே, எனக்கு மணாளன்!

சரண் அடைந்தவரை ஆதரிக்கும் அந்தத் தூயோனை, என் துணையாக வரித்து விட்டேன்!

நீ பேய் பிடித்தவன்போல், இங்கு பேசிக்கொண்டு நிற்காதே!

**ராவணன் :** அந்தத் திருமாலுக்கு நான் இளைத்தவனா?

குளிர் அடிக்கும் அந்தப் பாற்கடல் வாசத்தைவிட, கொள்ளை இன்பம் ஊட்டும் என் லங்கை வாசம், உனக்கு இதமளிக்கும்!

**வேதவதி :** புலன் வென்ற புலத்திய மாமுனிவன் குலத்தில் வந்த நீ, இப்படிக் குரைக்கலாமா?

**ராவணன் :** பேச்சுக்குப் பலன் இல்லையெனில், ராவணன், தன் கை வீச்சால், கருமத்தை முடித்துக் கொள்வான்!

[இவ்வாறு கூறியபடி, வேதவதியின் கையைப் பற்றுகிறான்.

பற்றியவனிடம் இருந்து, தன் கையை உதறி விடுபட்டுவிட்டு, வேதவதி பற்றிய நெருப்பாகப் பேசுகிறாள்.]

**வேதவதி :** துன்மார்க்கனே! வாடாமலரோன், அந்தப் பிரம்மன் தந்த வரச் செருக்கால், கொடியன சொல்லி, என்னைக் கூசாது தீண்டினாய்!

தீயவனே! தீண்டிவிட்டாய் பேரழிவை! உனக்கும், லங்கைக்கும், உன் கிளைக்கும் கேடாக, மறுபிறப்பில் தோன்றுவேன்! இப்பிறப்பில் தீ சூழ்குவேன்!

[இவ்வாறு வேதவதி கூற, அவள்முன் நெருப்பு பற்றி எரிய, அதனுள் புகுந்து விடுகிறாள்.]

## காட்சி-20

*அயோத்தி*
*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

[போரில் தோற்றுவிட்ட அயோத்தி மன்னன் அனரண்ணியனைப் பார்த்து, ராவணன் பேசுகிறான்.]

**ராவணன் :** மேகம் குமுறிட, அது கண்டு மயில் ஆடும், வளமான கோசல நாட்டிற்குப் பலமிழந்த நீ மன்னனாக இருக்கிறாய்.

போருக்கு முன்பே சரண் அடைந்திருந்தால், உன் படை பொடிபட்டிருக்காது. நீயும் அடிபட்டு விழுந்திருக்க மாட்டாய். உன் அந்தப்புரத்தில், வெட்டுபடாத மேனியோடு, விழுந்து கிடந்திருக்கலாம்.

**அனரண்ணியன் :** எதிர்ப்பே காட்டாது, மானமுள்ளவன் உனக்கு மண்டியிடமாட்டான்.

போரில் வெற்றியும் தோல்வியும் மன்னர்களுக்கு உண்டு.

போரிடாது, எதிரியிடம் அடிபணிவதுதான், மன்னர்களுக்கு இழுக்கு.

வெற்றி மமதையிலே வெறிகொண்டு பேசுகிறாயே! காலம் ஞாலத்தவர் கையிலே இல்லை. வருங்காலத்தில், என் ரகு குலத்தில், கோலத் தசரத குமாரன் தோன்றுவான்!

வரபலத்தால் நீண்ட ஆயுளைப் பெற்றிருக்கும் நீ, அந்தத் தெய்வ மைந்தன் கொடுங்கணையால், பனங்காயைப் போலத் தலை சிதற மடிவாய்!

## காட்சி-21

*ஓர் அழகான வனம்*
*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

[வனத்தில் கன்னியர் பலர், பூத்திருக்கும் பூக்களைக் கொய்து கொண்டிருக்கின்றனர்.

இக்காட்சியை, வானத்தில் இருந்து பார்க்கின்ற ராவணன், தன் புஷ்பக விமானத்தை, அந்த வனத்தில் இறங்கச் செய்து, அக்கன்னியரை நோக்கி நடக்கிறான்.]

**ராவணன் :** அந்தணர்தம் கன்னியர், அசுரர்கள்தம் கன்னியர், கந்தருவர் கன்னியர் இக்காட்டிலே மலர்ந்திருக்கிறார்களே!

இவர்களைப் பறிக்காமற்போவது, என் ஆண்மைக்கு இழுக்கு ஆயிற்றே!

**ஒருகன்னி :** (நடுநடுங்கியபடி) நாங்கள் பூஜைக்குப் பூப் பறிக்கிறோம்.

**ராவணன் :** முனிவர்கள் அதைச் செய்யட்டும்! போகத்திற்காகப் படைக்கப்பட்ட பூக்கள் நீங்கள்! நான் பார்த்து விட்ட எந்த மலரையும், முகராமல் நான் இருந்ததில்லை!

போரில் மாத்திரம் வெற்றி பெற்றுவிட்டுப், போகத்தைத் தியாகம் செய்து விட்டால், என் வாழ்நாள் வீண் நாளாக ஆகிவிடாதா?

உம் - ஏறுங்கள் ரதத்தில்!

*[கன்னியர்கள் கதற, அவர்களைப் பலாத்காரமாகக் கவர்ந்து செல்கிறான் ராவணன்.]*

## காட்சி-22

*வனம்*

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

[அந்த வனத்திற்குக் கவர்ந்து செல்லப்பட்ட கன்னியரின் தாய்மார்கள், அழுதபடி ஓடி வருகின்றனர்.]

**ஒருதாய் :** *(அழுதபடி) ஐயோ! எங்கள் பெண்களையெல்லாம், அந்த ராவணன் தூக்கிப் போய்விட்டானே!*

*கிளியை வளர்த்துப் பூனை வாயிலே கொடுத்து விட்டோமே! மானை வளர்த்துப் புலிவாயிலே கொடுத்து விட்டோமே!*

**இன்னொரு தாய் :** இந்த அக்கிரமத்தைத் தெய்வம் கேட்காதா?

**மற்றொரு தாய் :** எந்த வரத்தைப் பெற்றிருந்தாலும், எங்கள் வயிற்றெரிச்சல், அவனைச் சும்மாவிடாது! பெண்களைக் கவர்ந்து செல்கிறவனுக்கு, ஒரு பெண்ணாலேயே அழிவு வரும்! அதனாலே அவன் நாடு நாசமாகும்! மணி முடியோடு, அவன் தலை மண்ணிலே உருளும்! கன்றைப் பறிகொடுத்த பசுப்போலக் கதறி, நாங்கள் சொல்கின்ற வார்த்தை வீண்போகாது! விண்ணிலுள்ள எந்தத் தெய்வமும், அதற்குக் குறுக்கே நிற்காது!

## காட்சி-23

*கல்நகர் போர்க்களம்*

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

[கையில் வாளோடு நிற்கும் ராவணன், 'ஐயோ!' என்று வேதனையில் பெருங்கூச்சலிடுகிறான்.]

**ராவணன் :** வருணனை வெல்லும் இந்தக் கல்நகர் போர்க் களத்தில், என்னுடைய தங்கை சூர்ப்பணகையின் கணவன் வித்துருசிங்கனை, அடையாளம் தெரியாது, அநியாயமாகக் கொன்றுவிட்டேன்!

என் மதி மயக்கிய இந்தச் செயலை விதி என்பதா? இதைத் தடுக்கும் வல்லமை, எனக்கு இல்லை என்பதா? எனக்கு அடுத்துப் பிறந்தவள், இதை விபத்தென்று ஏற்றுக்கொள்வாளா?

[இவ்வாறு பேசிக்கொண்டிருப்பவன் அருகிலே, வித்துருசிங்கன் பிணமாகக் கிடக்கிறான்.]

## காட்சி-24

*கல்நகர் போர்க்களம்*
*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

[கணவன் உடல்மேல் புரண்டு அழுகிறாள் சூர்ப்பணகை]

**சூர்ப்பணகை :** *(கணவர் உடலைப் பார்த்துப் புலம்புகிறாள்.)*

என்னை உனக்கு முறைப்படித் திருமணம் செய்து கொடுத்து விட்டுப் பின்னர், என் மங்கல நாணை அறுத்து விட்ட, என் அண்ணன் ராவணன், இந்த மூவுலகை ஆள, நான் பார்த்துக் கொண்டிருப்பேனா?

அந்தக் கருமனத்து அரக்கன் ராவணனை, உடல் முறிக்க முடியவில்லையே என்று, இங்கு உடலைக் கிடத்தி விட்டாயோ?

உன் சாவிற்குப் பிறகும் நான் வாழ்கிறேன்! இந்தப் பழி பூண்டு! ஆறாத் துயர் கொண்டு! ஆம்! ஓர் அர்த்தத்தோடு! உன் ஆத்மா சாந்தி பெற! உன்னைப் பிணமாக்கிய அந்தலங்கை மன்னனைப் பிணமாக்கிவிட்டுத்தான், நான் பிணமாகச் சாய்வேன்!

அதற்காக அவனைப்போல் கத்தி எடுக்க மாட்டேன்; என் புத்தியால், அவனைக் கவிழ்த்து விடுவேன்!

## காட்சி-25

*அளகாபுரியிலுள்ள ஒரு சோலை*
*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

**ராவணன் :** *(சோலையில் நடந்தவாறு)*

*குபேரனின் இந்த அளகாபுரியிலுள்ள சோலை, கொள்ளை அழகோடு, என் உள்ளத்தை அள்ளுகிறது.*

*இரவும் பகலும் தெரியாத இருட்பூஞ்சோலை இது. என் உயிர்க் காமன் நடமாடுகின்ற பாசறை இது.*

*இங்கு பறவைகள் காதல் செய்கின்றன. அதைக் கண்டு, என் புலன்கள் பற்றி எரிகின்றன.*

*சூரியன் மறைகிறான். சந்திரன் வருகிறான். காமனும் கணை தொடுக்கிறான்.*

*[இப்பொழுது ரம்பை அங்கு நிற்பதைப் பார்க்கிறான் ராவணன்]*

**ராவணன் :** *ஆஹா! முத்து மாலையிலே ரத்தினக் கல்! இந்த வேளையிலே, இந்தச் சோலையிலே, ஒரு தேன்குடம்! இவள் இந்த மண்ணின் கொடியோ? மின்னற் கொடியோ?*

*இவள் சிலம்பு புலம்பும் பாதம், என்னைக் கூவி அழைப்பதுபோல் தெரிகிறது.*

*வாழைத்தண்டைத் தொடையாகப் பெற்றவள், என்னைப் போருக்கு அழைக்கிறாளா?*

*சன்யாசிகளும், இவள் இடுப்பின் வளைவிலே, தியானத்தைச் சிதறவிடுவார்களே!*

*ஆடவரைக் கொல்லும் மார்பென்று மதர்த்து நிற்கும் குன்றுகளில், ஆடை கொண்டு மறைத்திருக்கும் இவள் கவசத்தை நீக்கி, நான் களிப்புக் கொள்ள மாட்டேனா?*

*முத்துப்பல் வரிசை! மோகனப் பவளவாய்! காதள வோடிய கண்கள்! வில்லாகிய புருவத்தாள்! பிறைமதி நெற்றி! தாமரை மலர் முகம்!*

*பூவின்றி, நறுமணப் புகை இன்றி, இவள் கூந்தலும் மணம் வீசும்!*

இவள் தாமரை மலர் மகளோ? தனித்து உலவும் காட்டு மயிலோ? பாற்கடல் அமுதோ? அதன் சுவையோ?

வேல் பிடித்த வேந்தர்களை, வெற்றி கொள்ள வந்திருக்கும், பெண்மையின் கோலமோ?

அந்த எழிலின் கொள்கலமோ?

என் கண் எதிரே தெரியும் இந்தச் சுவைக்கனி, நான் செய்த பெருந்தவத்தின் பேறோ?

[அவளை நெருங்கிச் செல்கிறான் ராவணன்.]

**ராவணன் :** பெண்ணே! நீ யார்? உன் பேர் என்ன? ஊர் எது? உறவு யாவர்?

பெண் அமிழ்தே! பேசு!

**ரம்பை :** சுவாமி! என் பெயர் ரம்பை. இந்த அளகாபுரி நாயகர் குபேரர் மைந்தன் நளகூபரர், என் கணவர்.

[இதைக் கேட்டு, ராவணன் பலமாகச் சிரிக்கிறான்.]

**ராவணன் :** தேவர்களையும் திரிபுவனத்து உள்ளோர்களையும் வசீகரித்து, இன்பம் வழங்குவதுதான், உன்னைப் போன்ற பொது மகளிரின் இயல்பு.

உங்களுக்கேது கணவன் என்ற பந்தம்?

ரம்பா! நான் லங்கை மன்னன் ராவணேஸ்வரன்!

நீ செய்த தவத்தால், இப்பொழுது உன்னை நான் பார்த்து விட்டேன்.

உன் அழகு கண்டு, மூச்சிரைக்க வேர்த்து விட்டேன். என் மோகத்திற்குத் தீனியாகி விடு. என் தாகத்தைத் தணித்து விடு.

**ரம்பை :** நான் பொதுமகளாய் இருந்தாலும், நளகூபரரைக் கணவராக வரித்து விட்டேன்.

என் ஒழுக்கத்திற்கு இழுக்குத் தேடாதீர்கள்.

குபேரரின் தம்பி நீங்கள்!எனக்கு மாமனார் என்கின்ற முறையிலே, வேலியாக இருக்க வேண்டிய நீங்களே, நெறியல்லாதன பேசலாமா?

குன்று அனைய தோள், கயிலையை எடுக்கட்டும். மாதர் கற்பைக் கெடுக்க வேண்டாம்.

*தாய்க்கும் தாரத்திற்கும் வேறுபாடு அறியாத தறு தலையா நீங்கள்?*

*வரம்பல பெற்ற வரப்பிரசாதி! தவமுனிவர் புலஸ்தி யரின் பேரர்!*

*இப்படி மருமகளை மஞ்சத்திற்கு அழைக்கிறீர்களே!*

*சிவன் இருக்கும் நெஞ்சில், இந்தச் சிறுமை இருக்கலாமா?*

**ராவணன் :** *என்னடி பேசிக்கொண்டே போகிறாய்? பேச்சே ஒலிக்கக் கூடாத சமயம் இது! வேகமாக விடும் மூச்சுத்தான், இன்பத்தை எடுத்துச் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும்!*

*(அவளைப் பற்றி அணைக்கிறான். அவள் கதறுகிறாள்.)*

## காட்சி-26

*சோலையின் இன்னொரு பகுதி*

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

[கலைந்த கோலத்தோடு, நளகூபரர் காலடியில் விழுந்து கதறி அழுகிறாள் ரம்பை.

நளகூபரன் முகம் கோபத்தால் சிவக்கிறது. அங்கிருந்து நடக்கிறான்.]

## காட்சி-27

*சோலை*

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

**நளகூபரன் :** *ராவணா! ஈனபுத்தி கொண்டவனே!*

**ராவணன் :** *நளகூபரா! நான் உன் சிற்றப்பா! உறவு மறந்து விட்டதா?*

**நளகூபரன் :** உனக்கெல்லாம் ஏது உறவு? நீ அறிந்த உறவெல்லாம், தினவெடுத்த உன் உடம்பின் அரிப்பை அடக்குவதுதான்!

**ராவணன் :** போகப் பொருளை எடுத்து அனுபவித்தால், பொங்கி வருகிறாயே!

**நளகூபரன் :** உனக்கு மண்டோதரி மாதிரி, எனக்கு அவள் மனைவி! இதைச் சொல்லியும் உன் பேய் மனம் இரங்கவில்லையே!

**ராவணன் :** வரம்பு மீறிப் பேசாதே! என் கோபம், உன்னை நிர்மூலமாக்கி விடும்!

**நளகூபரன் :** உன்னால் சீரழிக்கப்பட்டவர்களின் கோபம், உன்னைச் சும்மா விட்டு விடுமா?

ராவணா! இனிமேல் நீ, எந்தப் பெண்ணையாவது பலவந்தப்படுத்தினால், பாவி!, உன் தலை வெடித்துச் சிதறும்!

**ராவணன் :** சாபமிட, நீ சக்தி வாய்ந்த முனிவனா?

**நளகூபரன் :** பாதிக்கப்பட்டவனின் வயிறெரிந்த பேச்சு, உன்னைக் குறி பார்த்துத் திரியும் கத்தி வீச்சு!

*(இவ்வாறு கூறிவிட்டு, நளகூபரன் அங்கிருந்து சென்று விடுகிறான்.)*

**ராவணன் :** *(சிறிது நேர சிந்தனைக்குப்பிறகு)* இனிமேல் மயிலின் இறகை, அதன் விருப்பமின்றிப் பிடுங்கக் கூடாது - அவ்வளவுதானே!

மயில்கள், என்னைக் கண்டு, வேட்கையோடு இறகுகளை உதிர்த்து நின்றால், கைகட்டி நிற்க முடியுமா?

அணை கட்டி, என் உணர்ச்சிகளைத் தேக்க முடியுமா?

*(அங்கிருந்து நடக்கிறான் ராவணன்.)*

## காட்சி-28

*திருப்பாற்கடல்*

**திருமால் :** *(கூடியிருக்கும் தேவர்கள், முனிவர்களிடம்)* இத்தனை பேர் சாபமும் அஸ்திரங்களாக, அந்த ராவணனைச் சுற்றிக் கொண்டு இருக்கின்றன.

என்னுடைய அவதாரம், இப்பொழுது, இறுதி அஸ்திரமாக, அவன் கதையை முடித்து வைக்கும்! தர்மத்தின் வெற்றியைக் காதையாக விரித்து வைக்கும்!

**எல்லோரும் :** *(உணர்ச்சி வயப்பட்டு)*

ஓம் நமோ நாராயணா!

*(இப்படிக் கூறித் தலைமேல் கை குவித்து வணங்குகின்றனர்.)*

**திருமால் :** தேவர்களால், அசுரர்களால், தெய்வங்களால், தனக்கு மரணம் நேரக் கூடாது என்று பிரம்மனிடம் வரம்பெற்றிருக்கிறான், அந்த ராவணன்.

மனிதர்களால் ஏதும் ஏலாது என்று அலட்சியப்படுத்தி விட்டான்.

அவன் விட்ட இடத்தில், நான் கால் பதிக்கிறேன். அவதாரமாக மண்ணுலகிலே, மனிதனாக இறங்குகிறேன். அவன் மரணத்தை, அவன் கொடுமைக்கு விலையாக அளிக்கிறேன்!

**எல்லோரும் :** ஓம் நமோ நாராயணா!

**திருமகள் :** இந்த அவதாரத்தில், என் பங்கும் இருக்க வேண்டும் சுவாமி! நானும் உங்களோடு பூமியிலே பிறவியெடுக்க வேண்டும்.

**திருமால் :** உன் பொருட்டுத்தான் அமர் வரவேண்டுமென்று, வேதவதியாக இருந்து, நீயே முடிவு பண்ணி விட்டாயே!

அப்போது, தீயிற் புகுந்து, தீர்மானத்தை முன் மொழிந்தாய்! இப்பொழுது நான் வழிமொழிகிறேன்!

**தேவேந்திரன் :** எங்கள் சிந்தைக்கு இனியவா! சிவனாரிடம் இந்தச் சேதியைத் தெரிவித்துவிடலாம் அல்லவா?

**திருமால் :** ஒரு சிவபக்தனைக் கொன்றுவிட்டேன் என்ற பழி, எனக்கு வராதிருக்க வேண்டும்.

**தேவேந்திரன் :** நீறு பூசிய நெற்றியை உடையவன் நெறி முறையற்று நடந்து கொள்ளலாமா?

வேதம் சொல்பவன், தர்மத்தை வேர் அறுக்கலாமா?

**திருமால் :** கூடாது! தவறு செய்பவன் தண்டிக்கப்பட வேண்டும்.

அக்கிரமக் களத்திலே, தலை விரித்து ஆடியவன் சிரம், அறுபடவேண்டும்.

அவன் சிவபக்தனாக இருப்பதால், சிவனின் இசைவும், பங்கும் இதில் இருக்க வேண்டும்.

சிவனிடம் வரம் பெற்றவனாக அவன் இருப்பதால், அந்தச் சிவனின் கரத்தோடு கரம் கோத்து, அவன் சம்ஹாரத்தை நான் நிகழ்த்த வேண்டும்.

நான் எடுக்கப் போகும் வில்லுக்குத் துணையாகச் சிவனாரும் ஓர் அவதாரமாக, அம்சமாக, மண்ணுலகில் தோன்றவேண்டும்.

**தேவேந்திரன் :** அப்படியே நடக்கும் சுவாமி!

சிவனாரை அதற்குச் சம்மதிக்க வைப்பது, எங்கள் பொறுப்பு.

அநீதியை ஒழிக்கத் திரிபுரம் எரித்தவர், அக்கிரமமாகத் திரிந்து கொண்டிருக்கும் இந்த அசுரனைத் தீர்த்துக் கட்டுவதற்கு, ஒத்துழைக்க மாட்டாரா? உறுதுணையாக இருக்க மாட்டாரா?

இனி ஒழிந்தது அதர்மம்! ஓங்கியது தர்மம்!

## காட்சி-29

*கயிலை மலை*

[தேவர்களும் மற்றவர்களும் கயிலை மலைக்கு வந்து சிவனாரைப் பார்க்கின்றனர்.

சிவனோ, 'ராம்! ராம்!' என்று உச்சரித்தபடி, கண்மூடித் தியானத்தில் இருக்கிறார்.

அருகில் உமையம்மை வியப்போடு இதைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள்.]

**தேவேந்திரன் :** *(உமையம்மையை நோக்கி) தாயே! யார் இந்த ராம்? நாங்களெல்லாம் சிவன் பெயரைச் சொல்லித் தியானிக்க, இவரோ 'ராம்!' என்று யார் பெயரையோச் சொல்லிக்கொண்டிருக்கிறார்!*

**உமையம்மை :** *எனக்கும், அந்த 'ராம்' யாரென்று புரியவில்லை! அவர் தியானத்தைக் கலைத்துக் கேட்கவும் துணிவில்லை.*

**தேவேந்திரன் :** *திருமாலின் திருவுள்ளப்படி, சிவனாரைப் பார்க்க வந்தோம். இந்தத் தியானம் எவ்வளவு நேரம் நீடிக்குமென்று தெரியவில்லையே.*

**உமையம்மை :** *இருக்கின்ற கோலத்தைப் பார்த்தால், யுகம் கடந்தாலும், தவம் கலையாது என்றெண்ணுகிறேன்.*

**தேவேந்திரன் :** *ஐயையோ!*

**உமையம்மை :** *அந்த மன் மதனும் ஏற்கனவே எரிந்து, அரூபமாகத் திரிந்து கொண்டிருக்கின்றான். அவனும் இப்பொழுது சிவனாரின் தவத்தைக் கலைக்க முன்வரமாட்டான்.*

**தேவேந்திரன் :** *அந்த ராவணன், எல்லா லோகங்களிலும் அதர்மத்தைப் பயிர் செய்து கொண்டிருக்கிறானே! அறுவடை காண்பதற்குள், அவன் வாழ்வை முடிக்க வேண்டும். திருமால், இந்தத் திட்டத்திற்குச் சிவனாரின் ஒத்துழைப்பைக் கேட்கிறார்.*

**உமையம்மை :** *வீடு பற்றி எரியும்போது, இவர் வீணையை எடுத்து வாசித்துக் கொண்டிருக்கிறார்!*

கேள்விப்படாத 'ராம' நாமத்தை, மெய்யுருகச் சொல்லிக் கொண்டிருக்கிறார்!

**தேவேந்திரன் :** வெண்ணெய் திரண்டு வரும்பொழுது தாழியை உடைய விடலாமா?

தாயே! சிவனார், தன் நினைவு பெற, அவர் உடம்பைப் பிடித்து உலுக்குங்களேன்!

**உமையம்மை :** ஐயையோ! அப்படியெல்லாம் செய்தால், அந்தத் தாட்சாயிணி போல், நானும் தீயில் இறங்க வேண்டியதுதான்! உமையொரு பாகனாக இருக்கிறார் இப்பொழுது. அந்த உன்னத ஸ்தானத்தை இழந்துவிட, நான் தயாரில்லை!

**தேவேந்திரன் :** கடந்து செல்லும் ஒவ்வொரு நாழிகையும், அந்த ராவணன் பலம் பெற்றுக் கொண்டிருக்கிறான். தர்மத்தை அடியோடு புதைக்கப்பள்ளம் தோண்டிக் கொண்டிருக் கிறான்.

**வாயுதேவன் :** எந்த எலியாவது பூனைக்கு மணி கட்டித்தான் ஆக வேண்டும்! லோக க்ஷேமத்திற்காக, அந்த எலியாக நான் இப்பொழுது முன் வருகிறேன்! சிவனாரின் தவத்தைக் கலைக்கின்ற மூடத்தனத்தைச் செய்கிறேன்!

**தேவேந்திரன் :** நன்று வாயுதேவா! துணிந்தவனுக்குத் துக்க மில்லை! உமையம்மையின் ஆசி, இப்பொழுது உன்னைக் காக்கும்!

**உமையம்மை :** என்னை ஏன் இந்த வம்பில் மாட்டி விடுகிறீர்கள்? எது செய்தாலும், அவர் ஜெபிக்கின்ற ராம நாமத்தை, நீங்களும் ஜெபித்து விட்டுச் செய்யுங்கள்! ஆபத்து வராது!

[எல்லோரும் ஒன்றுபோல், 'ராம்! ராம்!' என்று ராம நாமத்தைக் கூறுகின்றனர்.]

**தேவேந்திரன் :** தெரிந்த தெய்வங்களின் நாமாக்களைச் சொல் வதை விட்டுவிட்டு, தெரியாத ஒரு பெயரைச் சொல்கிறோம்!

**உமையம்மை :** அது சிவனார் தெரிந்தெடுத்த பெயர்! அதற்கு மகிமை இருக்கும்! காலம் அதன் பெருமையை உணர்த்தும்!

[வாயுதேவன் இப்பொழுது 'ராம்! ராம்!' என்று மீண்டும் கூறிக் கண்மூடித் தியானிக்கிறான்.]

**வாயுதேவன் :** 'ராம்!' என்று இந்தப் பெயரைச் சொல்லும் பொழுது, என் நெஞ்சம் நிறைகிறது! என் காதுகளில், மங்கல மணியோசை கேட்கிறது! என் கண் எதிரே, ஒரு தெய்வீக புருஷர் தெரிகிறார்!

**தேவேந்திரன் :** இதுபோதும் - நீ செய்ய நினைக்கும் காரியத்திற்குத் தெய்வ சம்மதம் கிடைத்து விட்டது.

வாயுதேவா! சிவனாரின் தியானத்தைக் கலை! மழுவேந்தி ஆட வேண்டியவர், உளிபட்ட கற்சிலைபோலச் செயல் இழந்து இருக்கலாமா?

[வாயுதேவன் தீவிரமாக விழித்துப் பார்க்க, சிவனார் மேல், புயல் போலக் காற்று அடிக்கிறது. அவர் கேசம் காற்றில் பறக்கிறது. அவர் உடல் அசைக்கப்படுகிறது. கண் விழித்துப் பார்க்கிறார்.

எல்லோரும் நடுநடுங்கியபடி, 'சம்போ மகாதேவா!' என்று கூறித், தலைமேல் கை வைத்துக் கும்பிடுகின்றனர்.

வாயுதேவன் சிவனின் காலடியில் விழுகிறான்.]

**சிவனார் :** (அமைதியாக) வாயுதேவா! எழுந்திரு! நீங்கள் இங்குவந்து, திருமாலின் செய்தியைச் சொல்வதற்கு முன்பே, நான் முந்திக் கொண்டேன்! பிந்திப் பிறக்கப் போகும் அந்தத் திருமால் அவதாரமான ராமனின் நாமத்தைச் சொல்லி மகிழ்ந்தேன்! ராம காரியம் நிறைவேற, அவர்க்குத் துணையாக, என் அம்சம், ஒரு வானரனாக, அந்த மண்ணுலகிலே பிறப்பான்!

அந்த வானர வீரன், ஸ்ரீராமனுக்குத் தொண்டு செய்வான். ஸ்ரீராமனைத் துதிபாடுவான். ராம கைங்கர்யமே ஜீவித லட்சியமாக வாழ்ந்து காட்டுவான். ராவண சம்ஹாரத்திற்கும் வழி வகுப்பான். வாயுதேவா! நல்லது நடக்க வேண்டும் என்று துணிவோடு செயல்பட்டாய்! இதற்காக, உன்னை வாழ்த்துவதுபோல, உன் புத்திரனாக, நான் மண்ணுலகிலே அவதரிக்கிறேன்!

வானர உருவந்தான்! ஆனால், வானம் அளவு நிலைத்த புகழோடு நிற்கப் போகும் சரிதம் அது!

**எல்லோரும் :** *(மகிழ்ச்சியோடு, உள்ளக்கிளர்ச்சியோடு)* சம்போ மகாதேவா!

**உமையம்மை :** சுவாமி! என்னையும் இந்த லீலையில் இணைத்துக் கொள்ளுங்கள்.

தாங்கள் மரத்திற்கு மரம் தாவும்போது, உடன்தாவும் இன்பச் சிலிர்ப்பை, நான் பெற வேண்டாமா?

**சிவனார் :** இந்த மண்ணுலகப் பிறவியில், நான் கட்டை பிரம்மச்சாரி! நீயும் உடன் வந்தால், உன் காரியம்தான் நடக்கும். ராம காரியம் நடக்காது.

**உமையம்மை :** பூத கணங்கள் நடமாடும் இந்தக் கயிலையில், என்னால் தனியாக இருக்கமுடியுமா சுவாமி?

**சிவனார் :** என் அம்சந்தான் அங்கு இருக்கும். என் அங்கத்தைத் தந்த நான், உன்னை விட்டுப் பிரிய முடியுமா? இந்தக் கயிலையிலே, நீ கண் பொத்தி விளையாடிடத் தடையேதும் இருக்காது.

**தேவேந்திரன் :** கயிலை வாசா! கழுத்திலே விஷம் இருந்தாலும், நீ பேசுவதெல்லாம் எங்களுக்கு அமுதாகத் தித்திக்கிறது. நீயும் திருமாலும் சேர்ந்து நடத்துகின்ற காரியத்தில், எங்கள் பங்கும் இருக்க வேண்டாமா?

தேவர்கள் வேளை தவறாமல் அமுதைச் சாப்பிட்டு விட்டு, ஊர்வசி திலோத்தமையோடு ஆட்டம் போட்டுக் கொண்டிருப்பார்கள் என்று பழி சொல்கிறார்களே அறியாதவர்கள்!

அந்த வசை ஒழிய, எங்களையும் உன்னோடு இணைத்து இயங்கக் கூடாதா?

**சிவனார் :** அந்த ராமனுக்குத் தொண்டு செய்து, உங்கள் சரிதத்தைப் புனிதமாக்கிக் கொள்ளுங்கள். தேவர்களே! என் கூட்டாளிகளாக வானரக் கூட்டத்தாராக, நீங்களும் பிறப்பெடுப்பீர்கள்!

[இதைக் கேட்டுத் தேவர்கள், 'ராம்! ராம்!' என்று ஆர்ப்பரித்து மகிழ்கின்றனர்.]

## காட்சி-30

*கயிலை மலை*

['ராம்! ராம்!' என்று பாடியபடி, சிவனாரும் உமையம்மையும், தேவர்களும் மகிழ்ந்து ஆடுகின்றனர்.]

## காட்சி-31

*சத்தியலோகம்*

[தேவர்கள், சத்திய லோகம் வந்து, பிரம்மனைக் காண்கின்றனர்.]

**ஒரு தேவர் :** *உந்தித் தாமரையில் தோன்றிய உத்தமனே! பிரம்ம தேவனே!*

*ராவண சம்ஹாரத்திற்காக, நாங்களெல்லாம் வானரர் களாக, மண்ணுலகத்திலே பிறப்பெடுக்க வேண்டும். கயிலை வாசனின் கனிந்த கட்டளை அது. அங்கு, அவர் தலைமை யிலே, தர்மம் தழைக்க நாங்கள் பேராடப்போகிறோம்.*

**பிரம்மன் :** *அறிவேன் அந்தச் செய்தியை. திருமாலும் சிவனும் களத்திலே இறங்குகிறார்கள். அதோடு நீங்களும் சேர்ந்து கொள்கிறீர்கள். தர்மம் காக்க நடக்கும் இந்தப் போராட்டம், தரணியிலே யுகம் மாறினாலும், பக்தியோடு பேசப்பெறும்.*

*இதோ, என் நயனத்திலிருந்து, ஒரு வானர வீரனைத் தோன்றச் செய்கிறேன்.*

*[பிரம்மனின் கண்ணிலிருந்து ஒரு வானர வீரன் தோன்றுகின்றான்.]*

**பிரம்மன் :** *இந்த வானர வீரனுக்கு, ரிஷன் என்று நாமம் சூட்டு கிறேன். இவன் இப்பொழுது மேருமலையைச் சென்றடைவான்.*

*[ரிஷன் அங்கிருந்து செல்கிறான்]*

**பிரம்மன் :** இவன் மூலமாக, வானர குலமாக, நீங்கள் பிறப்பெடுங்கள். வாசுதேவனின் படையாகச் சிவனின் தலைமையேற்றுச் செயற்படுங்கள்.

**ஒரு தேவர் :** (சரஸ்வதியைப் பார்த்து) வாக்குத் தேவியே! வானர குலமென்றால், எங்களால் பேச முடியாதோ?

**சரஸ்வதி தேவி :** கவலை வேண்டாம். வானரர்களாகப் பிறப்பெடுக்கப் போகும் உங்களுக்கு, மனிதர்களைப்போல், பேசும் சக்தியை அளிக்கிறேன். மானிடர்க்கு இணையாக, எல்லா ஆற்றலும் பெற்று விளங்குவீர்கள்.

ராம காரியம் என்பதால், ரூபத்தை மீறி, நீங்கள் ஆறு அறிவோடு செயற்படுவீர்கள்.

**ஒரு தேவர் :** நன்றி தேவி! பிரம்ம தேவா! நயனத்திலிருந்து ஓர் ஆணைப் பிறப்பித்து விட்டீர்கள். அந்த ஆண்மூலம், நாங்கள் எப்படிப் பிறப்பெடுப்பது? சந்ததி காண்பதற்குப்பெண் அல்லவா வேண்டும்!

(இதைக்கேட்டு, சரஸ்வதிதேவி சிரிக்கிறாள்.)

**சரஸ்வதி :** பிரம்மதேவர், அரையும் குறையுமாகப் படைத்து, எல்லோரையும் அல்லற்படுத்துவதுபோல, அரைகுறையாகச் செய்தியைச் சொல்லி விட்டார்.

**பிரம்மன் :** அந்த வானர வீரன், மேரு மலையிலுள்ள ஒரு தாமரைத் தடாகத்தில் மூழ்கி எழுவான். பின்னர் பெண்ணாகி விடுவான்.

இதற்குப் பிறகு, உங்கள் சாமர்த்தியத்தைக் காட்டிச் சந்ததியைக் கண்டு கொள்ளுங்கள்.

## காட்சி-32

*தாமரைத் தடாகம்*

[ரிஷன், தாமரைத் தடாகத்தில் மூழ்கி எழ, ஓர் அழகிய பெண்ணாக உருமாறி விடுகிறான்.]

## காட்சி-33

*மேருமலைப் பகுதி*

[வாயுதேவன் விரைந்து சென்று கொண்டிருக்கிறான். நாரதர் எதிர்ப்படுகிறார்.]

**நாரதர் :** வாயுதேவா! எங்கே வாயுவேகமாக விரைந்து சென்று கொண்டிருக்கிறாய்?

**வாயுதேவன் :** தாமரைத் தடாகத்திலே, ஒரு வானர அப்சரஸ் தோன்றியிருக்கிறாளாம்! அவள் மூலமாக, சிவா அம்சம் பொருந்திய, ஒரு புத்திரனைப் பெறப்போகிறேன்!

[இவ்வாறு சொல்லும் வாயுதேவன், தடுமாறிக் கீழே விழுகிறான்.]

**நாரதர் :** அடடா! நேரம் சரியில்லை! இந்த நேரத்தில், இந்திரனும், சூரியனும், பிருஹஸ்பதியும், குபேரனும், விசுவகர்மாவும் அக்கினியும், வருணனும் அங்கு சென்று கொண்டிருக் கிறார்கள். அவர்களோடு நீ மல்லுக்கு நிற்க வேண்டுமா? சிவன் சித்தப்படி எல்லாம் நடக்கும். பொறுத்திரு.

**வாயுதேவன் :** விழுந்ததும் அபசகுனமாகத் தெரிகிறது. ஆனால் ஒன்று நிச்சயம்-சிவாம்சம், என் புத்திரனாகத்தான் தோன்றும்!

**நாரதர் :** சந்தேகமென்ன அதிலே! அவர்களெல்லாம் கூட்டத்தைச் சேர்க்க, வெறும் குரங்குக் குட்டிகளைப் பெற்றெடுக்கப் போகிறார்கள்!

## காட்சி-34

*மேரு மலைப்பகுதி*

[இருகை நிறையப் பூக்களோடு நடந்து வருகிறான் வாயுதேவன். எதிர்ப்படுகிறார் நாரதர்.]

**நாரதர் :** வாயுதேவா! கையில் என்ன பூவா?

**வாயுதேவன் :** *ஆமாம் நாரதரே! அந்த வானரகுல அப்சரஸைச் சந்திக்கும்பொழுது, கொடுப்பதற்காகக் கொண்டு செல்கிறேன்.*

**நாரதர் :** *அங்கு இப்பொழுது தேவர்கள் திரண்டு வந்து, பெரிய பூமாலைகளை, அவள் கழுத்தில் போட்டுக் கொண்டிருக் கின்றனர்.*

*நீ வெறும் கையளவு மாத்திரம் பூவைக் கொண்டு போய் நின்றால், உன்னைப் பார்த்துக் கைகொட்டிச் சிரிக்க மாட்டாளா?*

*நான் சொல்வதையும் மீறிச் சென்றால், சிவன் பிறக்க மாட்டான்; விதூஷகன் தான் பிறப்பான்!*

**வாயுதேவன் :** *என்னை ஏன் இப்படித் துன்பப்படுத்துகிறீர்கள் நாரதரே?*

**நாரதர் :** *இளைத்தவன் நானென்று, என் மீது கோபப்படுகிறாயா?*

**வாயுதேவன் :** *சிவனின் தவத்தைத் துணிந்து கலைத்தவன் நான்! இதன் பலனை எல்லோரும் அனுபவித்துக் கொண்டிருக் கிறார்கள் - என்னைத் தவிர!*

**நாரதரே :** *கவலைப்படாதே! அந்தச் சிவனையே கண்டு கேட்டு விடு.*

**வாயுதேவன் :** *(கோபத்தோடு) நான் ஏன் சிவனிடம் போக வேண்டும்? அந்தச் சிவனே என்னிடம் வந்து பேசட்டும்!*

**நாரதர் :** *இந்த வைராக்கியம் நியாயமானது! உன் புத்திரனாகப் பிறக்க வேண்டியவர், உன்னைத் தேடி ஓடி வர வேண்டாமா? அவர் சிவனாக இருந்தாலும், நீ இப்பொழுது தந்தை ஸ்தானத்தில் இருக்கிறாயே! வாயுதேவா! இந்தப் பிடியை விட்டு விடாதே! உன் உதவி இல்லாமல், ராவண சம்ஹாரம் எப்படி நடக்கும்?*

*யாரைக் கண்டாலும், முகத்தை உம்மென்று தூக்கி வைத்துக்கொள்.*

*சிரித்துப்பேசி விட்டால், ஏமாளியென்று சித்திரித்து விடுவார்கள்.*

*நான் வருகிறேன் வாயுதேவா! ஏதோ எனக்குத் தெரிந்த நல்லது கெட்டதை, உனக்கு எடுத்துச் சொன்னேன்!*

## காட்சி-35

*மேருமலைப் பகுதி*

[சில குரங்குக் குட்டிகள், வாயுதேவன் மீது குதித்து விளையாடு கின்றன. அவற்றை எரிச்சலோடு துரத்துகிறான் வாயு தேவன். ஒரு குரங்குக் குட்டி, வாயுதேவனைப் பார்த்து உறுமுகிறது.]

**வாயுதேவன் :** *வானர குலம், இம்மலையெங்கும் நிறைந்து விட்டது. இவர்களெல்லாம், என்னைப் போன்ற தேவர் களின் சந்ததியர். ராமகாரியத்திற்காகப் பிறப்பெடுத்திருக் கிறார்கள். நான்தான் இலவு காத்த கிளியாக ஏங்கிக் கொண்டிருக்கிறேன்.*

*சிவனாரைக் காணவே முடியவில்லை! வைராக்கி யத்தை விட்டுவிட்டுக் கயிலை மலைக்குச் சென்றால், நந்திதேவர்தான் தரிசனம் தருகிறார். 'உன் புத்திரனாக நான் அவதரிக்கட்டுமா?' என்று உறுமுகிறார். அவரிடம் இருந்து விடுபட்டு வருவதற்குப் பெரும்பாடாகி விடுகிறது.*

## காட்சி-36

*மேருமலைப் பகுதி*

[பல வளர்ந்த வானர வீரர்கள், மனிதர்களைப்போலக் கானக மெங்கும் நடந்து திரிகின்றனர். மரங்களைப் பிடுங்கி விளையாட்டாக, ஒருவர் மேல் ஒருவர் எறிகின்றனர். பாறைகளைப் பெயர்த்து வீசி ஆர்ப்பரிக்கின்றனர். இதை யெல்லாம் ஏக்கத்தோடு பார்த்துக் கொண்டிருக்கின்றான் வாயுதேவன்.]

**வாயுதேவன் :** *எனக்கொரு புத்திரன் பிறந்திருந்தால், அவனும் இப்படி ஆட்டம் போட்டுக் கொண்டிருப்பான். கூத்தாடும் இறைவனின் பிள்ளையின் கும்மாளத்திற்குக் கேட்க வேண்டுமா? எனக்குத்தான் கொடுத்து வைக்கவில்லை. வானரங்களெல்லாம், தங்கள் மந்தியோடு, கனிகொடுத்துக்*

கொஞ்சிக் கொண்டிருக்கின்றன. நான் பித்துப் பிடித்தவன் போல, இவற்றையெல்லாம் பார்த்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறேன். எந்த வானர மங்கையையாவது தழுவப்போனால், அவள் கூச்சலிட்டு விலகி ஓடுகிறாள். சிவன் பேரைச் சொன்னால், சிவ நிந்தனை செய்யாதே பாபி! - என்று கோபிக்கிறாள். வரம் கொடுத்து விட்டு, இப்படி என்னை வாட்டி எடுக்கலாமா? இதற்கொரு விடியலை நான் காணாவிட்டால், என் இயக்கத்தை நிறுத்தி, இந்த ஈரேழு உலகங்களையும் ஸ்தம்பிக்கச் செய்துவிடுவேன்!

**சிவனார் :** *(அங்கு தோன்றியபடி..) அப்படியெல்லாம் செய்து விடாதே வாயுதேவா!*

*உன் எண்ணம் நிறைவேறும். உன் புத்திரனாக, இந்த வானர குலத்தில், என் அம்சம் விரைவில் உதிக்கும்!*

**வாயுதேவன் :** *கயிலை வாசா! விரைவில் என்றால் எப்பொழுது? இன்னும் பலயுகம் கடந்தா?*

*இந்திரன் மகன் வாலி. சூரியன் மகன் சுக்கிரீவன். பிருஹஸ்பதியின் மகன் தாரன். குபேரனின் மகன் கந்த மாதனன். விசுவகர்மாவின் மகன் நளன். அக்கினியின் மகன் நீலன். வருணனின் மகன் சுஷேணன்.*

*இப்படி இவர்களெல்லாம் இங்கு தங்கள் சந்ததியைக் கண்டு விட்டனர்.*

*நான்தான் வஞ்சிக்கப்பட்டு விட்டேன்! ராம காரியத்திற்கு, என் பங்கும் சேராமல், மறுக்கப்பட்டு விட்டேன்!*

**சிவனார் :** *அந்த ராமனின் அவதாரம் முதலில் நிகழட்டும்! அதன் வாலாக, என் அம்சம், உன் வம்சமாக இங்கு தோன்றிவிடும்!*

**வாயுதேவன் :** *(மனநிம்மதி அடைந்தவனாய்) இன்னும் அந்த ராமன் அவதரிக்கவில்லையா?*

**சிவனார் :** *வேளை வந்து விட்டது. அயோத்தியின் வேந்தர் குலத்தில், அந்தத் திருமால் அவதரிப்பதற்கு!*

## காட்சி-37

*அயோத்தியில், தசரத மன்னனின் அரசவை*

**ஒரு புலவர் :** தசரத மன்னா! இந்தக் கோசல நாட்டை வளப்படுத்தும் சரயுநதி, தாயின் மார்பு போல,

இங்குள்ளோருக்கு உணவளித்துப் பாய்ந்து கொண்டிருக் கிறது. கல்லிடைப் பிறந்து போந்து, கடலிடைக் கலக்கும் அந்த நீர்வளம் கொண்ட நாட்டை உடையவனே! நீ வாழ்க!

**இன்னொரு புலவர் :** உன் நாட்டிலே, சோலையிலே மயில்கள் ஆட, தாமரை விளக்காக விளங்க, மேகம் முழவாக ஒலிக்க, குவளை மலர் கண் விழித்து நோக்க, நீர்நிலை அசைவு காட்டித் திரை விரிக்க, மகர யாழைப் போன்று வண்டுகள் ஒலிக்க, மருதநிலம் உன்னைப்போல மன்னனாகப் பார்த்து மகிழ்கிறது!

**வேறொரு புலவர் :** மன்னா! உன் நாட்டிலே, ஆடவர் மாத்திரமின்றி, பெருந்தடங்கண் பிறைநுதலாரும் பொருந்து செல்வமும் கல்வியும் பெற்றிருக்கின்றனர்.

இந்தப் பெருமை உனக்கே உரியது!

**மற்றொரு புலவர் :** மன்னா! இந்நாட்டில் கூற்றம் இல்லை - ஓர் குற்றம் இலாமையால்!

இங்கு சீற்றம் இல்லை - மக்கள்தம் சிந்தையின் செம்மையால்!

இங்கு ஆற்றும் நல் அறம் அல்லது வேறில்லை!

இதனால் ஏற்றம் அல்லது இழிதகவுஇல்லையே!

**பிறிதொரு புலவர் :** மன்னா! இந்நாட்டிலே, வள்ளண்மை இல்லை; ஓர் வறுமை இன்மையால்! போர் வலிமை இல்லை; பகைவர் இன்மையால்! உண்மையென்று ஒன்றும் தனியாக இல்லை; பொய் உரை இலாமையால்! அறியாமை இல்லை; அறிவு அளிக்கும் கேள்வி ஞானம் ஓங்கலால்!

**வேறொரு புலவர் :** மன்னா! உன் அயோத்தி நகரிலே, கள்வர் இலர்; அதனால் பொருள் காவலும் இல்லை!

கொள்வார் இல்லாததால், கொடுப்பார்களும் இங்கு இல்லை!

எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தலாலே, இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை!

**தசரதர் :** புலவர்கள் எல்லாம், என் நாட்டின் நிலவளத்தை, நீர்வளத்தை, மக்களின் மன வளத்தைச் சிறப்பித்துப் பேசி விட்டீர்கள்!

இத்தனை இருந்தும், மன்னன் நான், ஒரு வறியவனாக, என்னை நான் உணர்கிறேன்.

எல்லா அவயவங்களும் எழிலோடு இருந்தும், ஒருவனுக்குக் கண் மாத்திரம் இல்லாவிட்டால், அவன் கலங்குவது போல, நான் பிள்ளைச் செல்வம் இல்லாமல், பெருந்துயர் கொள்கிறேன்!

எனக்குப்பின், இம் மண்ணை ஆள, என் மைந்தன் இல்லாததால், அரசனின்றி இந்த நாடு அவதியுறுமோ எனக் கலங்குகிறேன்.

அறம் தவறுமோ? அருந்தவமுனிவரும் அந்தணரும் அல்லற்படுவரோ என்று துயர் கொள்கிறேன்.

மானிடரின் வாட்டம் தீர்க்க வந்த வசிஷ்ட மாமுனியே! மன்னன், என் சிந்தையிலே எரிந்து கொண்டிருக்கும் செந்தீயைத் தணிக்க, மார்க்கம் இருக்கிறதா? இந்த மண் ஓர் இளவரசைப் பெறுமா?

**வசிஷ்டர் :** மன்னர் மன்னவா! நீ வாழ்க! இதற்காக நீ வருந்த வேண்டாம். இப்பூதலம் முழுவதும் தாங்கும் புதல்வரை அளிக்கும் வேள்வியை,தீது அறநீமுயன்றால், உன் சிந்தை நோய் தீரும்!

**தசரதர் :** (மகிழ்ச்சியோடு) முனிவர் பெருமானே! குருடன் பார்வைபெறும் பாதையைக் காட்டிவிட்டீர்கள்! ஊமை பேசுவதற்கு வழியைச் சொல்லிவிட்டீர்கள்! முடவன் கால் பெறுவதற்கு நம்பிக்கை அளித்து விட்டீர்கள்! அந்த வேள்வியைச் செய்வதற்கு, நான் என்னென்ன செய்ய வேண்டும் என்பதை எடுத்து இயம்பினால், தங்களையே சரணம் என்று அடைந்துவிட்ட நான், பூரண வாழ்வைப் பெற்று விடுவேன்.

**வசிஷ்டர் :** *மன்னா! இந்தப்புத்திர காமேஷ்டி யாகத்தை முன்னின்று நடத்தத் தகுதியானவர், மானின் கொம்பை முகத்திலே உடையரிஷ்ய சிருங்கரே!*

*அவர், சாஸ்திர ஞானத்தில் பிரம்மனுக்கு ஒப்பானவர். சிவனே புகழ்கின்ற பெருமை உடையவர். அந்த முனி வனைக் கொண்டு நீ யாகத்தைச் செய்து முடித்தால், தனயர் கள் உனக்கு உளர். இது உறுதி.*

**தசரதர் :** *யாகத்திற்கு வேண்டியன செய்கிறேன். என் தாகம் தீர்த்த தவமுனியே! உன் தாள் சரணம்!*

[*இவ்வாறு கூறி, வசிஷ்டமுனிவரை, இருகை கூப்பி வணங்குகிறார், தசரத மன்னர்.*]

## காட்சி-38

*சுபர்வகிரிப் பிரதேசம்*

[இந்த மலைப் பிரதேசத்தில், கேசரி என்னும் வானர குல மன்னன், தன் மனையாள் அஞ்சனையோடு, ஒரு சோலையில் அமர்ந்திருக்கிறான். சுற்றிலும், வானர வீரர்கள் நின்று கொண்டிருக்கிறார்கள்.]

**ஒருவானர வீரன் :** *கேசரி மன்னா! தாங்கள் கலக்கத்தோடு இருப்பதற்குக் காரணம்?*

**கேசரி :** *இந்தச் சுபர்வகிரி மன்னன் நான். ஆனால், எங்கள் இல்வாழ்க்கையின் சுபச் செய்தியாக, ஒரு குழந்தை எங்களுக்கு இல்லை!*

*முனிவர்கள் தவத்திற்கு இடையூறு செய்த மத யானைகளை வென்று, கேசரி என்ற நாமம் பூண்டேன்.*

*ஆனால், என் மார்பை எட்டி உதைத்து, பாசத்தால் என்னை வெல்லக்கூடிய, ஒரு பச்சிளங்குழந்தை, என் கையிலே தவழவில்லை!*

*தேவர்களுக்கு உதவ, அரக்கன் சம்பசாதனனை அழித்தேன்.*

ஆனால், எள்ளும் தண்ணீரும் இறைத்து, எனக்கு உதவ, ஒரு புத்திரன் இல்லாமற் பரிதவிக்கிறேன்!

என் பத்தினி அஞ்சனையோ, கௌதம மகரிஷியின் புத்திரி! மாபெரும் தவசீலர், அந்த மகரிஷி! என்ன பயன்? அவர் புத்திரி, பிள்ளைப் பேற்றைப் பெறவில்லை!

ஆயிரம் சுகங்கள் அனுபவித்தாலும், பெற்ற குழந்தையின் பிஞ்சுக் கரத்தால், அடிபடும் சுகத்திற்கு, எதுவும் ஈடாகாது!

**அஞ்சனை :** நம் துன்பத்தையெல்லாம் இவர்களிடம் கூறி, இவர்களையும் துன்பப்படுத்துவானேன்?

அதோ அப்பா வருகிறார்!

[இப்பொழுது கௌதம மகரிஷி அங்கு வருகிறார். எல்லோரும் அவரை வணங்குகின்றனர்.

கேசரி, அஞ்சனை தவிர, மற்றவர்கள் அங்கிருந்து சென்று விடுகின்றனர்.]

**கௌதமர் :** கேசரி! இந்த கௌதம முனியின் தவ ஆற்றலைப் பற்றி, நீ ஐயம் கொண்டு பேசி விட்டாய்!

வாளெடுத்தால், உனக்கு வெற்றி கிடைக்கும். தவப்பயன், அவ்வளவு விரைவில் கிடைத்து விடாது. முத்து விளையத் தாமதம் ஆகும். அத்திப் பழம்போல, உடனே கிடைத்து விடாது.

**கேசரி :** என்னை மன்னியுங்கள் சுவாமி!

**கௌதமர் :** உன் வேதனையைக் கூறுவது குற்றமல்ல! பாற்கடலில் சேர மாட்டாமோ என்று, இப்பூவுலகிலுள்ள கடலெல்லாம், சதா குமுறிக் கொண்டு இருக்கவில்லையா? அது இயற்கைதான்!

**அஞ்சனை :** என் மடிகனக்க, ஒரு பிள்ளை உண்டு என்று வரம் தாருங்கள் அப்பா!

**கௌதமர் :** வரம் தர வேண்டிய மகேசனே, உனக்குப் பிள்ளையாகப் பிறக்கப் போகிறார் அம்மா! அதற்கான வேளை வந்து விட்டது! குறிக்கப்பட்ட காலம் நெருங்கி விட்டது!

*கயிலை மலையிலே, அவன் பார்வதியோடு தங்கியிருக்கிறான். உன் வயிற்றிலே, அவன் கருவாகத் தங்கியிருக்கப் போகிறான்!*

***அஞ்சனை :*** *(இன்ப அதிர்ச்சியோடு) அப்பா! அந்தப் பாக்கியம் பெற்றவளா நான்?*

***கௌதமர் :*** *என் வார்த்தைகள், சத்தியத்தை வாரிவரும் அஸ்திரங் களம்மா!*

*அதோ, வாயுதேவன் வேகமாக வந்து கொண்டிருக் கிறான்! வாயு தேவனைத் தியானித்துக் கொள்!*

*அந்த வாயு புத்திரனாகத்தான், சிவன் தன் அம்சத்தை, உன் கருவாக்கிக் காணப்போகிறார்!*

*நான் வருகிறேன். நீங்கள், உங்கள் புத்திரனால், யுகம் கடந்தும் பேசப் பெறுவீர்கள்!*

*[இவ்வாறு கூறிவிட்டுக் கௌதம முனிவர் அங்கிருந்து சென்றுவிட, கடுங்காற்று இப்பொழுது அந்தச் சோலையிலே வீசுகிறது. மரங்கள் சடசடவென முறிகின்றன. அஞ்சனை இது கண்டு அஞ்சியபடி, 'வாயுதேவா! வாயுதேவா!' என்று முணுமுணுக்கிறாள். கேசரி திகைப்போடு இதைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.]*

## காட்சி-39

*அயோத்தி அரண்மனையில் உள்ள யாக சாலை*

[வேள்வித் தீயிலிருந்து பூதம் ஒன்று வெளிப்படுகிறது. அதன் கையில், ஒரு தங்கக் கிண்ணம். இதைப் பார்த்துத் தசரத மன்னர் உட்பட, அனைவரும் திகைக்கின்றனர்.]

***ரிஷிய சிருங்கர் :*** *மன்னா! அந்தக் கிண்ணத்தை வாங்கிக் கொள்ளுங்கள்.*

*(தசரதர், அக்கிண்ணத்தைப் பூதத்திடமிருந்து பெற்றுக் கொள்ள, பூதம் தீயினுள் மறைந்து விடுகிறது)*

***ரிஷிய சிருங்கர் :*** *தசரத மன்னர் புத்திர பாக்கியம் பெற, பிரம்மதேவரால் அனுப்பி வைக்கப்பட்ட பாயச அமிர்தம் அது! மன்னா! உன் தேவியர் மூவருக்கும் அதைப் பங்கிட்டுக் கொடு. அதைப் பருகியவர்கள், தெய்வாம்சம் பொருந்திய குழந்தைகளைப் பெறுவார்கள்!*

*வேள்வியின் பயனைப் பெற்று விட்டோம்! வசிட்ட முனிவரே! நான் விடைபெற அனுமதி அளியுங்கள்.*

## காட்சி-40

*சுபர்வகிரிப் பிரதேசம்*

[இப்பொழுது சோலையில் தென்றலாக காற்று வீசிக் கொண்டிருக்கிறது. அஞ்சனை மாத்திரம் இங்கு தியானத்தில் அமர்ந்திருக்கிறாள். வாயுதேவன், இந்த இடம் நோக்கி, மிதந்து வந்து கொண்டிருக்கிறான்.]

## காட்சி-41

*அயோத்தி அரண்மனை*

[தசரதர், அந்தத் தங்கக் கிண்ணப் பாயசத்தில் கொஞ்சம் இன்னொரு கிண்ணத்தில் ஊற்றி, அதைக்கோசலை பருகக் கொடுக்கிறார். அவள் குடித்த பின்பு, அந்தக் கிண்ணத்தில் கொஞ்சம் பாயசம் ஊற்றி, சுமித்திரை அருந்தக் கொடுக்கிறார். பின்னர் கைகேயிக்கும் அவ்வாறே கொடுக்கிறார். இன்னும் தங்கக் கிண்ணத்தில் பாயசம் எஞ்சியிருக்க, சுமித்திரைக்கு அதைக் கொடுக்கிறார்.]

***தசரதர் :*** *(வேடிக்கையாக) சுமித்திரைக்கு இரண்டு பங்கு கிடைத்திருக்கிறது. எனவே இரட்டைப் பிள்ளைகளாகப் பெற்றுத்தர வேண்டும்!*

*[இதைக் கேட்டு, கோசலையும் கைகேயியும் சிரிக்கின்றனர்.*

*இப்பொழுது விஷ்ணு சக்கரத்தின் மேல் வரும் ஜோதி, நான்காகப் பிளவுபட்டு, மூவரின் வயிற்றினுள் சென்று விடுகிறது.]*

## காட்சி-42

*சுபர்வகிரிப் பிரதேசம்*

[தியானத்தில் இருக்கும் அஞ்சனையின் முன்பு, வாயுதேவன் தோன்றுகிறான்.]

**வாயுதேவன் :** *அஞ்சனை! நீ கேட்ட வரம், உனக்குக் கிடைத்து விட்டது!*

*[அஞ்சனை எழுந்து நின்று, வாயுதேவனை வணங்கு கிறாள்.]*

**அஞ்சனை :** *வாயுதேவர் தானே தாங்கள்?*

**வாயுதேவன் :** *ஆமாம். இதோ என் கையிலுள்ள கனியை நீ சாப்பிடு.*

*உன் கற்பொழுக்கத்திற்குப் பங்கம் வராமல், சிவாம்சம் பொருந்தியவனாக, வாயுபுத்திரன், உன் வயிற்றில் பிறப்பான்! அவன் காலமெல்லாம் கொண்டாடும் கர்ம புருஷனாகத் திகழ்வான்!*

**அஞ்சனை :** *தெய்வங்கள் என்னையும், தங்கள் சரிதத்தோடு இணைத்துக் கொண்டன!*

*இந்தக் கருணைக்கு, என் கண்ணீரைத்தான், நன்றியாகச் சொல்ல முடியும்!*

*[கனியை வாங்கிச் சாப்பிடுகிறாள் அஞ்சனை. இப்பொழுது ஒரு திரிசூலம், ஜோதி ஒன்றைத் தாங்கியபடி, வானில் வருகிறது. அஞ்சனையின் அருகில் வந்தவுடன், அந்த ஜோதி அவள் வயிற்றினுள் புகுந்து மறைந்து விடுகிறது.]*

## காட்சி-43

*அயோத்தி அரண்மனை*

[பிறந்திருக்கும் நான்கு குழந்தைகளும் அழுவது, ஒன்றன் பின் ஒன்றாகக் காட்டப்படுகின்றன.]

## காட்சி-44

*தேவலோகம்*

**தேவேந்திரன் :** *(தேவர்களைப் பார்த்து) பிரளய காலத்தில் உலகு எல்லாவற்றையும், தன் வயிற்றில் பொதிந்து வைத்திருந்த வாசுதேவன், அருமறையும் காணமுடியாத அந்த அரி, அந்த அஞ்சனக் கருமுகிற் கொழுந்து, அந்த எழில் காட்டும் ஜோதி, அயோத்தி நகரிலே, அரசி கோசலையின் மணிவயிற்றிலே, ஒரு மானிட அவதாரமாகத் தோன்றி விட்டான்! இனி வீழ்வர் அரக்கர்! வெற்றி முழக்கமிடும் அறம்!*

*[இதைக் கேட்டு, தேவர்கள் மகிழ்ச்சியோடு வாத்தியம் இசைக்க, அரம்பையர் அதற்கேற்ப ஆடுகின்றனர்.]*

## காட்சி-45

*அயோத்தி நகர வீதி*

[அயோத்தி நகர வீதியில், வள்ளுவன் யானை மீது அமர்ந்து, நற்செய்தியைத் தெரிவிக்கிறான்.]

**வள்ளுவன் :** *நம் அயோத்தி மாமன்னர்க்கு, நான்கு ஆண்மக்கள் பிறந்திருக்கின்றார்கள் என்ற நற்செய்தியைப் பூரிப்போடு தெரிவிக்கிறோம்.*

*[இதைக்கேட்டு, நகர மாந்தர், மகிழ்ச்சிப் பெருக்கோடு, வாத்தியங்கள் இசைத்து ஆடுகின்றனர்.]*

# காட்சி-46

*அயோத்தி அரண்மனை*

[வசிஷ்ட முனிவரோடு வந்து, நான்கு குழந்தைகளையும், மகிழ்ச்சியோடு பார்க்கிறார் தசரத மன்னர்.]

***தசரதர் :*** முனிவர் பெருமானே! இந்த நாடும் நானும் நற்பயனைப் பெற்றுவிட்டோம்.

இருண்டு கிடந்த என் கண்கள், ஒளியைப் பெற்று விட்டன.

துவண்டு கிடந்த என் மனதில், இன்பம் தொகை தொகையாக வந்து சேர்ந்தது.

என் செங்கோலுக்கு உதவ, ஊன்று கோல் ஒன்றில் லையே என்று தவித்தேன். ஒன்றுக்குப் பதிலாக நான்காகத் தந்து விட்டான், அந்த நாராயணமூர்த்தி!

பெருமானே! இந்தக் குழந்தைகள் பிறந்த நாளும் கோளும் கூறி, பொருத்தமான நாமமும் சூட்டுமாறு வேண்டு கிறேன்.

***வசிஷ்டர் :*** இந்த வசிட்டரை விலக்கி வைத்து, இங்கு எதுவும் நடைபெறுவதில்லை.

மன்னா! உன் குருபக்தி, உனக்கு இன்னொரு மணி முடியாகத் திகழ்கிறது.

சித்திரை நவமி திதியில், புனர்பூசமும் கடகமும் பொருந்திய வேளையில், இந்தக் கோசலை மைந்தன் பிறந்திருக்கிறான்.

எல்லோரையும் ரமிக்கச் செய்பவனாக இவன் இருக்கப் போவதால், இந்தக் குழந்தைக்கு, 'ராமன்' என்று பெயர் சூட்டுகிறேன்.

'ராம்! ராம்!' என்ற இந்தச் சொற்கள், மந்திரச் சொற் களாக, யுகம் கடந்தும், இந்த அவனியை ஆண்டு கொண்டி ருக்கும்!

[அங்கு கூடியிருக்கும் எல்லோரும், 'ராம்! ராம்!' என்று மகிழ்ச்சியோடு, திரும்பத் திரும்பக் கூறுகின்றனர்.]

**வசிஷ்டர் :** கைகேயி பெற்றெடுத்த மைந்தன், பூசமும் மீனமும் பொலியப் பிறந்திருக்கிறான்.

இந்தப் பரத கண்டத்திற்குப் புகழ் சேர்க்க வந்த இந்தக் குழந்தைக்குப் 'பரதன்' என்ற நாமம் சூட்டுகிறேன்.

*(எல்லோரும் 'பரதன்' என்ற பெயரை முணு முணுக்கின்றனர்.)*

**வசிஷ்டர் :** அரவின் வடிவமான ஆயில்ய நட்சத்திரமும் கடகமும் கூடிய சுபவேளையில், இளையவள் பயந்தனள் இரு புதல்வர் களை. வஞ்சகர் வீழ, வான் தேவர்கள் வாழ, நிலமகள் துயர் நீங்க, ஒளி மயமான வாழ்வை வாழப் போகும் இந்தக் குழந்தைக்கு, 'லட்சுமணன்' என்ற நாமம் பொருத்த முடையது.

*(எல்லோரும் அப்பெயரை முணுமுணுக்கின்றனர்.)*

**வசிஷ்டர் :** (நான்காவது குழந்தையைப் பார்த்து) முத்து உருக் கொண்டு வந்திருக்கும் இக்குழந்தை, செந்தாமரை மலரென, எழில் வடிவாக இருக்கிறது. இது, சத்துருக்களைக் கெடுக்கப்போகும் வன்மையால், 'சத்துருக்கன்' என்ற நாமத்தைச் சாற்றுகிறேன்.

*(எல்லோரும் அப்பெயரை முணுமுணுக்கின்றனர்.)*

**தசரதர் :** தவ முனிவரே! நான் மறைபோல் பிறந்திருக்கும், இந்த நால்வருக்கும் பொருத்தமான பெயர்களைச் சூட்டி விட்டீர்கள்.

இவர்கள் வளர்ந்த பிறகு, தாங்கள்தான் இவர்களுக்குக் கரையிலா அருமறையினோடு, வளர்கலையையும் போதித்து, இவர்களை ஆளாக்கிவிட வேண்டும்; அயோத்தியின் அணியாக்கிட வேண்டும்.

## காட்சி-47

*சுபர்வகிரிப் பிரதேசம்-அஞ்சனையின் வீடு*

[அஞ்சனை, ஒரு வானர மகவைப் பெற்றெடுக்கிறாள். அந்தக் குழந்தையைக் கையில் எடுத்து, கேசரி மகிழ்ச்சியடை கிறார்.]

## காட்சி-48

*தேவலோகம்*

**தேவேந்திரன் :** *(தேவர்களைப் பார்த்து) அஞ்சனை வயிற்றில் இருந்து வாயு புத்திரன் தோன்றிவிட்டான்!-சிவனின் அம்சமாக! தர்மத்தின் வம்சமாக! அரக்கர்களின் மதத்தை அடக்கும் அங்குசமாக!*

*மாலும் சிவனும் மண்ணுக்கு இறங்கி விட்டனர். இனி மங்கலம்தான்! மகிழ்ச்சிதான்! மறம் வீழ, அறத்தின் அரசாட்சிதான்!*

*[இதைக் கேட்டுத்தேவர்களும் அரம்பையரும் வாத்தியக் கருவிகளை இசைத்து, மகிழ்ச்சியோடு ஆடுகின்றனர்.]*

## காட்சி-49

[வாயுதேவன், சோலையிலே, மலை முகட்டிலே, மேகக் கூட்டத்திலே, நீர்ப்பரப்பிலே, மகிழ்ச்சியோடு நடனம் ஆடுகிறான்.]

## காட்சி-50

*அஞ்சனையின் வீடு*

[கேசரியும் அஞ்சனையும் பிறரும் சூழ்ந்திருக்க, ஒரு முனிவர், பிறந்திருக்கும் வானரக் குழந்தையை ஆவலோடு பார்க்கிறார்.]

**முனிவர் :** *மார்கழி மூல நட்சத்திரத்தில், இருளை அளிக்கும் அமாவாசையன்று, தீமை இருளை அழிக்க, இந்தக் குழந்தை பிறந்திருக்கிறது.*

*இவன் பிறந்ததால், பேய் அரக்கரின் வாழ்நாள் குறைந்து விட்டது.*

இந்த மலையிலே, ஒரு சுவர்ணமாகப் பிறந்திருப்பதால், 'சுவர்ணமேரு' என்ற பெயர், இக்குழந்தைக்குப் பொருத்த மாக இருக்கும்.

அஞ்சனையின் புத்திரனாக இருப்பதால், 'ஆஞ்சநேயன்' என்று செல்லமாக அழைத்து மகிழலாம்.

**கேசரி :** *(முனிவரை நோக்கி) சுவாமி! என் ஆஞ்சநேயனின் எதிர்காலம் எப்படி இருக்கும்?*

**முனிவர் :** தர்மத்தின் காலமாக அது இருக்கும். சூரியன் முதல் வானோர் அனைவரும் தரும் வரத்தைப் பெற்று, சுபிட்சமான வாழ்வு பெறுவான்.

இவன் நினைத்தால், பெரிய மேருவைவிடத் தன் மேனியைப் பெரிதாக்கிக் காட்டுவான்.

அற்ப அணுவை விடச் சிறிதாய் ஒடுக்கியும் காட்டுவான்.

இவன் ஆற்றல் அளப்பரியதாக இருக்கும். இவன் அறத்தோடுதான் பிணைப்புண்டு இருப்பான்.

**அஞ்சனை :** மகிமை பொருந்திய என் மகன், இந்த மலையை ஆண்டு, மனையாள் மக்கட் செல்வத்தோடு, சிறப்புற்று இருப்பானா சுவாமி?

*(இதற்கு என்ன பதில் அளிப்பது என்று சிறிது நேரம் தயங்குகிறார் முனிவர்.)*

**முனிவர் :** இவனுக்கு ஒப்பானவர்கள், இந்த ஜெகத்திலேயே இல்லை என்று திருமால் உரைக்கப் போவது, என் திருஷ்டியில் தெரிகிறது. இதற்கு மேல் வேறு எதைச் சொல்ல முடியும்? *(மன நிம்மதியோடு, கேசரியும் அஞ்சனையும், முனிவரைக் கையெடுத்துக் கும்பிடுகின்றனர்.)*

## காட்சி-51

*அயோத்தி அரண்மனை*

[குழந்தை ராமன் தவழ்ந்து வர, அதைக் கண்டு தசரதரும், மற்ற மூன்று தாய்மாரும் மகிழ்ச்சியடைகின்றனர். மற்றமூன்று குழந்தைகளும் அருகில் இருக்கின்றனர்.]

**தசரதர் :** *குவளையும் தாமரையும் சேர்ந்திருப்பதுபோல, என் ராமன் அழகு கொழித்துத் திகழ்கின்றான். இவனைத் தவிர, எனக்கு வேறு உடலோ, ஆவியோ கிடையாது.*

**கைகேயி :** *இந்த ராமன், கோசலைக்கு மாத்திரம் மைந்தனல்ல; எங்கள் மூவருக்கும் இவன் அருமை மைந்தன்.*

**கோசலை :** *புதிதாகப் பார்ப்பவர்கள், இவன் கைகேயி பிள்ளை என்றுதான் கூறுவார்கள். அவளிடம்தான் அதிகமாக ஒட்டிக் கொள்கிறான்.*

**கைகேயி :** *(வேடிக்கையாக) ராமனைப் பெற்றதற்காக, அக்காவின் மேல், நான் பொறாமைப்படவில்லை.*

*இந்த ராமனை வளர்ப்பதற்காக, அக்காவும் என்மேல் பொறாமைப்படவேண்டாம்.*

*[இதைக்கேட்டு, எல்லோரும் சிரிக்கின்றனர்.]*

*[தாயர் மூவரும், 'ராம்! ராம்!' என்று கூறிக் கைதட்டி இசையாகப் பாடுகின்றனர்.*

*இதைக்கேட்டு, நான்கு குழந்தைகளும் கை தட்டுகின்றன.]*

## காட்சி-52

*அஞ்சனையின் வீடு*

[குழந்தை ஆஞ்சநேயன் விடாமல் அழுது கொண்டிருக்கிறான். பெற்றவர்கள் பல விளையாட்டுக்கள் காட்டியும், அவன் அழுகை நின்றபாடில்லை. என்ன செய்வது என்று தெரியாமல் திகைக்கின்றனர். இப்பொழுது ஒரு முனிவர் அங்கு வந்து, அழும் குழந்தையின் அருகில் சென்று, 'ராம்! ராம்! ராம்!' என்று திரும்பத்திரும்பக் கூறுகிறார். குழந்தை இப்பொழுது அழுகையை நிறுத்தி அமைதியாகிறது. 'ராம்! ராம்!' என்று அந்த முனிவர் சொல்லச் சொல்லக் குழந்தை சிரிக்கிறது. கை குவித்து வணக்கம் தெரிவிக்கிறது.]

**கேசரி :** *(முனிவரை நோக்கி) சுவாமி! 'ராம்' என்பது மந்திரச் சொல்லா? இல்லை, ஏதாவதொரு தெய்வத்தின் பெயரா?*

**முனிவர் :** *பிறந்திருக்கும் ஒரு தெய்வத்தின் மானிடப் பெயர் அது. அந்த ராம சேவைக்காகவே பிறந்திருக்கும் குழந்தை இது!*

**அஞ்சனை :** *இது சிவாம்சம் கொண்டது; வாயு புத்திரன் என்றெல்லாம் சொல்லப்பட்டதே!*

**முனிவர் :** *சொல்லப்பட்டதும் உண்மை! நான் இப்பொழுது சொல்வதும் உண்மை!*

**கேசரி :** *யார் சுவாமி, அந்த ராம்?*

**முனிவர் :** *காலம் அவரைக் காட்டும். காலமெல்லாம், இவர்கள் இருவர் வரலாறும் ஒன்றாகி, இதிகாசமெனப் போற்றப் பெறும்.*

**கேசரி :** *தவமிருந்து பெற்றெடுத்த என் பிள்ளை, பெற்றவர் களுக்கென்று வாழ மாட்டானா சுவாமி?*

**முனிவர் :** *எல்லோர்க்கும் வாழ்வு அளிக்கும் மழையால், வருணனுக்குத்தானே பெருமை!*

*அந்த மழை, தன் வீட்டு முற்றத்தில் மாத்திரம் பொழிய வேண்டும் என்று வருணன் நினைப்பானா?*

*இவன் கதை, தெய்வத்தை உணர்த்தும் காதையாகும்!*

## காட்சி -53

*அயோத்தி அரண்மனை*

[அரண்மனை முற்றத்தில், குழந்தை ராமனை இடுப்பில் வைத்துக் கொண்டு, கோசலை நிற்கிறாள்.

குழந்தை ராமன், வானில் உள்ள சூரியனையே விழிபுரட்டாது பார்த்து, கைநீட்டி, அதைக் கேட்கிறான்.]

**கோசலை :** *(பணிப்பெண்ணிடம்) எல்லாக் குழந்தைகளும் நிலாவைக்கேட்கும்.*

சூரிய வம்சத்தில் பிறந்த இவன் சூரியனைக் கேட்கிறான்.

(குழந்தையைப் பார்த்து) ராமா! எல்லார்க்கும் உரிய சூரியனை நீ, உனக்கு மட்டும் விளையாடக் கேட்கலாமா?

ஒரு புறாவின் துயர் நீக்க, தன்னையே அரிந்து கொடுக்கத் தராசுத் தட்டில் அமர்ந்த மன்னவன் பரம்பரை நீ!

வேண்டாம் கண்ணா! அந்தச் சூரியன், உலகிற்கெல்லாம் சொந்தமாக இருக்கட்டும்!

## காட்சி-54

*அஞ்சனையின் வீட்டு முற்றம்*

**அஞ்சனை :** (குழந்தை ஆஞ்சநேயனிடம்) என்னடா சூரியனையே பார்த்துக் கொண்டிருக்கிறாய்? அதைப் பழமென்று நினைத்து விட்டாயா?

அதோ மரங்களில் பழுத்துக் குலுங்குது பார்! அவைதான் நீ சாப்பிட வேண்டிய பழங்கள்!

நான் உனக்காகக் கனி பறித்து வருகிறேன். நீ வெயிலில் வாடவேண்டாம். நீ இங்கேயே இரு.

[இவ்வாறு கூறிவிட்டு அஞ்சனை அங்கிருந்து சென்றுவிட, குழந்தை ஆஞ்சநேயன், சூரியனை நோக்கி, இரு கைகளையும் நீட்டி, வானில் பறக்கத் தொடங்கி விடுகிறான்.]

## காட்சி-55

*அயோத்தி அரண்மனை*

[முற்றத்தில் அமர்ந்திருக்கும் குழந்தை ராமன், இப்பொழுது சூரியனையே பார்த்தபடி, உற்சாகமாகக் கை கொட்டு கிறான்.]

**கோசலை :** *(பணிப்பெண்ணிடம்) குழந்தை மனதில் என்னமோ தோன்றியிருக்கிறது! அதுதான் மகிழ்ச்சியோடு கை கொட்டு கிறான்.*

*அவனுக்கு வேண்டியவர்கள் யாரோ, வீரம் நிகழ்த்து கிறார்கள்! அதுதான் இவன் மகிழ்கிறான்.*

**பணிப்பெண் :** *அரசியாரே! யார் அவர்கள்?*

**கோசலை :** *யாருக்குத் தெரியும்? இவனுக்குச் சொல்லத் தெரியாது! இவன் மனம் உணர்ந்ததை, நாம் தெரிந்து கொள்ள முடியவில்லையே!*

## காட்சி-56

*வானம்*

[வானில் சூரியனை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறான் குழந்தை ஆஞ்சநேயன். தேவர்கள் வானில் திரண்டு வந்து, இதை வியப்போடு பார்க்கின்றனர்.]

**ஒருதேவர் :** பார்! பார்! சூரியனைப் பழம் என்று பறிக்கப் போகிறான், குழந்தை ஆஞ்சநேயன்!

**இன்னொரு தேவர் :** எப்படி இந்தக் குழந்தையால் பறக்க முடிகிறது?

**முன்னவர் :** வாயு புத்திரனாயிற்றே!

[இப்பொழுது தேவகன்னியரும், நீராடிக் கொண்டிருக்கும் கோலத்தோடேயே, விரைந்து வந்து, வானில் நிற்கின்றனர்.]

**ஒரு தேவகன்னி :** ஏ... ஏ... இந்த வானரக் குட்டி, சூரியனை நோக்கிப் போகிறது!

நமக்கு, இந்திர சபையைத் தவிர, வேறு எங்கு போவதற்கும் அச்சமாக இருக்கிறது.

**இன்னொரு தேவ கன்னி :** இளங்கன்று பயம் அறியாமல் போகிறது!

**வேறொரு தேவகன்னி :** *பயந்தவர்கள் எல்லாம், இந்திர சபையை அலங்கரித்துக் கொண்டிருக்கிறார்கள்!*

**நாரதர் :** *(மூச்சிறைக்க ஓடி வந்து)*

*ஆபத்து! ஆபத்து! சூரியனின் வெம்மை, அந்த வாயுபுத்திரனைக் கருக்கப்போகிறது!*

*இதைத் தடுக்காமல், வேடிக்கை பார்க்கத் திரண்டிருக்கிறார்களே!*

*பாதி குளித்த கோலத்தோடு வந்து பார்ப்பதற்கு, இதென்ன சொக்கட்டான் ஆட்டமா?*

**தேவகன்னி :** *எங்கள் குளிக்கும் மேனியைப் பார்ப்பதற்கு, நாரத மகரிஷி தவமிருக்க வேண்டும்!*

**நாரதர் :** *உங்கள் மேனியைப் பற்றி, நீங்கள் கர்வம் கொள்வது நியாயமானதுதான்!*

*கற்பக விருட்சத்தின் காற்றுப்பட்டால், கருங்காலியும் செவ்வாழையாகச் சிலிர்த்து நிற்கும்!*

*இங்கு ஒரு பாலகன் பஸ்பம் ஆகப்போகிறானே, அது பார்ப்பதற்கு வேடிக்கையான காட்சி அல்ல!*

*அசுரர் கையில் அடிபடும் பொழுது, எப்படிக் குய்யோ முறையோ என்று கூக்குரல் இடுகிறீர்கள்! அந்தக் கூக்குரல் இப்போது கேட்க வேண்டாமா?*

*கூப்பிடுங்கள் வாயுதேவனை!*

*(உரக்கக் கூப்பிடுகிறார்.)*

*வாயுதேவா! வாயுதேவா!*

**வாயுதேவன் :** *என்ன நாரதரே!*

**நாரதர் :** *பாரும் உம் புத்திரனை! சூரியனைப் பழம் என்று அதைக் கவ்வ நெருங்கிக் கொண்டிருக்கிறான்! சுட்டெரிக்கும் சூரியன், இந்தச் சிசுவை விட்டு வைக்குமா?*

**வாயுதேவன் :** *விட்டு வைக்க வேண்டும்! இந்த ஆஞ்சநேயன், இந்த மண்ணுலகில், மதுர காவியம் படைக்க வந்திருக்கிறான்!*

*சூரியனுக்கு இது புரிந்திருக்க வேண்டும். வெய்யவன் வெங்கதிர், என் புத்திரன் மேல் வெண்ணிலா எனப் பொழிக!*

*குளிர் சந்தன மழைபோல, என் தளிர்மேல், பகலவன் வெயில் படருக!*

[இப்பொழுது சூரியனின் கதிர்கள் ஆஞ்சநேயனுக்குக் குளிர்ச்சியைக் காட்ட, அந்த இன்பத்தில் திளைக்கின்ற ஆஞ்சநேயன், மகிழ்ச்சியோடு, வானில் குட்டிக்கர்ணம் அடித்துவிட்டு, மீண்டும் சூரியனை நோக்கிச் செல்கிறான்.]

## காட்சி-57

*வானம்*

[ராகு இப்பொழுது வருகிறான். நடப்பவற்றை அதிர்ச்சியோடு பார்க்கிறான். சூரியனின் தேரில் ஏறி, ஆஞ்சநேயன், தன் வாயால் சூரியனைப்பற்ற முயல்கிறான். சூரியதேவன் சிரித்தபடி, தன் முகத்தை, அங்கும் இங்கும் திருப்பிக் கொள்கிறான். இதைப் பார்த்துத் தேவர்கள் சிரிக்கின்றனர். தேவகன்னியர் கைதட்டி ஆர்ப்பரிக்கின்றனர்.]

**ராகு :** *இன்று சூரிய கிரகணம். நான் சூரியனை விழுங்க வேண்டிய நேரம் இது. எனக்குப் போட்டியாக, ஒரு வானரக் குட்டி, அதைச் செய்ய முயன்று கொண்டிருக்கிறது. இதற்கு அனுமதியளித்தது யார்? எனக்குள்ள உரிமையை இழக்க நான் தயாரில்லை. ஏற்கனவே வெட்டுண்ட உடலோடு இருக்கிறேன். இனியும் வீழ்ச்சியடைவதற்கு, நான் சம்மதிக்க மாட்டேன். அந்தத் தேவேந்திரன் செய்த காரியமா இது என்று அறிகிறேன். ஆடல்பாடலை ரசித்துக் கொண்டிருக்கத்தானே, அந்தப் பதவியில் அவன் இருக்கிறான்! பிரபஞ்ச இயக்கத்தில், அனாவசியமாக அவன் தலையிடுவானேன்? சூரிய சந்திரரை ஒரு நாள், சிலபொழுது விழுங்குவது, எனக்கு அளிக்கப்பட்ட சன்மானம். இது பொறுக்கவில்லை அந்த இந்திரனுக்கு! அவன் லோகத்துச் சுந்தரிகளை, நான் திரும்பிக்கூடப் பார்ப்பதில்லை. ஆனால் தேவேந்திரன், என் திறந்த வாய்க்குள், மண்ணைப் போட்டு விட்டான்!*

*நேரில் சென்று கேட்கிறேன் நீதியை!*

## காட்சி-58

*இந்திர சபை*

**தேவேந்திரன் :** *(ராகுவைப் பார்த்து) பாம்புப் பதரே! என் மீதா குற்றம் சுமத்துகிறாய்? நான் யாரையும் சூரியனை விழுங்க அனுப்பவில்லை. என் கவலை எனக்கு! அந்த ராவணன் எப்பொழுது வருவானோ என்று அஞ்சி, அரியணையின் விளிம்பில் அமர்ந்து கொண்டிருக்கிறேன்!*

**ராகு :** *தேவேந்திரா! நீ சொல்வதை, உண்மையென்று ஏற்றுக் கொள்கிறேன்.*

*எப்பொழுதும் சுகித்திருக்கும் சுபாவம் உனக்கு உண்டே தவிர, பிரபஞ்ச இயக்கத்தில் தலையிட்டுக் குழப்பம் செய்யும் துணிச்சல், உன்னிடம் கிடையாது என்பதை இப்பொழுது உணர்கிறேன்.*

*நீ இப்பொழுது என்னோடு வான் மண்டலத்திற்கு வந்து, அந்த வானரக்குட்டி செய்கின்ற காரியத்தைப் பார்!*

**தேவேந்திரன் :** *நான் ஏன் அங்கெல்லாம் வர வேண்டும்? வேண்டாத சுமையெல்லாம் சுமப்பதற்கு, நானென்ன பூமாதேவியா?*

*இசையில் நடனத்தில் பொழுதைக் கழித்துக் கொண்டி ருப்பது, பொறுப்பற்ற செயல் அல்ல!*

*இனிமையாகப் பொழுதைக் கழிப்பவன்தான், வாழ்வில் வெற்றி அடைந்தவனாகக் கருதப்படுவான்!*

**ராகு :** *அப்படியானால், உனக்கு ஏறிவர ஐராவதம் எதற்கு? கையிலே வஜ்ராயுதம் எதற்கு?*

**தேவேந்திரன் :** *இதெல்லாம் தேவையில்லை என்று கூறுகிறாயா?*

**ராகு :** *வாளேந்தியன், வளையல் அணிந்த மங்கைபோல, கும்மியடித்துக் கொண்டிருக்க மாட்டான்!*

*உன் இந்திர சபையின் இசைக் குயில்களும், நடன மயில்களும், இப்பொழுது வானில்தான் திரண்டிருக் கின்றனர்.*

**தேவேந்திரன் :** *அடுத்த வீட்டில் சத்தம் கேட்டால், ஓடிப்போய் விடுகிறார்கள்!*

*நீ வற்புறுத்திக் கூப்பிடுவதால், இப்பொழுது நானும் அங்கு வருகிறேன்.*

**ராகு :** *ஐராவதத்தின் மேல் ஏறி, வஜ்ராயுதத்தைக் கையில் ஏந்திவா!*

**தேவேந்திரன் :** *ஏதோ கூத்துக்காக, வேஷம் கட்டியதுபோல் இருக்கும்!*

*சரி, உன் ஆசையைக் கெடுப்பானேன்! அவ்வாறே வருகிறேன்.*

## காட்சி-59

*வானம்*

[ஐராவதம் என்னும் யானையின் மேல் ஏறி, கையில் வஜ்ராயுதம் என்னும் வாளுடன், இந்திரன் வானமண்டலம் வருகிறான். உடன் ராகுவும் வருகிறான்.

இன்னும் ஆஞ்சநேயன், சூரியனைத் தன் வாயால் பற்றுகின்ற முயற்சியிலே ஈடுபட்டுக் கொண்டிருக்கிறான்.]

**ராகு :** *பார் இந்திரா! அந்த அந்நிய வானரக்குட்டி, அலர் கதிர் மண்டலம் வந்து, ஆதவனைக் கவ்வ முயல்கிறது! இது நியாயமா?*

**தேவேந்திரன் :** *நியாயமில்லைதான்!*

**ராகு :** *வெள்ளிக் குன்றுபோல் உள்ள ஐராவதம் ஏறி வந்திருக்கிறாய்! உன் சொல்லுக்கொரு மரியாதை இங்கு கிடைக்க வேண்டாமா?*

*அந்த வானரக் குட்டியை விலகச் சொல்லு; எனக்கு வழிவிடச் சொல்லு!*

**தேவேந்திரன் :** *வானரங்கள் சொல்லுக்குக் கட்டுப்படாது! கல்லுக்குத்தான் கட்டுப்படும்!*

*ராகுவே! நீ போய் இப்பொழுது அந்தத் தினகரனைப் பற்று! பற்று இலார்போல், அந்த வானரக்குட்டி ஒதுங்கி விடும்!*

**ராகு :** *உன் வஜ்ராயுதத்தை நம்பிச் சூரியனை நெருங்குகிறேன்.*

**தேவேந்திரன் :** *உன் தலையைக் காப்பாற்ற, நான் தவற மாட்டேன். நவக்கிரகங்களின் எண்ணிக்கை குறைந்து விட்டால், பிரபஞ்சத்திற்கு அது இழப்பு ஆயிற்றே!*

*[ராகு அச்சத்தோடு மெதுவாகச் சூரியனை நெருங்கிப் போக, ஆஞ்சநேயன் இப்பொழுது வருகின்ற ராகுவைப் பார்க்கிறான். 'இதுவும் ஒரு கனிதானோ?' என்று எண்ணு கின்ற குழந்தை ஆஞ்சநேயன், ராகுவைப் பிடிக்க வருகிறான். ராகு கதறிக் கொண்டு, இந்திரனிடம் ஓடி வருகிறான். இப்பொழுது ஐராவதம் என்னும் யானையை, அங்கு காணுகின்ற ஆஞ்சநேயன், 'எவ்வளவு பெரிய வெள்ளைக் கனி!' என்று எண்ணி, ஐராவதத்தின் வயிற்றைப் பற்றி, அதைக் கடிக்கிறான்.]*

**ராகு :** *தேவேந்திரா! உன் வஜ்ராயுதத்தை எடுத்து, அந்த வானரக் குட்டி மீது வீசு! தேவேந்திரன், இந்தக் களத்திலும் தோற்று விட்டால், இந்திரசபையிலே நீ எப்படி நுழைய முடியும்?*

**தேவேந்திரன் :** *கனல் உமிழும், ஆலகாலமென்னும் விஷத்தைச் சிதறும் இந்த வஜ்ராயுதத்தை, ஓர் அற்ப வானரக்குட்டி மீது வீசுவதா? வேறு வழியில்லை!*

*[இவ்வாறு கூறிவிட்டு, இந்திரன் ஆஞ்சநேயன் மீது
வஜ்ராயுதத்தை வீசி எறிய, அதனால்
தாக்கப்படுகின்ற ஆஞ்சநேயன்,
மயக்கமடைந்தவனாய், ஒரு மலையில்
விழுகிறான்.]*

## காட்சி-60

*வானம்*

[இதையெல்லாம் காணுகின்ற வாயுதேவன், சினத்தால் நெருப்புச் சொற்களை வீசி எறிகிறான்.]

**வாயுதேவன் :** ஒரு குழந்தையிடம், தன் வீரத்தைக் காட்டி விட்டான், அந்தக் கோமான் இந்திரன்!

என் கண்முன்னாலேயே, என் புத்திரன் அடித்து வீழ்த்தப் பட்டான்! அறியாப்பிள்ளை அவன்! அவனைத்திருத்த, தேவேந்திரன் வேறு உபாயம் தேடியிருக்க வேண்டும். புலி அடிக்கும் கணை எடுத்துப் பூவைச் சிதைத்து விட்டான்!

இமைப்பொழுதில், இம்மூவுலகினையும் கெடுப்பேன்!

புத்திரனைத் துடிதுடிக்க வைத்தால், அவன் தந்தை சத்துரு ஆகமாட்டானா?

வேடிக்கை பார்க்க வந்தவர்களே! விஷத்தை விழுங்கத் தயார் ஆகுங்கள்!

[இவ்வாறு வாயுதேவன் கூற, தேவர்கள் அச்சத்தோடு
வான மண்டலத்திலிருந்து ஓடுகின்றனர்.
தேவமகளிரும் ஆடைகள் அவிழ்ந்து வீழ,
அங்கிருந்து ஓட்டமெடுக்கின்றனர்.]

## காட்சி-61

*மலை*

[மலையில் விழுந்து கிடக்கும் ஆஞ்சநேயனைத் தன் மடியில்
கிடத்திப் புலம்புகிறான் வாயுதேவன்.]

**வாயுதேவன் :** ஆஞ்சநேயா! நீ சிவாம்சம் பொருந்தியவன் என்று சொல்லப்பட்டாயே! சிதறு தேங்காயைப் போல், உன் தாடையை உடைத்து விட்டார்களே!

பேச்சு மூச்சற்றுக் கிடக்கிறாயே! இந்தப் பிரபஞ் சத்தையே பேச்சு மூச்சற்றுப் பெரும் அவதிக்கு உள்ளாக்கு கிறேன்!

என் சஞ்சாரம் இல்லாவிட்டால், ஏது காற்று? உயிர்கள் இழுத்து விடும் மூச்சை நிறுத்தி விடுகிறேன்!

காற்று இல்லாமல், எல்லா உயிர்களும், கட்டைபோல் விழுந்து கிடக்கட்டும்!

அந்தத் தேவேந்திரன் சபையிலே இனி ஆடல் பாடல் இருக்காது; அடிவயிறு பெருக்க, மூச்சுத் திணறி, மயங்கி மண்ணைக் கவ்விக் கிடப்பார்கள்!

இந்த வாயுதேவன் வல்லமை என்ன என்பதைக் காட்டி விடுகிறேன்!

என் புத்திரன் மடிய, இந்தப் பிரபஞ்சம் ஜீவித் திருக்குமோ?

இனி இந்த ஆஞ்சநேயன் எழுந்து நடந்தால்தான், எல்லா உயிர்களுக்கும் மீட்சி உண்டு! இல்லையென்றால் வீழ்ச்சிதான்! வெறும் சடலம்தான் அவர்கள்!

இதோ, என் இயக்கத்தை நிறுத்துகிறேன். கூத்தாடும் இயற்கையின் அசைவுகளை நிறுத்தி விடுகிறேன்!

[இவ்வாறு கூறிவிட்டு, வாயுதேவன், தன் மூச்சை அடக்குகிறான்.]

## காட்சி-62

ஒரு சோலை

[அசைந்து கொண்டிருக்கும் மரக்கிளைகள், திடீரென்று, எழுதிய சித்திரம் போல அசையாது இருந்து விடுகின்றன.]

## காட்சி-63

கடல்

[அலை வீசி ஆர்ப்பரிக்கும் கடல், அலைகள் அற்ற, அமைதி யான ஏரிபோலக் காட்சியளிக்கிறது.]

## காட்சி-64

*யாக பூமி*

[காற்றில்லாமல், வேள்வியின் நெருப்பு அணைந்து விட, அங்கு இருக்கும் முனிவர்கள், மூச்சுத் திணறலால், கீழே சாய்கின்றனர்.]

## காட்சி-65

*மணவிழா நடக்கும் இடம்*

[மங்கல இசையோடு நடக்கும் மணவிழா, காற்று இல்லாமல், எல்லோரும் மயக்கமாகி, ஒருவர் மேல் ஒருவர் சாய்ந்து கிடக்கும் பரிதாபக் காட்சியாக மாறுகிறது.]

## காட்சி-66

*தேவேந்திரன் சபை*

[சபையில் ஆடிக் கொண்டிருக்கும் தேவ மங்கையர், மூச்சுத் திணறலால், கீழே சரிகின்றனர். தேவேந்திரனும் மற்ற தேவர்களும், வயிற்றைப் பிடித்துக் கொண்டு தடுமாறு கின்றனர். அங்கிருந்து ஓடுகின்றனர்.]

## காட்சி-67

*சத்யலோகம்*

[தேவேந்திரனும் பிறதேவர்களும், சத்யலோகத்திற்குத் தட்டுத் தடுமாறி வந்து நிற்கின்றனர்.

தேவேந்திரன், பிரம்மனிடம், திக்கித் திணறிப் பேசுகிறான்.]

**தேவேந்திரன் :** *ஆதி வேதியனே! பிரம்மனே! மூச்சுவிடக் காற்றின் சஞ்சாரம் இல்லாததால், இந்தப் பிரபஞ்சமே செயலற்றுப் போய் விட்டது!*

*எல்லோரும் மரப்பாவை போல அங்கங்கே வீழ்ந்து கிடக்கின்றனர்!*

*நாங்களும் வயிறு புடைக்க, மூச்சுத் திணறிக் கொண்டிருக்கிறோம்!*

*வாயுபுத்திரன் தாக்கப்பட்டான் என்று, அந்த வாயு தேவன், இந்தப் பிரபஞ்சத்தைத் தகர்க்க நினைக்கின்றான்!*

*எல்லா உயிர்களையும் படைத்தளித்த இனியவனே!*

*அந்த வாயுதேவனைச் சமாதானப்படுத்தி யாவர்க்கும் வாழ்வு அளிக்க வேண்டும்!*

**பிரம்மன் :** *தவறுகள் செய்வது, தேவேந்திரனின் இயல்புதானே! அதற்காக, இந்தப் பிரபஞ்சமே தண்டிக்கப்படுவது நியாயம் அல்ல!*

*வாருங்கள், நாம் எல்லோரும், அந்த வாயுதேவனைப் போய்ப் பார்க்கலாம்.*

*அந்த வாயுகுமாரன் பிழைத்து விட்டால், வாயுதேவனும் நடந்தவைகளை மறந்து, தன் இயக்கத்தைத் தொடங்கி விடுவான்.*

## காட்சி-68

*மலை*

[இந்திராதி தேவர்களோடு, பிரம்மன், வாயுதேவன் இருக்கும் மலைக்கு வருகிறான்.]

**வாயுதேவன் :** *பிரம்ம தேவரே! என் பிள்ளை கிடக்கின்ற கோலத்தைக் கண்டாயா?*

*மலர்ச்செண்டால் தடவ வேண்டிய, இந்தப் பிஞ்சு மேனியை, சூராதி சூரர்கள், வஜ்ராயுதத்தால் வீழ்த்தியிருக் கிறார்கள்!*

எல்லோர்க்கும் மூச்சைக் கொடுக்கும் நான், என் புத்திரன் மூச்சற்றுக் கிடக்கும் கொடுமையைக் காண வேண்டுமா?

**பிரம்மன் :** வாயுதேவா! நடப்பதெல்லாம் நல்லதுக்கே என்று எடுத்துக்கொள்! உன் புத்திரன் இப்பொழுது, இந்தப் பிரபஞ்சத்தின் முக்கிய புருஷனாகப் பேசப்பட்டு விட்டான்!

அவனை உயிர்ப்பித்துத் தருகிறேன், நீயும் உன் மூச்சை வெளிப்படுத்தி, இந்த மூவுலகையும் இயங்கச் செய்.

ஆணும் பெண்ணும் காதல் செய்தால்தான், சந்ததி தழைக்கும். வெறும் கட்டைகள் போல் கிடந்தால், உலக மெல்லாம் அழிந்து விடும்.

உன் கோபத்தால், யாவும் நிர்மூலமாக வேண்டாம். உனக்கு உன் மைந்தன் வேண்டும். எனக்கு இந்தப் பிரபஞ்சம் வேண்டும். இருவரும் பெறுவோம் இவற்றை.

[இவ்வாறு கூறிப் பிரம்மதேவன், ஆஞ்சநேயன் உடலைத் தன் கையால் தடவிவிட, ஆஞ்சநேயன் உயிர்பெற்று எழுகிறான்.

இது கண்டு, வாயுதேவன் உட்பட, எல்லோரும் மகிழ்கின்றனர். வாயுதேவன், இப்பொழுது, தான் அடக்கி வைத்திருக்கும் மூச்சை, ஒரு நீண்ட பெருமூச்சாக வெளிப்படுத்துகிறான்.]

## காட்சி-69

*சோலை*

[சலனமற்று இருக்கும் மரக்கிளைகள், காற்று வீசிட, இப்பொழுது அசைந்து ஆடுகின்றன.]

## காட்சி-70

*கடல்*

[ஏரிபோல் காணப்படுகின்ற கடல், இப்பொழுது அலை வீசி ஆர்ப்பரிக்கிறது.]

## காட்சி-71

*யாக பூமி*

[அணைந்து கிடக்கும் வேள்வித்தீ, திடீரென எரிய, கீழே சாய்ந்து கிடக்கும் முனிவர்கள், எழுந்து அமர்ந்து வேத கோஷம் செய்கின்றனர்.]

## காட்சி-72

*மணவிழா நடக்கும் இடம்*

[இங்கு விழுந்து கிடப்பவர்கள், மந்திரம்போல் எழுந்து நடமாட, மகிழ்ச்சி ஆரவாரமும், மங்கல இசையும் தொடர்கின்றன.]

## காட்சி-73

*தேவேந்திரன் சபை*

[சுருண்டு கிடக்கும் தேவமங்கையர், எழுந்து நின்று, விட்ட இடத்திலிருந்து, தொடர்ந்து ஆடுகின்றனர்.]

## காட்சி-74

*மலை*

**பிரம்மன் :** *(தேவேந்திரனை நோக்கி) தேவேந்திரா! இந்த வாயுபுத்திரன், இந்த ஜெகத்திலே செயற்கரிய செய்யப் பிறந்திருப்பவன்.*

*ஓர் அவதார மூர்த்திக்கு, ஆதரவாக, அரும் துணையாக, நடமாட இருப்பவன்.*

*இவன் வந்த நோக்கம் நிறைவேறிட, இந்த வைய கத்தில், இவன் சரிதம் கொண்டாடப்பெற, தேவர்கள் எல்லோரும், இவனை வாழ்த்தி, வரம் அளியுங்கள். இப்படித் தர்மத்தை வலுப்படுத்தக் கரம் கோத்துக் காரியமாற்றுங்கள்.*

**தேவேந்திரன் :** *பிரம்மதேவரே! பிழை என்னால் நேர்ந்து விட்டது. ஆனாலும் பிரகாசமான வாழ்வு, இதனால் இவனுக்கு ஆரம்பமாகி விட்டது.*

*இவன் கன்னமாகிய அனு அடிபட்டு, மீண்டும் ஒன்று சேர்ந்ததால், இவன் 'அனுமான்!' என்று பெருமையாக அழைக்கப்பெறட்டும்.*

*ஏற்பட்ட விபத்தால், இந்த இனிய நாமம், இவனுக்குப் பொருந்தட்டும்.*

*எதிரிகள் இந்திராஸ்திரத்தை, இவன்மீது ஏவினால், அந்த அஸ்திரம், இவனுக்கு எந்தக் கெடுதலையும் ஏற்படுத் தாது. மலர்க்கணை போல, இவன் மேனிபட்டு, மண்ணில் விழுந்து விடும்.*

*இந்த வரத்தை, என் பங்காகத் தந்து மகிழ்கிறேன்.*

*[இப்பொழுது சூரியதேவன் இங்கு தோன்றுகிறான்.]*

**பிரம்மன் :** *பொல்லா இருளைக் கடிந்து ஓட்டும் புவனதீபனே! சூரியனே! நீ கொடுக்கின்ற வரத்தைக் கொண்டிடக் காத்திருக்கிறான் இந்தப் பிள்ளை.*

**சூரியன் :** *எல்லா வித்தைகளையும் ஏற்கும் ஆற்றலை இவனுக்கு அளிக்கிறேன். என் கரங்களாகிய கதிர்களின் வல்லமை யையும், இவனுக்குப் பங்கிட்டுக் கொடுக்கிறேன்.*

[இப்பொழுது எமதர்மன் இங்கு தோன்றுகிறான்.]

**பிரம்மன் :** தரணியோரை விதி வழியே தண்டிக்கின்ற எமதர்மனே! உன் பங்கையும், இவனுக்குப் பரிமாறிவிட்டுப்போ.

**எமன் :** இந்த அனுமானுக்கு, யுத்த பூமியிலே மரணம் இல்லை. இலக்குத் தவறாத இந்த எமனின் தண்டினாலும், இவன் ஆருயிர் பிரியாது.

[இப்பொழுது வருணன் இங்கு தோன்றுகிறான்.]

**பிரம்மன் :** வருணதேவ!வான்மழை போல், உன் வரத்தையும் இவனுக்குத் தந்து அருள் செய்வாய்.

**வருணன் :** நீரால், இவனுக்கு ஆபத்து இல்லை. கொந்தளிக்கும் கடல், இவனைக் கும்பிட்டுக் கூத்தாடும்.

[குபேரன் இப்பொழுது இங்கு தோன்றுகிறான்.]

**பிரம்மன் :** கோடிகோடியான ஐஸ்வர்யங்களுக்கு அதிபதியே! குபேர தேவா! உன் ஆசியையும், இந்தப் பிள்ளை யாசிக்கிறான்.

**குபேரன் :** எந்த யுத்தத்திலும், இவனுக்குத் தோல்வி கிடையாது. வெற்றியே, இவன் வாழ்க்கையின் வண்ணச் சித்திரமாக இருக்கும்.

[விசுவகர்மா இப்பொழுது தோன்றுகிறான்.]

**பிரம்மன் :** வானோர் தச்சனே! விசுவகர்மாவே! உன் வாய் வார்த்தையை, வரமாகச் செதுக்கிக் காட்டு.

**விசுவகர்மா :** தீயோரை வேர் அறுக்கும் எழில் தேவர் படை யாலும், செருக்களத்தில், இந்தச் சீராளனுக்குச் சாவு இல்லை.

என் அணி குண்டலங்கள், இனி இந்த அனுமன் காதுகளை அலங்கரிக்கட்டும்.

[இவ்வாறு கூறி, தான் அணிந்திருந்த குண்டலங்களைக் கழற்றி, அனுமனுக்கு அணிவிக்கிறான்.]

**பிரம்மன் :** வானோரே! இந்த அனுமனுக்கு அழிவு இலாத வரத்தை அளித்தீர்கள்.

என் பிரம்மாஸ்திரத்தாலும், இவனுக்கு மரணம்

இல்லை. என்றும் மரணமே இல்லாப் பெருவாழ்வினை இவன் பெறுவான். வாயுதேவா! இவன், தான் நினைத்த வடிவங்களை எடுக்கும் ஆற்றலையும் அருளுகிறேன்.

வையத்தோர்க்கும் வானோர்க்கும் இன்னல் செய்யும் ராவணன்தன் லங்கை நகரை, இவன் எரியூட்டி நிர்மூலப் படுத்துவான்.

வரலாற்றில், இது வைரவரியாகப் பதிந்திருக்கும். கோசலை மைந்தன் ராமனின் மனம் உவப்ப, அரக்கர்குலம் அறுத்துப்பின்னை இவன், தெய்வ ராமனின் பேரருளாற் பிரம்மபதமும் பெறுவான்.

[இப்பொழுது சிவன் இங்கு தோன்றுகிறார்.]

**சிவன் :** எல்லோரும் வரம் அளித்து விட்டீர்கள். நான் மாத்திரம் விட்டுப் போகலாமா?

**பிரம்மன் :** செஞ்சடையோனே! உன் அம்சந்தானே இந்த வானரக் குழந்தையின் உருவம்!

பூமிக்கு அனுப்பி, உலவ விட்டிருக்கிறாய். இந்தப் பேராளன் பிறப்பெடுத்த நோக்கம் நிறைவேறிட, நாங்கள், எங்கள் பங்கை அர்ப்பணித்திருக்கிறோம்.

**சிவன் :** மிக்க மகிழ்ச்சி. இனிமேல், நாமெல்லாம் வான் உலகு சென்றுவிடுவோம். இந்தப்பிள்ளை, இங்கு தன் விளை யாட்டைத் தொடரட்டும்.

## காட்சி-75

*அயோத்தி அரண்மனைத் தோட்டம்*

[குழந்தை ராமன், அரண்மனைத் தோட்டத்தில் நின்று கொண் டிருக்க, அருகில் அரசி கைகேயியும் நிற்கிறாள். இப் பொழுது ராமன்மேல், வானிலிருந்து பூமாரி பொழிகிறது. இந்த அதிசயம் கண்டு, கைகேயி திகைக்கிறாள். இப்பொழுது இங்கு வரும் வசிஷ்ட முனிவரிடம் இதுபற்றிக் கேட்கிறாள்.]

**கைகேயி :** *தவ முனிவர் அவர்களே! என் ராமன் மேல், வானிலிருந்து பூமாரி பொழிகிறதே!*

*இது நல் நிமித்தம் தானே? இது உணர்த்துவது என்ன சுவாமி?*

**வசிஷ்டர் :** *கைகேயி அரசியே! இந்த ராமன் எதிர்காலத்தில் நிகழ்த்தப்போகும் பெரிய காரியத்திற்குத் துணையாக, இப்பொழுது பேராற்றல் சேர்ந்து விட்டது!*

*தேவர்கள், மலரைக் கொட்டித் தங்கள் மனமகிழ்ச்சியை வெளிப்படுத்துவது இதற்காகத்தான்!*

**கைகேயி :** *என்ன காரியம் சுவாமி அது? என் ராமன் எல்லா உலகங்களையும் வெல்வானா?*

**வசிஷ்டர் :** *பொல்லா மனிதர்களைக் களைவான்! இதற்கு மேல் சொல்ல ஏலாதவனாக இருக்கிறேன் அரசி!*

**கைகேயி :** *என் ராமனுக்கு ஏற்றம் என்பதை, இரு காதுகளால் கேட்கின்றேன். இது போதும் சுவாமி, நான் நிம்மதி பெற!*

## காட்சி-76

*அஞ்சனையின் வீடு*

[அஞ்சனை படுத்த படுக்கையாகக் கிடக்கிறாள். வைத்தியர் நாடி பிடித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறார். கேசரி, அருகில் கவலையோடு நின்று கொண்டிருக்கிறார்.]

**வைத்தியர் :** *நாடி தளர்ந்து கொண்டிருக்கிறது!*

**கேசரி :** *என்ன வைத்தியம் செய்தாவது, அஞ்சனையைப் பிழைக்க வைத்து விடுங்கள்! உங்கள் கால் அளக்கும் மலை நாட்டை எடுத்துக் கொள்ளுங்கள்!*

**வைத்தியர் :** *என் கையிலோ, மருந்திலோ எதுவும் இல்லை! மகன் காணாமற் போய்விட்டானே என்று, இவர்கள் மனம் குமுறிக் கொண்டிருக்கிறது! அந்த மனக்குறை தீர்ந்தால், உடல், நலம் பெற்றுவிடும்!*

**அஞ்சனை :** *சிவ அம்சம் என்று சொன்னார்கள்! வாயு புத்திரன் என்று சொன்னார்கள்!*

*அற்பாயுசிலே போவதற்கு இத்தனை அடைமொழிகள் எதற்கு?*

*சூரியனை நோக்கிப் போன பிள்ளை, சுட்டு எரிந்து, எங்கே சாம்பலாகக் கிடக்கின்றானோ?*

*தவமிருந்து பெற்ற பிள்ளையை, எமனுக்குத்தாரை வார்த்துக் கொடுத்து விட்டேன்!*

*இனியும் நான் இருப்பதிலே, ஏதாவது அர்த்தம் இருக்கிறதா?*

*கற்பை இழந்து பதிவிரதை வாழ்மாட்டாள்!*

*என் பிள்ளையைப் பறிகொடுத்துவிட்டு, நானும் வாழ மாட்டேன்!*

*என் உடல், அந்தச் சூரியன் கருக்காமலேயே வாடி உதிர்ந்து விடும்!*

**கேசரி :** *அஞ்சனை! ஆஞ்சநேயன் உயிரோடு மீண்டு வருவான் என்று முனிவர்கள் சொல்கிறார்கள்.*

*அந்த சுப நிகழ்ச்சி நிகழ வேண்டித்தான், அவர்கள் யாகம் செய்து கொண்டிருக்கிறார்கள்.*

**அஞ்சனை :** *பெரிய நெருப்பு, அந்தச் சூரியன் சுட்டெரித்து விட்டது!*

*இந்தச் சின்ன நெருப்பு, யாகத்தீ, மீட்டு எடுத்து வர முடியுமா?*

*அவர்களுக்குத் தெரிந்ததை, அவர்கள் செய்து கொண்டிருக்கிறார்கள்!*

*அவர்கள் பிழைப்பு அது!*

*அதனால், எனக்கொன்றும் ஆதாயம் இல்லை!*

*என் மடி கனக்கப்பிள்ளை இல்லாமல், என் உடல், இந்த மண்ணில் நடமாடாது!*

*வேள்விகள் நடக்கட்டும்! வேதங்கள் முழுங்கட்டும்! அவற்றால் பலன் உண்டு என்று நம்புவோர் நம்பட்டும்!*

*நம்பி, நாசத்தைக் கண்டுவிட்டநான், இந்தப் பொல்லாத பிறவியிலிருந்து விடுபட்டு விடுகிறேன்!*

*[இப்பொழுது வாயுதேவன், ஆஞ்சநேயனைக் கைகளில் தாங்கியபடி, அங்கு வருகிறான்.*

*எல்லோரும் இது கண்டு இன்ப அதிர்ச்சி அடைகின்றனர்.]*

**கேசரி :** *(உணர்ச்சிப் பிரவாகத்தோடு) அஞ்சனை! நம் செல்வன் ஆஞ்சநேயன்! இதோ பார்! நலமோடு இருக்கிறான்! நீ வாழ, வந்து விட்டான்!*

*[அஞ்சனை எழுந்து ஓடிப்போய்க், குழந்தையை வாரி அணைத்து, உணர்ச்சி மேலீட்டால், அழுது தீர்க்கிறாள்.]*

## காட்சி-77

*யாக பூமி*

[வேள்வித் தீ எரிந்து கொண்டிருக்கிறது, சுற்றிலும் அமர்ந்து, முனிவர்கள் வேத மந்திரங்களைச் சொல்லிக் கொண்டிருக்கின்றனர்.

இப்பொழுது ஒரு முனிவர், அங்கு பரபரப்போடு ஓடி வருகிறார்.]

**ஓடிவந்தமுனிவர் :** *கேசரி மைந்தன் கிடைத்து விட்டான்! ஆஞ்சநேயனை, வாயுதேவன் நலமோடு கொண்டு வந்து, கேசரியிடம் கொடுத்து விட்டார்!*

**ஒரு முனிவர் :** *(மகிழ்ச்சியோடு) யாகம் பூர்த்தியாவதற்கு முன்பே, யாகத்திற்கான பலன் கிடைத்து விட்டது!*

*நம் முயற்சியிலே எதுவும் இல்லை! அதற்காக அயர்ச்சியோடு நாம் சும்மா இருந்து விட முடியுமா?*

*சிறு குழந்தை கைகால் அசைப்பதுபோல, நாமும் இயங்கிக் கொண்டிருக்கிறோம்! - அவ்வளவுதான்!*

*வாருங்கள், அந்தத் தெய்வக் குழந்தையைப் போய்ப் பார்த்து வருவோம்.*

[முனிவர்கள் எல்லோரும் அங்கிருந்து கிளம்பு கின்றனர்.]

## காட்சி-78

*அஞ்சனையின் வீடு*

[குழந்தையை அணைத்தபடி அஞ்சனை இருக்க, கேசரி கை குவித்து நிற்க, வாயுதேவன், நடந்தவைகளை இவர்களிடம் சொல்லி முடிக்கிறான்.]

**வாயுதேவன் :** நடந்தவை இவைதான்.' வந்து துன்பம், வரம் பலவற்றை, இந்தப் பிள்ளைக்கு அருளிவிட்டு, இன்பமாக உருமாறி விட்டது.

இந்திரனின் வஜ்ராயுதம், இவன் வைரமாக ஜொலிப் பதற்கு, வழி செய்து விட்டது. 'அனுமன்' என்ற நாமத் தையும், இந்த அகிலத்தார் கொண்டாடச் சூட்டி விட்டது.

இவனை, உங்கள் பிள்ளை என்று சிறைப்படுத்தா தீர்கள். இவன், ஊர் உலகத்திற்காக வளரும் பிள்ளை. தர்மம் காக்கப் பிறப்பெடுத்த பெருமான் இவன்.

இவன், விரும்பிய இடத்துக்கெல்லாம் செல்லட்டும். செல்லும் இடமெல்லாம், அல்லலை ஒழித்து, அறத்தைப் பயிர் செய்யும் ஆற்றலுடையோன் இந்த அனுமன். நம் செல்வனை, நாம் பாராட்டிக் கொண்டிருப்பதைவிட, ஊரார் பாராட்ட, அதைக் கேட்டுக் கொண்டிருப்பதில்தான், உவகை மிகுதி!

[இப்பொழுது முனிவர்கள் அங்கு திரளாக வருகின்றனர். குழந்தையைப் பார்த்து மகிழ்கின்றனர்.]

**ஒரு முனிவர் :** வாழ்க ஆஞ்சநேயன்! வளர்க அவன்தன் ஆற்றல்! வாழிய அவனது பெருமை!

**இன்னொரு முனிவர் :** கதிரவனை வென்ற கற்கண்டே! உன் புகழ், புவனம் உள்ளவரை தித்திக்கும்!

**வேறொரு முனிவர் :** *நீ ஆஞ்சநேயனா? அற்புதங்கள் காட்டும், அறத்தின் நேயனா?*

**வாயுதேவன் :** *முனிவர் பெருமக்களே! வாய்குளிர, இவனை வாழ்த்துங்கள். உங்கள் வாழ்த்துக்கள், இவன் ஆற்றலைப் பெருக்கும். உங்கள் தவவலிமை, இவன் வலிமைபெற வகை செய்யும்.*

*எப்பொழுதும் சஞ்சரித்துக் கொண்டிருப்பவனே, இந்த வாயுதேவன். ஆதலால், நான் இப்பொழுது இங்கிருந்து விடைபெற்றுக் கொள்கிறேன்.*

## காட்சி-79

*அயோத்தி அரண்மனைத் தோட்டம்*

[மான் குட்டிகள், தோட்டத்தில் மேய்ந்து கொண்டிருக்கச் சிறுவன் ராமன், அவற்றைப் பார்க்காமல், யாரையோ தேடுவதுபோல், ஒரு திசையை நோக்கிப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.]

**பணிப்பெண் :** *ராமா! மான் குட்டிகளோடு விளையாடு! எங்கோ வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறாயே! யாரைத் தேடுகிறாய்?*

**ராமன் :** தெரியவில்லை - ஆனாலும் தேடிக் கொண்டிருக்கிறேன்!

## காட்சி-80

*மலைப் பிரதேசம்*

[மலை நாட்டில் வளருகின்ற சிறுவன் ஆஞ்சநேயன், ஒரு மரக்கிளையில் அமர்ந்து, ஒரு திக்கு நோக்கி உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

இப்பொழுது அந்த மரத்தடிக்குக் கேசரியும் அஞ்சனையும் வருகிறார்கள்.]

**அஞ்சனை :** *(மகனைக் காட்டிப் பேசுகிறாள்)* இப்படித்தான், எப்பொழுதும், அந்த மரக்கிளையிலே ஏறி அமர்ந்து கொண்டு, யாரையோ தேடுவதுபோல், பார்த்துக் கொண்டிருக்கிறான்.

**கேசரி :** யாரைத் தேடுகிறானாம்?

**அஞ்சனை :** தெரியவில்லை என்கிறான். ஆனால் இப்படித் தேடிக் கொண்டிருப்பதை நிறுத்துவதும் இல்லை.

**கேசரி :** அவன் செய்கின்ற காரியங்களுக்கு, நம்மால் காரணம் கண்டு பிடிக்க முடியாது. அவனைப் பூரணமாக உணர்ந்து கொள்ள நம்மால் ஏலாது. அவன் கிழிக்கின்ற கோட்டை அழிக்காமல் இருப்போம். அதுதான், நாம் அவனிடம் காட்டுகின்ற அன்பாகப் பாசமாக இருக்கும்.

## காட்சி-81

*கயிலை மலை*

**உமையம்மை :** (சிவனாரை நோக்கி) எங்கே புறப்பட்டு விட்டீர்கள்?

**சிவன் :** சேர வேண்டியவர்களைச் சேர்த்து வைக்கப் போகிறேன்.

**உமையம்மை :** அதற்கான காலம் வந்ததாகத் தெரியவில்லையே! வளர்ந்த பிறகு, ஆரண்யத்தில் அல்லவா, அவர்கள் சந்திக்க வேண்டும் என்று பேசிக் கொண்டீர்கள்.

**சிவன் :** இப்பொழுதே, விளையாட்டுத் தோழர்களாக, அவர்களைச் சேர்த்து வைக்கிறேன்.

**உமையம்மை :** உங்கள் விளையாட்டைத்தானே, அந்த மக்கள், விதி என்று பேசிக் கொள்கிறார்கள்! செய்யுங்கள், செய்யுங் கள்! உங்களுக்கும் பொழுதுபோக வேண்டாமா?

**சிவன் :** என் பொழுதைப் போக்கவா, அங்கும் இங்கும் ஓடிக் கொண்டிருக்கிறேன்? பூமிப் பரப்பிலே, தர்மம் தழைக்க, என் தரப்பிலிருந்து ஏதாவது செய்ய வேண்டாமா? இப்படிப் பேசுகிறாயே தவிர, என்னைப்பின் தொடர்ந்து நீயும் வராமலா இருக்கப் போகிறாய்?

*(இவ்வாறு கூறிவிட்டுச் சிவன் அங்கிருந்து செல்கிறார்.)*

## காட்சி-82

*மலைப் பிரதேசம்*

[கேசரி, தன் மைந்தன், சிறுவன் ஆஞ்சநேயனுக்குக் கதாயுதப் பயிற்சி கொடுத்துக் கொண்டிருக்கிறார்.

இப்பொழுது சிவனார் இங்கு வருகிறார். ஒரு குரங்காட்டியாக உருமாறுகிறார்.

இவர்கள் அருகில் வந்து, ஆஞ்சநேயனைத் தூக்கிக் கொண்டு ஓடுகிறார்.

''ஏ! குரங்காட்டி! குரங்காட்டி!'' என்று கூவியபடி, கையில் கதையோடு, கேசரிபின் தொடர்ந்து ஓடுகிறார்.]

## காட்சி-83

*அஞ்சனையின் வீடு*

[அமைதியின்றித் தத்தளிக்கின்ற மனதோடு, வீட்டு வாயிலுக்கு வருகிறாள் அஞ்சனை.

அங்கு, உமையாள், ஒரு குறத்தி உருவிலே நின்று கொண்டிருக்கிறாள்.]

**குறத்தி :** *ஆரூடம் சொல்லும் மலைக் குறத்தி நானம்மா! நடந்ததைச் சொல்வேன். நடப்பதைச் சொல்வேன். நடக்கப் போவதைச் சொல்வேன். நம்பிக் கேட்பதாக இருந்தால், எல்லாம் சொல்வேன்.*

*எள் விழுந்து கிடக்கும் இடத்தைக்கூட, நான் குறி பார்த்துச் சொல்லி விடுவேன்.*

*உன் புருஷனும் பிள்ளையும் இன்னும் வீடு வரவில்லையே என்று விசனத்தோடு நீ இருக்கிறாய்! இல்லையா?*

**அஞ்சனை :** *(பரபரப்போடு) ஆமாம், ஆமாம்.*

**குறத்தி :** *உட்கார்ந்து குறிகேளு! கயிலை மலை உமையாளை மனதிலே நினைத்துக்கொள்!, அவள் வாக்கென்று, என் வாக்கை எடுத்துக் கொள்!*

## காட்சி-84

*மலைப் பிரதேசம்*

[ஓடிச் செல்கின்ற குரங்காட்டியைப் பிடித்து நிறுத்தி, அவன் கையிலுள்ள ஆஞ்சநேயனைப் பறித்துக் கொள்கிறார் கேசரி]

**கேசரி :** *(கோபத்தோடு) ஏ குரங்காட்டி! குறைமதி கொண்டவனே! நீ வித்தை காட்டிப் பிழைக்க, என் மகன்தானா கிடைத்தான்! இவன் தெய்வப் பிறப்பு! தர்மம் தழைக்க வந்த புனிதப் பிறவி இவன்! குட்டிக் கர்ணம் போட்டு, உன் கும்பியை நிரப்ப, எத்தனையோ வானரங்கள் கிடைக்கும்! இவன் வாராது வந்த மாமணி!*

**குரங்காட்டி :** காக்கை, தன் குஞ்சைப் பொன் குஞ்சு என்றுதான் சொல்லும். இந்தப் புவனம் அதை ஒப்புக் கொள்ளுமா? என் கையிற் கிடைத்தவனை, நான் கை நழுவ விடமாட்டேன். எத்தனை மலைகளைத் தாண்டி வந்து, இவனை நான் பிடித்திருக்கிறேன். எளிதில் விட்டு விட்டுச் சென்று விடுவேனா?

**கேசரி :** *நான் இம்மலையின் மன்னவன்!*

**குரங்காட்டி :** *நீ எனக்குச் சின்னவன்!*

**கேசரி :** *என்னை இகழ்ந்தா பேசுகிறாய்?*

**குரங்காட்டி :** உன்னிடம் நான் பேசவே, நீ பெரும் தவம் செய்திருக்க வேண்டும்! கொடு சிறுவனை. தடுத்தால் அது தெய்வ நிந்தனை!

[இவ்வாறு கூறிக்கொண்டு, சிறுவனைப் பறிக்கப்போக, கேசரி, அந்தக் குரங்காட்டியின் மார்பில் கதையால் அடிக்கிறார். அந்த அடி, அழகு மாலையாகச் சிவன் மார்பில் விழுந்து

கிடக்கிறது. குரங்காட்டி இப்பொழுது சிவனாகத் தரிசனம் தருகிறார். கேசரி, மெய்விதிர்த்து, நடுநடுங்கி, கைகுவித்துச் சிவனை வணங்குகிறார்.]

**கேசரி :** *ஈசா! இறைவா! நீயா! அறியாமற் செய்த பிழையை, மன்னித்து அருள வேண்டும்.*

*உன் அம்சம் இவன்! உன் நிழல் இவன்! உம் பிம்பம் இவன்! உன் சூலம் இவன்!*

*இந்தா, பெற்றுக் கொள்!*

*[சிறுவனைச் சிவன் கையில் கொடுக்கிறார் கேசரி.]*

**கேசரி :** *இவனைக்கொண்டு, எந்தக் கதையைச் சொல்லப் போகிறாய்? அது தர்மத்தின் கதையாக விரியும்! அதை நானறிவேன்.*

**சிவன் :** *கேசரி! இந்த அனுமனின், உன் ஆஞ்சநேயனின் நெஞ்சில் உள்ள தாபத்தைத் தீர்க்கத் தூக்கிச் செல்கிறேன்.*

*இவனை எதிர்பார்த்து அங்கு ஓர் ஏந்தலும் வாடியிருக்கிறான். அவனும் தெய்வம் தெரிந்தெடுத்த உருவம்தான்!*

*இருவரும் சந்திக்கட்டும்! இவர்கள் சங்கமம், தர்மத்தின் கதையின் முதல் அங்கமாகும்!*

*இவனை வளர்க்கின்ற இனிய வாய்ப்பை, நீ இழந்து விடமாட்டாய். இவன் விரைவிலே உன்னிடம் திரும்பி வந்து விடுவான். இவன் இளமைப் பருவம், உன் கண்முன்னால் தான் அரும்பி மொட்டவிழும்.*

*சிறிது காலம் பொறுத்துக் கொள். இவன் இருக்கப் போகும் காலம் பெரிது. அதைக் கணக்கிடுதல் அரிது.*

*[இவ்வாறு கூறிவிட்டுச் சிவன், அனுமனோடு மறைந்து விடுகிறார்.]*

## காட்சி-85

*அஞ்சனையின் வீடு*

[குறத்தியோடு அஞ்சனை, தன் வீட்டில் இருக்க, அங்கு பரபரப்போடு வருகிறார் கேசரி.]

**கேசரி :** அஞ்சனை! அஞ்சனை! நம் ஆஞ்சநேயனை....

**அஞ்சனை :** (இடைமறித்து)

பரமேஸ்வரன், குரங்காட்டி வேஷத்தில் வந்து, தூக்கிச் சென்று விட்டார்!

அதுதானே, நீங்கள் சொல்ல வந்தது?

**கேசரி :** ஆமாம்-உனக்கு எப்படி இது தெரியும்?

**அஞ்சனை :** இந்தக் குறத்தி, சித்திரம்போல, எல்லாவற்றையும் குறிபார்த்துச் சொல்லிவிட்டாள்!

விரைவில் நம் செல்வன் திரும்ப வந்து விடுவான் என்றும், தீர்மானமாகச் சொல்லிவிட்டாள்!

அவன் அனுப்பி வைத்த செல்வத்தை, அவன் அழைத்துப் போயிருக்கிறான்! இதில் நாம் ஆதங்கப்பட என்ன இருக்கிறது?

ஆமாம், கதாயுதத்தால் நீங்கள் அடித்த அடி, அந்தப் பரமேஸ்வரன் திருமார்பிலே, மாலையாக விழுந்ததாமே!

அதைக்கூடத் தெளிவாக, இந்தக் குறத்தி சொல்லி விட்டாள்!

**கேசரி :** (வியப்போடு) அப்படியா! இந்தக் குறத்தியைத் தக்கபடி கௌரவிக்க வேண்டும்.

**குறத்தி :** சாமி, மனசு உவந்து, எதைக் கொடுத்தாலும் சம்மதம் தான்! மலைக் குறத்தி நான்! மாணிக்கமும் முத்தும் சேர்த்துக் கட்டிய மாலையா கேட்கப் போறேன்? வாய்க்கு ருசியா கனிகளைக் கொடுத்தால், வாய் நிறைய வாழ்த்திட்டுப் போவேன்!

[ஒரு கூடை நிறையக் கனிகளைக் கொண்டு வந்து,
குறத்தியிடம் கொடுக்கிறார் கேசரி.]

**குறத்தி :** மடியிலே விளைஞ்சதை, மகேஸ்வரன்ட்ட கொடுத்திட்டீங்க! மரத்திலே விளைஞ்சதை என்கிட்டே கொடுத்திட்டீங்க!

இந்தாங்க... ஆளுக்கொரு பழம்... என் கையாலே கொடுக்கிறேன். சாப்பிடுங்க.

**கேசரி :** *தானம் கொடுக்கிற எங்களுக்கே தானம் கொடுக்கிறியா?*

**குறத்தி :** *அது அகௌரவமாப்படுதா உனக்கு?*

*[இவ்வாறு கூறி விட்டு, குறத்தி, தன் தெய்வ உருவைக் காண்பிக்க, இருவரும் பதறி, அவள் காலடி விழுந்து இறைஞ்சுகின்றனர். உமை யாள் மறைந்து விடுகிறாள்.]*

**அஞ்சனை :** *அம்மா! தாயே! அன்ன பூரணியாயிற்றே நீ!*

*நீ கை விரித்துப் போடும் பிச்சையாலேதான், இந்தப் பிரபஞ்ச உயிர்களெல்லாம் வாழ்ந்து கொண்டு இருக்கின்றன!*

*நீ கொடுத்து, நாங்கள் மறுக்க முடியுமா?*

*ஏங்க...! அந்தத் தெய்வம் கைபட்ட கனிகளையெல்லாம், எடுத்துச் சாப்பிடுவோம். அந்தத் தாய் தொட்டுத் தந்தது, நமக்குப் புண்ணியத்தைத் தட்டின்றித் தந்து அருளும்!*

*[இருவரும் கனிகளை எடுத்துக் கண்களில் ஒற்றிவிட்டுப் பயபக்தியோடு சாப்பிடுகின்றனர்.]*

## காட்சி-86

*அயோத்தி அரண்மனை வாயில்*

[அரண்மனை வாயிலில், குரங்காட்டி உருவில் பரமேஸ்வரன், அனுமனைக் கையில் பிடித்தபடி, உடுக்கை அடித்துக் கூட்டத்தைத் திரட்டுகிறார்.

சிறுவன் ராமனும், தன் சகோதரர்களோடு அங்கு ஓடி வருகிறான்.

அனுமனும் ராமனும், ஒருவரையொருவர் விழிபுரட்டாது, ஆவலோடு பார்க்கின்றனர்.

அனுமன் ராமனைக் கையெடுத்துக் கும்பிட, ராமனும் பதிலுக்கு வணக்கம் தெரிவிக்கிறான்.

இப்பொழுது பரமேஸ்வரன் பாட ஆரம்பிக்கிறார். சிறுவன் அனுமனை, அதற்கேற்ப ஆடச் சொல்கிறார். அனுமன் ஆட மறுக்கிறான்.

'ஆடு ராமா! ஆடு ராமா!' என்று பரமேஸ்வரன் ராம நாமத்தைச் சொல்லிப்பாட ஆரம்பித்தவுடன், அனுமன் உற்சாகமாக ஆடுகிறான். குட்டிக் கர்ணங்கள் போடுகிறான். திரண்டிருக்கும் கூட்டத்தார், கை தட்டி, இதை ரசிக்கின்றனர்.

மன்னரும் அரசியர்களும்கூட, இதை வேடிக்கை பார்க்க இங்கு வந்து விடுகின்றனர்.

ஆட்ட பாட்டம் முடிந்தவுடன், சிறுவன் அனுமன், ராமனின் காலடி விழுந்து தொழுகிறான். அனுமனை அள்ளியெடுத்து அணைத்துக் கொள்கிறான் ராமன்.]

**குரங்காட்டி :** *மன்னா! 'ராமா!' என்ற இந்தச் சொல்தான், எங்கள் அனுமனுக்கு மகாமந்திரச்சொல்!*

**மன்னர் :** *ஆச்சரியமாக இருக்கிறதே! அறிமுகம் இல்லாதவர்களிடம் ஆழ்ந்த நட்பு இருக்கிறதென்றால், அது முன் ஜென்மத் தொடர்பாகத்தான் இருக்கும்!*

**குரங்காட்டி :** *இவர்கள் திட்டமிட்டு, இங்கு வந்தவர்களாகவும் இருக்கும்!*

**கைகேயி :** *என் ராமனுக்கு விளையாட்டுத் தோழனாக, இந்த அனுமனை, இங்கு விட்டுச்செல்.*

**கோசலை :** *நான் நினைத்ததைக் கைகேயி சொல்லிவிட்டாள். ராமன் நலம் நாடுவதில், எப்பொழுதும் போல், நான் பின்னுக்குத் தள்ளப்பட்டு விட்டேன்.*

**மன்னர் :** *குரங்காட்டியே! வேண்டும் பொருள் பெற்றுக்கொள். இந்த வானரச் சிறுவனை, எங்களிடம் விட்டுப்போ.*

**குரங்காட்டி :** *பொருள் யாருக்கு வேண்டும் மன்னா? பொருள் படைத்தவன், இறுதியில், இடுகாட்டில், சாம்பல் ஆகாமல் தப்பிக்க முடியுமா?*

*மணிமுடி தரித்தவனை, மயானத்தில் தீ, நெருங்கிட அஞ்சுமா?*

**ஓர் அரண்மனை வீரன் :** (கண்டிப்பான குரலில்) மாமன்னரிடம் மரியாதையோடு பேசவேண்டும்.

**மன்னர் :** உண்மையைத்தான் பேசுகிறான் இந்தக் குரங்காட்டி.

அரசன் என்ற போர்வையை, மரணம் மதிக்காது என்று கூறுகிறான்.

குரங்காட்டியே! இந்த அற்பப் பொருள் வேண்டாமென்றால், உனக்கு வேண்டியதைக் கேள்! எங்களுக்கு வேண்டியது, இந்த வானரச் சிறுவன்.

**ராமன் :** மன்னரின் பேச்சு ஆணைபோல் தெரியலாம். ஆனால், நான் யாசிக்கிறேன், இந்த அனுமனை! கைவிரித்துக் கேட்கிறேன். உங்கள் பிள்ளைபோல், என்னைப் பார்த்து விட்டால், இரக்கம் கொள்வீர்கள்! அனுமனை இங்கு விட்டுச் செல்வீர்கள்!

**அனுமன் :** என் விருப்பம், இங்கு ஸ்ரீராமனோடு இருப்பதுதான்! இவரைப் பார்க்கத்தான், என்னையறியாமல், இவ்வளவு காலமும் துடித்துக் கொண்டு இருந்திருக்கிறேன்!

**ராமன் :** அதே உணர்வுதான், எனக்கும் இருந்தது! அனுமனைப் பார்த்ததும், என் ஏக்கம் தீர்ந்தது!

**குரங்காட்டி :** நீங்கள் எல்லோரும் வற்புறுத்துவதால், வேறு வழியின்றி, இதற்கு ஒப்புக் கொள்கிறேன்.

அரண்மனை வாயிலிலே வந்து நிற்கும் மாமன்னர், எவ்வளவு எளிமையானவர் என்பதை உணர்கிறேன். அவர் மனம் வருந்துமாறு, நான் நடப்பதற்கு அஞ்சுகிறேன்.

ஆனால், என் விருப்பமாக, ஒன்றே ஒன்றைத் தெரிவிக்கிறேன்.

எனக்குப் பொன்பொருள் வேண்டாம்! யானை குதிரை வேண்டாம்! அரசாங்க அந்தஸ்து, மரியாதை- இவையெல்லாம் வேண்டாம்!

அதோ நிற்கிறாளே, அந்தக் கறுப்பி!; மீனைப்போன்ற கண்ணழகி!; அவளை என்னோடு வாழச் சொல்லி அனுப்பி வையுங்கள். நான் அனுமனை, உங்களிடம் விட்டுச் செல்லச் சம்மதிக்கிறேன்.

**கூட்டத்தில் நிற்கும் அந்தப்பெண் :** ஐய! இந்தக் குரங்காட்டியை நம்பி, நான் அயோத்தியை விட்டுப் போகமாட்டேன். இந்த ஆளுக்கு வீடு வாசல் இருக்கிறதாகத் தெரியவில்லை. இடுகாட்டிலே ஒதுங்குகிற ஆளாகத் தெரிகிறது!

**மன்னர் :** கல்யாண விஷயத்தில், என் குடிமக்களுக்கு, நான் கட்டளையிட முடியாது.

**ராமன் :** (அந்தப்பெண்ணைக் கையெடுத்துக்கும்பிட்டபடி) தாயே! உன்னை, என் நாலாவது தாயாக நினைக்கிறேன். இந்த அனுமன், என்னோடு இருக்க, நீதான் வழி செய்ய வேண்டும்.

**அனுமன் :** (கையெடுத்துக் கும்பிட்டபடி) இந்த ஸ்ரீராமன் சந்நிதியில், நான் ஏதேனும் ஒரு பொருளாகக் கிடக்க, அருள்புரி அம்மா!

**அந்தப் பெண் :** சின்னஞ் சிறுவர்கள், என் சித்தத்தைத் கரைத்து விட்டார்கள்.

(குரங்காட்டியைப் பார்த்து) வம்பு பிடிச்ச மனுஷா! வாய்யா!

[இவ்வாறு கூறி, அந்தக்குரங்காட்டியின் கையைப் பிடித்து இழுத்து அங்கிருந்து நடக்கிறாள்.

இதைக் கண்டு, எல்லோரும் சிரிக்கின்றனர்.]

## காட்சி-87

*அயோத்தி வீதி*

[அயோத்தி வீதியில் நடக்கும் குரங்காட்டியும், அந்தப் பெண்ணும், பரமசிவன் பார்வதியாக உருமாறி, அங்கிருந்து மறைகின்றனர்.]

## காட்சி-88

*அயோத்தி அரண்மனை*

*கைகேயியின் அறை*

[கைகேயி, சிறுவன் ராமனுக்கு உணவை ஊட்டிக் கொண் டிருக்கிறாள்.]

**கைகேயி :** *சாப்பிடு கண்ணா! நீ நல்லாச் சாப்பிட்டால்தான், சர்வலோகங்களையும் ஆளமுடியும்! இந்த அம்மா மனசையும் குளிர வைக்க முடியும்!*

**ராமன் :** *(பக்கத்தில் இருக்கும் அனுமனைச் சுட்டிக்காட்டி) அதற்கு இந்த அனுமன் துணையும் எனக்குத் தேவையம்மா!*

*இவனுக்கும், உங்கள் கையால் உணவளியுங்கள்! இவனை விலக்கி வைத்து, எந்த வெற்றியையும் என்னால் பெறமுடியாது!*

**கைகேயி :** *தோழமைப் பாசந்தான், தொய்வில்லாத பாசம்! தூய்மையான பாசம்! அனுமான்! அருகில்வா!*

*[இவ்வாறு கூறி, அனுமன் கையில், உணவுக் கவளத்தை உருட்டி வைக்கிறாள். அனுமன் மகிழ்ச்சியோடு சாப்பிடு கிறான். இப்பொழுது கூனிக்கிழவி அங்கு வருகிறாள். இந்தக் காட்சியைப் பார்த்து, அவள் முகம் கடுகடுக்கிறது.]*

**கூனி :** *நல்லாருக்கு! பட்ட மகிஷி, ஒரு குரங்குக் குட்டிக்கு உணவு ஊட்டிக் கொண்டிருப்பதா?*

*பெருக்கு மாறுக்குப் பட்டுக் குஞ்சம் கேட்குதா?*

**ராமன் :** *தயவுசெய்து, பிறர்மனம் புண்படும் படிப் பேசாதீர்கள்!*

**கூனி :** *நியாயத்தைச் சொன்னால், எல்லோரும் என்னைக் கூனி என்று கரித்துக் கொட்டுகிறார்கள்!*

*ஒரு குரங்குக்குக் கிடைக்கிற வாழ்வைப் பாருங்கள்!*

*(அனுமன் கண்களிலிருந்து கண்ணீர் வருகிறது.)*

## காட்சி-89

*அரண்மனைத் தோட்டம்*

[அரண்மனைத் தோட்டத்தில், ராமன், தன் சகோதரர்களோடும், மற்றச் சிறுவர்களோடும், பூப்பந்து வீசி விளையாடிக் கொண்டிருக்கிறான். இப்பொழுது அனுமன் அங்கு வருகிறான்.]

**ராமன் :** *அனுமன்! நீயும் இந்த ஆட்டத்திலே சேர்ந்துக்கோ.*

*(சிறுவன் அனுமனும் அவர்களோடு ஆட்டத்தில் கலந்து கொள்கிறான்.*

*இப்பொழுது கூனிக்கிழவி அங்கு வருகிறாள். அனுமனைச் சுட்டெரித்து விடுவது போலப் பார்க்கிறாள்.)*

**கூனி :** *வால் உள்ள பிறவிகளெல்லாம், ராஜகுமாரர்களோடு விளையாடனும்னு நினைக்கலாமா?*

*கல்லை விட்டு எறிஞ்சா, ஓடிப் போகிற பிறப்புகள், கண்ணை உறுத்துற மாதிரி, ராஜபுத்திரர்களோடு, சரிசமமாக நிற்கலாமா?*

*தடிகொண்டு அடிக்க, ஆள் இல்லை என்ற நினைப்பா?*

*[இக்கடுமொழிகளைக் கேட்டு, அனுமன் கேவிக்கேவி அழுகிறான். ராமன் அனுமனை அணைத்துச் சமாதானப் படுத்துகிறான். கூனி, பழிப்புக் காட்டி விட்டு, அங்கிருந்து செல்கிறாள்.]*

## காட்சி-90

*அயோத்தி அரண்மனை*

*குளியல் அறை*

[பணிப்பெண்கள், சிறுவன் ராமனைக் குளிப்பாட்டிக் கொண் டிருக்கின்றனர். இப்பொழுது சிறுவன் அனுமன் அங்கு வருகிறான்.]

**அனுமன் :** *(பணிப்பெண்களைப் பார்த்து) நீங்களெல்லாம் விலகுங்கள்! என் ஆண்டானை, நான்தான் குளிப்பாட்டி விடுவேன். இந்தச் சந்தோஷத்தை எனக்குக் கொடுங்கள்!*

*[இதைக் கேட்டுப் பணிப்பெண்கள் விலகி நிற்க, அனுமன் மகிழ்ச்சியோடு, ராமன் உடம்பைத் தேய்த்து விட்டுக் குளிப்பாட்டி விடுகிறான்.*

*இதைப் பார்க்கின்ற கூனி பொருமுகிறாள்.]*

## காட்சி-91

*அயோத்தி அரண்மனை*

*தனியிடம்*

[சிறுவன் ராமனைக் குளிப்பாட்டி விட்ட அந்தப் பணிப் பெண்களிடம், கூனி, தீயன பேசுகிறாள்.]

**கூனி :** *கைகேயி ராணியிடம் போய், அந்தக் குரங்கைப் பற்றித் தரக்குறைவாகப் பேசுங்கள்!*

*அந்தக் குரங்கு, உங்களைத் தொடக்கூடாத இடத்தில் எல்லாம் தொட்டு, மோந்து பார்த்தது என்று சொல்லுங்கள்!*

*இப்படியே விட்டு வைத்தோமானால், அது உங்களைப் பெண்டாள ஆரம்பித்து விடும்!*

## காட்சி-92

*அயோத்தி அரண்மனை*

*கைகேயியின் அறை*

**கைகேயி :** *(பணிப்பெண்களைப் பார்த்து) மந்தரை சொல்வ தெல்லாம் உண்மையா? அனுமன் உங்களிடம் தவறாக நடந்து கொண்டானா?*

**ஒரு பணிப்பெண் :** *அப்படியெல்லாம் எதுவும் நடக்கவில்லை அரசி!*

**இன்னொரு பணிப்பெண் :** *அனுமன், எப்பொழுதும், கண்ணியத்தோடு நடந்து கொள்வான்!*

**கைகேயி :** *மந்தரை! உன் மனதைக் குப்பையாக்கிக் கொள்ளாதே!*

**ராமன் :** *அம்மா! உங்களை வளர்த்தெடுத்த தாதி என்ற உரிமையில், வரம்புமீறிப்போகிறாள்!*

**கூனி :** *சிறுவர்கள் எனக்குப்புத்தி சொல்லும் அளவு, இந்த அரண்மனையில், எனக்கு இடம் அளிக்கப்பட்டிருக்கிறது! இதற்காக, நான் கேகய நாட்டிலிருந்து, இங்கு வந்திருக்க வேண்டாம்!*

*[இவ்வாறு கூறிப் பெருங்குரலெடுத்து அழுதபடி, அங்கிருந்து சென்று விடுகிறாள்.]*

## காட்சி-93

*அயோத்தி அரண்மனை*

*படுக்கை அறை*

[படுத்திருக்கும் ராமனுக்குக் கால்களைப் பதமாகப் பிடித்து விடுகிறான் அனுமன்.]

**ராமன் :** *அனுமான்! எதற்காக எனக்கு இப்படித் தொண்டு செய்கிறாய்? நான் உன்னை, என் தோழனாக நினைக்கிறேன்.*

**அனுமன் :** *உங்கள் அடிமையாக, என்னை நான் மதிக்கிறேன்.*

*ராமநாமந்தான், எனக்குத் தாரகமந்திரம்! ராம சேவை தான், என் வாழ்வின் லட்சியம்! ராமன் புகழ்தான், நான் விரும்பும் சங்கீதம்! இதற்காகவே, இப்பிறவி எடுத்திருப்பதாக, என் உள் உணர்வு கூறுகிறது.*

**ராமன் :** *என் சரிதத்தில், பொங்குகின்ற சக்தியாக, உன் பிரபாவந்தான் இருக்கும். உன்னைப் பார்த்தவுடனே, இந்த எண்ணம், என் மனதில் அரும்பி விட்டது.*

## காட்சி-94

*கைலாய மலையும் பாற்கடலும்*

**பாற்கடலில் திருமால் :** *சிவனாரே! இந்தக் கைங்கர்யமெல்லாம் தேவையற்றது! முறையற்றது!*

**கைலாய மலையில் சிவன் :** *ராமனுக்குச் சேவை செய்யப் பிறந்தவன் அனுமான். நடக்கின்ற நாடகக் கதையில், என்னை ஏன் பார்க்கிறீர்கள்? அங்கு அனுமனைப் பாருங்கள்! சிவனைக் கைலாயத்தில் காணுங்கள்.*

**பாற்கடலில் திருமால் :** *அதற்காகக் கால் பிடித்துவிட வேண்டுமா?*

*என் அங்கமெல்லாம் கூசுகிறது! நானும், பதிலுக்குத் தங்களுக்குத் தொண்டு செய்ய, வாய்ப்புக் கிடைக்குமா? இதை வரமாகத் தரமுடியுமா?*

**கைலாய மலையில் சிவன் :** *நீங்கள் விரும்பும் வண்ணம், ஒன்று செய்யலாம். இந்த ராம அவதாரத்தில், நீங்கள் என்னை, 'ராமநாத சுவாமியாக' லிங்கப் பிரதிஷ்டை செய்து, வழிபடுங்கள்! யுகம் மாறினாலும், அந்த சந்நிதிக்கு, மக்கள் வந்து அருள் பெறுவது, நின்று போகாது!*

*நீங்கள் பூசனை செய்த தெய்வமாக, என்றென்றும் பூலோகத்தில் நான் எழுந்தருளியிருப்பேன்!*

**பாற்கடலில் திருமால் :** *அப்படியே செய்கிறேன்! அலை பாய்ந்த என் மனதிற்கு ஆறுதல் அளித்து விட்டீர்கள்.*

## காட்சி-95

*வசிஷ்டரின் குடில்*

[வசிஷ்டர், வேத சுலோகங்களைச் சொல்ல, சிறுவன் ராமனும், அவனுடைய சகோதரர்களும், அவற்றைத் திரும்பச் சொல்கின்றனர்.

குடிலுக்கு வெளியே அமர்ந்திருக்கும் சிறுவன் அனுமான், வேத சுலோகங்களை, ஆவலோடு கேட்டுக் கொண்டிருக்கிறான்.]

**அனுமன் மனம் :** *எல்லா வித்தைகளையும் கற்கும் ஆற்றலை, எனக்குத் தந்திருப்பதாகச் சூரியதேவர் எனக்கு வரம் அளித்தாராமே! சொன்னார்களே அப்படி! என்னை, வாயு புத்திரன் என்றும் சொல்கிறார்கள்! அதனால் என்னால் பறக்க முடியும்!*

*அந்தச் சூரியனிடமே பறந்துபோய், அவரிடம் வேதம் கற்கிறேன்! ஒளி கொடுப்பவர், எனக்கு வேத ஒலியைக் கொடுக்கட்டும்!*

## காட்சி-96

*வானம்*

[அனுமன், சூரியனை நோக்கி, வானத்தில் பறந்து போகிறான்.]

## காட்சி-97

*வானம்*

[வானில், ரதத்தில், சூரியன் சென்று கொண்டிருக்க, அனுமன், சூரியன் முன்தோன்றி, ரதத்தின் வேகத்திற்கு ஏற்றவாறு, பின்னோக்கி ஓடியபடி, சூரியனோடு உரையாடுகிறான்.]

**அனுமன் :** சூரியதேவா! உன்னிடம் வேதம் கற்க வேண்டும். எனக்கு வரமளித்த நீ, எனக்கு வேதத்தின் வரிகளை உரைக்க வேண்டும்.

**சூரியன் :** *இப்படி ஓடிக்கொண்டே எப்படிக் கற்கமுடியும்? ஓரிடத்தில் நின்று கேட்டால், சொல்லத் தடையில்லை. ஆனால் எப்பொழுதும் சஞ்சாரத்தில் இருப்பவன் நான்! இதுதான் இங்கு சிக்கலாக இருக்கிறது!*

**அனுமன் :** *சிந்தையிலே உறுதி சேர்ந்து விட்டால், சிக்கலெல்லாம் தீர்ந்து விடும். உன் பயணத்திற்குத் தடை ஏற்படுத்தாமல், ஓரிடத்தில் நிலையாக நின்று கேட்கிறேன்.*

**சூரியன் :** எங்கோ மூலையில் கடுகு போல் நின்று கொண்டிருந்தால், நான் சொல்வது காதில் விழுமா?

**அனுமன் :** கடுகுபோல் நிற்கமாட்டேன். கந்தர்வர்கள் காண, வானக் கூரையைக் கிழித்துக் கொண்டு, விஸ்வரூபம் எடுத்து நிற்பேன்! இந்த ஆற்றல் எனக்குப் பிரம்மன் தந்த வரமாகும்.

உதயகிரியில் ஒரு காலும், அஸ்தமனகிரியில் ஒரு காலும் வைத்து நிற்கிறேன்!

உன் தேர் ஓடிக்கொண்டே இருக்கட்டும்!

உன் வாய், வேதமொழிகளை உதிர்த்துக்கொண்டே இருக்கட்டும்!

என் மனம்,அவற்றை மாந்தி, மகிழ்ந்து கொண்டே இருக்கட்டும்!

[இவ்வாறு கூறி, அனுமன், விஸ்வரூபம் எடுத்து, உதயகிரியில் ஒரு காலும், அஸ்தமன கிரியில் ஒரு காலும் வைத்து நிற்க, சூரியன் வேத சுலோகங்களைச் சொல்ல, அனுமன் அவற்றைத் திரும்பச் சொல்கிறான்.

தேவர்கள், தேவகன்னியர், வானில் திரண்டு வந்து ஆவலோடு இதைப்பார்க்கின்றனர். அவர்களும் வேதமொழிகளைத் திரும்பக் கூறுகின்றனர்.]

## காட்சி-98

*கயிலை மலை*

[கயிலை மலையிலும், சூரியன் சொல்லும் வேத மொழிகள் கேட்க, சிவனும் உமையம்மையும் சிரித்தபடி, அவற்றைத் திரும்பச் சொல்கின்றனர்.]

## காட்சி-99

*பாற்கடல்*

[பாற்கடலிலும், சூரியனின் வேத ஒலி கேட்க, பரந்தாமனும் தாயாரும், அவற்றைத் திரும்பச் சொல்கின்றனர்.]

## காட்சி-100

*வசிஷ்டரின் குடில்*

[வசிஷ்டர்முன் அமர்ந்திருக்கும் ராமலட்சுமண சகோதரர்கள், வானில் இருந்து வேதமொழி கேட்கத் திகைக்கின்றனர்.]

**ராமன் :** *(வசிஷ்டரிடம்) குருவே! எங்கு இருந்து இந்த வேத மந்திரம் கேட்கிறது?*

**வசிஷ்டர் :** *வானிலிருந்து! ஆதியில், வானிலிருந்துதான், இந்த மந்திரங்கள், இந்த அவனிக்குத் தெரிவிக்கப்பட்டன! இப்பொழுது சூரியதேவன், அவற்றைத்தன் மாணாக்கனுக்குச் சொல்லிக் கொடுக்கிறான்!*

**ராமன் :** *யார் அந்த மாணாக்கன் சுவாமி?*

**வசிஷ்டர் :** *உன் சிநேகிதன் அனுமான்!*

**ராமன் :** *அனுமானா!*

**வசிஷ்டர் :** *ஆம். அனுமான் சாதாரண வானரச் சிறுவன் அல்ல! இந்த வானும் மண்ணும் கொண்டாடப்போகும், ஒரு தெய்வக் குருத்து!*

## காட்சி-101

*லங்கையில் ராவணன் சபை*

[ஓர் அரக்கன், ராவணன் சபைக்குப் பரபரப்போடு ஓடி வருகிறான்.]

**ஓடி வந்த அரக்கன் :** *லங்காதிபதியே! எண் திசை வென்ற எங்கள் இறைவா! அந்நியன் ஒருவன், அளப்பரிய ஆற்றல் பெற்று நிற்கின்றான். பகை தோன்றும் இடமாக, அது இப்பொழுது புகைபோல் தெரிகின்றது.*

**ராவணன் :** *விவரமாகக் கூறு, என்னை மிஞ்சி, கடலும் ஆரவாரம் செய்யக்கூடாது என்பதுதான் என் ஆணை.*

**ஓடி வந்த அரக்கன் :** *ஒரு வானரச் சிறுவன், விஸ்வரூபம் எடுத்து, வானைக் கிழித்து நிற்கின்றான்!*

*உதயகிரியில் ஒரு காலும், அஸ்தமன கிரியில் ஒரு காலும் வைத்து நின்று, சூரியதேவனிடம் வேதம் கேட்கிறான்!*

**ராவணன் :** *ஒரு குரங்குக் குட்டியா இப்படிச் செய்கிறது?*

**ஓடிவந்த அரக்கன் :** *ஆம் மன்னா!*

**ராவணன் :** *என் லங்கை நகருக்கு வர அஞ்சுகின்ற சூரியன், எனக்கொரு எதிரியை உருவாக்குகிறானா?*

*ஒரு குரங்கால், என் நகருக்கு அழிவு ஏற்படுமென்று, அந்த நந்தி தேவன் சாபம் வேறு கொடுத்திருக்கிறான்!*

*சாபத்திற்கெல்லாம் சஞ்சலப்படுபவன் நான் இல்லை! அதற்காக, அந்தக் குரங்கை வளரவிடவும், நான் அனுமதிக்கப் போவதில்லை!*

*எதிரியின் அடையாளம் தெரிந்து விட்டது! வேண் டாததை முளையிலே கிள்ளியெறிவதுதான், லங்கை நகர்க்கு, வேண்டிய செயலாக இருக்கும்!*

*அந்தக் குரங்குக் குட்டியின் இருப்பிடம் எது?*

**ஓடிவந்த அரக்கன் :** *அயோத்தியில்தான் அது இருப்பதாகத் தெரிகிறது.*

**ராவணன் :** *அயோத்தி! எனக்குச் சாபம் கொடுத்த இன்னொரு இடம்! இந்தச் சம்பவம் என்னை எச்சரிக்கிறது! இதை அற்பமாக எடுத்துக்கொள்ள முடியாது!*

*குரங்கின் சேட்டையைக் கண்டு சொன்ன அரக்க வீரனே! அந்தக் குரங்கை, அயோத்தியில் புதைத்துவிட்டு வா! உன்னைப் பொன் மணிகளில் புதைத்துப் பரிசளிக்கிறோம்!*

## காட்சி-102

*வசிஷ்டர் குடில் இருக்கும் வனம்*

[அனுமன், வனத்தில், மண்ணில் அமர்ந்து, ராமநாமத்தை எழுதிக் கொண்டிருக்கிறான்.

அப்பொழுது, ஒரு பாறாங்கல்லோடு, வானில் பறந்து வருகின்ற அரக்கன் அனுமன் மீது அதை வீசுகிறான்.

அனுமன் கீழே உருண்டு விலகித் தப்பித்துக் கொள்கிறான். பெருத்த ஓசையோடு, அந்தப் பாறாங்கல், தரையை மோதுகிறது.

இந்தச் சத்தம் கேட்டு, குடில் உள்ளிருந்து, ராமன் உட்பட எல்லோரும் வெளியே வந்து பார்க்கின்றனர்.]

**லட்சுமணன் :** *(ராமனை நோக்கி) அண்ணா! அதோ, அரக்கன் வானிலே பறந்து போகிறான். அவன்தான் வீசியிருக்க வேண்டும்.*

**வசிஷ்டர் :** *அனுமனுக்கு ஒரு எதிரி கிளம்பியிருக்கிறான். அவன் எய்த அம்புதான், இந்த அரக்கன்!*

*அனுமன் இங்கு இருப்பது தெரிந்து விட்டதால், அடுத்தடுத்து அம்புகள் வரலாம்!*

*அனுமன் இடத்தை மாற்றிக் கொள்வது நல்லது!*

**அனுமன் :** *குருதேவரே! என் ராமனின் காலடியில்,என் ஆயுள் கழிவதை, நான் யாசிக்கிறேன்!*

*அதற்கு உதவுபவர்களை, நான் கைதூக்கித் தொழு கிறேன்!*

*ராமசேவையில் ஈடுபடாமல், எங்கோ பொழுதைக் கழிக்க, எனக்கு ஆயுள் வேண்டாம்! அந்த அவல நிலைக்கு, என்னை ஆளாக்கி விடாதீர்கள்!*

*எனக்கென்று தனியாக, எந்தப் பகைவனும் கிடையாது!*

*ராமனின் பகைவர்கள், என் பகைவர்கள்! ராமனின் நண்பர்கள், என் நண்பர்கள்! ராமநாமத்தைச் சொல்வோர், என் அன்பர்கள்.*

**ராமன் :** *அனுமான்! உன்னை ஒரு சாதாரண வானரச் சிறுவனாக, நான் பார்க்கவில்லை.*

*நீ, சூரிய தேவனிடம் வேதம் படித்து விட்டு வந்திருக் கிறாய்.*

*தெய்வ அருள் பெற்ற நீ, எதுவும் தெரியாதவன் போல், உலவிக் கொண்டிருக்கிறாய்.*

*இந்த அயோத்தியில், உன்னைப் பலிகொடுக்கும் பாவத்தை, நான் செய்யமாட்டேன்.*

*தயவு செய்து, இங்கிருந்து இப்பொழுது போய் விடு.*

*விரைவில் நாம் சந்திக்கத்தான் போகிறோம்.*

*நாம் இருவரும் ஒன்று சேர்ந்து, ஒப்பற்ற சரிதத்தை, உருவாக்கப் போகிறோம். அதற்காகப் பிறந்தவர்கள் நாம். என் உள் மனம், அதைத் தெளிவாக உணர்த்துகிறது. இன்று பிரிந்து, எதிர்காலத்தில் சேருவோம். இந்த என் வாக்கை, உன் ராமனின் வாக்கை, மீறாமல் நிறைவேற்றி வைப்பாயா?*

**அனுமன் :** *(கோபத்தோடு) மீறி, நான் இங்கேயே இருந்தால், என்ன செய்து விட முடியும்?*

**ராமன் :** *நான் அயோத்தியை விட்டுப்போய் விடுவேன்!*

**பரதன் :** *அண்ணா! அரசாள வேண்டிய நீ, அயோத்தியை விட்டுப் போவதா?*

**ராமன் :** *பரதா! உனக்குள்ள ஆசை, அனுமனுக்கும் இருந்தால், நான் அயோத்திக்கு அரசனாகலாம்! என் எதிர்காலமே, அனுமன் கையில்தான் இருக்கிறது!*

**அனுமன் :** *(வேதனையோடு) இப்படிப்பேசி, என்னைச் சித்திரவதை செய்வதை விட, ஈட்டிகொண்டு, என்னைக் குத்திக் கிழித்திருக்கலாம்!*

*நான் போகிறேன், இந்த அயோத்தியைவிட்டு! எவர் மகுடாபிஷேகத்திற்கும், நான் தடையாக இருக்க மாட்டேன்!*

*படரத் துடிக்கும் கொடியை, வெட்டி எறிகின்ற தர்மம், அயோத்தியின் ராஜதர்மமாக இருக்கட்டும்!*

[இவ்வாறு கூறி, கோபத்தோடு, அங்குள்ள மரக்கிளை களைப்பற்றி முறித்து எறிகிறான்.

வானிலே பறந்து, அங்கிருந்து மறைகிறான்.]

## காட்சி-103

*வானம்*

[வானின் வழியே பறந்து சென்று கொண்டிருக்கின்றான் அனுமன். ஒரு கந்தர்வன், வானிலே எதிர்ப்படுகிறான்.]

**கந்தர்வன் :** என்ன அனுமான்! இந்தக் கந்தர்வனைப் பார்க்காதது போல் செல்கிறாய்! என்ன வேத்னை உனக்கு?

**அனுமன் :** (எரிச்சலோடு) கன்னியரைத் தேடிப்போகும் உனக்கு, என் வேதனை புரியாது!

**கந்தர்வன் :** எரிச்சலோடு பேசுகிறாய்! சொன்னால்தானே துக்கம் ஆறும்!

**அனுமன் :** உனக்கு இது சம்பந்தம் இல்லாதது. கானம் இசைக்கும் பொழுது, உன்னைக் கலந்து பேசுகிறேன்.

**கந்தர்வன் :** இப்படிச் சொல்லிவிட்டால், உன்னை விட்டு விடுவேனா?

**அனுமன் :** வழியை விட்டால், நான் பேசுகின்ற மொழி, அழகாக இருக்கும்.

**கந்தவர்ன் :** விடாவிட்டால்...

**அனுமன் :** (கோபத்தோடு) மடையா!

[இவ்வாறு கூறி, அந்தக் கந்தர்வன் நெஞ்சில் ஓங்கிக் குத்துகிறான். கந்தர்வன் தடுமாறி விலகி விழ, அனுமன் அங்[illegible]ன்.]

**கந்தர்வன் :** கள்ளுண்ட குரங்குபோல, அனுமன் மனம் கட்டுமீறிக் கொந்தளித்துக் கொண்டிருக்கிறது!

அந்த ராமன், இவனைத் துரத்தி விட்டானா? அப்படித் தான் இருக்கும்.

## காட்சி-104

*அஞ்சனையின் வீடு*

**அனுமன் :** (கேசரி, அஞ்சனையிடம்) அந்த ராமன், இந்த அயோத்தியிலே இருக்காதே என்று என்னைத் துரத்தி விட்டான்!

**கேசரி :** காரணம் இல்லாமல், அதைச் செய்யவில்லை!

**அனுமன் :** (கோபத்தோடு) காரணம்...! பொல்லாத காரணம்!

இங்கு யாராவது, என்னை நோக்கிக் கல்லைத் தூக்கி எறிந்தால், இங்கிருந்து என்னை நீங்கள் துரத்தி விடுவீர்களா? மாட்டீர்கள்! ஏனென்றால், நீங்கள் பெற்றவர்கள். அந்த ராமன் யாரோ? நான் யாரோ? அவன் ராஜ வம்சம்! நான் வானர வம்சம்! அதுதான், வாலைச் சுருட்டிக் கொண்டு ஓடிப்போ என்று சொல்லிவிட்டான்!

**அஞ்சனை :** எங்களிடம் வந்து சேர்ந்தாயே! இதற்காக நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம்.

**அனுமன் :** எனக்கு மகிழ்ச்சியில்லை! என் மனதிலே நிம்மதியில்லை! என் ராமனைப் பார்க்காத பொழுதெல்லாம், எனக்குப் புலராப் பொழுதாகத் தெரிகிறது. ராம சேவையில் இன்பம் காணாத இந்த உடம்பு, இப்பொழுது நெருப்பில் வெந்து கொண்டிருப்பதை போலத் துடிக்கிறேன்.

**கேசரி :** காலம், உன் வேதனையைத் தீர்க்கும். ஞாலம், உங்கள் இருவர் கைக்கு வரும் என்று முனிவர்கள் மொழிந்திருக்கிறார்கள்.

**அனுமன் :** நீரில் மூழ்கிக் கொண்டிருப்பவனைக் காப்பாற்றாமல், அவனுக்கு நெடிய அரண்மனை வாசம் கிட்டும் என்று ஆரூடம் சொல்வது அபத்தமானது!

**அஞ்சனை :** என்செல்வனைக் கொல்லத் துணிந்த பாபி யார் என்று தெரியவில்லையே!

**கேசரி :** அஞ்சனா! இவன் வாயு புத்திரன்! சிவபெருமானின் பார்வையில், பாதுகாப்பில் இருப்பவன்! இவனுக்காக நாம்

*கவலைப்படுவது, கடல் வற்றிவிடுமோ என்று கட்டெறும்பு கவலைப்படுவதுபோல இருக்கிறது!*

*வரம் பல பெற்ற இவனை, வஜ்ராயுதத்தால் அடி வாங்கிப் பிழைத்தவனை, எந்தப்பகை என்ன செய்ய முடியும்?*

இவன் வாலைத் தூக்க, சேனை பல திரண்டு வர வேண்டும்!

**அனுமன் :** *நான், என் ராமனுக்குத் தொண்டு செய்து வாழ விரும்புகிறேன். தெய்வசம்பந்தம் அதற்கு உதவ வில்லையென்றால், நான் யாருக்காக வாழவேண்டும்? உங்களுக் காகவா? நான் பிறப்பதற்கு முன்பே, நீங்கள் அமோகமாக வாழ்ந்திருக்கிறீர்களே!*

**அஞ்சனை :** *அப்படியெல்லாம் பேசாதே ஆஞ்சநேயா!*

*[இவ்வாறு கூறி, அஞ்சனாதேவி, அவன் வாயில், உணவை ஊட்டி விட முனைகிறாள். அனுமன் எரிச்சலோடு, உணவுக் கலயத்தைத் தட்டிவிட்டு, அங்கிருந்து செல்கிறான்.]*

## காட்சி-105

*யாகசாலை*

[வேள்வித் தீ வளர்த்து, முனிவர்கள் வேத மந்திரங்களைக் கூறிக் கொண்டிருக்கின்றனர்.

மன எரிச்சலோடு, அனுமன் அங்கு வருகிறான்.]

**அனுமன் :** *(தனக்குள் பேசிக் கொள்கிறான்) லோக ஷேமத் திற்காக, யாகம் செய்கிறார்களாம்!*

*என் ஷேமத்திற்காக, யார் கவலை[illegible]கிறார்கள்?*

*எனக்கு இனியவர், என் ராமபிரான்! அவர் காலடியில் நான் இருக்கக் கூடாதாம்! கட்டளையிட்டு விட்டார் என் பிரபு!*

இதைத் தடுக்க முடியாத இந்தத் தவமுனிவர்கள், இந்த லோகத்திற்கே சுபிட்சத்தைக் கொண்டு வரப் போகிறார் களாம்!

தன் குழந்தைக்கு, ஒரு வாய்ச் சோறு ஊட்ட முடியாதவர்கள், இந்த அவனிக்கே அன்னதானம் செய்யப் புறப்பட்டு விட்டார்கள்! பித்தர்கள்!

[இவ்வாறு கூறிக்கொண்டு, யாகசாலையில் படையலுக்காக, வைக்கப்பட்டிருந்த கனிகளை எடுத்துச் சாப்பிடுகிறான். அங்குள்ள பால், நெய், தயிரை எடுத்துச் சாப்பிடுகிறான். இதைக் கண்டு முனிவர்கள் அதிர்ச்சி அடைகின்றனர்.

அங்கு உலர்த்தப்போட்டிருக்கும் துணிகளை எடுத்துக் கிழிக்கிறான். இதைத்தடுக்க வந்த ரிஷி பத்தினிகளை, அங்கும் இங்கும் பறந்து பறந்து, உறுமி அச்சுறுத்துகிறான்.

இது கண்டு முனிவர்கள் வெகுண்டு எழுகின்றனர்.]

**ஒருமுனிவர் :** அனுமான்! பொன்மை நிறத்து பிரம்மன் வரத் தாலும், புகழுடைய தேவர்கள் தந்த வரத்தாலும், செருக் குற்றுத் திரிகின்றாயா?

பிரம்ம தண்டினாலும் அடக்கமுடியாத உன்னை, இந்த முனிவர்கள் என்ன செய்து விடுவார்கள் என்ற எண்ணமா?

தெய்வங்கள் தந்த வரத்தையும் வலிமை இழக்கச் செய்யும் தவ ஆற்றல் பெற்றவர்கள் நாங்கள்!

எங்கள் சாபத்தால், இந்திரன் ஏளனத்திற்கு ஆளாக்கப் படவில்லையா?

உன்மத்தன்போல், எங்கள் வேள்வியில் புகுந்து, ஊறு செய்து விட்டாய்!

இமையோர் கொடுத்த வரச் செருக்கால், நன்று தீது என்று உணராது, எங்கள் வேள்வித் தீயைப் பரிகசித்து, எங்களை ஊழித் தீயாக எரியச் செய்து விட்டாய்!

இனி, உன் வலிமையை, நீ அறியாமல் அலைவாயாக! வரங்கள் தந்த ஆற்றல், உனக்குப் பயன் இல்லாமல், ஒழிவதாக!

*[இவ்வாறு கூறிக் கமண்டல நீரைக் கையில் ஊற்றிச் சாபமிடுகிறார்.*

*இப்பொழுது அனுமன் மேல் இடி விழுகிறது. அனுமன் வேர்த்து விறுவிறுத்துக் கூனிக் குறுகி, அங்கிருந்து நடக்கிறான்.]*

## காட்சி-106

*வனம்*

[துவண்ட மனத்தோடு, வனத்தில் நடந்து வருகிறான் அனுமன். வழியில் ஒரு நாகப்பாம்பு படமெடுத்து, அவனைப் பார்த்துச் சீற, அனுமன் பயந்து, அங்கிருந்து ஓட்ட மெடுக்கிறான்.]

## காட்சி-107

*ஓடைக்கரை*

[ஓடையிலே தண்ணீர் நிறைந்து ஓடுகிறது. அதை எப்படிக் கடப்பது என்று அனுமன் தயங்கி நிற்கிறான். இன்னொரு வானரச் சிறுவன், இப்பொழுது அங்கு வருகிறான்.]

***அந்த வானரச் சிறுவன் :*** *என்ன அனுமான்! ஏன் இங்கு நின்று கொண்டிருக்கிறாய்?*

***அனுமன் :*** *இந்த ஓடையிலே வெள்ளம் போகிறதே! எப்படிக் கடப்பது என்று பார்க்கிறேன்.*

***அந்த வானரச் சிறுவன் :*** *சூரியனை நோக்கிப் பாய்ந்தவன் நீ! இந்த ஓடையைப் பறந்து உன்னால் கடக்க முடியாதா?*

***அனுமன் :*** *அதெல்லாம் பழைய கதை! முனிவர்களின் சாப மேற்று, இப்பொழுது முடங்கிப் போய்விட்டேன்!*

***அந்த வானரச் சிறுவன் :*** *(பரிதாபப்பட்டு) ஐயையோ! அப்படியா சேதி! கேசரி மகாராஜாவிடம் சொல்லு. நீதிகிடைக்கும்.*

இப்பொழுது நீ என்னைப் பற்றிக்கொள். உன்னை அக்கரை சேர்த்து விடுகிறேன்.

[அனுமனை அணைத்துத் தூக்கி, அந்த வானரச் சிறுவன், அக்கரைக்குத் தாவி விடுகிறான்.]

## காட்சி-108

*அஞ்சனை வீடு*

**அனுமன் :** (பெற்றோரை நோக்கி, வேதனையோடு) அன்று விஸ்வரூபம் எடுத்து, உதயகிரியில் ஒரு காலும், அஸ்தமன கிரியில் ஒரு காலும் வைத்து, சூரிய தேவனிடம் வேதம் படித்தேன்.

இன்று ஒரு சிறு ஓடையைக் கடக்க முடியாமல், தயங்கி நின்று கொண்டிருந்தேன்.

**அஞ்சனை :** (கோபத்தோடு) சிறுவர்கள் சேட்டை பண்ணினால், அதற்காக இப்படியா தண்டிப்பது!

இந்த முனிவர்கள் பண்ணிய சேஷ்டைகளை, எத்தனை தேவமகளிர் என்னிடம் கூறியிருக்கிறார்கள்!

நீராட வந்தவர்களிடம், வேத மந்திரங்களையா கூறிக் கொண்டிருந்தார்கள்! வேறு முகத்தைக் காட்டி, வெட்க மின்றிப் பேசக் கூடாதன பேசிக்கொண்டிருந்தார்கள்!

**கேசரி :** அவர்களோடு வாதம் செய்வதால், நமக்கு வருவது ஒன்றுமில்லை! அவர்கள் மனம் இரங்கி, மாற்றம் உரைக்க வேண்டும்.

**அஞ்சனை :** பெற்றவள் கொதித்துப் பேசுவதைக் குறை என்று, எந்த வேதமும் சொல்லாது!

வாருங்கள்-அவர்களிடமே போய்ப் பேசுவோம்!

# காட்சி-109

*யாக சாலை*

**ஒரு ரிஷி பத்தினி :** *(கோபமாக அஞ்சனையைப் பார்த்துப் பேசுகிறாள்.) அந்தத் தேவமகளிர், எதற்காக இந்த வனத்தைத் தேடி வரவேண்டும்? அவர்கள் குளிப்பதற்கு வேறு தடாகமே கண்ணிற்படவில்லையா?*

*கொழுத்த ஆடு, என்னைப்பார், என் மேனியைப்பார் என்று அங்கும் இங்கும் நடைபழகிக் கொண்டிருந்தால், புலி கவ்வத்தான் செய்யும்!*

**சாபம் கொடுத்த முனிவர் :** *எதற்கு உங்களிடையே வீண் பேச்சு? நாம் ஒருவரையொருவர் குற்றம் கூறிக் கொண்டிருந்தால், வேதங்கள் கடலுக்குள் போய் ஒளிந்து கொள்ளும்!*

*அனுமான், ஒரு தெய்வ கைங்கர்யத்திற்காக, இங்கு வந்திருப்பவன் என்பதை உணர்கிறோம். எங்கள் கோபம், சாபமெல்லாம், நிலவை மறைக்கும் மேகம் போல விலகிப் போகும்.*

*பொருத்தமான ஒருவர், அவனுள் பொதிந்து கிடக்கும் ஆற்றலை, அவன் பெற்ற வரங்களை, அவனுக்கு உணர்த்தினால், அவன் எல்லா நலங்களும் பலங்களும் மீண்டும் பெறுவான்!*

*அவன் கையிருப்பைக் காட்டக் காலம் வரும்பொழுது, அவன் இந்தச் சாபக்கட்டிலிருந்து விடுபடுவான்!*

**அஞ்சனை :** *அந்தக் காலம் எப்பொழுது வரும் சுவாமி? சீக்கிரமாக, என் செல்வன் சீர்பெற்று விடுவானா?*

**முனிவர் :** *நான் பேசுவதை ஏற்றுக் கொள்ளுங்கள். கேள்விகள் கேட்டு, என்னைப் பேச வைக்காதீர்கள்! அது தெய்வவாக்கு ஆகாது!*

**கேசரி :** *சுவாமி!நீங்கள் கூறியதையே, நாங்கள் சாப விமோசனமாக ஏற்றுச் செல்கிறோம்!*

*உங்கள் பாத கமலங்களில், எங்கள் பணிவான வணக்கங்களைச் சமர்ப்பிக்கிறோம்!*

## காட்சி-110

*அயோத்தி அரண்மனைத் தோட்டம்*

[சிறுவன் ராமன், தன் கைவில்லால், களிமண் உண்டையை வெளிப்படுத்த, அது அங்கு வருகின்ற கூனியின் முதுகில் பட்டுக்கீழே விழுகிறது. கூனி கத்த, இதர சிறுவர்கள் சிரிக்கிறார்கள்.ல்

**கூனி :** *ராமா! என் கூன் முதுகை நோகடிக்கிறாயா? இரு இரு, எனக்கொரு வேளை வரும். அப்போது நான் பற்ற வைக்கிறேன். நீ பட்டாபிஷேகம் காண விடமாட்டேன்!*

*[இவ்வாறு கூறிவிட்டுக் கூனி அங்கிருந்து போய் விடுகிறாள். இது கண்டு, சிறுவர்கள் மேலும் சிரிக்கின்றனர்.]*

## காட்சி-111

*வனம்*

[ஒரு மரத்திலிருந்து கனியைப் பறித்து உண்ணப் போகிறான் அனுமன். இதர வானரச் சிறுவர் அதைத் தட்டிப் பறிக்கின்றனர்.]

**ஒருவானரச் சிறுவன் :** *நீ சூரியனைப் பிடித்துத் தின்னக் கூடியவன் ஆயிற்றே! உனக்கு எதற்கு இந்தப் பழம்?*

**அனுமன் :** *அதெல்லாம் பழங்கதை! இப்போது எனக்குப் பசிக்கிறது. என்னிடம் அந்தப்பழத்தைக் கொடுங்கள்.*

**ஒருவானரச் சிறுவன் :** *கொடுக்காவிட்டால் என்ன செய்வாய்?*

**அனுமன் :** *உங்களை உதைப்பேன்! கடிப்பேன்! (இதைக் கேட்டு, எல்லா வானரச்சிறுவர்களும் சிரிக்கின்றனர்.)*

**ஒரு வானரச் சிறுவன் :** *உனக்கு இப்பொழுது அலங்காரமாக வால் மாத்திரந்தான் இருக்கிறது! ஆங்காரமாகச் சண்டை போட வல்லமை இல்லை! இதை மறக்காமல், மந்திரம்போல் ஜபித்துக்கொள்!*

[அனுமன் அவர்கள் மீது பாய, அனுமனை அடித்துக் கீழே கிடத்தி விட்டு, அந்த வானரச் சிறுவர்கள், அங்கிருந்து செல்கின்றனர்.]

## காட்சி-112

*அயோத்தி அரண்மனை*

[இளம் பருவத்தினனாக ராமன் வளர்ந்திருக்கிறான். அவனோடு தம்பிகள் மூவரும் இருக்கின்றனர்.]

**கைகேயி :** *(ராமனை விழி புரட்டாது, மகிழ்ச்சியோடு பார்த்தபடி)* என் ராமனும், மற்றமூவரும், இளமைப்பருவம் கண்டு விட்டனர். இளங்காளைகளாக இவர்கள், இந்த அரண் மனையில் வளைய வருகின்றனர். இவர்களுக்கு மணம் முடித்து வைக்கும் வேளையும் வந்துவிட்டது என்று எண்ணுகிறேன்.

**தசரதர் :** கைகேயி பட்டமகிஷி மாத்திரமல்ல, மன்னனுக்கு நல்லது கெட்டதை எடுத்துரைக்கும் மதிமந்திரியும்கூட!

**வசிஷ்டர் :** அரசியார் சொல்வதுபோல், அதற்கான காலம் நெருங்கிவிட்டது. மேகங்கள் திரள ஆரம்பித்துவிட்டன. விரைவில் மங்கலமாக மழை பெய்தே தீரும்.

**கைகேயி :** இந்த ராமனைச் சீராட்டிப் பாராட்ட, எனக்குப் போட்டியாக ஒருத்தி வந்து விடுவாளே என்ற எண்ணந்தான், என்னைக் கொஞ்சம் இடர் செய்கிறது!

[இதைக்கேட்டு, மற்ற இரு அரசியர் உட்பட, அனைவரும் சிரிக்கின்றனர்.]

## காட்சி-113

*அஞ்சனை வீடு*

[வாலிபனாக ஆஞ்சநேயன் வளர்ந்திருக்கிறான்.]

**கேசரி :** எனக்குப்பின், இந்த மலையை ஆள, ஆஞ்சநேயன் வளர்ந்து விட்டான்.

அவன் சிரத்திலே முடி சூடுவதற்கு முன்னால், அவன் கரத்திலே, ஒருத்தியை ஒப்படைத்து விட்டால், நம் கடமை முற்றுப் பெற்றுவிடும்.

**அஞ்சனை :** என் ஆஞ்சநேயனுக்காகவே, ஒரு பெண் பிறந்து வளர்ந்து காத்திருக்கிறாளே!

**அனுமன் :** அம்மா! நான் பிறந்து வளர்ந்து காத்திருப்பது, ஒரு தெய்வீக சேவைக்காக என்று என் உள்மனது உரக்கப்பேசிக் கொண்டிருக்கிறது!

**அஞ்சனை :** யாருக்குச் சேவை செய்தாலும், மனையாளுக்கும் சேர்த்துச் சேவை செய்வதுதான், புருஷ தர்மம்!

**கேசரி :** ஆமாம்! நான் இல்லையா? இதுதான் உலக வழக்கு! முனிவர்களே, பத்தினிகளோடுதானே வாழ்கிறார்கள்! இது தான் இயற்கை! எதையும் விட்டு விலகுவது, கோழைத்தனம்!

**அனுமன் :** உலகத்தின் கருத்து அதுவாக இருக்கலாம்! என் உள்ளக் கருத்து வேறாக இருக்கலாம்!

**அஞ்சனை :** நீ என்ன வேண்டுமானாலும் பேசிக்கொள்! என் மடியிலே, உன் பிள்ளையைத் தவழ விடப்பா!

**அனுமன் :** உங்கள் பேர் சொல்லும் பிள்ளையாக, நிச்சயமாக நான் இருப்பேன்! எனக்கிட்ட பணி எதுவென்று தெரிந்து கொள்ளத் துடித்துக் கொண்டிருக்கிறேன்! சொந்தங்களைப் பெருக்கிக் கொண்டு, வந்த வேலையை மறந்து வாழ, என் மனம் ஒருப்படாது! உங்கள் மகனுக்கு அதனால் பெருமை வராது!

## காட்சி-114

*தசரதர் அரசவை*

**வாயிற் காப்போன் :** (விரைந்து வந்தபடி) மன்னா! புதியதோர் உலகையும், அதனோடு தேவர்களையும், நான்முகனையும்

படைப்பேன் என்று முழக்கமிட்ட விஸ்வாமித்திர மகரிஷி வருகிறார்!

(மன்னர் உடனடியாக எழுந்து வரவேற்க விரைய, விஸ்வாமித்திரர் அவைக்குள் நுழைகிறார்.

மன்னர் அடிபணிந்து வரவேற்கிறார்.)

**மன்னர் :** என் ஊழ்வினையை நீக்க வந்த உத்தமரே! வரவேண்டும். ஆசனத்தில் அமர்ந்து, எங்களுக்கு ஆசி அருள வேண்டும்.

என் நிலம் செய்த தவமோ? என் நலம் காக்கும் வினை செய்த தவமோ? என் குலம் செய்த தவமோ? தாங்கள் இங்கு வருகை புரிந்தது!

**விஸ்வாமித்திரர் :** மன்னா! நீ வாழ்க! உன் நாடு வளம் காண்க! இந்திரன் நீயோ என்று எண்ணுமாறு இனிது வீற்றிருக்கிறாய்.

ஆனால், கண் ஆயிரம் உனக்கு இல்லாததால், நீ இந்திரன் இல்லை; தசரதன் என்ற தெளிவு கிடைக்கின்றது.

என்னைப் போன்ற முனிவர்களுக்கும் இமையவருக்கும் இடையூறு வந்தால் வேறு எங்கு செல்வோம்?

பனிவரையாம் கயிலை மலைக்குச் செல்வோம்! பாற்கடல் வாசனை நாடி நடப்போம்! பத்ம பீடத்தில் அமர்ந்திருக்கும் பிரம்மன் நகரை நாடுவோம்!

இல்லையென்றால், இந்த மணிமாட அயோத்தி என்னும் பொன் நகருக்குப் புகல் தேடி வருவோம்!

இவைதானே நடந்து கொண்டிருக்கும் சம்பவங்கள்.

நலிந்தோர், அயோத்தியை நாடி வருவது, உன் அரசாட்சி யின் பெருமை மிகு அங்கம்தானே?

முன்னர் நீ, சம்பரன் என்னும் அரக்கனை, அவன் குலத் தோடும் தொலைத்து, நீ அளித்த அரசை அன்றோ, இன்று இந்திரன் ஆண்டு கொண்டிருக்கிறான்.

**மன்னர் :** (கை கூப்பித் தொழுதபடி) அன்பால், அமுதச் சொற் களை வாரி இறைக்கிறீர்கள்! நான் இப்பொழுது செய்ய வேண்டியது என்ன என்பதை, ஆணையிட்டு அருளுங்கள்.

**விஸ்வாமித்திரர் :** தவமுனிவர்கள் கருமம், வேள்விகள் செய்வது தானே!

வேந்தன் நீ, அதற்கு இடையூறு ஏற்படாவண்ணம் காக்க வேண்டும்.

காமம், வெகுளி போன்ற அரக்கர்கள், எங்கள் வேள்விக் களத்தை நெருங்காதபடி, வில்வேல் கொண்டு பாதுகாக்க வேண்டும்.

**மன்னர் :** தங்கள் ஆணையைத் தட்டின்றி நிறைவேற்றுகிறேன் சுவாமி!

**விஸ்வாமித்திரர் :** அதற்குத் தகுதியான அடலேறு ஆக, நான் தேர்ந்தெடுத்திருப்பது......

**மன்னர் :** யார் சுவாமி? நானா? என் படைத்தலைவர்களில் ஒருவனா?

தாங்கள் யாரைக் கூறினாலும், தங்கள் குறிப்பின்படி, தங்களைப் பின் தொடர்வர்.

**விஸ்வாமித்திரர் :** தசரதா! உன் பெரிய மனதை எண்ணிப் பெருமைப்படுகிறேன்.

உன் புதல்வர் நால்வரினும், கரிய செம்மலான ராமனை எனக்குத்தா! என்னோடு அனுப்பிவை.

அவன் கைவில், என் வேள்வியைக் காக்கும்

**மன்னர் :** (அதிர்ச்சியடைந்தவராகி) சுவாமி! வேல் பாய்ந்த புண்ணிலே, கனல் நுழைந்ததுபோல, இந்தச் செய்தி, என் செவியைச் சுடுகிறது சுவாமி!

கண் இலான், கண்ணைப் பெற்று விட்டோம் என்று மகிழ்ந்திருக்கும் வேளையில், அதை இழக்க வேண்டும் என்ற கடுந்துயரை, நான் பெறுவதுபோல் உணர்கின்றேன்!

சுவாமி! என் ராமன் சிறியவன்! படைப்பயிற்சி இல்லாதவன்! வில்லை விளையாட்டுப் பொருளாகக் கொண்டிருக்கும் பருவத்தினன்!

தங்களோடு நான் வருகிறேன் சுவாமி! வேள்விக்கு இடையூறாக, எவர் வரினும் வென்று காட்டுகிறேன்!

என் வல்லமையில் நம்பிக்கை வையுங்கள்!

என் வாளில் நம்பிக்கை வையுங்கள்!

என் வம்சத்தில் நம்பிக்கை வையுங்கள்!

[இதைக் கேட்டவுடன், விஸ்வாமித்திர மகரிஷி, கோபத்தோடு, ஆசனத்திலிருந்து எழுந்து நிற்கிறார்.]

**விஸ்வாமித்திரர் :** நான் கேட்பதைத் தர மறுக்கிறாய்! நீ கொடுப்பதை வாங்கிப் போக, நான் யாசகன் அல்லன்! மன்னா! முனிவர்களைப் பிச்சைக்காரர்களாக நினைக்காதே! அவர்கள் முனிந்து பேசினால், நாடு காடாகும்! நல்லரசு நாசமாகும்!

**வசிஷ்டர் :** (உள்ளே வந்தபடி) மன்னரின் பிழை பொறுக்க வேண்டும் தவமுனிவரே!

ஆசனத்தில் அமர்ந்து, தங்கள் கட்டளை, சாசனம் ஆவதைக் காணுங்கள்!

**விஸ்வாமித்திரர் :** (ஆசனத்தில் அமர்ந்தபடி) வசிஷ்ட மகரிஷியின் வாய்ச் சொல்லுக்குப் பணிகிறேன்.

**வசிஷ்டர் :** மன்னா! பெய்யும் மாரியால், பெருகும் ஆற்று வெள்ளம் போய், கடலிடைச் சேர்வது இயற்கை. இதைத் தடுக்க நினைப்பது, நகைப்பிற்கு இடமாகும்.

ராமன், இந்த மாமுனிவரிடம் சென்று சேர்வதும், நன்மை பயக்கும். அதனால் நல்லறம் செழிக்கும்.

சிறிய ராமன், சீரியராமன் ஆவான். அளவற்ற வித்தைகள், அவன் வில்லின் சொத்தாகும்.

முக்காலம் உணர்ந்தோர், வெற்றுரை நிகழ்த்த மாட்டார்கள்! அவர்கள் செய்யும் கர்மத்திலே, அர்த்தம் இருக்கும்; இந்த அவனிக்கு நன்மை இருக்கும்.

கரிய செம்மலை, இந்த அரிய முனிவரோடு அனுப்பி வை!

இதுவே தக்கது; நான் சொல்லத் தகுந்தது!

**மன்னர் :** (பணிவோடு) என் குருவின் வாசகத்தைத் தலைமேற் கொள்கின்றேன்!

என் கொலுமண்டபம் வந்த தவமுனியே! கோபம் தவிர்த்து, என் குலத்தோடு, என்னைக் காத்தருள்! தாங்கள்

*கோரியபடி, என் நம்பியை, ராமனை, அவன் தம்பி லட்சுமணனோடு, தங்கட்குத் தருகின்றேன்.*

*இனி அவனுக்குத் தந்தையும் நீங்களே! தனித்தாயும் நீங்களே! தந்தருள்க நலமெலாம் என்று தங்கள் தாள் பணிந்து இறைஞ்சுகிறேன்!*

**விஸ்வாமித்திரர் :** *மன்னா! மகிழ்ச்சி! வேள்வியை முடித்த பின்பு, கேள்வியாக அவன் எதிர்காலம் இருக்காது.*

*விழாக்கண்டு, வெற்றிப் படலமாக விரியும்*

## காட்சி-115

*அஞ்சனையின் வீடு*

[ஒரு முனிவர், அஞ்சனையின் வீட்டிற்கு வருகிறார். அவரைக் கேசரி, அஞ்சனை, ஆஞ்சநேயன் ஆகியோர் முறைப்படி வணங்கி வரவேற்கின்றனர்.]

**கேசரி :** *தவமுனிவரை, இதுவரை, இந்த சுபர்வகிரியில் நாங்கள் பார்த்ததே இல்லை. தாங்கள் யாரென்று தெரிந்து கொள்ள லாமா சுவாமி?*

**முனிவர் :** *சூரியதேவன் ஆணைப்படி, இங்கு வந்திருக்கிறேன் நான்!*

**கேசரி :** *அவர் அனுப்பிய செய்தி, என்னவென்று கூறுங்கள். சிந்தை நிறைவோடு செய்து முடிக்கிறோம் சுவாமி!*

**முனிவர் :** *விஸ்வகர்மாவால் உருவாக்கப்பெற்ற கிஷ்கிந்தை நாட்டிற்கு அருகில் உள்ள ருஷ்யமூக பர்வதத்திற்கு, உன் செல்வன் ஆஞ்சநேயனை, என்னோடு அனுப்பி வைக்க வேண்டும்!*

*அங்கு, நாடு இழந்து, நல் மனையாளை இழந்து, நல்உயிரைக் காக்க, ஓடி ஒளிந்திருக்கும் சுக்ரீவனுக்கு, ஆஞ்ச நேயன் அமைச்சன் ஆக வேண்டும். அதனால் சுக்ரீவன் ஆதாயம் காணவேண்டும். இழந்த நாட்டையும், நல் மனைவியையும் திரும்பப்பெற வேண்டும். சூரியதேவன் சொல்லியனுப்பிய செய்தி இதுதான்.*

**கேசரி :** கேசரியான சிங்கம் நான் இருக்க, இதற்குக் குட்டியை அனுப்புவானேன்?

அடங்காத மதயானைகளை அழித்து, இந்தக் கேசரி என்னும் நாமம் பெற்றவன் நான்!

நான் உண்டு உறங்கிக் கொண்டிருக்க, அறியாச் சிறுவனைப் பகை புகையும் இடத்திற்கு அனுப்புவதா?

தேவர்கள் அஞ்சிய சம்பசாதனனை, ரத்தம் சிந்த, நிலத்தில் வீழ்த்திக் காட்டினேன்! அந்த வீரம், வெறும் கதையாகிப் போகலாமா?

பகை கண்டு பாயவேண்டிய நான், இன்னும் முடங்கிப் போகவில்லையே!

அந்த சுக்ரீவனுக்கு வாழ்வளிக்க, நான் வருகிறேன் சுவாமி தங்களோடு!

ஆஞ்சநேயன் இந்த மலைநாட்டை அமைதியாக ஆளட்டும்!

**அஞ்சனை :** அவனுக்கு இப்பொழுது மணம் முடிக்க வேண்டும் என்றும், என் மனது முடிவு எடுத்திருக்கிறது சுவாமி!

பருவத்தில், அவனுக்குச் செய்ய வேண்டியதைச் செய்யாமல், தூர தேசத்திற்கு அனுப்பி வைத்தால், எங்கள் கடமையில் இருந்து, நாங்கள் தவறியவர்கள் ஆவோம்.

இந்தப் பழி, எங்களுக்கு நேராமல், காத்தருள வேண்டும் சுவாமி!

**முனிவர் :** இங்கு பிறந்து வளர்ந்திருக்கும் இந்த ஆஞ்சநேயனை, உங்கள் புத்திரனாக மாத்திரம், சிறைப்படுத்திப் பார்க்காதீர்கள்!

இவன் வாயு புத்திரன்! இவன் சஞ்சாரம் எங்கும் இருக்க வேண்டும்.

திரிபுரம் எரித்த சிவனின் அம்சமும் இவன்! பகை எரிக்க, இவன், தன் பயணத்தை, இப்போது தொடங்க வேண்டும்.

பெற்றவர்க்காகவும், பிறந்த இந்த மலை நாட்டிற்காகவும் மாத்திரம், இவன் பிறப்பெடுக்கவில்லை!

*தர்மம் வாழ, இந்தத் தரணியில் தோன்றியவன் இவன்!*

*ஒரு தெய்வ மகனோடு, கரம் கோத்துக்களம் காண வேண்டியவன் இவன்! அறத்தை வெற்றியாக இந்த அவனிக்கு தரவேண்டியவன் இவன்!*

**அனுமன் :** *என் விருப்பமும், இப்போது ருஷ்யமூக பர்வதம் செல்வதுதான். முனிவர்பிரான் மொழிந்தவையெல்லாம், நான் எதிர்பார்த்து ஏங்கியிருந்தவைதான்!*

**கேசரி :** இதற்கு மேல் மறுத்துப்பேச, எனக்கு வாயில்லை சுவாமி!

**அஞ்சனை :** *தெய்வாம்சம் பொருந்திய குழந்தையைப் பெற்றால், தாய் தன் ஸ்தானத்தை, பாசத்தைத் துறக்க வேண்டும்!*

*அப்படித்தானே சுவாமி?*

**முனிவர் :** *ஊர் உலகமெல்லாம் கொண்டாடப் போகும், உங்கள் புதல்வனைப் பார்த்துப் பெருமைப்படுங்கள்!*

*இதைவிட, ஒரு தாய்க்கு உண்மையான மகிழ்ச்சி, வேறு என்னவாக இருக்க முடியும்?*

*சூரியதேவன் எண்ணத்திற்கு எதிர்ப்புக் காட்டலாமா? சூரிய புத்திரன் சுக்ரீவனுக்கு, உதவ மறுக்கலாமா?*

*தெய்வங்களின் தீர்மானத்தை, முழுமனதோடு ஏற்றுக் கொள்ளுங்கள்! அரையும் குறையுமான பக்தி, அரை வேக்காட்டுப் பதமாகும்!*

**அஞ்சனை :** *சுவாமி! தங்கள் எண்ணம்போல் ஆஞ்சநேயனை அழைத்துச் செல்லுங்கள். இனிமேலும் ஏதாவது பேசி, நான் பெரும்பழி தேடிவிடக் கூடாது!*

## காட்சி-116

*பாலை நிலம்*

[ராமலட்சுமணர்கள், விஸ்வாமித்திர முனிவரோடு, வெப்பமான பாலை நிலத்தில் நடக்கின்றனர்.]

**ராமன் :** *சுவாமி! இந்தப் பாலைநிலம், கங்கையை முடியிலே கொண்ட சிவன் சினந்து நோக்க, இப்படி வெந்து போனதா?*

**விஸ்வாமித்திரர் :** எங்கள் வேள்வியைக் கெடுக்கும் ஒரு பெண் அரக்கியால் இவ்வாறு ஆனது.

அவள் ஆயிரம் மதயானை வலிமை உடையவள். பூமியைப் பெயர்த்து எடுக்கவும், கடலைப்பருகி விடவும், வானத்தைத் தகர்த்து விடவும் பலம் பெற்றவள்.

தாடகை என்னும் நாமத்தைப் பெற்ற அந்த நாசகாரி, நல்ல மருத நிலத்தை அழித்து, இப்படிப் பாலையாக்கி விட்டாள். நாங்கள் நடமாட அஞ்சும், அதர்மத்தின் சாலையாக்கி விட்டாள்.

கண்ணிற்பட்ட உயிர்களை எல்லாம், கொன்று திரியும் வெறி பிடித்த கொடுமைக்காரி அவள். பிரம்மன் படைத் தளிக்கின்ற உயிரெல்லாம், தனக்கு உணவு என்று நினைக் கின்ற நீச நினைப்பினள்.

**ராமன் :** இப்படிப்பட்டவள், இங்கு எங்கு தங்கி இருக்கிறாள் சுவாமி?

**விஸ்வாமித்திரர் :** அவள் தங்கியிருக்கும் இடத்தில், நெருப்பு எரிந்து கொண்டிருக்கும். இதோ அவளே வருகிறாள், பார்!

[இப்பொழுது தாடகை ஆரவாரத்தோடு அங்கு வருகிறாள்.]

**விஸ்வாமித்திரர் :** யானையின் தும்பிக்கைகளை மாலையாகப் போட்டுக் கொண்டு, மலை நடந்து வருவதுபோல, இடிக் குரலோடு வருகிறாள், பார்! அவள் கையிலே சூலம்! வாயே புகை கக்கும் குகை! இந்தப் பயங்கரமானவள், எங்கள் வேள்விக்கு விரோதமானவள்!

**தாடகை :** அற்ப மனிதர்களே! நான் நடமாடும் இந்த மண்ணிலே, கால் வைக்கத் துணிந்து விட்டீர்களா?

விதிதுரத்த, மரணத்தைச் சந்திக்க வந்து விட்டீர்களா?

இங்கு வந்தவர்கள் எல்லாம், எனக்குச் சுவையாகத், தங்கள் உடலைத் தந்துவிட்டுப் போயிருக்கிறார்கள்.

நீங்கள் தப்பமுடியும் என்ற எண்ணமா? என் சூலத்திற்கு இரையாகுங்கள். எனக்கு இனிய விருந்தாகுங்கள்.

***விஸ்வாமித்திரர் :*** *ராமா! தாமதித்தால், தாடகை சூலத்தை எறிந்து விடுவாள். இவளைப் பெண் என்று பார்க்கிறாயா?*

***ராமன் :*** *ஆம் சுவாமி! பெற்றெடுத்த இனமாயிற்றே என்று தயங்குகிறேன்.*

***விஸ்வாமித்திரர் :*** *ராமா! இவள் உருவில் பெண்ணே தவிர, பெண் தன்மை உடையவள் அல்லள்!*

*அதர்மம் பெண் வடிவுகொண்டு வந்தபோது, முன்பு திருமாலும், இந்திரனும் அவர்களை அழித்திருக்கிறார்கள்! திருமாலை முன்மாதிரியாகக் கொள்வது, அறத்திற்கு மாறானது ஆகாது!*

***தாடகை :*** *அந்த முனிவன், என்ன முணங்கிக் கொண்டு இருக்கிறான்? சாரற்ற சக்கை என்று, அந்த முனியின் உடலை, உண்ணாது விட்டு வைத்தேன்.*

*இளங்காயாக, இளைஞனே, இப்பொழுது நீ வந்து நிற்கிறாய்! உன்னைக் கடித்துச் சுவைத்தால், அறுசுவையும் அங்கு பரிமளிக்கும்.*

*[இவ்வாறு கூறி, சூலத்தை எறிகிறாள். அந்தச் சூலத்தைத் தன் வில் அம்பால், இரு துண்டுகளாக்கி விழ வைக்கிறான் ராமன்.]*

***விஸ்வாமித்திரர் :*** *நம்மைக் காத்துக் கொள்ள, இப்போது அவளை நீ அழிக்க வேண்டும். இதைத் குற்றம் என்று, எந்த வேதமும் கூறாது.*

*[தாடகை, ஒரு பெரிய பாறாங்கல்லை, இவர்கள் மீது எறிய, அதையும் ராமன், தன் வில்லம்பால் தடுத்துப் பொடிப்பொடியாக்குகிறான்.*

*பின்னர் ஓர் அம்பை, தாடகை மீது செலுத்த, அந்த அம்பு, அவள் மார்பில் நுழைந்து, அவள் உயிரைக் கவர்ந்து, அவள் முதுகு வழியாக வெளியேறி, மலை உருவி, மரம் உருவி, மண்ணில் புதைந்து நிற்கிறது. தாடகை பிணமாகக் கீழே விழுகிறாள். ]*

***விஸ்வாமித்திரர் :*** *ராமா! புல்லோர்க்கு நல்லோர் சொன்ன உபதேசம் போல, உன் அம்பு, அவள் உடம்பில் நுழைந்து தங்காமல் போய்விட்டது.*

*உன் வில் கண்ட முதல் வெற்றி இது!*

*உன் வீர காவியத்தின் தொடக்கம் இது!*

*நீ சந்தித்த முதல் சமர் இது!*

*தெய்வப் படைக்கலன்களை, உன் தோளுக்கு அணியாகத் தருகிறேன். நீ தொடரப்போகும் சரிதத்திற்கு, அவை துணையாக இருக்கும்.*

## காட்சி-117

*மலை*

[தன் நாட்டை விட்டு, ஆஞ்சநேயன், மலைப்பகுதியில், முனிவரோடு நடந்து செல்கிறான். இளம்பெண்ணான சுவர்ச்சலாதேவி, வழிமறித்துப் பேசுகிறாள்.]

**சுவர்ச்சலாதேவி :** *வாயு புத்திரரே! வணக்கம்*

**ஆஞ்சநேயன் :** *சுவர்ச்சலாதேவி! முனிவர்பிரானோடு நான் ருஷ்ய மூக பர்வதம் செல்கிறேன்.*

**சுவர்ச்சலாதேவி :** *அதை அறிந்துதான், வழிமறித்துப் பேசுகிறேன்.*

*உங்களுக்காகப் பிறந்து வளர்ந்திருப்பவள் நான்! உங்கள் அம்மா, இதைக் கூறியிருப்பார்களே!*

**ஆஞ்சநேயன் :** *மணம் புரிந்து, மழலைகளைப் பெற்றெடுக்கும் வாழ்வுக்காக, நான் பிறந்திருப்பதாக நினைக்கவில்லை!*

**சுவர்ச்சலாதேவி :** *அரிய பெரிய செயல்களைச் செய்தவர்கள் எல்லாம் தனி மரமாக நிற்கவில்லை!*

**ஆஞ்சநேயன் :** *மற்றவர்களைப் பற்றிப் பேச்சு வேண்டாம். பிரம்மச்சரியத்தை நான் மதிக்கிறேன்! என் வாழ்வோடு அது பிணைந்திருக்கும்! இது உறுதி!*

**சுவர்ச்சலாதேவி :** *சென்று வாருங்கள். ஆனால், ஒன்று சொல் கிறேன். நானும் உறுதியோடு சொல்கிறேன். முனிவர் பிரானின் முன்னிலையில் சொல்கிறேன். ஆஞ்சநேயரே! உங்கள் மூலம், ஒரு குழந்தையை நான் காண்பேன்!*

**ஆஞ்சநேயன் :** *அந்த வெட்கங்கெட்ட நிலைமை, எனக்கு வரவே வராது!*

**சுவர்ச்சலாதேவி :** *உங்கள் குழந்தையை, உங்களுக்கு அடையாளம் காட்டிப் பிறகு பேசிக்கொள்கிறேன்!*

[*இவ்வாறு கூறிவிட்டுச் சுவர்ச்சலாதேவி, அங்கிருந்து நடக்கிறாள்.*]

**ஆஞ்சநேயன் :** *பெண்கள் பேதையர் என்பது எவ்வளவு உண்மையாக இருக்கிறது!*

[*முனிவரோடு தொடர்ந்து செல்கிறான் ஆஞ்சநேயன்.*]

## காட்சி-118

*மிதிலையில் ஜனகன் அவை*

[*ராமலட்சுமணர்களோடு விஸ்வாமித்திரர் இங்கு இருக்கிறார்.*]

**விஸ்வாமித்திரர் :** *மிதிலை மன்னனே! அயோத்தி மன்னன் தசரதனை, அறியாதார் இல்லை. அவன் பயந்த குலக் குமரர் இவர்கள். ராமலட்சுமணர் என்னும் நாமம் பூண்டவர்கள். மறை ஓதுவித்து, இவர்களை வளர்த்தவன், வசிஷ்ட மாமுனி.*

*அலை உருவக் கடல் உருவத்து இந்த ஆண்தகை ராமன், தன் புயவலியால், கனல் உமிழ் கண் தாடகைதன் மார்பு உருவி, மலை உருவி, மரம் உருவி, மண் உருவிற்று, இவன் விட்ட அம்பு!*

*ஈது இவன்தன் வரலாறும், புயவலியும்!*

**ஜனகர் :** *இங்கு இருக்கும் சிவதனுசை நாணேற்ற, நல்ல ஆண்மகன் இல்லாமையால், என் நங்கை சீதை, மங்கல நாண் ஏறாமல் இருக்கின்றாள். அதனால், நான் மனம் வாடி இருக்கின்றேன். இந்த வீரக் கொழுந்து, அதைச் செய்து முடித்தால், நான் சிந்தை மகிழ்வேன்.*

*இந்த வில், சிவன் கையில் எடுத்த வில்! தக்கனின் வேள்வியைத் தகர்த்த வில்! இந்த வில் கண்டு, தேவர்கள்*

நடுங்க, அவர்கள் அச்சம் நீக்க, என் குலத்தோனுக்குச் சிவன் வழங்கிய வில்!

**விஸ்வாமித்திரர் :** *(ராமனை நோக்கி)* திருமேனி வள்ளலே! அந்த நெடுவில்லை நோக்கி நட! அதில் நாணேற்றி, ஜனகனின் துயர் ஆற்று!

**சபையில் ஒருவன் :** கங்கை வெள்ளம் அணைத்தவன் வில்லை எடுத்து, இப்பிள்ளை முன் இட்டது பேதைமை மன்னா! மாவீரர்கள் இதைத் தூக்க முடியாமல் தோற்று இருக்கிறார்கள்!

**ஜனகர் :** பொறுத்திருப்போம். நடப்பதைப் பார்த்திருப்போம்.

*(அனைவரும் வில்லின் அருகில்போகும் ராமனையே விழி புரட்டாது பார்த்துக் கொண்டிருக்கின்றனர். ராமன், அந்த வில்லின் ஒரு முனையைத் தன் காலின் கீழ் இருக்கு மாறு மிதித்துக் கொண்டு, அதைத் தூக்கி, வளைத்து, நாண் ஏற்றுகிறான். அந்தவில் இப்போது பெருத்த ஓசையோடு முறிகிறது. சபையினர் மகிழ்ச்சியோடு ஆரவாரம் செய் கின்றனர்.)*

**சபையில் முன்னர் பேசிய மனிதர் :** *(பரவசத்தோடு)* மன்னா! எடுத்தது கண்டோம்! உடனே வில் இற்றது கேட்டோம்!

இந்தத் தசரத புதல்வன், தாமரைக் கண்ணன், புயல் மேனியான், எங்கள் நாட்டுப் பூவைக் கொய்ய வந்த கோமகன், சாதாரண மானிடன் அல்லன்! சலசலக்கும் கடலுள் வைகும் கடவுளே இவன்!

இந்த நம்பியைக் காண, நமக்கு ஆயிரம் நயனம் வேண்டும்! இந்த இளவலை, இங்கு அழைத்து வந்த முனிவனை இறைஞ்சுகிறோம்!

## காட்சி-119

*ருஷ்யமூக பர்வதம்*

[சுக்ரீவன், ஒரு பெரிய பாறையைக் கையால் சுக்[illegible] பொடிப்பொடியாக உதிர்கிறது. இதைக் கண்டு அனுமன் வியக்கிறான்.]

**அனுமன் :** உங்கள் கை முஷ்டி, பாறையைப் பொடிப்பொடியாகச் செய்து விட்டது. இவ்வளவு ஆற்றல் பெற்ற சுக்ரீவராஜன், எப்படித் தன் அண்ணன் வாலியிடம் தோற்றார் என்று வியக்கிறேன்.

**சுக்ரீவன் :** என் அண்ணன் வாலிக்கு, இந்திரன் சுவர்ண மணிமாலை அளித்திருக்கிறான். அதன் மகிமையால், தன் எதிரில் இருக்கும் எதிரியின் வலிமையில் பாதியைக் கிரகித்து விடுவான். இப்படி அவன் எதிரில் நிற்போர், பலமிழந்து போவர். அவன் வெற்றியின் ரகசியம் இது. என் வீழ்ச்சியின் காரணமும் இது.

**அனுமன் :** தங்கள் தமையன் வாலி மடிந்து விட்டார் என்று எண்ணித் தங்களுக்குப் பட்டம் சூட்டி விட்டார்கள்.

இதில் தங்கள் தவறு என்ன இருக்கிறது?

**சுக்ரீவன் :** நான் சொன்னதைக் கேட்கவில்லை அவன். என் மனையாளையும் பறித்துக்கொண்டு, என்னைக் கொல்ல வந்தான். இந்தப் பர்வதத்தில் அடைக்கலம் புகுந்தேன். இங்கு அவன் வர முடியாது. வந்தால், அவன் தலை வெடித்து விடும். அப்படியொரு சாபத்தைப் பெற்றிருக்கிறான்.

**அனுமன் :** வாலி பெற்ற சாபத்தால், தாங்கள் வாழும் இடமாக, இது ஆகிவிட்டது.

**சுக்ரீவன் :** ஆம் - நீ என்னோடு சேர்ந்தால், பிரிந்தது கைவரும் என்று பெருமைக்குரிய முனிவர்கள் மொழிந்தார்கள்.

ராஜ்யம் இல்லாத எனக்கு, அனுமன் நீ அமைச்சனாக வேண்டும்.

எனக்கு மாத்திரமல்ல, தர்மத்திற்கும் வாழ்வளிக்க, உன் பங்கு பரிமளிக்க வேண்டும்.

**அனுமன் :** கடலைத் தேடிக் கொண்டிருந்த நான், நதியைக் கண்டு விட்டேன். இந்த நதிமூலம், விரைவில் கடலையும் கண்டு விடுவேன். என் பிறப்பிற்கு ஓர் அர்த்தம் இருக்கிறது என்பதையும், இப்போது உணர்ந்து கொண்டேன். நான் பார்க்க வேண்டும் என்று ஏங்கித் தவிக்கும் என் இறைவனையும், நான் பார்த்துப் பசியாறுவேன்.

**சுக்ரீவன் :** இறைவனென்று யாரைச் சொல்கிறாய்?

**அனுமன் :** அயோத்தி ராமரைச் சொல்கிறேன்!

**சுக்ரீவன் :** அவர் மிதிலையில் வில்லை முறித்து, வீரம் நிகழ்த்தியிருக்கிறாராம்! மிதிலைச் செல்வி சீதாதேவியை மணம்செய்யப் போவதாக, வானவர்களும் மகிழ்ச்சியோடு பேசிக் கொள்கிறார்கள்.

**அனுமன் :** அதைப்பார்க்க எனக்குக் கொடுத்து வைக்கவில்லை!

**சுக்ரீவன் :** அனுமான்! நீ வேண்டுமானால், மிதிலை சென்று விட்டுவாயேன்.

**அனுமன் :** அங்கெல்லாம் பறந்து செல்ல, பழைய வல்லமை எனக்கு இல்லை. இப்பொழுது உங்கள் ஊழியனாக, அமைச்சனாகப் பொறுப்பேற்றுக் கொள்கிறேன். காலம், எனக்குக் கருணை காட்டும். அந்த இனிய திருப்பத்தைக் காணத்தான், தங்களிடம் வந்து சேர்ந்திருக்கிறேன்.

## காட்சி-120

*மிதிலையில் மணமேடை*

[ராமனும் சீதையும் மணமேடையில் அமர்ந்திருக்கின்றனர்.]

**திருமண மண்டபத்தில்**
**அமர்ந்திருக்கும் ஒருவர் :** மணமக்கள், போகநிலையும், யோக நிலையும் கலந்தது போலக் காட்சி தருகின்றனர்.

*(மந்திரங்கள் ஓதப்பட்டு, திருமணச் சடங்குகள் நடக்கின்றன.)*

## காட்சி-121

*ருஷ்ய மூக பர்வதம்*

[மந்திரமொழிகள், வானிலிருந்து அனுமனுக்குக் கேட்கின்றன. அனுமன் அதுகேட்டு ஆடி ஆர்ப்பரிக்கிறான்.]

**சுக்ரீவன் :** *அனுமான்! எதற்கு இப்படி உற்சாகத்தில் ஆட்டம் போடுகிறாய்?*

**அனுமன் :** *என் ஐயன் ராமனுக்குக் கல்யாணம் நடந்து கொண்டிருக்கிறது. திருமண மந்திர ஒலிகள், என் காதுக்குக் கேட்கின்றன!*

**சுக்ரீவன் :** *எனக்கு அப்படி எதுவும் கேட்க வில்லையே! நீ ஒரு வரப்பிரசாதி! உன் வருகையால், நானும் வளம் காண வேண்டும்.*

## காட்சி-122

*மிதிலையில் மண மண்டபம்*

[ஜனக மகராஜா, ராமனது கையில் நீரை ஊற்றித் தாரை வார்த்துக் கொடுக்கிறார்.]

**ஜனகர் :** *கோமகனான ராமா! நீயும், என் மாமகள் சீதையும், திருமாலும் திருமகளும் போலச் சேர்ந்து வாழ வேண்டும்!*

*(இப்பொழுது மங்கல வாத்தியம் முழங்க, மண மண்டபத்தில் அமர்ந்திருப்போர், பூக்களைத் தூவுகின்றனர்.)*

## காட்சி-123

*ருஷ்ய மூக பர்வதம்*

[அனுமனும் இங்கு, மிகுந்த மகிழ்ச்சியோடு, கை நிறைய மலர்களைப் பறித்து வீசுகிறான்.]

## காட்சி-124

*மிதிலையில் மண மண்டபம்*

[சீதையின் கைபற்றி, ராமன், ஓமத்தீயை வலம் வருகிறான்.]

**மண்டபத்தில் ஒருவர் :** *பிறவிதோறும், உயிர், ஓர் உடம்பைப் பற்றித் தொடரும். இங்கு உயிரான ராம பிரானை, உடம்பாகிய பிராட்டி பற்றித் தொடர்வது, கண்கொள்ளாக் காட்சியாக இருக்கிறது.*

## காட்சி-125

*ருஷ்யமூக பர்வதத்தை அடுத்திருக்கும் வனம்*

[அனுமன் இந்த வனத்தில் நடந்து வரும்பொழுது, வாலி எதிர்ப்படுகிறான். வாலி, அனுமனை ஓங்கிக் குத்த, அனுமன் உருண்டு விழுகிறான். பின் அச்சத்தோடு எழுந்து நிற்கிறான்.]

**அனுமன் :** *(தனக்குள் பேசிக்கொள்கிறான்) என்னை அடித்தவனை, அடித்து வீழ்த்தாமல், முடங்கிப் போய் விட்டேனே! என்று விலகும் அந்த முனிவர்களின் சாபம்? எதுவும் தெரியவில்லையே!*

**வாலி :** *நீதான் அந்த அனுமானா?*

**அனுமன் :** *ஆம்-சுக்ரீவ மகாராஜாவின் அமைச்சன்!*

*[இதைக் கேட்டு, வாலி உரக்கச் சிரிக்கிறான்.]*

**வாலி :** *தலை இல்லாதவனுக்குக் கிரீடம் போல, ராஜ்யம் இல்லாதவனுக்கு அமைச்சனா? வேடிக்கையாக இருக்கிறது! அவன் மனைவியே இப்பொழுது என் வசத்தில் இருக்கிறாள்! மனைவியை மீட்க முடியாதவன், உன்னை அமைச்சனாக்கி, ராஜாங்கம் நடத்திக் கொண்டிருக்கிறானா?*

**அனுமன் :** *தர்மத்திற்கு மாறாகச் செய்யும் செயல்கள், தன் தலையில், தானே தீவைத்துக் கொள்ளும் காரியங்களாகும்!*

*மாற்றான் மனைவியை, மானமுள்ளவன் கவர்ந்து செல்ல மாட்டான்!*

**வாலி :** *ஏ அற்பக் குரங்கே! அடிபட்டுச்சாக இங்கு வந்திருக் கிறாயா? எனக்கு உபதேசமா? நான் யார் தெரியுமா? நான்தான், வாலி மகாராஜன்!*

**அனுமன் :** அதைத் தெரிந்துகொண்டுதான் பேசுகிறேன். குற்றம் புரிந்தவர்களுக்கு நீதியை உரைப்பது, ஓர் அமைச்சனுக்கு அழகுதான்!

**வாலி :** நீ அமைச்சனா! உன் அரசனே, உயிருக்கு ஓடி ஒளியும் ஒரு கோழை!

வல்லமை உள்ளவன் வகுத்ததுதான் நீதி! தர்மம் வெல்லும் என்று தத்துவம் பேசுபவன், ஏமாளி! இவ்வுலக வாழ்வைக் கோட்டை விடும் கோமாளி!

என் ஆற்றலைத் தெரிந்து கொண்டவர்கள், என்னிடம் எதிர்ப்பேச்சுப் பேசமாட்டார்கள்!

என் பேச்சே, பிரம்மன் வெளியிட்ட வேதமாக இருக்கும் அவர்களுக்கு!

என்னை எதிர்த்து வெற்றி கொண்டவர்கள், எவரும் இல்லை!

தென்னிலங்கை ராவணனை, தீரன் அரக்கர் கோமானை, என் வாலில் கட்டி, அந்தக் கோலத்தோடேயே, கடல் தோறும் பறந்து சென்று, சிவபூஜை செய்தேன்!

பின்னர், என் குழந்தை அங்கதன் தொட்டிலிலே, அவனை விளையாட்டுப் பொருளாகக் கட்டித் தொங்க விட்டேன்!

(இப்பொழுது ஒரு முனிவர் அங்கு வருகிறார்.)

**முனிவர் :** நான் குறுக்கிட்டுப் பேசுவதைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்.

வாலி மகராஜனே! இப்பொழுது காற்று எதிர்த்திசையில் வீச ஆரம்பித்து விட்டது! தர்மம் வீறு கொண்டு எழ ஆரம்பித்து விட்டது!

அயோத்தியில், ஸ்ரீராமனுக்கு நாளைக்குப் பட்டா பிஷேகம் நடக்கப் போகிறது!

அந்த ராமன், உனக்கு எமனாகும் நிமித்தம் தெரிகிறது!

**வாலி :** ராமனாம்! அயோத்தியாம்! முனிவர்கள் வாயைத் திறந்து, என்று என்னை வாழ்த்தியிருக்கிறீர்கள்?

அதனால் நான் ஏற்றம் பெறாமலா போய் விட்டேன்?
அந்த அயோத்தி சென்று, அந்த ராமன் சூடிக் கொள்கின்ற மணிமுடியைப் பறித்து, என் காலடியில் கிடத்துகிறேன்!

**முனிவர் :** அதற்கு அவசியமே இல்லை! அந்த ஸ்ரீ ராமனே இங்கு வருவான்!

**வாலி :** புலியின் குகைக்குப் புள்ளிமானே வருகிறதா? நல்லது. அந்த நல்ல நாளில், நடப்பதைக் காண, முனிவரே! நீரும் இங்கு வருதல் வேண்டும்.

**முனிவர் :** சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன். தள்ளவேண்டியதைக் கொண்டு விட்டாய். நான் வருகிறேன்.

[முனிவர் அங்கிருந்து சென்று விடுகிறார்.]

**அனுமன் :** (மகிழ்ச்சியோடு) என் ராமனுக்கு நாளைக்குப் பட்டாபிஷேகம்!

**வாலி :** அதனால் உனக்கென்ன? அந்த ராமனுக்கும் அமைச்சனாகலாம் என்று பார்க்கிறாயா?

**அனுமன் :** அந்த ஸ்ரீராமனின் அடிமைநான்!

**வாலி :** அங்கு இருந்தால், உனக்கு ஒழுங்காக உணவாவது கிடைத்துக் கொண்டிருக்கும்!

பதுங்கி இருப்பவனோடு, ஏன் ஒதுங்கி இருந்து அல்லற் படுகிறாய்?

புத்தி இருந்தால், இங்கிருந்து எங்காவது ஓடிவிடு! சாகப் போகிறவனைக் கட்டித் தழுவி, நீயும் சாவைத் தழுவாதே!

[இவ்வாறு கூறிவிட்டு, வாலி அங்கிருந்து நடக்கிறான்.]

## காட்சி-126

ருஷ்ய மூக பர்வதம்

**அனுமன் :** (மகிழ்ச்சியோடு) மகராஜ்! என் பிரபு, ஸ்ரீராமருக்கு, அயோத்தியில் நாளைக்குப் பட்டாபிஷேகமாம்!

நல்லது நடக்கும் என்பதற்கான நன்னிமித்தம் தெரிய ஆரம்பித்து விட்டது.

*தர்மம் முடிசூடிக் கொள்வதால், இனி அதர்மம் அழியும். எந்தத் திசையில் தீமை என்னும் தீ தெரிந்தாலும், அந்த மேக வண்ணன் ஸ்ரீராமன், மழையாகப் பொழிந்து, அதை அவித்து விடுவார்.*

*என் இனிய ராமர், நால்வகைப் படையோடு விரைவில் இங்கு வருவார்.*

*வானத்திலே புழுதி எழுகிறதா? என் ராமர் படை வருகிறதா?-என்று இனி நாள்தோறும், வடக்குத் திசையைப் பார்த்துக் கொண்டிருப்பேன்!*

**சுக்ரீவன் :** *உன் நம்பிக்கைதான், இப்பொழுது என் நம்பிக்கையும்!*

*உலக நடைமுறைக்கு மாறாக, அமைச்சன் நீ, என்னை அரசனாக்கிப் பார்க்கப் போகிறாய்!*

## காட்சி-127

*கைகேயி மாளிகை*

[படுக்கை அறையில் தசரதர், கவலையால் தின்னப்பட்டு கண்மூடிப் படுத்திருக்க, அருகில் இருக்கும் கைகேயி, ராமன் இங்கு வருவதை அறிந்து, முன் அறைக்குச் சென்று, ராமனை எதிர்கொள்கிறாள்.

ராமன் பாசத்தோடு கைகேயித் தாயின் கால்தொட்டு வணங்கு கிறான்.]

**கைகேயி :** *வா... ராமா!*

**ராமன் :** *அம்மா! என்னை அழைத்தீர்களாமே! பட்டா பிஷேகத்திற்குத் தயாராகிக் கொண்டிருந்தேன். உங்கள் அழைப்பு வந்ததும், தாயைக் காணும் கன்றுக்குட்டியைப் போல, ஓடோடி வந்தேன்.*

## காட்சி-128

*வானம்*

[வானத்தில், ஒருதேவன் தோன்றி, வேதனையோடு பேசுகிறான்.]

**தேவன் :** *ராமா! தாய் உருவிலே, உனக்குக் கொடுமை செய்யும் கூற்றாகக் கைகேயி நிற்கிறாள்!*

## காட்சி-129

*கைகேயி மாளிகை*

**ராமன் :** *அம்மா! அப்பா படுத்திருக்கிறாரா?*

**கைகேயி :** *மனதில் உள்ளதை வெளியிட முடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறார்! அதுதான் மஞ்சமே தஞ்சம் என்று இருக்கிறார்! மன்னர் சொல்ல வேண்டியதை, நான் சொன்னால், நீ ஏற்க மாட்டாயா?*

**ராமன் :** *என்ன கேள்வியம்மா இது! எனக்குத் தந்தையும் தாயும் நீங்களே! உங்கள் மடியில் வளர்ந்தவன் நான்! உங்கள் பேச்சுக்குப் படியாமல் மீறுவேனா? எதுவானாலும் சொல் லுங்களம்மா! ஒரு தாயின் வார்த்தையால், பிள்ளையின் வாழ்வு பறிபோய் விடாது!*

**கைகேயி :** *ராமா! உன் பட்டாபிஷேகம் காண, நாடே துடித்துக் கொண்டிருக்கிறது!*

**ராமன் :** *அம்மா! உங்கள் ஆசியால் கிடைத்த சிறப்பு அது!*

**கைகேயி :** *ஆனால், மன்னர் இப்பொழுது, அதற்கு மாறாக நினைக்கிறார்! உன்னிடம் சொல்லவும் நினைக்கிறார். சொல்ல முடியாமற் தவிக்கிறார்! அதைச் சொல்கின்ற உரிமையை, நீ எனக்கு அளித்து விட்டாய்! நன்றி ராமா! நன்றி!*

**ராமன் :** *என்னம்மா பேசுகிறீர்கள்? ஒரு தாய், பிள்ளைக்கு நன்றி சொல்லலாமா?*

**கைகேயி :** என் மடியில் நீ வளர்ந்தாலும், உலகம் என்னை மாற்றாந்தாய் என்றுதானே பேசும்!

**ராமன் :** என் மனதில் அந்த மாசுமறு கொஞ்சம் கூட இல்லை தாயே!

**கைகேயி :** சொல்ல வேண்டியதைச் சொல்லி விடுகிறேன். இனியும் நேரத்தைக் கடத்தினால், நிலைமை கட்டுமீறிப் போய்விடும்! உன் தலையில் மகுடம் ஏறிவிடும்!

**ராமன் :** (வியப்போடு) அம்மா!

**கைகேயி :** ராமா! உன் தந்தையின்,. மன்னரின் கட்டளை இது! ஆழிசூழ் உலகமெல்லாம் பரதனே ஆளவேண்டும்!

**ராமன் :** (மலர்ந்த முகத்தோடு) அம்மா!

**கைகேயி :** நீ தாழ் இருஞ்சடைகள் தாங்கி, அருந்தவம் மேற் கொண்டு, வெம்கானகம் அடைந்து, புண்ணிய நீர்த் துறைகளில் நீராடி, பதினான்கு ஆண்டுகள் வனவாசம் முடித்து, நாடு திரும்ப வேண்டும்!

**ராமன் :** (மலர்ந்த முகத்தோடு) அம்மா! இதைச் சொல்வதற்குத் தங்களுக்கு இவ்வளவு தயக்கம் ஏன்? முன்பு, மன்னருடைய கட்டளைக்குப் பணிந்தே, பட்டாபிஷேகத்திற்குச்சம்மதித்தேன்.

இருளுடைய இந்த உலகைத் தாங்கும் இன்னலில் இருந்து என்னை விடுவித்து விட்டீர்கள்!

அருளுடைய வாசகத்தை,நான் மகிழ மொழிந்து விட்டீர்கள்!

அம்மா! இது மன்னன் கட்டளை என்று நீங்கள் சொல்லத் தேவையில்லை! மாதா, உங்கள் கட்டளை என்று சொன்னால், நான் ஏற்க மாட்டேனா?

என் பின்னவன் பரதன் பெறுகின்ற செல்வம், நான் பெற்றது அன்றோ?

அம்மா! நீங்கள் சொன்னபடி, கானகம் செல்வேன்! பதினான்கு ஆண்டுகள் அங்கு வாழ்வேன்! இது உறுதியம்மா!

அம்மா! எப்போதம்மா கானகம் செல்ல வேண்டும்?

**கைகேயி :** இப்போதே என்பதுதான், மாமன்னரின் விருப்பம்! அதையே, என் விருப்பமாகவும் நீ எடுத்துக் கொள்ளலாம்!

**ராமன் :** *அப்படியே செய்கிறேன். உங்களிடம் இப்போதே விடைபெற்றுக் கொள்கிறேன்.*

*அம்மா! அப்பாவிடம் விடைபெற வேண்டாமா?*

**கைகேயி :** *உன்னைப் பார்க்கும் நிலைமையில் இப்போது அவர் இல்லை!*

**ராமன் :** *அவர் இருக்கும் திசைநோக்கி, வணங்கிவிட்டுப் போகிறேன் அம்மா!*

*[மன்னர் படுத்திருக்கும் அறை நோக்கி விழுந்து கும்பிடுகிறான் ராமன். கைகேயியையும் விழுந்து கும்பிடுகிறான். மலர்ந்த முகத்தோடு அங்கிருந்து செல்கிறான்.*

*மறைவிலிருந்து ஓடிவருகின்ற கூனி, கைகேயியைக் கட்டி அணைத்து முத்தமிடுகிறாள்.]*

## காட்சி-130

*ருஷ்யமூக பர்வதம்*

**அனுமன் :** *(சுக்ரீவனிடம் மகிழ்ச்சியோடு பேசுகிறான்.) இந்நேரம், என் ஐயனுக்குப் பட்டாபிஷேகம் முடிந்திருக்கும். ஊரெல்லாம் திருவிழாக் கோலம் கண்டிருக்கும். அயோத்தி மக்களோடு, அமரரும் முண்டியடித்துக் கொண்டு சென்று, என் பிரபுவின் திருக்கோலத்தைக் கண்டிருப்பர்.*

*அங்கு பாயும் சரயு நதியும், இக்கோலாகலத்தைக் கொண்டாட, இசை பாடி, அபிநயித்துச் செல்லும்.*

*சந்திர சூரியர், எல்லோர்க்கும் தங்கள் கதிர்களை வீசுவது போல, வந்தவர்க்கெல்லாம் பரிசுகளை வாரி வாரி வழங்கிக் கொண்டிருப்பார் மா மன்னர்.*

*இதையெல்லாம் அருகிருந்து பார்க்க, எனக்குக் கொடுத்து வைக்கவில்லை. ஆனாலும் இந்தக் கொண்டாட்டத்தில், என்னால் பங்கு பெறாமல் இருக்க முடியுமா? என் கரை காணா மகிழ்ச்சியைச் சுட்டிக் காட்டும் விதமாக,*

இங்கேயே நூற்றியெட்டுக் குட்டிக் கர்ணம் போடுகிறேன்! இதையாவது செய்தால்தான் என் மனம் ஆறும்!

[இவ்வாறு கூறிவிட்டு, அனுமன் அங்கேயே குட்டிக் கர்ணம் போடத் தொடங்குகிறான். இதை வியப்போடு பார்த்துக் கொண்டிருக்கிறான் சுக்ரீவன்.]

## காட்சி-131

*ராமர் மாளிகை*

[மரவுரி தரித்த கோலத்தோடு, சீதை முன் ராமர் நின்று கொண்டிருக்க, சீதை வாட்டத்தோடு, கணவனைப் பார்க்கிறாள்.]

**சீதை :** பட்டாபிஷேகத்திற்காகப் பட்டாடை உடுத்த வேண்டிய நீங்கள், மரவுரி தரித்து, தவக்கோலம் கொண்டிருக்கிறீர்கள்!

**ராமர் :** ஊழ்வினையை ஒருவரால் ஒழிக்க முடியுமா?

**சீதை :** எல்லாம் கேள்விப்பட்டேன். இது விதியின் பிழை என்று கொண்டு, வெகுண்டெழாமல் இருப்பது, உங்கள் இயல்பு!

**ராமர் :** மன்னரின் கட்டளை அது! அதை ஏற்றுத்தான் தீர வேண்டும்!

**சீதை :** நாடே ஏற்றுக் கொண்டு விட்டதே! எப்படி? மா மகனை, மூத்த மகனை, கான் ஏகு என்று சொல்லக்கேட்டு, இந்த நாட்டிலுள்ள ஆவும் அழுதன; அதன் கன்றும் அழுதன; அன்று அலர்ந்த பூவும் அழுதன; புனல்புள் அழுதன; கள் ஒழுகும் சோலையும் அழுதன; களிறு அழுதன; போர்க் குதிரையும் அழுதன!

ஏங்கி, இளைத்து, திகைத்து, மனம் வீங்கி, விம்மி, விழுந்து, கோசலைத் தாயாரும் அழுதார்கள்.

உங்கள் வள்ளல்தனம், தன் உயிரை மாய்க்கும் என்று, மன்னர் புலம்பி அழுததையும், நான் அறிவேன்.

உங்கள் பின் கானகம் வர, தன் மகன் லட்சமணரை அனுப்பி வைக்கின்ற அந்தச் சுமித்திரைத் தாயும், சிந்தை நொந்து அழுதார்கள்.

'அண்ணனோடு பின்னர் அயோத்தி நகர்க்குத் திரும்பி வா; அப்படி முடியாவிட்டால், முன்னரே உன் வாழ்க்கையை முடித்துக்கொள்'- என்று, தன் மகனுக்குச் சொல்லி அழுதார்கள்.

அயோத்தி நகரத்திலே, ஆடிக் கொண்டிருந்த மகளிர் அழுதனர். அமுத ஏழ் இசை பாடிக் கொண்டிருந்தவர் அழுதனர். ஊடல் புரிந்து கொண்டிருந்தவர் அழுதனர்; அன்பரைக் கட்டி மகிழ்ந்தவர் அழுதனர்; என் பங்குக்கு, நானும் அழுது தீர்த்தேன் நாயகரே, நானும் அழுது தீர்த்தேன்!

**ராமர் :** சீதை! அழுவதெல்லாம் ஓரிரு நாள் இருக்கப்போகும், உணர்ச்சிப்பிரவாகம். வாழ்க்கையிலே வந்து போகும் ஒருசிறு சம்பவம். அதுவே வாழ்க்கையாகிவிடாது.

அயோத்தியின் எதிர்காலம், என்தம்பி பரதனின் நல்லாட்சியால், எழிலாகத் திகழும்.

நான் காட்டிலிருந்து திரும்பும்வரை, நீ இங்கு இருந்து, அதைக் கண்டு மகிழு. அருமையான சுற்றத்தார் இங்கு இருக்க, பெருமையான நாடு இருக்க, நீ அயர்வோ, சோர்வோ கொள்ளத் தேவையில்லை.

**சீதை :** தயவு செய்து, என் செவிசுடப் பேசாதீர்கள்! நீங்கள் மகுடம் இழந்து, இந்த அயோத்தி மண்ணை விட்டுக் காடேக வேண்டும் என்ற செய்தி கேட்டு, நான் நடுங்கவில்லை! என்னை விட்டுப் போவதாகச் சொல்லும் இக்கொடிய சொற்கள்தான், என் நெஞ்சைப் புண்ணாக்கி விட்டன!

**ராமர் :** சீதை! என்னோடு நீ வர முடியுமா? காட்டு வழியை, உன் கால் பாதங்கள் தாங்காது! அனல் பறக்கும் வெம்மை உடையது அது. புனலாக இருக்கும் உன்னால் பொறுத்துக் கொள்ள முடியாது!

**சீதை :** உங்கள் பிரிவை விடப் பெருங்காடு என்னைச் சுடுமோ?

இருங்கள்-நானும் மரவுரி தரித்து வருகிறேன். இந்தச் சீதைக்கு, ராமன் இருக்குமிடந்தான் அயோத்தி! அது காடாக

*இருந்தாலும் சரி, மலையாக இருந்தாலும் சரி, மடுவாக இருந்தாலும் சரி, கடல் ஆக இருந்தாலும் சரி!*

*காட்டிலே, இவள் கலங்குவாளோ என்ற கவலை வேண்டாம்! உங்கள் புண்ணிய திருப்பாதம் பட்டால், புற்று உடைய காடு எல்லாம் நாடாகிப் போகும்!*

## காட்சி-132

*காடு*

[லட்சுமணன் முன்னே செல்ல, சீதை பின் நடக்க, இவர்களுக்குப் பின்னால், பாதுகாப்பாக, ராமர் கானகத்தில் நடந்து செல்கிறார்.]

[*வானில் ஒரு தேவன் தோன்றி, இதைப் பார்த்துப் புலம்புகிறான்.*]

**தேவன் :** *கல் வருத்தும் கானகத்தில், மரவுரி சுற்றித் திருமகள் போகிறாளே! விற்கையோடு, ஆதிசேஷன் விரும்பி எடுத்த திருமேனியாம் லட்சுமணன், முன் செல்கின்றானே!*

*பாம்பணையில் பள்ளி கொள்ளும் என் திருமால், பாதம்நோக நடந்து போகின்றாரே!*

*இதனால் அயோத்திபட்ட துன்பம்! அமரர் பட்ட துன்பம்! சிவனோடு பிரம்மன் சிந்தை நொந்த துன்பம்! ஏழு உலகும் எதிர்கொண்ட துன்பம்! ராவணாதியர் துன்பத்தின் தொடக்கம் இதுவே!*

## காட்சி-133

*அஞ்சனையின் வீடு*

[இளம்பெண் சுவர்ச்சலாதேவி, அஞ்சனையின் வீட்டிற்கு வருகிறாள்.]

**சுவர்ச்சலாதேவி :** கேசரி மகராஜாவிற்கும், அஞ்சனா தேவியருக்கும், சுவர்ச்சலாதேவியின் பணிவான வணக்கங்கள்!

தங்கள் புத்திரர் ஆஞ்சநேயர் நலந்தானே?

**கேசரி :** என் மைந்தனைப்பற்றி, மகிழ்ச்சியாகச் சொல்வதற்கு ஒன்றுமில்லை!

மண்ணும் மக்களும் இல்லாத நாட்டிற்கு அமைச்சனாக இருக்கின்றான்!

மன்னனும் அமைச்சனும், ருஷ்யமூக பர்வதத்திலே, கோழைகள் போல் பதுங்கிக் கிடப்பதாகக் கேள்விப் பட்டேன்!

தெய்வ வரம் பெற்றவன், தேய்ந்த நிலவாக, எங்கோ காலம் தள்ளிக் கொண்டிருக்கிறான்.

**அஞ்சனை :** சாபம் விலகும் என்று சாஸ்திரம் அறிந்த முனிவர் கூறவில்லையா? விரைவில் என் மகன், வீர ஆஞ்சநேயனாக வெளிப்படுவான்!

**சுவர்ச்சலா தேவி :** தெய்வ வாக்காக, நானும் அதையே கேட்டேன் தாயே!

**அஞ்சனை :** பார்த்தீர்களா! பார்த்தீர்களா! நீறு பூத்த நெருப்பு அவன். சாம்பலை ஊதி விட்டால், கனலாக ஜொலித்து விடுவான்.

**கேசரி :** அந்த நம்பிக்கையை இன்னும் நானும் இழக்க வில்லை.

ஆனால், சுவர்ச்சலாதேவி! உன்னை மருமகளாக ஏற்றுக் கொள்ளும் நம்பிக்கைதான் தளர்ந்து விட்டது!

**சுவர்ச்சலாதேவி :** கவலைப்படாதீர்கள்! என் களத்திலே, நான் வெற்றியே காண்பேன். அந்த வீர ஆஞ்சநேயருக்கு, ஒரு தீரமான மைந்தனைப் பெற்றுத் தருவேன்!

**கேசரி :** இது நடக்குமா?

**சுவர்ச்சலாதேவி :** நடத்திக் காட்டுபவள் நான்! இந்த நானிலத்தைத் திகைப்பில் ஆழ்த்திக் காட்டுகிறேன்! வருகிறேன்.

[சுவர்ச்சலா தேவி, அங்கிருந்து செல்கிறாள்.]

## காட்சி-134

*பஞ்சவடியில் உள்ள பர்ணசாலை*

[பர்ண சாலையின் உள்ளே சீதை இருக்க, வெளியே, வில் அம்போடு, லட்சுமணன் காவலாக நிற்கிறான்.

இப்பொழுது தொலைவில் இருந்து, 'ஹே சீதா! லட்சுமணா!' என்று ராமனின் குரலைப்போல, ஒரு தீனமான குரல், இவர்களுக்குக் கேட்கிறது.

இதைக்கேட்டவுடன், சீதை பதறியடித்துப் பர்ணசாலைக்கு வெளியே வருகிறாள்.]

**சீதை :** *ஐயோ! என் சுவாமிக்கு ஏதோ ஆபத்து! அவர் கூப்பிடும் குரல், உனக்குக் கேட்கவில்லையா?*

**லட்சுமணன் :** *அண்ணி! இதெல்லாம் அந்த மான் உருவில் வந்த மாய அரக்கனின் வேலை!*

*சொன்னாலும் கேட்காமல், அண்ணாவை மானின் பின்னே அனுப்பி விட்டீர்கள்!*

*இங்கு இருக்கும் என் காவலை அகற்ற, அந்தக் கயவன், இப்படிக் குரல் மாற்றிக் கதறுகிறான்!*

*அவன் விரித்த வலையிலே, நாம் விழுந்துவிடக் கூடாது. என் அண்ணாவை வெற்றிகொள்ள, இவ்வுலகில் எவனும் பிறக்கவில்லை! அஞ்சாதீர்கள்!*

*திரிபுரம் எரித்த சிவனின் வில்லை முறித்தவர், இப்படித் தீனமாகக் குரல் கொடுத்துப் பிறரைத் துணைக்கு அழைப்பாரா?*

**சீதை :** *லட்சுமணா! நீ வீண் வார்த்தை பேசிக் காலத்தைக் கடத்துகிறாய்! என் நாயகரின் வீரம்பற்றி, எனக்கு நன்கு தெரியும்.*

*அதற்காக, ஆபத்து என்று அலறும் போது, இங்கு ஓடாமல், உதவாமல், இங்கு நிற்பதன் நோக்கம் என்ன?*

*அண்ணன் போய்விட்டால், திண்ணை காலியாகும் என்ற எண்ணமா?*

இது தர்மமா? நல்ல நெறியா? அண்ணன் மனைவிக்குக் காட்டுகின்ற கௌரவமா?

எரி நெருப்பில் விழுவேனே தவிர ஈனர்களின் எண்ணத்திற்கு உடன்படேன்!

**லட்சுமணன் :** (பதறியவனாக) அண்ணி! சூழ்ச்சியைப் புரியாது பேசுகிறீர்கள்! இதற்கு மேலும், நான் இங்கிருப்பது தகாது! காவலாக இரு என்ற, என் அண்ணன் சொல்லை மீறிப் போகிறேன் - உங்கள் சொல்லுக்குப் பயந்து!

காவல் நீங்கியதும், காத்திருக்கும் பகைவன், உங்களை நெருங்கலாம்! எச்சரிக்கையாக இருங்கள்!

வினைப்பயனை வேண்டாம் என்றால், அது விட்டு விடுமா? அனுபவிக்கிறேன்!

நான் அண்ணனைப் போய்ப் பார்க்கிறேன் அண்ணி!

[லட்சுமணன் அவ்விடம் விட்டுச்செல்கிறான்.]

## காட்சி-135

ருஷ்யமூக பர்வதம்

[அனுமன், மலையில் உள்ள வனத்தில் நின்று கொண்டிருக்கட் பெருங்காற்று அடித்து, அனுமன்மேல், மரம் ஒன்று விழுகிறது. மயிரிழையில் உயிர் தப்பி விடுகிறான் அனுமன்.]

**அனுமன் :** (தனக்குள்) ஏதோ, நடக்கக் கூடாதது, நடக்கப் போகிறது! அதைத் தெரிவிக்கத்தான், இந்த உற்பாதம் நிகழ்ந்திருக்கிறது!

முடி சூடிய என் ஸ்ரீராமருக்கு, ஏதேனும் இடியெனத் துன்பம் நேர்ந்திருக்குமோ?

என் உள்ளம் இப்படி அலை பாய்கிறதே! அவஸ்தைப் படுகிறதே!

மிதிலைச் செல்வியாருக்கு, முதலை என ஆபத்து சூழ்ந்திருக்குமோ?

*என் ராமர் அருகிருக்க, எந்தப் பேய் மகன், அவர்களை நெருங்க முடியும்?*

## காட்சி-136

*பஞ்சவடியில் உள்ள பர்ணசாலை*

[ராவணன், ஒரு முனிவனைப் போன்ற தவக்கோலத்தோடு, பர்ணசாலையை நோக்கி வருகிறான். சீதை கைகுவித்து வரவேற்கிறாள்.]

***சீதை :*** *வாருங்கள் சுவாமி! தனித்திருந்தேன். பகை வருமோ என்று தவித்திருந்தேன். காமம், வெகுளி, மயக்கம் என்னும் முப்பகை வென்ற முனிவர்பிரான், தாங்கள் அதிதியாக வந்திருக்கிறீர்கள்!*

*ஆறுதலைத் தந்திருக்கிறீர்கள்!*

***ராவணன் :*** *வேதம் பாடும் வாயால், வீடு வீடாகச் சென்று, யாசகம் கேட்கமாட்டேன்.*

***சீதை :*** *தங்கட்கு அன்னமிடுவது, தவத்திற்கு ஒப்பான அறமாயிற்றே! அமருங்கள் சுவாமி!*

*[பர்ணசாலைக்கு வெளியே இருந்த இருக்கையில் அமர்கிறான் ராவணன்.]*

***ராவணன் :*** *அழகுக்கு அழகு சேர்க்கும் ஆரணங்கே! புகழுக்குப் புகலிடமாய் இருக்கும் பொற்பாவையே! தேவ மகளிரும் தோற்றோடிப் போகும் எழில் நங்கையே!*

*மயிலின் சாயங்கொண்ட நல் இளம் மங்கையே! உனைக் காணக் கண் ஆயிரம் வேண்டும்!*

***சீதை :*** *(சந்தேகத்தோடு) சுவாமி! தாங்கள் யாரைக் குறிப்பிடு கிறீர்கள்? கயிலையில் இருக்கும் உமா தேவியரையா?*

[இதைக் கேட்டு, ராவணன் சிரிக்கிறான்.]

***சீதை :*** *சுவாமி! அயோத்தி மன்னர் தசரதர், தொல் குலத்தனயன் மனைவி நான்.*

உங்களைப் போன்ற முனிவர்களை, நெஞ்சினால் தெய்வமாக நினைக்கும், ஜனக மன்னர் மாமகள்-பெயர் ஜானகி என்னும் சீதை, என் நாமம்.

என் கணவர், தம்பியோடும் என்னோடும் வன வாசத்திற்காக, இங்கு வந்திருக்கிறார்.

தாங்கள், கடத்தற்கரிய காட்டு வழியே, எங்கிருந்து வருகிறீர்கள்?

**ராவணன் :** சொல்வதற்கு உன்னிடம் செய்தி ஒன்று இருக்கிறது.

ராவணன் என்னும் மன்னன், லங்கையில் அரசாள் கிறான். அவன் இந்திரற்கு இந்திரன்! எழுத ஒண்ணாச் சுந்தரன்! பிரம்மன் மரபில் பிறந்தவன்! எவ்வுலகும் ஆள்பவன்! மறை ஓதும் நாவினான்! கயிலை மலை எடுத்த கையினான்! திசையானைகளை வென்றெடுத்த தோளினான்!

தேவர்கள், அவனுக்கு ஏவல் செய்கிறார்கள்! தெய்வக் கற்பகம், அவன் அரண்மனைத் தோட்டத்தில் நடப்பட்டு விட்டது! அவனுடைய லங்கை நகரம், தேவர்களின் பொன்னகரத்தினும், நாகர் தம் தொல் நகரத்தினும், தொடர்ந்த மாநிலத்து எந்நகரத்தினும், நல் நகரமாகத் திகழ்கிறது!

அவன், பிரம்மனால், அந்தம் இல்லாத ஆயுளைப் பெற்றவன்! சிவன் அளித்த வாளைப் பெற்றவன்!

நவக்கிரகங்களைச் சிறைவைத்திருக்கும் சிறப்புப் பெற்றவன்! அவன் கேடில்லா ஒழுக்கமும், கேள்வி ஞானமும் உடையவன்!

மன்மதன் திகைக்கும் மார்பழகு உடையவன்! மும் மூர்த்திகள் போல் தோற்றம் அளிக்கும் பெருமைக்குரியவன்!

அனைத்துலக அழகு மங்கையரும், அவன் மீது இச்சை கொண்டு உருகுகின்றனர்!

அவனோ, தன் மனதிற்கு இனியாளான ஒரு மாதை, இன்னும் நாடித்தேடிக் கொண்டிருக்கிறான்!

அந்த லங்கை நகரிலே வெகு காலம் தங்கி இருந்து, இப்பொழுது அங்கிருந்துதான் வருகிறேன்.

**சீதை :** சுவாமி! தங்கள் பேச்சு, எனக்குக் கசப்பாக இருக்கிறது! வேதம் புரளும் நாவால், வேண்டாதன பேசி விட்டீர்கள்! அருள் இருக்க வேண்டிய உள்ளத்தில், மருள் மண்டிக் கிடக்கிறது! மன் உயிர் தின்னும், தீவினைப் பாதக அரக்கர்தம் பதியிலிருந்தா, நீங்கள் வருகிறீர்கள்?

வனத்திடை வாழும் மாதவர் மருங்கு நீங்கள் இருக்க வில்லை! அறநெறி நினைக்காத அரக்கர் இனத்திடைக் கூடி இருந்து, இங்கு வந்திருக்கிறீர்கள்!

**ராவணன் :** திங்கள் முகத்தவளே! தீயவர்கள் தேவர்களே! எங்களைப் போன்றவர்களுக்கு, நல்லவர் அரக்கர்களே! வல்லவர் அவர்கள்! அவர்களை நல்லவர்களாகக் கொள்வதே, நாம் கொள்ளும் நெறியாக வேண்டும்.

**சீதை :** இப்படி அச்சத்தினால், அவர்களை ஏற்றுக்கொள்வதை, அறவோர் விரும்பார்.

என் கொழுநர், அறம் தரு வள்ளல், மறச்செயல் அரக்கரை, அவர்கள் வர்க்கத்தோடு அழிப்பார்!

பின்னர் இடர் இல்லை இவ்வுலகுக்கு என்னும் இனிமை தோன்றும்!

[இதைக் கேட்டு, ராவணன் சிரிக்கிறான்.]

**ராவணன் :** யானையின் இனத்தை, இளமுயல் கொல்லுமோ? சீறும் சிங்கமதைச் சிறுமான் அடிக்குமோ? எளிய மானிடர், வலிய அரக்கரை வெல்ல முடியுமோ? கற்பனையில் பேசவேண்டாம்.

**சீதை :** கற்பனையல்ல இது! என் கணவர் களம் கண்ட செய்தியைத்தான் சொல்கிறேன்.

கரனும், அவனுடைய எண்ணற்ற அரக்கர் படையும், என் கணவர் கைவில்லால் மாண்டொழிந்த செய்தி, மாமுனிவர் செவிகளுக்கு எட்டவில்லையோ?

நீங்கள் கூறிய வாள் அரி, ஆண் சிங்கம் என் மணாளரான ஆண் தகையே!

பலியாகும் மான் கூட்டம், அரக்கர் கூட்டம்! அரக்கர் அழிவதை, அமரர் வாழ்வதை, விரைவில் பார்ப்பீர்கள்!

அதுவரை, வேஷத்திற்குத் தக்கப் பேச்சைப் பேசுங்கள்!

முனிவரே! தருமம் தன்னைப் பாவம் வெல்லுமோ? உங்கள் ராவணன் வீழ்ச்சியைத் தடுக்க இயலுமோ?

**ராவணன் :** (கோபத்தோடு) என்ன சொன்னாய்?

ராவணனை யார் என்று கருதிப் பேசி விட்டாய்? மேருவைப் பறிக்க வேண்டின், விண்ணினை இடிக்க வேண்டின், கடல் நீரினைக் கலக்க வேண்டின், வடவைக் கனலை அவிக்க வேண்டின், பாரினை எடுக்க வேண்டின், ராவணற்கு எதுவும் அரிது அல்ல!

**சீதை :** உங்கள் ராவணனைப் பற்றி, நானும் கேள்விப் பட்டிருக்கிறேன்.

கழற்கால் வீரன், கார்த்த வீரியன், உங்கள் லங்கை வேந்தனைச் சிறை வைத்தான் என்று, எல்லா உலகங்களும் அறியும்! எல்லாப் பெண்டிரும், அதைக் கானமிசைத்துத் தாளமோடு ஆடி மகிழ்கின்றனர்!

(இதைக் கேட்டவுடன், ராவணன் கோபத்தால், கொதித்து எழுகிறான். தரையைக் காலால் உதைக்கிறான். அவன் போட்டிருந்த வேடம் மறைய, சுய உருக் கொள்கிறான்.)

**சீதை :** படமெடுத்துச் சீறும் பாம்புபோன்று இருக்கும் நீ யார்?

**ராவணன் :** பெண்ணே! நானே ராவணன்! பேசக் கூடாதன பேசிவிட்ட நீ, பெண் என்பதால் பிழைத்தாய்! இல்லையேல், உன்னைப் பிசைந்து தின்றிருப்பேன்!

அன்னமே! உன் மீது உள்ள எண்ணத்தால் உருமாறி வந்தேன்! என் பெருமையை விரிவாகச் சொன்னேன்!

நீ, ஒரு மானிடனைப் போய் உயர்வாக எண்ணி, உன் வாழ்வையே வறட்சியாக்கிக் கொண்டாய்!

என்னை நீ ஏற்றுக்கொண்டால், தேவமாதர் உனக்கு ஏவல் செய்வர்! ஏழ் உலகச் செல்வமும், உன் காலடியில் கிடக்கும்!

**சீதை :** ஒழுக்க மில்லா அரக்கனே! வெஞ்சிலைக் கை காகுத்தன் வெங்கணை, உன் உயிர் பறிக்குமுன், லங்கையில் ஓடி ஒளிந்து கொள்!

*தெய்வத்திற்குப் படைத்த பிரசாதத்தைத் தெரு நாய்க்கு இடுவார்களா?*

**ராவணன் :** *என்னை நாயென்றும் பேயென்றும் சொன்னாலும் பாதகமில்லை! உன்னை எண்ணி உருக்குலைந்து வாடும் என்தேகத்தைத் தீர்த்தமாகி நீ குளிரூட்டு!*

*[இவ்வாறு கூறி, சீதையின் முன் நெடுஞ்சாண் கிடையாக விழுந்து கும்பிடுகிறான் ராவணன்.]*

**சீதை :** *மூடனே! நீ இப்படி விழப்போவது நிச்சயம்! தர்மம் எழப்போவது உறுதி!*

**ராவணன் :** *(கோபத்தோடு எழுந்தபடி) கேட்டால், மயில் இறகைத் தராது! கிள்ளி எடுத்தால், அதைத் தடுக்கும் வலிமை இராது!*

*[சீதை இப்பொழுது பர்ணசாலைக்குள் ஓடி விடுகிறாள்.]*

**ராவணன் :** *இந்தப் பர்ணசாலை, உனக்குப் பாதுகாப்பு அளித்திடுமா?*

*கயிலையைத் தூக்கியவன், இந்தக் கடுகைத் தூக்கிச் செல்ல மாட்டேனா?*

*பர்ணசாலையோடே, உன்னைச் சிறைஎடுக்கிறேன்! தோலை உரித்து விட்டுப் பழத்தைச் சாப்பிட, எவ்வளவு நேரமாகும்?*

*[இவ்வாறு கூறிவிட்டு, ராவணன், அந்தப் பர்ணசாலையை நிலத்தோடு பெயர்த்தெடுக்க, சீதை அலறுகிறாள்.]*

## காட்சி-137

*ருஷ்யமூக பர்வதம்*

[பர்வதத்தில் சுழற்காற்று அடிக்க, அனுமனும் சுக்ரீவனும், அதன் தாக்குதலால், உருண்டு புரண்டு எழுகின்றனர்.]

**அனுமன் :** *என் ஐயன் ராமனுக்கு ஏதோ துன்பம் நேர்ந்திருக்கிறது!*

*என் தாய், சீதா தேவிக்கு, ஏதோ ஆபத்து சூழ்ந்திருக்கிறது!*

*என் தந்தை வாயு பகவான், இதைத் தெரிவிக்கத்தான், இப்படிச் சூறாவளியாக இங்கு சுழன்று வீசுகிறார்!*

*நான் விஸ்வரூபம் எடுத்து, வானமெங்கும் பரவி, இந்த உலகில் என்ன நடக்கிறதென்று பார்க்கத் துடிக்கிறேன்!*

*ஆனால் என்னால் முடியவில்லையே! முனிவரின் சாபம், என்னை முடக்கிப் போட்டு விட்டதே!*

*இந்த ஏலாமைதான், என் வாழ்க்கையில் நிரந்தரம் ஆகிவிடுமா?*

*உலவுகின்ற பிணமாக, என் வாழ்வு கழிந்து விடுமா?*

# காட்சி-138

*வனம்*

[சிறகுகள் அறுபட, வானிலிருந்து, குற்றுயிரும் குலை உயிருமாக, வனாந்திரத்தின் மண்ணில் விழுகிறான், ஜடாயு என்னும் கழுகு வேந்தன்.]

**ஜடாயு :** *ராவணா! கொடியவனே! உத்தமன் தேவியைக் கவர்ந்து செல்கிறாய்! உன் விமானத்தைத் தடுத்து நிறுத்திய என்னை, சிவன் தந்த வாளால், சிதைத்து வீழ்த்தி விட்டாய்!*

*நீ கெட்டு அழிவதற்கு, நாள் குறித்து விட்டாய்! உன் உடல் சுட்டுப் பொசுங்கிடும் வேளையை வரவழைத்து விட்டாய்!*

*பட்டாய் நீ, ராமன் பத்தினியால்!*

*மாதா அனையவளை, பேயனே! நீ பிழையாக எண்ணி விட்டாயே!*

*அந்த ராமனை, வில்லாளனை வெல்லும் மிடுக்கு உனக்கு உண்டா?*

*ராமலட்சுமணரை எளிய மானிடர் என்று எண்ணி விட்டாயே!*

*அறிவிலியே! அவர்கள் முத்தேவரின் மூலமுதற் பொருள்!*

*அத்தேவரே, இம்மானிடராக வந்திருக்கிறார்கள்!*

*அஞ்சாதே என்று சொன்ன நல்லவன் தோற்று விட்டானே என்று நாயகி அழுகின்றாள்!*

*பாவம் வெல்வதா? வேதம் பொய்ப்பதா? அறம் இல்லாத ஒன்றா?- என்று அந்த ஏந்திழையாள் எண்ணுகிறாள்!*

*ஆரியன் தேவியை, அந்த அரக்கன் தீண்ட அஞ்சுவான் - அவன் முன்னர் பெற்ற சாபத்தால்!*

*அதுதான், பர்ணசாலையோடு, பாதகன் தூக்கிச் செல்கிறான்!*

*என் சிறகுகள் அறுபட்டதால் என்னால் சீதாதேவியைக் காக்க முடியவில்லை!*

*ஆனால், அந்தப் பூவையின் கற்புநிலை, அவளைக்காக்கும்! அந்த அரக்கனின் சிரம் அறுக்கும்! இது உறுதி!*

## காட்சி-139

*ருஷ்ய மூக பர்வதம்*

**அனுமன் :** *(சுக்ரீவனை நோக்கி) ஸ்ரீராமருக்கு ஏதாவது தீங்கு நேர்ந்து விட்டதா என்று, ஒரு தவமுனிவரிடம் போய்க் கேட்கலாம். முக்காலமும் உரைப்போர் அவர்கள். பொய்க்காத வாக்கு உடையோர்.*

**சுக்ரீவன் :** *அனுமான்! உன்மனம் அமைதிபெற, அவ்வாறே செய்யலாம்.*

**அனுமன் :** *கும்பிடப் போன தெய்வம், குறுக்கே வருவதுபோல, அதோ, ஒரு முனிவர் வருகிறார்! அவரிடம் கேட்போம்.*

*[முனிவர் இவர்கள் அருகில் வருகிறார். இருவரும் வணங்குகின்றனர்.]*

**முனிவர் :** நலம் பல பெற்று வாழ்க!

**அனுமன் :** சுவாமி! எங்கள் ஐயத்தை நீக்க வேண்டும். தங்கள் அருள் வாக்கால், எங்கள் சிந்தை மகிழ வேண்டும்.

**முனிவர் :** அயோத்தி ராமனைப் பற்றிக் கேட்கப் போகிறாய்! அப்படித்தானே?

**அனுமன் :** ஆமாம் சுவாமி!

(உடனே முனிவர் அங்கிருந்து ஓட்டமெடுக்கிறார். 'சுவாமி! சுவாமி!' என்று குரல் கொடுத்தபடி, அனுமன் அவரைப்பின்தொடர்ந்து ஓடுகிறான். முனிவரோ வேகமாக ஓடி மறைந்து விடுகிறார்.)

**அனுமன் :** (மூச்சு இரைத்தபடி நின்று கொண்டு) குழந்தைப் பருவத்திலேயே, சூரியனைப் பிடித்த நான், இந்த இளமைப் பருவத்திலே, ஒரு பரதேசியைப் பிடிக்க முடியாமல், மூச்சு வாங்க நின்று கொண்டிருக்கிறேன்! என் வாழ்நாள் எல்லாம், வீண் நாளாகக் கழிய வேண்டியதுதானா?

எதற்காக அப்படி ஓடுகிறார்? என்னிடமிருந்து எதையோ மறைக்கிறார்!

## காட்சி-140

ருஷ்ய மூக பர்வதம்

[அனுமனிடமிருந்து ஓடிவந்த முனிவரிடம், இன்னொரு முனிவர் பேசுகிறார்.]

**இன்னொரு முனிவர் :** ஏன் அப்படி அனுமனிடமிருந்து ஓடி வந்தீர்கள்?

**ஓடி வந்த முனிவர் :** அயோத்தி ராமரைப் பற்றிக் கேட்கிறான்.

அவர் மகுடம் இழந்ததை, அயோத்தி மண்ணைவிட்டு வெளியேறியதை, அடர்ந்த கானகத்தில் வாசம் செய்வதை, அங்கும் மனைவியை மாற்றான் தூக்கிப் போகத் துன்பத்தில் குடிக்குத் குவளுவதை, நான் அனுமனிடம் சொன்னால்,

அவன் என்னை உயிரோடு விட்டு வைப்பானா? அவன் கையால் சாவதற்கா, ஜபம்தபம் செய்து கொண்டிருக்கிறேன்?

[இந்த முனிவர்கள் பேசிக்கொண்டிருக்கும் இடத்திலுள்ள மரத்தின் மேலிருந்து இவற்றை அனுமன் கேட்கிறான்.

இவற்றைக் கேட்ட அதிர்ச்சியில் தலை சுற்றி, மயக்கமாகிக் கீழே விழுகிறான்.

முனிவர்கள், அனுமனுக்கு வேண்டிய உதவிகளைச் செய்கிறார்கள்.]

## காட்சி - 141

*வனம்*

[இரத்தம் ஒழுக விழுந்து கிடக்கும் ஜடாயுவைத் தன் மடியில் போட்டு மனம் கலங்குகிறார் ராமர்.]

**ஜடாயு :** ராமா! உன் மனைவி சீதாதேவியை அந்த அரக்கன் ராவணன், மண்ணோடு, பர்ணசாலையோடு, தன் விமானத்தில் எடுத்துப் போனான்.

எனது ஆற்றல் கொண்டு, அவனைத் தடுத்துப் பார்த்தேன்!

சிவன் தந்த வாளால், என்னைச் சின்னாபின்னப் படுத்திவிட்டுச் சேயிழையோடு சென்று விட்டான்!

**ராமர் :** என்ன! பெண் ஒருத்தி, தனியே இருக்க, பேதை அவளை, அரக்கன் பற்றிக் கொண்டு போயிருக்கிறான்! தடுத்த தங்களை வெட்டி வீழ்த்தியிருக்கிறான்!

எண் திசை உலகம், இதை எட்டி நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்ததா?

வானவர்கள் வாய்மூடிக் கண்மூடிக் கிடந்தார்களா?

அக்கிரமத்தைத் தடுக்காதவர்கள், அக்கிரமத்திற்கு உடந்தையாய் இருந்தோர் ஆவார்கள்!

அந்தத் தேவர்களை என் கை வில்லால் தண்டிப்பேன்! விண்ணிலுள்ள தாரகைகளை உதிர்ப்பேன்! சுட்டெரிக்கும் சூரியனும், பொடியாகச்சிந்தும்படி செய்வேன்! வானம் பற்றி எரியும்படிச் செய்வேன்! எல்லா உலகையும் நிர்மூல மாக்குவேன்!

**ஜடாயு :** ராமா! உன் சினம், அந்த ராவணன் மேல் இருக்க வேண்டும். மற்றவர்களால், என்ன செய்ய முடியும்? அவர்கள், அந்த அரக்கனுக்கு அஞ்சி இருக்கின்றார்கள். தேவர்கள், பெண்டிரைப் போல, அவனுக்கு அடிமைத் தொழில் செய்கின்றனர்.

வஞ்சியை வனத்திலே தனியே விட்டு, ஒரு மானின் பின்னே போனது, உங்கள் பிழையே தவிர, இந்த உலகம் செய்த பிழை அல்ல அது!

மேலும் பிறவியின் இன்பதுன்பம், விதிவழியே வருவதாகும். மதி வலியால், விதியை வெல்ல முடியுமா?

உலகு எல்லாம் படைத்தளிக்கின்ற பிரமன், தன் ஐந்து தலைகளில் ஒன்றை இழந்தது, விதியினால் அன்றோ?

முப்புரங்களை எரித்த சிவன், கபாலம் ஏந்தி இரந்தது எதனால்?

ஒரு பாம்பு விழுங்கி உமிழும் நிலை, சூரியனுக்கு ஏன் ஏற்பட்டது?

திங்களோ, தேய்வதும் வளர்வதுமாய், தேகத்தை வருத்திக் கொண்டிருக்கிறது!

தேவகுரு பிரகஸ்பதியின் சாபமொழியால், இந்திரன் அடைந்த துன்பங்கள் எத்தனை எத்தனை?

இப்பொழுது உன்னைக் கொண்டு, ராவணனை வதைக்க, தேவர்கள் எண்ணியிருக்கின்றனர்.

உன் வல்லமை, தர்மத்திற்கு வாழ்வு கொடுக்கும் என்று அவர்கள் காத்திருக்கிறார்கள்.

உன் பகைவேண்டுமென்று விதி, அந்த ராவணனை உன் மனையாளைத் தூக்கிச் செல்ல வைத்திருக்கிறது!

*திட்டமிட்டபடிதான் எல்லாம் நடந்திருக்கிறது. உன் திண்தோள் வலிமையால், வதைபடவேண்டியவன், அந்த ராவணனே!*

**ராமர் :** *என் தந்தை போன்ற பெருமானே! மந்திரம் போல, என் மனம் கொள்ளும் சொற்களைப் பேசி விட்டீர்கள்!*

*நீங்கள் காட்டிய வழியில் நடக்கிறேன். அந்த நீச அரக்கனை அழிக்கிறேன். சிறைப்பட்ட சீதையையும் தர்மத்தையும் மீட்கிறேன். அந்த அரக்கன், சீதையோடு எங்கே சென்றான் என்பதைத் தெரிவித்தால், என் வில் அம்பு அந்தத் திசை நோக்கிச் செல்லும்.*

*லங்கைக்குச் சென்றானா? அல்லது வேறு எங்காவது மறைத்து வைக்கும் நோக்கோடு, வேறு மார்க்கம் சென்றானா? சொல்லுங்கள் பெரியவரே!*

*(ஜடாயு, இதற்குப் பதில் சொல்லத் துடிக்கிறது. அதன் வாய் அசைகிறதே தவிர, மொழி எதுவும் பிறக்கவில்லை. தலை கவிழ, ஜடாயு உயிர் விடுகிறது.*

*ராமரும் லட்சுமணனும், இது கண்டு கதறி அழுகின்றனர்.)*

## காட்சி - 142

*ருஷ்ய மூக பர்வதம்*

[வேதனை புரளும் நெஞ்சோடு அனுமன், முனிவர்கள் முன் நின்று கொண்டிருக்கிறான்.]

**அனுமன் :** *என் ஸ்ரீ ராமன் நாடு இழந்தார்: நங்கையை இழந்தார் என்று சொல்லி முடித்து விட்டீர்கள்!*

*என் நெஞ்சிலே தீயை அள்ளி வீசி விட்டீர்கள்! தேவியைத் தேடித் திசைதோறும் திரிந்து கொண்டிருக்கும் என் தெய்வத்தை, நான் காண்பேனா?*

**முனிவர் :** *நிச்சயமாக! விரைவில்!*

*ஸ்ரீ ராமர் இங்கு வருவார். உன் துணை நாடுவார். தர்மத்தை மீட்கும் போராட்டத்தில் உன் கர்மங்கள் முதன்மையானவை! முத்தானவை! சுவைக்கொத்தானவை!*

**அனுமன் :** *நான் வாழ்ந்திருக்க, நல் வார்த்தைகளைக் கூறிவிட்டீர்கள்!*

*[முனிவர்களைக் கையெடுத்துக் கும்பிடுகிறான் அனுமன்.]*

## காட்சி - 143

*மதங்கவனம்*

[மதங்கவனத்தில் நடந்து வருகின்றனர் ராமலட்சுமணர். சுற்றுமுற்றும் பார்த்து வருகின்றனர்.]

**ராமர் :** *லட்சுமணா! இங்கு மதங்க மகரிஷியின் ஆஸ்ரமம் இருப்பதால், இதை மதங்கவனம் என்று சொல்கிறார்கள்.*

**லட்சுமணன் :** *இந்த வனத்திற்கு நிச்சயமாக ராவணன் வந்திருக்க மாட்டான். அந்த மகரிஷியைப் பற்றி நான் கேள்விப் பட்டிருக்கிறேன். வாலிக்குச் சாபமிட்டவர் அவர்.*

*வன்னெஞ்சன் ராவணன் இங்கு வந்திருந்தால், அவனைச் சபிக்காது விட்டிருக்க மாட்டார்.*

**ராமர் :** *காரணமின்றி, நம் கால்கள் இந்த வனத்தை நோக்கி நடந்திருக்காது!*

*[இப்போது தொலைவில், ஒரு முதியவள், தன் குடிசை வாயிலில் நிற்பது தெரிகிறது.]*

**முதியவளான சபரி :** *ராமா! என் ராமா! வந்து விட்டாயா? வா ராமா! இந்தச் சபரியின் குடிலுக்கு வா ராமா!*

*[இவ்வாறு உரக்கக் கூறுகிறாள்.]*

**ராமர் :** *யார் இந்த மூதாட்டி? என் பெயரைக் கூவி அழைக்கிறாள்!*

*[இருவரும் அவளை நோக்கிச் செல்கின்றனர். ராமர் அருகில் வந்ததும், அவரை விழுந்து தொழுகிறாள் சபரி. ராமர், இது கண்டு பதறுகிறார்.]*

**ராமர் :** *என்னம்மா இது? வயதில் சிறியவன் நான்!*

**சபரி :** *நீ சிறியவன் வடிவில் வந்த பெரியமூர்த்தி! நீ அறியாததை, நான் அறிந்து சொல்கிறேன்! ராமபிரான் தரிசனம் கிட்டியவுடன் எனக்கு மோட்சம் கிடைக்குமென்று என் மதங்க முனிவர் பிரான் கூறியிருக்கிறார்.*

*இளமையிலிருந்தே உனக்காகக் காத்திருந்தேன். முதுமை வந்தும், என் முயற்சியைக் கைவிடவில்லை. நாள் தோறும், நீ உண்ணக் கனிகள் பறித்து வைப்பேன். அவை பழுத்திருக்கிறதா என்று கடித்துப் பார்த்துத் தேர்ந்தெடுப்பேன்.*

*நான் எதிர்பார்த்திருந்த திருநாள் வந்து விட்டது! நான் பார்க்க ஏங்கிய தெய்வம் வந்து விட்டது.!*

*ராமா! இந்தா சாப்பிடு! நான் பறித்த கனிகள் இவை. கடித்துப் பார்த்துச் சுவையானவை என்று கண்ட கனிகள்!*

*(ராமர் ஆவலோடு, அவற்றைச் சாப்பிடுகிறார். தம்பி லட்சுமணனுக்கும் உண்ணக் கொடுக்கிறார்.)*

**சபரி :** *இனி நான் இந்த உடலைத் துறந்து, வீடு சேர்ந்து விடுவேன்!*

*எனக்கு விடுதலை அளித்த ஸ்ரீ ராமா! உன் மனையாள் விடுதலைக்கும் வழி சொல்கிறேன்.*

*சூரியன் புதல்வன் சுக்ரீவன் இருக்கும் ருஷ்யமூக பர்வதம் சென்று, அவன் தோழமையைத் துணையை நாடு!*

*சிவனே, பூத கணங்களைத் துணை சேர்த்துக் கொள்ள வில்லையா?*

*நல்லார் சேர்ந்தால், பொல்லார் அழிவர்! தர்மம் பொலிவு பெறும்!*

*ராமா! இப் பிறப்பு நீங்கி உன்னால் முக்திப் பேற்றினை அடைகிறேன்!*

*[இவ்வாறு கூறிய சபரி, சரிந்து கீழே விழ, அவள் உடலில் இருந்து ஒரு ஜோதி கிளம்பி வானை அடைகிறது.]*

## காட்சி -144

*ருஷ்ய மூக பர்வதம்*

[பர்வதத்தின் மேல் ஏறி வருகின்றனர் ராமலட்சுமணர். இதைத் தொலைவில் இருந்து பார்க்கிறான் சுக்ரீவன். அனுமனைக் கூவி அழைக்கிறான்.]

**சுக்ரீவன் :** *யாரோ இருவர் வில் அம்போடு இங்கு வருகிறார்கள்! அவர்கள் வாலி அனுப்பியவர்களாக இருக்கலாம்.*

*அவர்கள் கொண்டிருப்பதோ தவக்கோலம்; முரண் பாடாகத் தோளிலே கொலைக் கருவி! என்னைத் தேடி அழிக்கப் பர்வதம் ஏறி வருகிறார்கள் என்று எண்ணுகிறேன்.*

**அனுமன் :** *இவர்களைப் பார்த்தால், அப்படித் தெரியவில்லை. தர்மத்தின் தூதுவர்களாகத் தெரிகிறது.*

**சுக்ரீவன் :** *ஆளைப் பார்த்து மயங்கிவிடாதே! படமெடுக்கும் பாம்பும், பார்ப்பதற்கு அழகாகத்தான் தெரிகிறது! அது கொத்தின பிறகுதான் அதன் கொடூரம் தெரிகிறது.*

*நான் அந்தக் குகையில் போய் ஒளிந்து கொள்கிறேன். நீ தீர விசாரித்து, நான் இங்கு இல்லை என்று, அவர்களைத் திருப்பி அனுப்பி விடு.*

*(இவ்வாறு கூறிவிட்டுச் சுக்ரீவன், அங்கு இருக்கும் குகையில் மறைந்து விடுகிறான்.)*

**அனுமன் :** *(தனக்குள்) வருவது, என் ஸ்ரீராமனும் லட்சுமணனும் போல் தெரிகிறதே!*

*ஆண்டுகள் பல கடந்து விட்டதால், உடனே அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை.*

*[(மகிழ்ச்சியோடு) ஆம், என் ராமனேதான்! என் கனவு மெய்ப்பட்டு விட்டது! என் கண்களுக்குப் பார்வை கிடைத்து விட்டது! என் பிறப்பிற்குப் பெருமை சேர்ந்து விட்டது!*

*(தலைமேல் கூப்பிய கையோடு, 'ராமா! ஸ்ரீராமா!' என்று கூவியபடி, ராமலட்சுமணரை நோக்கி ஓடி வருகிறான் அனுமன்.]*

**ராமர் :** *ஓடி வருவது, நம் சிறுவயது நண்பன் அனுமன் போல் தெரிகிறதே!*

*(ஓடி வருகின்ற அனுமன், ராமர் காலடியில் விழுகிறான்.)*

**ராமர் :** *நீ, என் நண்பர் அனுமன்தானே!*

**அனுமன் :** *ஆம்-உம் அடிமை அனுமன்தான்!*

*[அனுமனைத் தூக்கி அணைத்துக் கொள்கிறார் ராமர்.]*

## காட்சி-145

*கயிலை மலை*

**சிவன் :** *(உமையாளிடம்) என் நோக்கம் நிறைவேறப் போகிறது. தர்மத்தின் வெற்றி பொறிக்கப்படப் போகிறது. திரு மாலோடு கரம் கோத்து நான், தீமைக்கொரு இறுதியை அளிக்கப்போகிறேன்.*

*என் உவகையை வெளிப்படுத்த, ஆனந்த தாண்டவம் நான் ஆட, நீ பார்த்திரு!*

*இந்தப் பொழுது, எனக்கு இனிக்கும் பொழுது! நீ களிக்கும் பொழுதாகவும் இருக்கட்டும்!*

*[உமையம்மை பார்த்துக் களிக்க, சிவன் ஆனந்த நடனம் ஆடுகிறார்.]*

## காட்சி-146

*பாற்கடல்*

**திருமால் :** *(லட்சுமியிடம்) என் சக்கரத்தோடு சிவனின் சூலமும் சேர்ந்து விட்டது. அதர்மம் வீழ, வேளை நெருங்கிவிட்டது. பாற்கடலும் கயிலை மலையும் சேர்ந்து களம் கண்டால், தர்மம் அங்கு வெற்றிக் கொடி பிடித்துக் கூத்தாடும்.*

இந்தக் களிப்பைக் கரை காணா மகிழ்ச்சியை, என் வெண் சங்கெடுத்து ஊதி வெளிப்படுத்துகிறேன்.

[திருமால், தன் சங்கெடுத்து ஊதுகிறார்.]

## காட்சி-147

*மூங்கிற் காடு*

**வாயுதேவன் :** அனுமான், வாயு புத்திரன் என்று வாஞ்சையோடு அழைக்கப் பெறுகிறான். அவன் வாழ்விலே வசந்தத்தைக் காணும் இப்பொழுது, என் உள்ளக் கிளர்ச்சியை, இந்த மூங்கிற் காட்டிலே, புல்லாங்குழல் இசையாக வெளிப் படுத்துகிறேன்!

## காட்சி-148

*வானம்*

[வானில் நாரத முனிவர் தோன்றுகிறார்.]

**நாரதர் :** திருமாலும் சிவனும் சேர்ந்து செய்யும் லீலை, ஜெகம் உள்ள அளவும் பேசப் பெறும்.

யுகம் கடந்தும் இந்தக் கதை, புண்ணிய சரிதமாகப் போற்றப் பெறும்.

ராமநாமத்தை அனுமான் சொல்ல, இந்தத் தரணிக்குத் தர்ம சாசனம் அதுவே ஆகும். தாரக மந்திரமும் இனிதாக அதுவே அமையும்.

[இவ்வாறு கூறிவிட்டு, 'ராம்! ராம்!' என்ற சொற்களை, இசை வடிவிலே இணைத்துப் பாடுகிறார்.]

## காட்சி-149

*ருஷ்யமூக பர்வதம்*

**அனுமன் :** *(மன நெகிழ்ச்சியோடு) பெருமானே! பிரிந்த நான் இப்பொழுது சேர்ந்து விட்டேன்.*

**ராமர் :** *பிரிந்தவளையும் நீ சேர்த்து வைக்க வேண்டும்!*

**லட்சுமணன் :** *சூரியன் மைந்தன் சுக்ரீவனோடு தோழமை கொண்டு, பிராட்டியை மீட்கும்படி, சபரி என்னும் நல்லாள் கூறினாள்.*

*அதன்படியே இப்பர்வதம் வந்தோம்.*

**ராமர் :** *லட்சுமணா! உனக்கு நினைவிருக்கிறதா?*

*இந்த அனுமன், சூரியனிடம் வேதம் கற்ற வேதக் கடல்! இவன் கல்லாத கலை எதுவுமில்லை!*

*இப்பொழுது இவன் தோள் கண்டால், இவன் நான்முகனோ, இந்த நானிலம் போற்றும் சிவனோ என்று எண்ணத் தோன்றுகிறது.*

**அனுமன் :** *ஆனால், ஒரு முனிவரின் சாபத்தால், இப்பொழுது நான் ஒடுங்கிப்போய்க் கிடக்கிறேன்!*

*தங்கள் தரிசனம் தான், எனக்கு விமோசனத்தை அளிக்க வேண்டும்!*

**ராமர் :** *எல்லாரும் நலம் பெறவே, நாம் சேர்ந்திருக்கிறோம். அனுமான்! உன் பேச்சின்மூலம், வாலி செய்த கொடுமையைத் தெரிந்து கொண்டோம். அவனிடமிருந்து சுக்ரீவனை மீட்க, உறுதி பூண்டோம்.*

**அனுமன் :** *இதற்காகத் தங்களைக் கும்பிட்டுத் துதிக்கிறேன்! நடுங்கினார்க்கு அபயம் அளிக்கும்அண்ணலே! இதனினும் நல் அறம் வேறு உண்டோ? பிராட்டியை மீட்கின்ற கர்மமே, இனி எங்கள் வாழ்வின் தர்மமாக இருக்கும்!*

**லட்சுமணன் :** *எங்கள் வரவை, சுக்ரீவனுக்கு உணர்த்தி, அவன் துணையை நாடி வந்திருப்பதாகச் சொல்ல வேண்டும்.*

**அனுமன் :** அப்படியே செய்கிறேன் இளவலே! கொஞ்ச நேரம் பொறுத்திருங்கள்- அந்தச் செங்கதிர்ச் செல்வனை, இங்கு கொணர்கிறேன்.

**ராமர் :** அனுமான்! அவன் செங்கதிர்ச் செல்வன் என்றால், நீ சொல்லின் செல்வன்! நீ பேசும் சொற்களில் வலிமை இருக்கிறது. அழகு தெறிக்கிறது. தர்மத்தின் ஓசை கேட்கிறது.

**அனுமன் :** செந்தாமரைக் கண்ணை உடைய, சக்கரப் படையை உடைய திருமாலைப் போன்றவனே!

நீ பேசினாலும், ஏசினாலும், எனக்கு அதுவே வேதம்! வருகிறேன்.

## காட்சி-150

குகை

[அனுமன் குகைக்குள் வருகிறான்.]

**சுக்ரீவன் :** (அச்சத்தோடு) அனுமான்! யார் அந்த வில்லாளிகள்? என் உயிர் பறிக்க, வாலி அனுப்பிய எம தூதர்களா?

**அனுமான் :** இல்லை-இந்த உலகு உய்ய வந்த தர்மத்தின் தூதுவர்கள் அவர்கள்!

வாலிக்குக் காலனாக வந்திருக்கிறார்கள்! நமக்கு நல்ல காலமாக வந்திருக்கிறார்கள்! நம் உயிர் காக்கும் அமுதமாக வந்திருக்கிறார்கள்.

மண் உளார், விண் உளார், மாறு உளார், வேறு உளார், எண் உளார், இயல் உளார், இசை உளார், திசை உளார்- இவர்களுக்கெல்லாம் காவலாக வந்திருக்கிறார்கள்!

அயோத்தி மன்னன் தசரதர் மைந்தர் அவர்கள். அறிவினார். அழகினார். தங்கட்கு அரசு தந்து உதவக் கூடிய வலிமையினார்! ராமலட்சுமணர் அவர்கள் நாமம்.

**சுக்ரீவன் :** (மகிழ்ச்சியோடு) அனுமான்! நீ காணத் துடித்தவர் தானே அந்த ஸ்ரீராமன்?

**அனுமான் :** ஆமாம். சிறு வயதில் பெற்ற பேற்றை, இடையில் சிதற விட்ட பேற்றை, இப்பொழுது மீண்டும் பெற்று விட்டேன்.

எங்கள் நாயகன் புகழைக் கேட்டால், தங்கள் வேதனை விலகிப் போகும்.

மன்னா! அந்த ஸ்ரீராமன், விஸ்வாமித்திர மகரிஷி அளித்த கொடிய அஸ்திரங்களை உடையவர்!

சிவதனுசை முறித்த சிறப்புப் பெற்றவர்! ஆழிசூழ் உலகமெல்லாம் இளையவன் பரதனே ஆள, காடேகியவர்!

கரன் முதல் கருணை அற்றவர் படையைச் சிரம் உதிர, வெற்றி கண்டவர்!

மாயமான் ஆயின மாரீசனுக்கு, மா ய்மன் ஆயினவர்!

முனிவரும் பிறரும், இவர்தம் அருகில் வரத் தவம் கிடப்பர். ஆனால் இவரோ, தங்களை நாடி வந்திருக்கிறார்! தங்கள் தோழமை வேண்டி வந்திருக்கிறார்!

அரக்கர்கோன் ராவணன் கவர்ந்து சென்ற, தன் மனைவியைத் தேடி வந்திருக்கும் ஸ்ரீராமருக்கு, நட்புக்கரம் நீட்டினால், வாலியின் காலம் முடியும்! தாங்கள் மனையறம் காணும் காலம் வரும்! தாங்கள் அரசாளும் வேளை உதயமாகும்!

சூரிய புத்திரா! தர்மமும் அப்போது வெங்கதிர்போல், பிரகாசமாக வெளிக்கிளம்பும்! சுபிட்ச காலமும் சித்திக்கும்!

**சுக்ரீவன் :** அனுமான்! அமைச்சனுக்கு உரியன பேசிவிட்டாய். இதைக் கேட்காமல் போகும் கெடுமதி எனக்கில்லை.

அந்த ஸ்ரீராமனைப் போய்ப் பார்ப்போம். ராமனால், இந்த ஞாலமே நலம் பெறட்டும்.

## காட்சி-151

*ருஷ்ய மூக பர்வதம்*

[ஸ்ரீராமனைக் கூப்பிய கையோடு, மெய் மறந்து பார்த்து நிற்கிறான் சுக்ரீவன்.]

**சுக்ரீவன் :** ஸ்ரீராமா! அமரர்க்கு எல்லாம் தேவரான திருமாலே நீ! மானிடம் ஆகி, இப்பிறப்பில் வந்து நிற்கிறாய்! தங்கட்கு, என் சிரம் தாழ்ந்த வணக்கங்கள்.

நீ மானிடனாகப் பிறந்து விட்டதால், வேறு உள தெய்வீகக் குழுவை எல்லாம், இம்மானுடம் வென்றது இன்றே!

**ராமர் :** சுக்ரீவா! அருகில் வா. பக்கத்தில் இனிது அமர்வாயாக.

**அனுமன் :** சூரிய சந்திரர் போல், நீங்கள் இருவரும் சேர்ந்திருக்கக் கண்டு, சிந்தை மகிழ்கிறேன்.

கல்வியோடு ஞானமும் சேர்ந்தது போல், கண் கொள்ளா ஓவியமாகத் திகழ்கிறீர்கள்.

**சுக்ரீவன் :** சுவாமி! சரண் என உனைப் புகுந்தேன். என்னைத் தாங்குதல் தர்மம் ஆகும்.

**ராமர் :** சுக்ரீவா! இன்ப துன்பங்கள், இனி எனக்கும் உனக்கும் ஒன்றேயாகும்!

உன் பகைவர், இனி என் பகைவர்! உன் சுற்றம், இனி என் சுற்றம்! நீ, என் இன் உயிர்த் துணைவன் ஆவாய்!

[இதைக் கேட்டு அனுமன் மகிழ்ச்சியோடு, ராமரின் மலரடி விழுந்து தொழுகிறான்.]

**அனுமன் :** உங்கள் நட்பு வாழட்டும்! நல்லறம் தழைக்[illegible]ம்!

பெருமானே! இந்தச் சுக்ரீவரைக் கொல்ல முனையு[illegible], இவர் தமையன் வாலி, வரம்பு இல் ஆற்றலான்! சுழலும் பாற்கடலைக் கடையும் தோளினான்! எதிரில் நின்று போரிடுபவனின் பாதி வலிமையைக் கவர்ந்து கொள்ளும், வரம் பெற்ற கர்வத்தான்! லங்கை ராவணனைத் தன் வாலினால் கட்டி இழுத்தபடி, எல்லா உலகுக்கும் சென்று வந்த உரம் உடையான்! அவன் இந்திரன் தனிப் புதல்வன்! சந்திரன் ஒளி நிறத்தவன்! அந்தகனாம் எமனும் அணுக அஞ்சும் ஆண்மையுடையவன்! சுக்ரீவருக்கு முந்திப்பிறந்து, அவரைக் கொல்லும் நே[illegible]வன்! தவறாகத் தம்பி சுக்ரீவரைப் பகை என்று எண்ணி பாம்பென விஷம் கக்கும் பாப விருட்சம் அந்த வாலி!

தம்பியின் தாரம் உருமையைக் கவர்ந்து கொண்ட கயமையின் உருவமும் அவனே!

**ராமர் :** அனுமான்! உன் உரைகேட்டு, என் உள்ளம் உறுதி பூண்டு விட்டது. உலகம் ஏழினோடு ஏழும் வந்து, அவன் உயிர்க்கு உதவினாலும், என் வில்லின் ஆற்றலால், அதையெல்லாம் விலக்குவேன்! அந்த வாலியின் உயிர் நீக்குவேன்! சுக்ரீவனின் தாரமும், அரசுத் தலைமையும், அவனுக்கு வந்து சேரும்படிச் செய்வேன்!

**சுக்ரீவன் :** ஸ்ரீராமா! தங்கள் சொற்கேட்டுத் தங்கு தடையற்ற மகிழ்ச்சி கொள்ள நினைக்கிறேன். முடியவில்லை.

ஒரு தயக்கம், மயக்கம் பிறக்கிறது.

**லட்சுமணன் :** ஐயத்தைக் கூறினால், ஐயன் தீர்த்து வைப்பார்.

**அனுமன் :** வாலியின் ஆற்றல், சுக்ரீவரின் மனதை மருள் கொள்ளச் செய்கிறது.

இந்த ஸ்ரீராமரின் தடக்கையில், தாளில், சங்கு சக்கரக் குறிகண்டும், இவர் நெடுமாலே என்று நிர்ணயிக்க வேண்டாமா? வாலியைப் பற்றி எண்ணி, நெஞ்சம் வதை படலாமா?

யார்க்குத் துன்பம் தோன்றியபொழுதும், அதை நீக்கத் தோன்றும் தோன்றல், இந்த நாயகன்! இவரைப் பார்த்தவுடன், இது மனதில் தோன்றியதே! தோன்றியதை மனம் பேசியதே! பின்னர் ஏன் வந்தது இந்த மயக்கம்?

**லட்சுமணன் :** அனுமான்! சுக்ரீவன் நம்பிக்கை கொள்ளும்படி உபாயம் ஒன்றைக் கூறு.

வார்த்தைகள் சொல்லாததை, அண்ணன் காட்டும் வலிமை சொல்லி விடும்.

**ராமர் :** ஆம்-உரசிப்பார்த்துத் தங்கத்தின் தரம் அறிவது, இந்தத் தரணியோர் காணுகின்ற முறைதானே!

**அனுமன் :** அண்ணலே சொல்லிவிட்டதால், இதற்கு ஒரு வழி காண்போம்.

இந்தக் கானகத்தில் உள்ள ஏழு மராமரங்களில், ஒன்றைத் துளைத்து, ஐயன் விடும் அம்பு செல்லட்டும்!

**ராமர் :** மகிழ்வோடு இந்த அழைப்பை ஏற்றுக் கொள்கிறேன்.

**அனுமன் :** தங்களால் முடியாதது, இந்தத் தரணியில் உண்டோ? நாங்களெல்லாம் பார்த்திடத் தாங்கள் நடத்தும் விளையாட்டு இது!

## காட்சி-152

*மலையில் ஏழு மராமரங்கள் உள்ள பகுதி*

**அனுமன் :** (ராமரை நோக்கி) சுவாமி! இதோ பாருங்கள்- இந்த வலிய ஏழு மராமரங்களை! யுகம் மாறினாலும், இந்த மண்ணை விட்டுப் பெயராத பெரிய மரங்கள்!

இந்த ஆழி மாநிலம் தாங்கும் அருங்குலக்கிரிகள் ஏழுபோல், இவை எழுந்து நிற்கும் கோலத்தைப் பாருங்கள்!

சஞ்சரிக்கும் சூரியனின் குதிரைகள், இவற்றின் நிழல் கண்டு இளைப்பாறிச் செல்லும்!

வெண்மதிக்கு உள்ள கறுப்பு, இதன் உச்சிக் கிளைகள் தேய்த்தலால் உண்டான களங்கம்!

அடியினால் உலகு அளந்தவன் அண்டத்துக்கு அப்பால், தன்னுடைய முடியை உடையவை, இம்மரங்கள்!

இவைகளின் வேரோ, பார் சுமக்கின்ற ஆதிசேஷனின் வெள்ளி வெண்படத்தைத் குடைந்து கீழ் செல்பவை!

ஒன்றினுக்கு ஒன்று ஒரு யோசனை தூரத்தை உடையவை!

**லட்சுமணன் :** இவ்வளவு விவரங்கள் போதும். அண்ணன் வில்லாற்றலால், இந்தப் பெருமையெல்லாம் சிதறும்!

[ராமர் வில்லை எடுத்துக் கணை தொடுக்க, அது ஏழு மராமரங்களையும் உருவித் துளைத்து, ஏழு கீழ் உலகங்களையும் துளைத்து விட்டு, ராமர் கை வந்து சேர்கிறது.]

**அனுமன் :** சுவாமி! தாங்கள் விட்ட அம்பு, ஏழு மராமரம் துளைத்து, கீழ் ஏழ் உலகும் துளைத்து, தோன்றலே! தங்கள் கரம் வந்து சேர்ந்து விட்டது!

ஏழு கடல்களும், மேல் ஏழு உலகங்களும், ஏழு மலைகளும், ஏழு முனிவர்களும், கதிரவனின் ஏழு குதிரைகளும், தங்கள் அம்பு, அவர்களை வதைக்குமோ என்று அஞ்சிக் கொண்டிருக்கின்றனர்.

அறத்திற்கு ஆருயிர்த் துணை நீ என்று, பின்னர் அச்சம் நீங்கி, நின் அருட் தன்மையை நினைத்திருக்கின்றனர்.

(சுக்ரீவன், ராமரின் காலடி விழுந்து தொழுகிறான்.)

**சுக்ரீவன் :** பெருமானே! வையம் நீ! வானும் நீ! மற்றும் நீ! மலரின்மேல் ஐயன் நீ! கடல் நீ! கடலில் வாழ்தெய்வம் நீ! இப்பொழுது நாயினேன் உய்ய வந்து உதவுகிறாய்! உலகமெல்லாம் முந்து உண்டாக்கி உதவினாய்!

**ராமர் :** சுக்ரீவா! அதோ மலைபோல் கிடக்கிறதே, எலும்புக் குவியல்! அது என்ன?

தென்புலக் கிழவன் எமன் ஏறும் எருமைக் கடா அங்கு மாண்டு கிடக்கிறதா?

இல்லை, திசை யானை மடிந்து கிடக்கிறதா?

இல்லை, மகர மீன் இறந்து உலர்ந்து கிடக்கிறதா?

**அனுமன் :** ஐயனே! அது, வாலியால் அடித்து ஆவி போக்கப்பட்ட துந்துபியின் உடல் கிடக்கும் இடம்!

அந்த அரக்கனின் எலும்புக் கூடுதான், அங்கு குவிந்து கிடக்கிறது.

அதை அப்புறப்படுத்தும் வலிமையுடையார், இதுவரை யாரும் தென்படவில்லை.

**ராமர் :** ஆஸ்ரமம் இருக்க வேண்டிய மலையில், அழுகிய உடலம் கிடப்பானேன்? லட்சுமணா! அதை அகற்றி விடு.

[லட்சுமணன், தன் கால் விரலால் உந்தித் தள்ள, அந்த எலும்புக் கூடு, வெகுதூரம் பறந்து போய் மறைகிறது.]

**அனுமன் :** ஆஹா! இருவரின் ஆற்றலையும் கண்டோம். வாலி, வேரற்ற மரம் போல் வீழ்வதையும் காண்போம். சுக்ரீவர் அரசு பெறுவது கண்டு ஆரவாரிப்போம்.

**சுக்ரீவன் :** *(ராமரை நோக்கி) பெருமானே! பிராட்டியை மீட்கும் பொறுப்பு, இனி என்னுடையது; என் படையின் உடையது; தங்கள் அனுமனுடையது.*

*நாட்டைத் தரும் உங்களுக்கு, நாங்கள் தரும் பரிசு அது.*

*அறத்தை நாட்டும் தங்களுக்கு, நாங்கள் அளிக்கும் காணிக்கை.*

*கவலை வேண்டாம். தேவியை, எந்தத் தேசத்தில் இருந்தாலும், கொண்டு வந்து விடுவோம்.*

*அந்த ராவணன் வாழ்வைக் கல்லெறிந்தே கலைத்து விடுவோம்.*

**அனுமன் :** *நன்று சொன்னீர்கள். அன்று, தாங்கள் நகைகளைக் கண்டெடுத்த செய்தியை, ஸ்ரீராமருக்குச் சொல்லுங்கள்.*

**சுக்ரீவன் :** *ஸ்ரீ ராமா! அன்றொரு நாள், பர்வதத்தில் இருந்தபோது, வானிலே வல் அரக்கன் ராவணன், தன் விமானத்தில், ஒரு பெண்ணைக் கவர்ந்து செல்லக் கண்டேன். அந்தப்பெண் அழுது புலம்பியபடி, என்னைப் பார்த்தார்கள். நான் எதுவும் செய்ய இயலாது, நெடுமரமாக அப்போது நின்றுவிட்டேன். தன் அணிகலன்களைக் கழட்டி, தன் ஆடைத் துண்டில் மூட்டையாகக் கட்டி, நான் இருக்கும் பக்கமாக வீசினார்கள், அந்த ஏந்திழையாள்.*

*அதைப் பத்திரமாக வைத்திருக்கிறேன். அவை, பிராட்டியின் நகைகளா என்று பாருங்கள் பிரபு!*

*[சுக்ரீவனோடு அனைவரும் அங்கிருந்து விரைகின்றனர்.]*

## காட்சி-153

*ருஷ்ய மூக பர்வதம்*

[அணிகலன்களைப் பார்த்து, ராமர் கண்ணீர் விடுகிறார்.]

**ராமர் :** *என் சீதையின் அணிகலன்களே இவை! இவற்றை அணிந்திருந்த அவள் உருவம், என் கண்முன் தோன்றி, என்னைக் கலங்கச் செய்கின்றது.*

**சுக்ரீவன் :** இவற்றை எடுத்து வந்து காட்டி, தங்களை வருத்தமுறச் செய்து விட்டேனோ?

திருமகள் அனைய அத்தெய்வக் கற்பினாள், தங்களிடம் திரும்புவது திண்ணம்.

எங்கள் வலிமை கிடக்க, தங்களின் ஒரு கணைக்கு, இந்த உலகம் ஏழும் ஆற்றுமோ?

தேவியைக் கொண்டு வரும் திருப்பணி, இனி எங்கள் கைப்பணி.

**அனுமன் :** ஐயனே! தருமம் நீ அல்லது தனித்து வேறு உண்டோ? அந்தத் தருமம் வெல்லாது, சாய்வது உண்டோ?

**ராமர் :** லட்சுமணா! இந்த அணிகலன்களைப் பார்த்தாயா? உன் அண்ணியுடையவை என்று இனம் கண்டு கொண்டாயா?

**லட்சுமணன் :** அண்ணா! இந்தக் குண்டலங்களையோ, வங்கி களையோ, பிற ஆபரணங்களையோ, நான் பார்த்ததில்லை.

இந்தப் பாதச் சிலம்புகள்அண்ணியுடையவை!

அண்ணியை விழுந்து வணங்கும்போது, இவற்றை மாத்திரம் நான் பார்த்திருக்கிறேன்!

**ராமர் :** அண்ணியின் பாதங்களை மட்டுமே பார்த்திருந்தவன் நீ!

லட்சுமணா! உன்னைத் தம்பியாகப் பெற்ற பின்பு, உன்னனைத் தவிர்த்து, நான் மாத்திரம் அரசாள ஆசைப் பட்டிருக்கலாமா?

அதைத் தவறு என்று உணர்த்துவது போல், கைகேயித் தாயார், என்னைக் காட்டிற்குத் துரத்தி விட்டார்!

காட்டிலே, பேரிடி விழுந்ததுபோல், என் பெருமாட்டி, என்னைப் பிரிந்து விட்டாள்!

**அனுமன் :** குன்றனைய தோளினாய்! நான் கூறவேண்டுவது ஒன்று உளது.

தெய்வம் இப்படித் தேம்பலாமா? தேம்பும் உயிர் களுக்குத் தெளிவு அளிக்க வேண்டியவர் தாங்கள்!

பெருமானே! இப்பொழுது ஆற்ற வேண்டிய கர்மம், அந்த அரக்கன், தேவியைச் சிறை வைத்திருக்கும் இடத்தை அறிய வேண்டியது.

அது வானில் இருக்கிறதா?; மண்ணில் இருக்கிறதா?; நாகர் உலகில் இருக்கிறதா?- என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஒவ்வோர் இடமாக வரிசைப்படி தேடிக் கொண்டிருந்தால், ஆண்டுகள் பலவாகிவிடும். என் அன்னையின் துயர் நீண்டு விடும்.

எழுபது வெள்ளம் எம்படை, வானரப்படை, பொங்கு கடல்போல, உலகு முழுவதும், ஒரே சமயத்தில், பரவிப் பார்க்க வேண்டும்.

அரசு, சுக்ரீவருக்குக் கிடைத்தாலே, அலை கடலென வானரப்படை கிளம்ப இயலும்.

ஆதலால் பெருமானே! வாலி வதமே, தாங்கள் முதலில் நிகழ்த்த வேண்டியது! பின் தொடரும், நல் அறத்தை மீட்கும் போர்!

**ராமர் :** சொல்லின் செல்வனே! நீ பேசிய சொற்கள், நான் செல்ல வேண்டிய பாதையைச் சீராகக் காட்டி விட்டன.

உன் துணையால், என் துணையை நான் பெறுவேன். நல் அறத்திற்கும், நீயே என்றும் துணையாவாய்.

சுக்ரீவா! வாலியைப் போருக்கு அழை! நீங்கள் இருவரும் போர் செய்யும் பொழுது, நான் மறைவாய் நின்று, அம்பு செலுத்தி, அவனைக் கொல்கிறேன்!

அவன் பெற்ற வரத்தால், அவன் முன்னின்று அவனை வெல்ல முடியாது!

**சுக்ரீவன் :** அதர்மத்தை வீழ்த்த, உபாயம் எதுவானாலும் ஏற்றுக் கொள்ளல் தவறாகாது. அப்படியே செய்கிறேன். வாலியைப் போருக்கு அழைக்கின்றேன். தங்கள் வில்லம்பிற்கு விருந்தாக்குகிறேன்!

## காட்சி-154

*பாற்கடலும் கயிலை மலையும்*

**திருமால் :** சிவனாரே! நன்றி! தக்கது மொழிந்து, என்னை வழி நடத்தி விட்டீர்கள்.

**சிவன் :** திருமாலே! என் அருள் பெற்ற வாலி, அறம் தவறிப் போய்விட்டான்! என் சூலத்தால், அவனை அழிப்பது, முரணாகத் தெரியும்!

அதனால், உங்கள் சக்கரத்தின் பார்வையில், அவனை நிறுத்தி விட்டேன்!

அங்கு வில் அம்பு எடுத்து, நீங்கள் மானிடனாக உலவுவது, அதர்மத்தை வேரறுக்கத்தானே!

**திருமகள் :** அணைப்பதும் அடிப்பதும், தாய்தந்தையரான உங்கள் இருவருக்கும் உரியவைதானே!

**உமையம்மை :** ஆம் - தாய் அடித்தால், தந்தைக்கு அது வேண்டாத செயலாக ஆகிவிடுமா?

திருமாலின் சினம், சிவனாரின் மனம்! அது ஒருவர் செயலாகுமா? இருவரின் எண்ணமாகும்!

## காட்சி-155

*கிஷ்கிந்தை நகரின் எல்லை*

[வாலியும் சுக்ரீவனும் கடுமையாகக் கை கலந்து போர் புரிந்து கொண்டிருக்கின்றனர்.

மறைவிலிருந்து இதைப் பார்த்துக் கொண்டிருக்கின்றனர், ராமலட்சுமணரும், அனுமானும்.]

**ராமர் :** அண்ணன் தம்பியர் இருவரின் ரூபமும், குரலும், செயலும் ஒன்றுபோல் இருப்பதால், இவர்களில் யார் வாலி?; யார் சுக்ரீவன்?- என்று வேறுபடுத்திப் பார்க்க முடியவில்லை!

நல்லவேளை, நாம் அடையாளமாகப் போட்ட மலர்க் கொடி, அந்த மார்புடையவன் சுக்ரீவன் என்று சுட்டிக்காட்டி விடுகிறது.

[இப்பொழுது சுக்ரீவனைத் தன் கைகளால் உயரத் தூக்கித் தரையில் அறையப் போகிறான் வாலி.]

**அனுமன் :** ஐயனே! இனித் தாமதிக்க வேண்டாம். தர்மம் வீழ்ந்து மடியாமல், காத்தருளுங்கள்!

[இப்பொழுது ராமன் விடுக்கின்ற அம்பு, வாலியின் மார்பிற்பாய, வாலி, குருதி ஒழுக, மண்ணிலே வீழ்கிறான். திக்கித் திணறிப் பேசுகிறான்.]

**வாலி :** என்னை வீழ்த்தியது வில் அம்பா? திருமாலின் சக்கரமா? நீலகண்டனின் நெடுஞ்சூலமா? இந்திரனின் வஜ்ராயுதமா? எதுவென்று தெரியவில்லையே!

[மார்பில் இருந்து அம்பைப் பிடுங்கி, வாலி அதைப் பார்க்கிறான்.]

**வாலி :** 'ராம்!' என்னும் செம்மைசேர் நாமம், இதில் செதுக்கப் பட்டிருக்கிறதே!

[இப்பொழுது ராமலட்சுமணரோடு, அனுமனும் சுக்ரீவனும், அவன் அருகில் வருகின்றனர்.]

**அனுமன் :** மூன்று உலகுக்கும் உரியது, அந்த 'ராம்' என்னும் மூல மந்திரம்! இம்மைக்கும் எழுமை நோய்க்கும் மாமருந்து அது!

**வாலி :** அப்படியானால், என்னைக் கொல்லக் கணைவிட்டது, தசரத ராமனா?

(ராமனைப் பார்த்து) ஓ! ராமா! வில் அறம் துறந்து விட்டு, வீரன்போல், இங்கு வந்து நிற்கிறாயா?

வேதநூல் சொல் அறம் துறந்திலாத சூரியன் மரபு உன்னது!

அந்த நல் அறத்தைத் துறந்துவிட்டு, நாணமின்றி நிற்கின்றாய்!

இப்படி மறைந்திருந்து அம்புவிட, ஆண்மகன் தேவை யில்லை!

உன் குலம் என்ன? கல்வி என்ன? கொற்றம் என்ன? நீ உற்ற நலமென்ன? புவனம் மூன்றின் நாயகமாய், நீ இருக்கும் தன்மை என்ன? இவ்வுலகைத் தாங்கும் உன் வலிமை என்ன? எல்லாவற்றையும் மறந்து விட்டு, ஒளிந்திருந்து, என்னைக் கொல்லத் துணிந்தாயே!

உனக்கும் எனக்கும் ஏது பகை?

அண்ணன் தம்பி அமரிலே, நீ தலையிடுவது தகுமோ? ஓவியத்து எழுத ஒண்ணா உருவத்தாய்! உன் ஆவியை, ஜனகன் பெற்ற அன்னத்தை, அமிழ்தில் வந்த தேவியைப் பிரிந்த பின்பு, திகைத்து, உன் செயல்கள் தர்மத்தை விட்டுச் சிதறிப் போகின்றனவா?

அரக்கர் உனக்குத் தீங்கு செய்தால், அதற்காகக் குரங்கு இனத்து அரசனாகிய என்னைக் கொல்லும்படி, மனு நெறி கூறுகிறதா?

உனக்கு நான் என்ன பிழை செய்தேன்? இந்தத் திரேதாயுகத்தில், கலியது காலம் வந்து விட்டதா?

இந்தச் செயலை நீ செய்திருக்கும் பொழுது, லங்கை வேந்தன் முறை கெட நடந்தான் என்று அவனை நீ குறை கூற முடியுமா?

உன்னைப் பகையாக உணராத என்னை நோக்கி, ஒளிந்து நின்று அம்பெய்தது வீரமா? போர் விதியா? ஈரமான செயலா அது?

ஏ ராமா! பதில் கூறு!

ராவணனை அழிக்க, என் துணையைத் தேடியிருக்க வேண்டும். யானையை எதிர்க்கச் சிங்கத்தை விட்டுச் சிறு முயலைச் சேர்த்துக் கொண்டாயே!

சந்திரனுக்குத்தான் களங்கம் இருக்கிறது. சூரிய மரபுக்கும், ஆரிய நீ, களங்கத்தை உண்டாக்கி விட்டாய்!

ராமா! உன் அம்பு, வாலியை அழிக்கப் பாயவில்லை. அறத்தின் வேலியை அழிக்கப் பாய்ந்திருக்கிறது!

உன் தாரத்தைக் கொண்டவன் ஒருவன்! உன் வில் அம்பால் வீழ்ந்தவன் இன்னொருவன்! இதை வீரம் என்று உலகம் ஏற்குமா?

**ராமர் :** வாலி! மனம் திறந்து பேசிவிட்டாய். உன் மனம் திருந்த, நான் பேசுவதைக் கேள்.

நீ இறந்துவிட்டாய் என்று எண்ணி, படை நடத்தும் தலைவரும், முற்று உணர்ந்த முதியோரும், மற்றவர்களும், சுக்ரீவனுக்கு முடி சூட்டினார்கள். அது அவன் குற்றமா?

நீ நாட்டிற்கு வந்தபோது, உன் கையில் அரசைத் தந்தபோது, அவனைக் கொல்லத் துணிந்தாய்!

சுக்ரீவன் உனக்கு அஞ்சி ஓடி உயிர் பிழைக்க, அவன் தாரத்தைக் கவர்ந்து கொண்டாய்!

ஈரமான செயலா இது? இப்படிப் பெண்டிரைக் கைப்பற்றுவது, வீரமான செயலா? மங்கையரின் கற்பை மாசுபடுத்த முனைவோர், தர்மம் தவறியவர்கள்; தயவு தாட்சண்யமின்றித் தண்டிக்கப்பட வேண்டியவர்கள்!

சுக்ரீவன் என் ஆருயிர் நண்பன். அவன் இன்னலைப் போக்குவது, எனக்கு ஏற்புடைய செயலே!

தீது நிகழும்போது, அதைத் தீய்த்து வைப்பது, வில்லேந்தும் வீரர்களின் கடமை. அவர், நம்மோடு தொடர்பில்லாத அயலார் என்று, நாங்கள் அகன்று போகமுடியாது!

உன்மேல் எனக்குப் பகையில்லை-உண்மைதான்! ஆனால், தர்மத்தின் பகைவன் நீ! ஆதலால், உன்னை அழிப்பதை அறமெனக் கொண்டேன்!

மறைவாக இருந்து போர் செய்ததைச் சினந்து பேசினாய். விலங்குகளை வேடர்கள் மறைந்திருந்துதான் கொல்வார்கள்! அதைத் தவறு என்று கூற முடியுமா? தேவர்களின் சந்ததியாகப் பிறந்த நீ, மறை நெறி மறந்து, மகளைப்போன்ற தம்பியின் மனைவியைத் தனதாக்கிக் கொண்டாய்! உணர்வு வழித்திரியும் விலங்காகி விட்டாய்!

உன்னை வேட்டையாடப் போர் நெறிகள் தேவையில்லை!

வாலி! ஒருவன் தண்டிக்கப்படும்போது, அவன்செய்த பாவங்கள் போக்கப்படுகின்றன!

*இது தர்மத்தின் தாத்பர்யம்!*

*நீ நல்ல கதிபெற, நான் உதவியிருக்கிறேன் என்று கொண்டு விட்டால், உன் மனம் அமைதி பெறும்! இறுதி நேரம், நீ தர்மத்தை உணரும் நேரமாக மாறும்!*

**வாலி :** *(மனம் திருந்தியவனாக, முகமலர்ச்சியோடு) ராமா! உன்னை வணங்குகிறேன். நாய் போன்ற எனக்குத் தாய் போல நல்லுரை கூறினாய்!*

*மூவர் நீ! முதல்வன் நீ! முற்றும் நீ! மற்றும் நீ! பாவம் நீ! தருமம் நீ! பகையும் நீ! உறவும் நீ!*

*எனக்குப் பரமபத வாழ்வு கிடைக்க, உன் சரம் அல்லால், வேறு துணை உளதோ?*

*வெற்று அரசைத் தம்பிக்கு அளித்துப் பெறுவதற்கரிய வீட்டரசை நான் பெற வழி செய்தாய்!*

*என் இறுதி நேரத்தில், நான் வேண்டுகின்றேன் உன்னை, விரும்பி அளிப்பாய் அவற்றை.*

*என் தம்பி, மதுவால் மாறுபட்டு நடந்தால், அவன்மேல் சீறி அழிக்காமல் இருக்க வேண்டும்!*

*என் மகன் அங்கதனை, உன் அடைக்கலப் பொருளாக ஏற்று அருள வேண்டும்!*

*மற்றொன்றும் சொல்கிறேன். அந்த மாய அரக்கனை, என் வாலில் கட்டி, கொற்றவ! நின் முன் கொண்டு வந்து நிறுத்தும் வழியில்லை எனக்கு!*

*ஆனால், அதைச் செய்வதற்கு உற்றவன் ஒருவன் இருக்கின்றான்! அவன் இந்த அனுமனே!*

*ராமா! அனுமனை, உன் செங்கை வில்லாக எண்ணிக்கொள்!*

*என் தம்பியை, உன் தம்பியாக நினைத்துக்கொள்! என் மகனை, உன் அடைக்கலப் பொருளாக எண்ணி, அபயம் அளி!*

*மேல் ஒரு பொருளும் இல்லா, மெய்ப்பொருளே! வில் தாங்கி, கால் தரை தோய, என் கண் காண நிற்கும் தேவே!*

மயக்கம் தரும் பிறவி நோய்க்கு நல்மருந்தே! வணங்குகிறேன்! வருகிறேன்!

[வாலி தலை கீழே சாய, சுக்ரீவன் வாய்விட்டு அலறுகிறான். அண்ணனின் மேனியின் மேல் புரண்டு அழுகிறான்.]

## காட்சி-156

ருஷ்ய மூக பர்வதம்

[ராமலட்சுமணர் முன், அனுமன், சுக்ரீவன், அங்கதன் ஆகியோர் நின்று கொண்டிருக்கின்றனர்.]

**அனுமன் :** ஐயனே! தந்தைக்குச் செய்ய வேண்டிய ஈமக் கடனைத் தங்கள் கட்டளைப்படி, வாலி மைந்தன், இந்த அங்கதன் செய்து முடித்து விட்டான்.

**ராமர் :** அந்த ஆத்மா சாந்தியடையட்டும். இந்த அழகிய கிஷ்கிந்தை நாட்டைச் சுக்ரீவன் ஆளட்டும்.

லட்சுமணா! இந்தக் கதிரோன் மைந்தனை, உன் கைகளால், வேத விதிப்படி, முடி சூட்டி, அம்மண்ணுக்கு மன்னனாக்கு.

**லட்சுமணன் :** தங்கள் சித்தப்படி நடக்கிறேன் அண்ணா! அனுமான்! அதற்கு ஆவன செய்வது, உன் பொறுப்பு!

**அனுமன் :** சுமை இல்லையே என்று இதுவரை, என் தோள்கள் வாடிக் கொண்டிருந்தன.!

ஆட்டுவிப்பன் என் ஐயன் ராமனாக இருக்கும்பொழுது, அதற்கேற்ப ஆடுவதற்கு, நான் கொடுத்து வைத்திருக்க வேண்டும்!

**ராமர் :** சுக்ரீவா! வாலி மைந்தன் அங்கதனுக்கு, இளவரசுப்பட்டம் சூட்டு! சிதறிய ரத்தத்தின் வழிவந்தவன் சிரசிலே, எதிர்காலத்திலே, மணிமுடி ஜொலிக்கட்டும்!

அங்கதா! சுக்ரீவனை, உன் சிற்றப்பனாக எண்ணாதே! உன்னைப் பெற்ற அப்பனாக, எண்ணி இருந்திடு!

சுக்ரீவா! இந்த நாட்டு மக்களை மன்னனாக அல்ல, தாயாகப் பாதுகாத்து இரு!

**சுக்ரீவன் :** ஐயனே! நான் முடி சூடும்பொழுது, தாங்கள் முன்னின்று வாழ்த்த வேண்டாமா?

சீதா தேவியைத் தேடும் காலம் வரும் வரை, எங்களோடு தாங்கள், கிஷ்கிந்தையில் இனிது இருக்க வேண்டாமா?

**ராமர் :** பதினான்கு ஆண்டு வனவாசம் ஏற்று வந்திருக்கிறேன். இடையிலே, மன்னர்களின் அரண்மனைகளில் ஒதுங்கு வதற்கு, நான் ஒருப்படேன்!

என் சீதை சிறையிருக்கையில், எனக்கு அரண்மனைச் சுகம் ஒரு கேடா?

சுக்ரீவா! மழைக்காலம் முடிந்தவுடன், உன் படைகளை அனுப்பிச் சீதையைத் தேடும் முயற்சியை ஆரம்பிக்கலாம்.

**சுக்ரீவன் :** அப்படியே செய்யலாம் பெருமானே!

**ராமர் :** நானும் லட்சுமணனும் இம்மலையிலுள்ள குகையில் காலத்தைக் கழித்து விடுவோம்.

இங்கு விளையும் கனிகள், நாங்கள் உயிர் வாழ உதவும்.

என் சீதை பசித்திருப்பாளோ? தவித்திருப்பாளோ? பாவி நான் அறியேன்!

**அனுமன் :** ஐயனே! இப்பொழுதும் தங்களைப் பிரியும் பாவியாக, என்னை ஆக்கிவிடாதீர்கள்!

முடி சூட்டு விழா முடிந்த பிறகு, தங்கள் பாதம்பற்றி இருக்க, எனக்கு அனுமதி கொடுங்கள்!

காண ஏங்கிய தெய்வத்தைத் கண்ட பிற்பாடு, தங்களுக்கு ஊழியம் செய்யாமல், அரண்மனையிலே எனக்கு என்ன வேலை வேண்டிக் கிடக்கிறது!

**ராமர் :** அனுமான்! அமைச்சன் நீ! அந்தப்பொறுப்பை உதறி எறியாதே! அந்தப் பழி, என் மேல் விழ விடாதே!

தர்மத்தின் வடிவமாக உன்னைக் காண்கிறேன்! நீ ஆற்ற வேண்டிய கர்மத்தை மறந்து விடாதே!

கார்காலம் முடிந்து சந்திப்போம். காரிகையை மீட்பது பற்றிச் சிந்திப்போம். செயற்படுவோம்.

## காட்சி-157

*ருஷ்ய மூக பர்வதம்*

[அனுமன் தனித்து இருந்து, மூச்சை உள்ளுக்கு இழுத்தும், வெளியே விட்டும், விஸ்வரூபம் எடுக்க முயன்று கொண்டிருக்கிறான். முடியவில்லை. இப்பொழுது அங்கு சுவர்ச்சலா தேவி வருகிறாள்.]

**சுவர்ச்சலாதேவி :** *விஸ்வரூபம் எடுக்க முயன்று கொண்டிருக்கிறீர்கள்! முடியவில்லை. அப்படித்தானே?*

**அனுமன் :** *(எரிச்சலோடு) ஆமாம். சுவர்ச்சலாதேவி! நீ எதற்காக இங்கு வந்தாய்?*

**சுவர்ச்சலாதேவி :** *நீங்கள் இங்கு இருப்பதால் வந்தேன். நதி, கடலை நாடாமல், வேறு எங்கு போகும்?*

**அனுமன் :** *வீடு தீப்பிடித்து எரிகையில், நீ வீணை வாசிக்கிறாய்! என் ராமனுக்குக் கைங்கர்யம் செய்கின்ற பேறு கிடைத்திருக்கும் இப்பொழுது, இழந்த வல்லமையைத் திரும்பப் பெற வில்லையே என்று பரிதவித்துக் கொண்டிருக்கிறேன் நான்!*

*அங்கஹீனன் போல், அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிறேன்!*

*இந்த லட்சணத்தோடு, கிஷ்கிந்தைக்கும் புறப்பட்டு விட்டேன்!*

**சுவர்ச்சலாதேவி :** *எல்லாம் வேளை வந்தால், கூடி வரும். இப்பொழுது அன்பாக என்னிடம் ஒரு வார்த்தை பேசக்கூடாதா?*

**அனுமான் :** *வம்பு பண்ண ஆரம்பித்து விட்டாய்! பிரம்மச்சாரி கண்ணுக்கு, மாதர் எல்லாம் மாதாக்கள்!*

*அதை நினைவிற் கொள்.*

**சுவர்ச்சலாதேவி :** *நான் உங்கள் பிள்ளைக்கு மாதா ஆவேன்! இது உறுதி.*

**அனுமன் :** *விதி உன்னை வைத்து, எனக்கு வேடிக்கை காட்டுகிறது.*

**சுவர்ச்சலாதேவி :** *அந்த விதி உங்களை ஒரு அப்பனாகவும் காட்டும்; இந்த உலகத்தை ஆச்சரியப்பட வைக்கும்!*

*[இவ்வாறு கூறிவிட்டுச் சுவர்ச்சலாதேவி அங்கிருந்து சென்று விடுகிறாள்.]*

## காட்சி-158

*கிஷ்கிந்தை அரண்மனை*

[சுக்ரீவன் மதுவின் போதையில், மங்கையரை அணைத்துக் காதல் மொழி பேசிக்கொண்டிருக்கிறான்.

பதறியபடி அனுமன் இப்பொழுது அங்கு வந்து நிற்கிறான்.]

**அனுமன் :** *அரசே! கார்காலம் முடிந்து, சீதாதேவியைத் தேட, நாம் படையோடு வரவில்லை என்று சினந்து, லட்சுமணர் இப்பொழுது கிஷ்கிந்தை நகர்க்கு வந்திருக்கிறார்!*

*அவர் கோபம், நம் வானர குலத்தையே நிர்மூலமாக்கி விடும்!*

*[அனுமனின் இந்தப் பேச்சைக் காது கொடுத்துக் கேட்கும் நிலையில் சுக்ரீவன் இல்லை.]*

**சுக்ரீவன் :** *(போதையோடு, ஒரு மங்கையை அணைத்தபடி) கோபம்....! பெண்ணே! உன் கோபத்திற்குத்தான் நான் அஞ்சுவேன்! ஓராயிரம் இன்பங்களை, உன் அங்கத்தில் ஒளித்து வைத்திருக்கிறாயே!*

*பிரம்மன், உன்னைப் படைக்கும்போது, நல்ல போதையில் இருந்திருப்பான்!*

*அதனால் அழகையெல்லாம் உன் ஒருத்திக்கே, அப்பி வைத்து விட்டான்!*

**அனுமன் :** *(எரிச்சலோடு) அரசே! தாயைத் தந்தையைக் குருவை, அந்தணரை, ஆவைப் பாலரைப் பாவைமாரை, வதை செய்வோர்க்கு உய்வு உண்டு!*

*ஆனால் ஒருவர் செய்த உதவியை மறந்து இருப் போர்க்கு உய்வே கிடையாது!*

தங்கட்கு மகுடம் தந்த ஸ்ரீராமரை மறக்கலாமா? அவர்க்குத் தந்த வாக்குறுதியை மீறலாமா?

**சுக்ரீவன் :** (போதையோடு, இன்னொரு மங்கையை அணைத்த படி) வாக்குறுதி! உன்னோடு ஒரு ராப்பொழுது முழுதும் இருப்பேன் என்று உனக்கு வாக்குறுதி கொடுத்திருக்கிறேன்! அதை மீறமாட்டேன்! சிம்மாசனத்தில் இருப்பதை விடச் சிங்காரிகளோடு இருப்பதுதான், அரசர்களுக்குச் சுகமாக இருக்கின்றது!

**அனுமன் :** மழைக்காலம் முடிந்து விட்டது என்று அமைச்சன் என்ற முறையில், பல தடவை, உங்களுக்கு நினை வூட்டினேன்!

எப்பொழுதும் போதையில் இருந்ததால், நீங்கள் அதைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை.

**சுக்ரீவன் :** (போதையோடு, இன்னொரு மங்கையை அணைத்த படி) காதில் வாங்கிக் கொள்ள வில்லை.....! சுந்தரி! உன்னைக் கிள்ளினால், நீ அந்த இன்ப வலியால் கூச்சலிடு கிறாயே! அந்த இசைதான், என் காதுகளில் இப்போது கேட்கிறது!

**அனுமன் :** உங்களுக்கும் ஸ்ரீராமருக்கும் நட்பு உண்டாகக் காரணமானவன் நான்!

என்னைத் தலைகுனிய வைத்து விட்டீர்களே!

**சுக்ரீவன் :** (போதையோடு, வேறொரு மங்கையை அணைத்தபடி) தலைகுனிய....!

நங்கையே! நாணத்தால் தலை குனிகிறாயா? போகக் களத்தில் புறம் தள்ள வேண்டியது நாணத்தை!

ஆணையும் பெண்ணையும், பிரம்மன் அர்த்தம் இல்லாமலா படைத்திருப்பான்!

[அனுமன் கோபத்தோடு, அந்த மங்கையரை, அங்கிருந்து போகுமாறு கை காட்டுகிறான்.

அவர்களும் அங்கிருந்து சென்று விடுகின்றனர். பின்னர் நெருங்கி வரும் அனுமனைச் சுக்ரீவன், போதை மயக்கத்தில், மங்கை என்று எண்ணிக் கட்டி அணைத்துக் கொள்கிறான்.]

**சுக்ரீவன் :** உன் இதழிலே ஊறும் நீருக்குப் பாற்கடல் அமுதம் ஈடாகாது! அதைப் பருகினால், என் தாகம் தணியும்! தாபம் தணியும்! மோகம் தணியும்! எனக்கு மோட்சம் கிட்டும்!

[இவ்வாறு கூறி, அனுமனின் வாய் புதைத்து முத்தமிடுகிறான். பின்னர், தீயைத் தீண்டியவனைப் போலச் சுக்ரீவன் அலறுகிறான். தலையை உலுக்கிக் கொள்கிறான். தண்ணீரை எடுத்துத் தலையில் கொட்டிக் கொள்கிறான்.]

**சுக்ரீவன் :** (போதை தெளிந்தவனாக) நீயா?

**அனுமன் :** புயலென லட்சுமணர் கிஷ்கிந்தை நகருக்குள் புகுந்திருக்கிறார். மழைக்காலம் முடிந்தும், படை ஏன் திரளவில்லை என்று கேட்கிறார். ராமபாணம், வாலியை மாத்திரமல்ல, சுக்ரீவனையும் விட்டு வைக்காது என்று எச்சரிக்கிறார்!

**சுக்ரீவன் :** ஐயோ! ஐயோ! அப்படிப்பட்ட வஞ்சக எண்ணம் எனக்கில்லை!

மதுவின் மயக்கத்தில், மங்கையரின் நினைப்பில், இருந்து விட்டேன்.

மழைக்காலம் முடிந்து விட்டதா?

அனுமான்! இமயத்திலே, விந்தியத்திலே, எல்லை இல்லா கடற்கரை ஓரங்களிலே, பகலை இரவாக்கும் காடுகளிலே, பகலவனின் கதிர்படாத குகைகளிலே, வாழ்கின்ற வானரர்களை ஒன்று திரட்டு! பத்து நாட்களுக்குள் இப்பணியை முடித்திடு! வானரப்படை இங்கு திரளட்டும்! ஸ்ரீராமர் படையாக மாறிப்புறப்படட்டும்!

லட்சுமணர்க்கு இதைச் சொல்லிச் சாந்தப்படுத்துவோம். ராமபிரானிடம் நேரிற் சென்று தெரிவிப்போம்.

**அனுமான் :** (உள்ளக்கிளர்ச்சியோடு) ஜெய்ராம்!

**சுக்ரீவன் :** (உரத்த குரலில்) ஜெய்ராம்!

## காட்சி-159

*ருஷ்ய மூக பர்வதம்*

[ராமலட்சுணர் முன்னிலையில், வானரப்படை, சுக்ரீவன், அனுமன் வழி நடத்த, அணி வகுத்து நிற்கிறது.]

**சுக்ரீவன் :** தீ வினைக்குக் கூற்றமே! எங்களுக்குக் கொற்றம் அளித்த கொடை வள்ளலே!

வானரப்படை, தங்கள் ஏவலுக்காகத் திரண்டு வந்து நிற்கிறது!

இவர்கள் மூழ்கினால், கடல் ஏழும் நீர் வற்றிப் புழுதி யாகி விடும்!

வடமேருவை வேரோடும் ஒடிக்கும் ஆற்றல் கொண்ட வர்கள் இவர்கள்!

நெடுவான் முகட்டையும் இடிக்கும் வன்மை கொண்ட வர்கள்!

பெருங்காற்றையும் கூற்றையும் பிடிக்கும் திறம் கொண்டவர்கள்!

கடல் ஏழையும் உள்ளங்கையால் குடிக்கும் வலிமை கொண்டவர்கள்!

நினைக்கும் வடிவத்தை எடுத்துக் கொள்ளும், வித்தை தெரிந்தவர்கள் இவர்கள்!

**ராமர் :** இப்படையால், பாவம் தோற்கும்! தர்மம் வெல்லும்! சுக்ரீவா! முதலில் சீதாதேவி இருக்குமிடம் தெரிந்துவர, நாற்றிசைக்கும் வீரர்களை அனுப்பு.

இடம் தெரிந்த பின்பு, உன் பெரும்படை அங்கு பாயட்டும்!

**சுக்ரீவன் :** நல்லது சொன்னீர்கள் நாயகரே! விரோதிகளை அழிப்பதை விளையாட்டாகச் செய்யும் வினதனே! நீ, சில வீரர்களோடு, கிழக்குத்திசை சென்று, தேவியைத் தேடு. ஒரு மாத காலத்திற்குள் திரும்பி வந்து சேரு.

தாரையின் தந்தையான மாமா சுஷேணரே! கருடனைப் போன்ற காங்கள், மேற்குக் திசையில் செல்லுங்கள். நல்ல

வீரர்களை, உங்களோடு சேர்த்துக் கொள்ளுங்கள். சூரம், பீமம் போன்ற தேசங்களிலும், நம் பெண்தெய்வம் சிறை இருக்கிறதா என்று பாருங்கள்.

சமர் என்றால், தூக்கத்திலும் தோள் தட்டும் சதவலியே! வடதிசை உன் பொறுப்பு. நிமிர்ந்த இமயத்தையும் கவிழ்த்துப் பார்த்து விடு. மிலேச்சம், பிரஸ்தலம், புளிந்தம், காம்போஜம், யவம் முதலிய இடங்களில், நம் அன்னையார் அடைபட்டு இருக்கிறார்களா என்று கண்டுவா.

கொடியவன் ராவணன் அரசாள்வது, தென்திசை லங்கையை. தேவியோடு, அவன் விமானம் பறந்து சென்றதும், தென்திசை நோக்கி. எனவே, தென் திசையில், தேவியார் சிறைப்பட்டிருப்பதற்கு, வாய்ப்புகள் அதிகம்.

அனுமனே! நீ தென்திசைக்குச் சென்று பார். சூரியனைக் கண்டும் அஞ்சாத சுந்தரனே! அங்கு செல்ல, உன்னையே தேர்வு செய்திருக்கிறேன். நீ வாயு புத்திரன். வேகமாகச் செல்லும் சித்திவரப்பெற்றவன். நீ தெற்குத் திசையிலுள்ள நானிலத்தில் மட்டுமல்ல, நாகர் நாட்டிலும், நம் தெய்வ மங்கையைச் சென்று தேடு.

போக பூமியாம் சொர்க்கத்திலும் புகுந்து தேடும் வல்லமை கொண்டவனே! கள்ள அரக்கனின் லங்கை நகரில், காற்றுப் புகாத இடத்திலும், நீ கவனமாகத் தேடிப்பார்!

இளவரசன் அங்கதனும், கரடிகள் வேந்தன் பெரியவர் ஜாம்பவானும், இன்னும் சில வீரர்களும், உன்னோடு வரட்டும். வள்ளலின் தேவியை, வஞ்சித்து வைத்திருக்கும் இடம், விரைவில் நமக்குத் தெரியட்டும். அனுமான்! தென் திசையைப் பற்றி, இன்னும் சில செய்திகளைச் சித்திரமாகத் தருகிறேன்.

தென் திசையிலே, திருமால் எழுந்ததுபோல், எழில் தூண்டும் ஜோதிக் கொடு முடியோடு, தோன்றும் விந்திய மலையில், நன்றாகத் தேடிப்பார்.

தேவரும் நீராடுகின்ற நர்மதை ஆற்றைக் கடந்து, ஏமகூடம் என்னும் மலையில் தேடிப்பார்.

குளிர் சந்தன மரங்கள் கொண்ட விதர்ப்ப நாட்டிலும், தவமுனிவர்கள் வாழும் தண்டகாரணியத்திலும் சென்று பார்த்துவிடு.

தமிழ் அகத்தியன் உறைந்த முண்டகத்துறையச் சென்று சேவித்துப்போ.

அந்தரத்தில் உள்ள இந்துவைத் தீண்டுகின்ற பாண்டு மலையையும் பார்த்துபோ.

புண்ணியம் அளிக்க உதவும் புனிதமான தீர்த்தமாம், கோதாவரி நதிக் கரையிலும், உன் பார்வை படரட்டும்.

அதைக் கடந்து, சுவணநதி தீரத்தையும் கவனமாகப் பார்த்து விடு.

மாதர் கவண் கற்களை எறிந்து விளையாடும் சந்திரகாந்த மலையிலும், கொங்கண நாட்டிலும், குவிந்த நாட்டிலும், திரிந்து தேடிப்பார்த்து விடு.

தன்னைத் தொழுவோர்க்கு எல்லாம், வரம் அதிகம் தரும் அருந்ததி மலையை அலசிப் பார்த்து விடு.

அதைக் கடந்து சென்று, மரகத மலையையும் உன் கவனத்திற் கொள்.

வடசொற்கும், தென்சொற்கும் வரம்பு ஆகி இருக்கின்ற நான் மறையும், மற்றை நூலும்

சொல்லுகின்ற பொருட்கெல்லாம் எல்லை ஆன, எழில் ஓங்கிய திருவேங்கட மலையைச் சென்று சேர்.

அங்கு மாதவத்தோர் உறைவிடத்தில், காரியம் கை கூட வேண்டுமெனக் கை தொழுது நில்.

பின்னர் தெய்வத் திருக் காவிரி நதியின் இருகரையும் தேடிப்பார். கலை செழித்திருக்கும் அந்த மண்ணில், மயங்கித் தங்கி விடாதே. மார்க்கத்தைத் தொடரு.

முத்தும் முத்தமிழும் மலிந்து கிடக்கும் பாண்டிய நாட்டில், உன் பாதங்கள் தேயத் தேடிப்பார்.

பின்னர் தென்திசையிலுள்ள புனிதப் பொதிகை மலையை வலமாகக் கடந்து போ.

தக்கோர் வாழும் தாமிர வருணி ஆறு பாயும் இடமெல்லாம், நீ பார்க்க வேண்டிய இடமாகும்.

அதற்குத் தெற்கே மகேந்திர மலையும், தென் கடலும், தென் கடலுள் லங்கையும், உன் தேடுதலுக்கு உரிய இடங்கள்; உன் திறமைக்குச் சான்றளிக்கும் இலக்குகள்.

**அனுமன் :** என் ராமபிரான் ஆசி இருக்கும் பொழுது, யோசிக்க என்ன இருக்கிறது? எனக்கிட்ட பணியினைச் செவ்வனே செய்து முடிப்பேன்.

## காட்சி-160

*ருஷ்ய மூக பர்வதம்*

[ராமர், அனுமனை அழைத்துத் தனித்திருந்து பேசுகிறார்.]

**ராமர் :** அனுமான்! சுக்ரீவன் நம்புவது போல், நானும் உன் மீது நல்ல நம்பிக்கை வைத்திருக்கிறேன்.

**அனுமன் :** (வேதனையோடு) ஆனால், என் ஆற்றலெல்லாம் கனவாகப் போய்விட்டதே பெருமானே!

**ராமர் :** அவை நனவாகும் காலம் வந்து விட்டது என்று கொள். நீ என் தூதன் என்று சீதை நம்ப, சில செய்திகளைச் சொல் கிறேன். அவற்றை நீ அவளுக்கு உரைத்தால், அவள் உன்னை அயலான் என்று மருள மாட்டாள். மகிழ்ச்சியோடு, உன்னிடம் சில பல சொல்வாள்.

**அனுமன் :** சொல்லுங்கள் பெருமானே!

**ராமர் :** நான், முன்னை நாள், விஸ்வாமித்திர முனியோடு, மிதிலை சென்றபோது, அரண்மனைக் கன்னிமாடத்தில் நின்ற அவளை, நான் கண்டேன். அவளும் என்னைக் கண்டாள்.

சிவதனுசை முறித்தவர், அந்த முனிவரோடு வந்தவராக இல்லாவிட்டால், தன் உயிரை விடுவேன் என்று பணிப் பெண்களிடம், அவள் பகர்ந்த செய்தியைச் சொல்லு.

நான் காடேகும்பொழுது உடன் வந்த அந்தப் பெண்மான், அரண்மனை மதில் வாயிலைத் தாண்டிய வுடனேயே, 'காடு வந்து விட்டதா?' என்று வெகுளியாகக் கேட்டதை, அவள் காதில் விழச் சொல்லு.

என்னுடைய இந்த மோதிரத்தையும் அடையாளமாக அவளிடம் காட்டு.

[தன் கைவிரல் மோதிரத்தைக் கழட்டி, அனுமனிடம் கொடுக்கிறார் ராமர்.]

## காட்சி-161

*பாலை நிலப்பகுதி*

[சுட்டெரிக்கும் பாலை நிலத்தில், அனுமனும் சில வானர வீரர்களும், அதன் வெம்மை பொறுக்க முடியாமல், வியர்வை பெருக்கெடுக்கத் தள்ளாடி நடந்து செல்கின்றனர்.]

**அனுமன் :** இளவரசர் அங்கதனும், பெரியவர் ஜாம்பவானும், சில வீரர்களோடு, தெற்குக் கடற்கரையில் வந்து சேருவதாகக் கூறிவிட்டு, வேறு வழி சென்றுவிட்டார்கள்.

நாம் இப்பொழுது இந்த பாலை நிலத்தில் சிக்கிக் கொண்டோம்.

**ஒரு வானர வீரன் :** வெயிலின் கொடுமையால், பாதங்கள் புண்ணாகி விட்டன! ஒதுங்க ஒரு நிழல் இல்லையே!

**அனுமன் :** மனம் தளராதீர்கள். 'ராம' மந்திரத்தைக் கூறுங்கள். அது நமக்கு, நிழலையும் நிம்மதியையும் தரும்.

**அனுமன் உட்பட அனைவரும் :** ராம்! ராம்! ராம்! ராம்!

**இன்னொரு வீரன் :** பேசக்கூட நாவுக்குச் சக்தி இல்லை. இப்பொழுது நாவுக்கு நீரில்லா விட்டால், நாம் இங்கே பிணமாக வீழ்வது நிச்சயம்!

**அனுமன் :** ராம காரியமாக வந்தவர்கள், அதை நிறைவேற்றாமல், பிணமாக விழலாமா?

*அப்படி விழுந்தால், மண்கூட, அந்தப் பிணத்தை ஏற்றுக் கொள்ளாது!*

*ராமநாமம், உங்கள் நாவில் இருக்கும்பொழுது, நாவிற்கு ஏது வறட்சி?*

**அனுமன் உட்பட அனைவரும் :** *ராம்! ராம்! ராம்! ராம்!*

**வேறொரு வீரன் :** ஒரு புல் பூண்டுகூட இங்கில்லை. ஒரு பறவையோ, விலங்கோ, கண்ணிற்படவில்லை.

*நாம்தான், எலும்பற்ற புழு, நரகத்தீயில் அகப்பட்டதைப் போல, அகப்பட்டுக்கொண்டோம். இதிலிருந்து மீள்வோமா?*

**அனுமன் :** *ராம நாமம், பாலையைச் சோலையாக்கும்! எரி நெருப்பைக் குளிர் அருவியாக்கும்! நம்பிச் செல்வோம். நம் முயற்சி வெம்பிப் போகாது!*

**அனுமன் உட்பட அனைவரும் :** *ராம்! ராம்! ராம்! ராம்!*

**மற்றொரு வானர வீரன் :** *அனுமனே! ராம நாமத்தை, உங்கள் வற்புறுத்தலுக்காகச் சொல்கிறோம். வாஞ்சையோடு சொல்ல வில்லை.*

*கல்லும் கருகிச் சாம்பலாகும் இந்தப் பாலையில், நாம் உயிர் பிழைக்க வழி இருக்கிறதா? ராமநாமம் அதற்கு உபாயம் என்று நாங்கள் நினைக்கவில்லை!*

**அனுமன் :** *தவறாகப் பேசாதீர்கள்! தாரக மந்திரத்தைச் சொல் வோர்க்குத் தாழ்ச்சியில்லை! நம்பிக்கையோடு, ராம நாமத்தை, இப்பொழுது நாம் எல்லாரும் சொல்லுவோம்!*

**அனுமன் :** *ராம்! ராம்! ராம்! ராம்!*

*[அனுமன் மாத்திரமே, ராம நாமத்தைச் சொல்ல, மற்றவர்கள் மௌனமாக இருக்கின்றனர்.]*

**அனுமன் :** *ராம நாமத்தைச் சொல்லாத நாக்கை, தவளையின் நாக்கு என்றுதான் சொல்ல வேண்டும்!*

*சோதனையிலே வேதனை வரும்! அதிலிருந்து மீண்டு விட்டால், சாதனை பிறக்கும்!*

*ராமநாமத்தின் மகிமையை, இப்பொழுது கண்ணிருப் போர் காணுங்கள்!*

முகத்தில் புண்ணிருப்போர், அவற்றை மூடிக் கொள்ளலாம்! அதோ தெரிகிறது பாருங்கள், ஒரு குகையின் வாயில்!

ஒடுங்க நிழல் கேட்டீர்கள். நிலமோ, நாம் ஓய்வாகத் தங்கி இளைப்பாற, ஒரு குகையைக் காட்டிவிட்டது!

அந்தக் குகையிலிருந்து, ஒரு பறவை வெளியே பறந்து வருவதைப் பாருங்கள்!

அப்படியானால், அந்தக் குகைக்குள், நீர் ஆதாரம் இருக்கிறது!

திசை மாறிப் போனவர்களுக்கு, இப்பொழுது தெளிவு பிறந்திருக்கும் என்று எண்ணுகிறேன்!

ராமநாமம், நம்மை வாழவைக்கும் மஹாமந்திரம்!

(இப்பொழுது எல்லா வானரவீரர்களும், ஒரே குரலாக, உள்ளக் கிளர்ச்சியோடு, நம்பிக்கையோடு, 'ராம்! ராம்! ராம்! ராம்!' என்று கூவுகின்றனர்.)

**அனுமன் :** வாருங்கள் - அந்தக் குகைக்குள் செல்வோம். நம் குறிக்கோள் நிறைவேற, அங்கு ஏதேனும் குறிப்பு கிடைக்கலாம்.

இந்த உலகில், காரணம் இன்றி, எந்தக் காரியமும் நிகழ்வதில்லை.

[அனைவரும் குகையை நோக்கி விரைகின்றனர்.]

## காட்சி-162

குகை

[அனுமனும் பிற வானர வீரர்களும் குகைக்குள் நுழைகின்றனர். இருள் அடர்ந்த பகுதிக்குச் சென்று விடுகின்றனர்.]

**ஒரு வீரன் :** ஒரே இருட்டாக இருக்கிறதே! மேற்கொண்டும் உள்ளே செல்ல வேண்டுமா?

**அனுமன் :** *இந்தக் குகையின் அந்தம் வரை போய்ப் பார்த்து விடுவோம். இறைவன் மாத்திரமே முடிவில்லாதவன்! மற்ற எல்லாவற்றுக்கும் முடிவு உண்டு!*

**இன்னொரு வீரன் :** *ஒருவர் முகம் இன்னொருவருக்குத் தெரியவில்லை. அப்படி இருள் அப்பிக் கிடக்கிறது.*

**அனுமன் :** *ஒருவர் வாலை மற்றவர் பற்றி முன்னேறுவோம். அப்பொழுதுதான், இங்கே யாரும் விடுபட்டுப் போய்விட மாட்டார்கள். நம்பிக்கை இழக்காதீர்கள். நரகத்தைத் தாண்டிச் சொர்க்கத்தை நோக்கிப் போய்க்கொண்டிருக் கிறோம். இடையிலே தங்கிவிட்டால், நரக இடர்ப்பாடுதான் மிஞ்சும். ராமநாமம், உங்கள் நெஞ்சிலும், நாவிலும் ஒலிக்கட்டும்!*

**அனைவரும் :** *ராம்! ராம்! ராம்! ராம்!*

## காட்சி-163

*குகையில் மணிமண்டபம்*

**அனுமன் :** *அதோ, ஒளி தெரிகிறது பாருங்கள்!*

**அனைவரும் :** *ராம்! ராம்! ராம்! ராம்!*

**ஒரு வானர வீரன் :** *எங்கள் மேல் நீர்த் திவலைகளும் தெறிக்கின்றன. அதோ நீரூற்றும் தெரிகிறது.*

**அனைவரும் :** *ராம்! ராம்! ராம்! ராம்!*

*(எல்லோரும் ஒளிமயமான அந்த மண்டபத்திற்கு, உற்சாகமாக ராமநாமத்தைக் கூவியபடி வந்து சேர்கின்றனர். இங்கு ஓடுகின்ற ஓடைத் தண்ணீரை, அள்ளி அள்ளிக் குடிக் கின்றனர். தங்கள் மேனியில் வாரி வாரி இறைக்கின்றனர். அங்கு குவிந்து கிடக்கும் கனிவர்க்கங்களை, கைகொள்ளாமல் அள்ளி, வாய் கொள்ளாமல் சாப்பிடுகின்றனர்.*

*அனுமன் மாத்திரம் எதையும் உண்ணாமல், பருகாமல், புன்னகையோடு இவற்றைப் பார்த்துக் கொண்டிருக் கின்றான்.)*

**ஒரு வீரன் :** *அனுமான்! நீ மாத்திரம், ஏன் எதையும் சாப்பிடாமல் இருக்கிறாய்?*

**அனுமன் :** *இந்த மணிமண்டபத்தைப் பற்றிய மர்மம் தெரிவதற்கு முன்னர், என் மனம், உண்ணுவதிலோ, பிற எவற்றிலோ ஈடுபடாது. இது, மயன் என்னும் அசுர சிற்பி அமைத்த மண்டபமாக இருக்கலாம்! இங்கு சீதாதேவி சிறை வைக்கப்பட்டிருக்கலாம்!*

**இன்னொரு வீரன் :** *எந்த மனித உயிரும் இங்கு இருப்பதாகத் தெரியவில்லை.*

**அனுமன் :** *ஒரு வேளை, ராவணன் மணிமண்டபம் போன்ற ஒரு மாயத் தோற்றத்தை இங்கு காட்டி, நம்மையெல்லாம் இந்தக் குகையில் சிக்க வைத்திருக்கலாம்!*

**எல்லா வீரர்களும் :** *(அச்சத்தோடு) ராம்! ராம்! ராம்! ராம்!*

**அனுமன் :** *இல்லை.... இது சொர்க்க லோகமாக இருக்கலாம்!*

**ஒரு வீரன் :** *நாமெல்லாம் இறந்தால்தானே, சொர்க்கம் செல்ல முடியும்! இந்த வாலோடு சொர்க்கம் செல்வது சாத்தியமா அனுமான்?*

*[இப்பொழுது ஒரு பெண், தவக்கோலத்தில், அவர்களை நோக்கி வருவதைப் பார்க்கின்றனர்.]*

**அனுமன் :** *ஒரு மாது, நம்மை நோக்கி வருகிறார்கள்!*

**ஒரு வீரன் :** *அவர்கள் சீதா தேவியாக இருக்கலாம்!*

**இன்னொரு வீரன் :** *சந்தேகமில்லை- ராமர்தேவிதான் அவர்கள்!*

*[அனைவரும், 'ராம்! ராம்!' என்று உற்சாகத்தோடு குரல் கொடுக்கின்றனர்.]*

**பல குரல்கள் :** *கண்டு விட்டோம் தேவியை! கொண்டு சேர்ப் போம் ராமபிரானிடம்! ஜெய்ராம்! ஜெய்ராம்!*

*[உற்சாகத்தில் பல வீரர்கள் குட்டிக் கர்ணம் போடுகின்றனர்.]*

## காட்சி-164

*குகையில் உள்ள மணிமண்டபம்*

[சுயம்பிரபை என்ற அந்தக் குகையில் உள்ள பெண் நடுவில் இருக்க, அவளைச் சுற்றிலும், அனுமன் உட்பட, எல்லா வானர வீரர்களும் அமர்ந்திருக்கின்றனர்.]

**சுயம்பிரபை :** *நீங்கள் ஸ்ரீராமர் காரியமாக வந்திருப்பது கண்டு மிக்க மகிழ்ச்சி.*

*உங்கள் வரவால்தான், என் வாட்டம் தீரும். சுயம்பிரபை என்னும் பெயருடைய நான், இந்திரனால், மயன் அமைத்த இந்த மணிமண்டபத்தில் சிறை வைக்கப்பட்டிருக்கிறேன்.*

*இங்கு உண்ணக் கனிவகைகள் உள்ளன!*

*பூச, சந்தன சாந்து வகைகள் உள்ளன! சூட, மலர் வகைகள் உள்ளன! அணிய, வண்ணமிகு ஆடைகள் உள்ளன! வனப்புமிகு அணிமணிகள் உள்ளன! ஆனாலும், நான் தவக்கோலம் கொண்டிருக்கிறேன்! தேவலோகம் செல்ல, ஒவ்வொரு நாளையும், விரல்விட்டு எண்ணிக் கொண்டிருக் கிறேன்!*

*ராமபிரான் அருள்பெற்று வரும் வானரர்களை, நான் கண்டுவிட்டால், என் இடர் தீரும்; என் உலகு நான் சென்று விடலாம் - என்று இந்திரன் என்னிடம் கூறியிருந்தான்.*

*அந்த நாளும் வந்து விட்டது! அன்பர்களே! உங்களால் நான் விடுதலை பெறுகிறேன். அந்த ராமபிரான் திருவடி களை, என் கண்ணீர் மாலையிட்டுத் தொழுகிறேன். இப்பொழுது உங்களுக்கு உதவுகின்ற வாய்ப்பையும், எனக்கு நீங்கள் வழங்கிவிட்டீர்கள். இதன் மூலம், ராமபிரானுக்குக் கைங்கர்யம் செய்கின்ற களிப்பைப் பெறுகிறேன்.*

*அனுமான்! இந்தக் குகையில் புகுந்தவர்கள், உயிரோடு மீண்டதில்லை! என் ஆற்றலால், உங்களை உயிரோடு, உருக்குலையாமல், வெளியே அனுப்பி வைக்கிறேன்.*

*எல்லோரும் கண்ணை மூடிக் கொள்ளுங்கள்! சில விநாடிகளில், நீங்கள் தெற்குச் சமுத்திரக் கரையில்*

*இருப்பீர்கள்! நீங்கள் தேடுகின்ற பெண் தெய்வம், அதன் அருகில் இருப்பதாக அறிகிறேன்!*

*கண்ணை மூடிக்கொண்டு, நான் விண்ணுலகு செல்ல விடை தாருங்கள்!*

*[வானரர்கள் எல்லோரும் கண்ணை மூடிக் கொள்கின்றனர்.]*

## காட்சி-165

*தெற்குச் சமுத்திரக் கரை*

[அனுமனும் மற்ற வானர வீரர்களும், தங்கள் கண்களைத் திறக்க, தெற்குச் சமுத்திரக் கரையோரம், தாங்கள் இருப்பதை உணர்கின்றனர்.

அருகில் பிரிந்து சென்ற அங்கதன், ஜாம்பவான் முதலிய வீரர்கள் இருப்பதையும் பார்க்கின்றனர்.

'ஜெய்ராம்! ஜெய்ராம்!' என்று கூவிக் கொண்டு, ஒருவரை யொருவர் ஆலிங்கனம் செய்து கொள்கின்றனர்.]

## காட்சி-166

*தெற்குச் சமுத்திரக் கரை*

[அங்கதன் வேதனையோடு பேசுகிறான்.]

**அங்கதன் :** *நம் மகராஜா, நமக்குக் கொடுத்த, ஒரு மாத கால அளவு முடிந்து விட்டது.*

*சீதாதேவியை நம்மால் கண்டு பிடிக்க முடியவில்லை.*

*இந்தத் தென்கடலில், கண்ணுக்கெட்டிய தூரம் வரை, எந்தத் தீவும் இருப்பதாகத் தெரியவில்லை.*

*அந்த ராவணனின் லங்கை, இந்தக் கடலில் எவ்வளவு தூரத்தில் இருக்கிறதோ?*

வால் உள்ள வர்க்கமான நமக்கு, அதை அடைவதற்கான வல்லமை உண்டா?

அதற்கான உபாயமும் நமக்குத் தெரியவில்லை. அதற்கான காலமும் நம் கையில் இல்லை.

தோல்வியோடு கிஷ்கிந்தை திரும்பினால், சுக்ரீவ மகராஜா, என் தலையைத் துண்டித்து விடுவார்!

ராமபிரான் மனம் மகிழ, நான் பலியிடப்படுவேன்! குடும்பப் பகை அரசியல் ஆக்கப்பட்டு, என் ஆவி பறிக்கப்பட்டு விடும்!

நீங்கள் எல்லோரும் திரும்பிப் போங்கள்.

நான் இந்தக் கடற்கரையில், உண்ணா நோன்பிருந்து, உயிர் துறக்கிறேன்!

சிற்றப்பன் என்னைக் கொன்று விட்டார் என்ற பழி அவருக்கு வரவேண்டாம்!

என்னை நானே இங்கு மாய்த்துக் கொள்கிறேன்! தவ வழியில்! அற வழியில்!

**ஜாம்பவான் :** இளவரசன் உயிர் விட்டார் என்ற செய்தியோடு, நாங்கள் கிஷ்கிந்தை திரும்ப வேண்டுமா?

இதைவிடத் தீமை தரும் செயல், எங்களுக்குவேறு உண்டோ? உண்ணா நோன்பு இருந்து உயிர்விட, எங்களுக்கு உரிமையில்லையா? இல்லை, அந்த உபாயம் எங்களுக்குத் தெரியாததா?

**பல வீரர்கள் :** (ஒரே குரலில்) ஆம்- நாங்களும் இங்கேயே உயிர் விடுகிறோம்!

**அனுமன் :** (குறுக்கிட்டுப் பேசுகிறான்) என்ன பேசுகிறீர்கள்? எடுத்த காரியத்தில் நம்பிக்கை இழக்கலாமா? நம்மை அணைக்கின்ற கைகளைச் சந்தேகிக்கலாமா? இளவரசரைக் கொல்வதை, நம் இனிய ராமர் ஒப்புவாரா? கால அளவு முடிந்து விட்டால் என்ன - நாம் சீதாதேவியைக் கண்டு பிடித்துத் திரும்பினால், சுக்ரீவர் கோபிப்பாரா? தோல்வி யோடு கிஷ்கிந்தை திரும்புவதை, நானும் ஒப்பவில்லை. தேவி இருக்குமிடம் தெரியவில்லையென்றால், அந்தத்

*தெய்வத்தைக் கவர்ந்து சென்ற ராவணனின் தலையைக் கொய்துகொண்டு செல்வோம்!*

*ஜடாயுவிற்கு உள்ள துணிவு, நமக்கு இல்லையா? நம் முயற்சி தோற்றால், அந்த ஜடாயுவைப்போல், வீர மரணம் அடைவோம்! அது ஆண்மைக்குரிய செயல்!*

*போர்க்களம் புகுந்தவன், உண்ணா நோன்பா இருப்பான்? வீட்டில், மனையாளின் மடியில் அமர்ந்து, அதைச் செய்யலாமே!*

*நம் கண்முன்பு, அந்தக் கழுகு வேந்தன் ஜடாயு தெரியட்டும்! அக்கிரமத்தைத் தடுத்துத் தன் ஆவியைப் போக்கிக் கொண்ட, அந்தப் புனிதனின் பாதை தெரியட்டும்!*

*இருக்கின்ற உயிர், அதர்மத்தை எதிர்த்துப் பிரியட்டும்! அன்ன ஆகாரமின்றிப் பிரிய வேண்டாம்!*

*வானர வீரர்களே! இப்பொழுது கூறுங்கள். 'ஜெய்ராம்!' என்று முழங்கி, ஜடாயு வழியைப் பின்பற்றப் போகிறீர்களா?*

*முற்றும் துறந்த முனிவர்கள் போல் வேடமிட்டுக் கோழைபோல் உயிர் விடப் போகிறீர்களா?*

**அங்கதன் ஜாம்பவான் உட்பட எல்லா வீரர்களும்:**

*ஜடாயு வழியை!*

**அனுமன் :** *ஜெய்ராம்!*

**எல்லாரும் :** *ஜெய்ராம்!*

**சம்பாதி :** *ஜெய்ராம்!*

*(இறக்கை இழந்த ஒரு பெரிய கழுகான சம்பாதி அங்கு உருண்டு வந்து நிற்கிறது)*

**சம்பாதி :** *வானர வீரர்களே! என் பெயர் சம்பாதி. கழுகு அரசனான ஜடாயு, என் தம்பி.*

*என் தம்பிக்கு என்ன ஆனது? உங்கள் பேச்சு, எனக்குப் பெரும் கலக்கத்தை உண்டாக்கிவிட்டது. என் தம்பி உயிரோடு இருக்கிறான் அல்லவா? எதுவாக இருந்தாலும், என்னிடம் சொல்லிவிடுங்கள்! விதியின் விளைவு என்று அவற்றை விழுங்கிக் கொள்கிறேன்!*

## காட்சி-167

*தெற்குச் சமுத்திரக் கரை*

[வானர வீரர்கள் மத்தியில் இருந்து சம்பாதி பேசுகிறது.]

**சம்பாதி :** *(கண்ணீரோடு) என் தம்பி, ராவணனை எதிர்த்துப் போரிட்டு மடிந்தானா?*

*பிறப்பவர் இறப்பது நிச்சயம்தான்!*

*இப்படிப் புகழ் ஈட்டி இறப்பது, பெருமைப்படத்தக்க பேறாகும்!*

*என் தம்பியைப் பார்த்து, நான் கர்வம் கொள்கிறேன். ஆனால், என் தம்பியின் மரணம் எண்ணி, என்னால் கண்ணீர் விடாமல் இருக்க முடியாது.*

*முன்னர், சூரியனின் வெம்மையிலிருந்து, அவனைக் காக்கத்தான், என் சிறகை விரித்து, அவனுக்கு நிழல் அளித்தேன். அதனால் என் சிறகுகள் கருகி உதிர்ந்தன. இந்த மகேந்திர மலையில் வந்து விழுந்தேன்.*

*என் தம்பி ஜடாயு, கழுகு அரசனாகும் கோலம் கண்டு ஆனந்தப்பட்டேன். என் ரத்தம் ஆளுகிறது என்று, என் சித்தம் சிந்து பாடி மகிழ்ந்திருந்தது.*

*இப்பொழுது இரங்கற் செய்தியைக் கூறி; என்னைத் துயரில் கிறங்க வைத்து விட்டீர்கள்!*

*உலகின் நடப்பு இதுதான்! உணர்கிறேன்! வானர வீரர்களே! ராம கைங்கரியமாக வரும் வானர வீரர்களைக் கண்டவுடன், என் சிறகுகளை நான் மீண்டும் பெறுவேன் என்று, ஒரு முனிவர்பிரான் கூறினார்.*

*[இப்போது சம்பாதி மீண்டும் சிறகுகளைப் பெறுகிறது.]*

**அனுமன் :** *என்ன விந்தை! நாங்கள் செல்லுமிடமெல்லாம், என் ராமபிரான் அருளால், அற்புதங்களைக் காண்கிறோம்!*

**அனைவரும் :** *ஜெய்ராம்! ஜெய்ராம்!*

**சம்பாதி :** *நான் பறந்து இயங்குவதற்கு வரமளித்த அந்த வள்ளலுக்கு, நான் ஏதேனும் உதவ வேண்டாமா?*

உயிர்விட்ட ஜடாயுவின் உடன்பிறந்தவன் நான்! அவன் விட்ட பணியைத் தொடர்கிறேன்!

அந்த ராவணன், சீதா தேவியைச் சிறை வைத்திருக்கும் இடத்தைச் சொல்கிறேன். படையெடுத்து, அவன் கதையை முடியுங்கள்.

இந்தக் கடல் நடுவே, இங்கிருந்து, ஒரு நூறு யோசனை தூரத்தில் உள்ள லங்கை நகரிலே, பெருமாட்டிச் சிறைப்பட்டிருக்கிறார்கள்!

என் கழுகு இனத்தின் மூலம், இதைத் தெரிந்து சொல்கிறேன்.

இந்த நிலைமையிலே, நீங்கள் அனைவரும் அங்கு செல்ல இயலாது.

கடலைக் கடந்து செல்லும் ஆற்றல் பெற்ற ஒருவர், அங்கு போய்ப் பிராட்டியைப் பார்க்கட்டும்; ஆறுதல் சொல்லட்டும்.

பின்னர் போர்ப்படை திரளட்டும்! அன்பர்களே! நண்பர்களே! வானரச் சகோதரர்களே! ஊனத்திலிருந்து என்னைச் சிறைமீட்ட, உத்தமனின் படையினரே! உங்கள் முயற்சி வெல்லட்டும்! தர்மம் தழைக்கட்டும்! நான் வருகிறேன்! ஜெய்ராம்! ஜெய்ராம்!

[இவ்வாறு கூறிவிட்டுச் சம்பாதி, அங்கிருந்து பறந்து சென்று விடுகிறது.]

## காட்சி-168

*தெற்குச் சமுத்திரக் கரை*

**அங்கதன் :** சம்பாதி கூறியது உண்மையா என்று, நாம் முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். பின்னரே ராமபிரானிடம் அச்செய்தியைத் தெரிவிக்க வேண்டும்.

ஒரு நூறு யோசனை தூரம் கடலைக் கடந்து, லங்கையை அடைந்து, தேவியாரைப் பார்த்து விட்டுத் திரும்புகின்ற

ஆற்றல் உள்ளோர், நம்மிடையே இருக்கிறார்கள் என்று எண்ணுகிறேன்.

ஏன் எல்லோரும் மௌனமாக இருக்கிறீர்கள்? கடலைக் கடக்கும் உடல் வளம் இல்லையா?

கஜன்! கர்ஜிக்கும் நீ ஊமையாகி விட்டாயே!

**கஜன் :** இளவரசே! என்னால் பத்து யோசனை தூரம்தான் தாண்ட முடியும்.

**அங்கதன் :** கவாட்சகனே! மலைக்கு மலை தாவுவேன் என்று மார்தட்டிக் கொள்வாயே!

**கவாட்சகன் :** இருபது யோசனை தூரம்தான் என்னால் முடியும்.

**அங்கதன் :** கவயனே! நீ பறவைகளோடு வானத்தில் பறப்பதைப் பல தடவைகள் நான் பார்த்திருக்கிறேன்! இப்போது தயங்குவானேன்?

**கவயன் :** முப்பது யோசனை தூரத்திற்குமேல், என்னால் முடியாது இளவரசே!

**அங்கதன் :** சரபா!

**சரபன் :** நாற்பது யோசனை தூரம்தான், என்னால் இயன்றது.

**அங்கதன் :** கந்தமாதனா! நீயும் இப்பொழுது கைவிரித்து விடாதே!

**கந்தமாதனன் :** இருக்கின்ற வாலைத்தானே எடுத்துக் காட்ட முடியும்! ஐம்பது யோசனை தூரம் அளவு, நான் தாண்டிப் போவேன்.

**அங்கதன் :** மயிந்தா! நீயும் மறுத்து விடாதே.

**மயிந்தா :** ஒப்புக்கொண்டு விட்டு, கடலில் போய் விழுந்து சாவதை, நான் வீரமென்று நினைக்கவில்லை! அறுபது யோசனை தூரந்தான், என்னால் தாண்ட முடியும்.

**அங்கதன் :** துவிவிதா!

**துவிவிதா :** நூறு யோசனை தூரம், என்னால் முடியுமென்றால், முதலிலேயே குரல் கொடுத்திருப்பேன்! நீங்கள் கூப்பிடும் வரைப், பொறுத்திருக்க மாட்டேன்! எழுபது யோசனை தூரம்தான், என் வல்லமை.

**சுஷேணன் :** இளவரசே! உங்கள் அனைவரையும் திருப்திப்படுத்த, இந்த சுஷேணன் புறப்பட்டுச் செல்கிறேன். ஆனால், லங்கையில் போய்ச் சேரமாட்டேன்! இடையிலே விழுந்து

ஜலசமாதி ஆகிவிடுவேன்! என்னால் எண்பது யோசனை தூரம்தான் தாண்ட முடியும்.

**அங்கதன் :** முடிந்தவர்கள் செல்ல வேண்டும் என்று கூறுகிறேன். முடியாதவர்கள், கடலில் பிணமாக மிதக்க வேண்டும் என்று நான் சொல்லவில்லை.

**ஜாம்பவான் :** இளவரசே! வயதானவன் என என்னை நீ விட்டு வைத்திருக்கிறாய் என்று எண்ணுகிறேன்.

முன்பு திருமால், பூதலம் முற்றும் ஓர் அடி வைத்துத் திரிவிக்கிரமனாக விஸ்வரூபம் எடுத்தபோது, மாதிரம் எட்டும் பறை கொட்டி முழக்கி வந்தேன்! அப்போது மேரு மலை மோத, கால் இளைத்துத் தளர்ந்தேன்! இப்போது என்னால் தொண்ணூறு யோசனை தூரமே தாண்ட முடியும்.

**அங்கதன் :** தங்களைக் கடலைத் தாண்டச் சொல்லி, நாங்கள் வேடிக்கை பார்த்தால், கடல் நண்டுகளுக்கும் எங்களுக்கும் என்ன வேறுபாடு இருக்க முடியும்?

என்னால், நூறு யோசனை தூரம் தாண்ட முடியும். ஆனால், பிறகு, அதே நூறு யோசனை தூரம் தாண்டி, திரும்பி வரும் ஆற்றல், எனக்கு இருப்பதாகத் தெரியவில்லை.

அங்கேபோய், நான் சிறைப்பட்டுக் கொள்வதிலே, ராமருக்குச் சிறப்பொன்றுமில்லை!

**ஜாம்பவான் :** இளவரசே! அடிக்க வேண்டிய மணியை அடிக்காமல், கை போன திசையெல்லாம் அடித்துக் கொண்டிருக்கிறீர்கள்!

அனுமன், நம்மிடம் இருப்பது, ஆயிரம் யானை பலத்திற்குச் சமம்!

**அங்கதன் :** அனுமன்தான், முனிவர் சாபத்தால், முடங்கிப் போய்க் கிடக்கிறானே!

அனுமன் வல்லமையோடு இருந்தால், நாம் இப்படி ஆயாசப்படத் தேவையே இல்லையே!

**ஜாம்பவான் :** தக்க தருணத்தில், அவன் வல்லமையை, அனுமன் உணர்வான் என்பதும், சொல்லப்பட்ட முனிவர் மொழிதான்!

அந்தத் தருணம் இப்பொழுது அரும்பி விட்டது!

**அனுமன் :** (உள்ளக் கிளர்ச்சியோடு) ஜெய்ராம்! என் ராம நாமத்தை வாழ்த்தி, இந்த ராம சேவையை இப்பொழுது நான் செய்ய முற்படுகிறேன்.

இந்தத் தருணத்தைத் தவறவிட்டால், என் பிறவியே அர்த்தம் இல்லாதது ஆகிவிடும்.

தேவியை மீட்பதற்குப் பயன்படாத இந்த உடல், இருந்தென்ன? இறந்தாலென்ன?

**ஜாம்பவான் :** அனுமான்! உன்னால் முடியும்! நீ வீறுகொண்டு எழுந்தால், மறைத்திருக்கும் மேகம் விலகிவிடும்! உன்னைப் பிணைத்திருக்கும் சாபமொழி அகன்று விடும்!

**அனுமன் :** (உள்ளக்கிளர்ச்சியோடு) ஜெய்ராம்!

**ஜாம்பவான் :** அனுமான்! அந்த நான்முகன் ஆயுளே, அளவானது தான்! உன் ஆயுளோ, அளவு இல்லாதது!

சகல சாஸ்திரங்களையும் கற்ற வியாகரணப் பண்டிதன் நீ!

உணர்ந்ததைப் பிறர் உள்ளம் கொள்ளச் சொல்லுகின்ற, சொல்லின் செல்வன் நீ!

உன் காய் சினம் கண்டால், காலனும் அஞ்சும்! ஆலம் உண்டவன் போல், அமரிலே தெரியப் போகிறவன் நீ!

**அனுமன் :** (உள்ளக்கிளர்ச்சியோடு) ஜெய்ராம்!

**ஜாம்பவான் :** தீயால், நீரால், காற்றால், உனக்கு அழிவில்லை என்று வரம் பெற்றிருக்கிறாய்!

தெய்வ அஸ்திரங்களும், உனக்குத் தேய்வை ஏற்படுத்தாமல், விலகிப் போகும்!

நல்லவர்களை இனம் கண்டு கொள்ளவும், சொல்ல வேண்டியவற்றைச் சொல்லவும், வெல்ல வேண்டிய அரக்கரை வெல்லவும், கொல்ல வேண்டிய அற்பர்களைக் கொல்லவும், உனக்குத் திறம் உண்டு!

**அனுமன் :** (உள்ளக்கிளர்ச்சியோடு) ஜெய்ராம்!

**ஜாம்பவான் :** மேரு மலைக்கும் மேலாக வளரும் உடல் வல்லமை உடையவனே! மாரி மழைத் துளிக்குள் நுழைந்து செல்லும், நுண்ணிய ஆற்றல் பெற்றவனே! இந்தப் பாரைப் புரட்டும், தோள்வலி கொண்டவனே! சூரியனைத் தொட்ட சுத்த வீரனே! உன்னால் முடியாதது, வேறு யாரால் முடியும்? நீ முனைந்து எழுந்தால், அந்த ராவணன் வாழ்வு முடியும்!

**அனுமன் :** (உள்ளக்கிளர்ச்சியோடு) ஜெய்ராம்!

**ஜாம்பவான் :** நீதி வழி, உன் வழி! சத்தியம், உன் பத்தியம்! மாதரை நினையாத, மாதவம் உன்னது! மறைஎல்லாம் ஓதி உணர்ந்த ஞானம் கொண்டவன் நீ! வேண்டியபோது, வேண்டிய வடிவு எடுக்கும் வினையும், உன் துணை! அண்ணலாம் ராமருக்கு அன்பரும் நீ! புண்ணியம் ஒன்றே என்றும் நிலைக்கும் பொருள், என்று கொண்டு வாழ்கிறாய்!

நீ எழுந்தால், அதர்மம் இளைத்து விடும்!

**அனுமன் :** (உள்ளக்கிளர்ச்சியோடு) ஜெய்ராம்!

**ஜாம்பவான் :** அனுமான்! மகேந்திர மலை உச்சியில் போய் நின்று, அலை மறிக்கின்ற கடலைத் தாவு!

அலைமகள் போல் இருக்கும், நம் தேவியைக் கண்டு பேசு!

அறத்தின் மலையாம், நம் அண்ணலிடம், தேவி சிறையிருக்கும் இடத்தைக் கூறு!

**அனுமான் :** ஜெய்ராம்! நான்முகன் புத்திரரே! நற்கதி நான் அடைய, வாஞ்சையோடு வழிகாட்டிய பெரியவரே! ஜாம்பவானே!

கடலைக் கடப்பேன்! லங்கையில் குதிப்பேன்! அன்னையைக் காண்பேன்! அண்ணலிடம் செல்வேன்! சொல்வேன்!

ஜெய்ராம்! ஜெய்ராம்!

[அனுமன், வீறுகொண்டு, மகேந்திர மலையை நோக்கி நடக்கிறான்.]

**எல்லா வானர வீரர்கள் :** ஜெய்ராம்! ஜெய்ராம்! ஜெய்ராம்!

## காட்சி-169

*மகேந்திர மலை உச்சி*

[மகேந்திர மலையின் உச்சியில் நின்று, அனுமன் 'ஜெய்ராம்! ஜெய்ராம்! என்று கர்ஜித்துக் கொண்டிருக்கிறான்.]

## காட்சி-170

*கயிலை மலை*

[கயிலை மலையில், சிவபெருமான் ஆக்ரோஷமாக நடனமாடுகிறார்.]

## காட்சி-171

*மகேந்திர மலை உச்சி*

[அனுமனின் உடல் வளர்ந்து கொண்டே போகிறது. அவன் வாய், 'ஜெய்ராம்' என்ற மந்திரத்தை முழங்கிக் கொண்டே இருக்கிறது.]

## காட்சி-172

*வானம்*

[வானவீதியில், தேவர்களும், தேவகன்னியரும் திரள்கின்றனர். அனுமனின் விஸ்வரூபக் காட்சி கண்டு, அவர்களும் 'ஜெய்ராம்!' என்று ஆர்ப்பரிக்கின்றனர்.]

## காட்சி-173

*பாற்கடலும் கயிலை மலையும்*

**திருமால் :** சிவனாரே! உங்கள் வலிமையை இப்பொழுது வெளிப்படுத்தி விட்டீர்கள்!

**சிவன் :** நீங்கள்தான், திரிவிக்கிரம அவதாரம் எடுத்து, எனக்கு வழிகாட்டி விட்டீர்கள்!

அந்தக் கோலத்தை, இப்பொழுது நான் போட்டுக் கொண்டேன்!

**திருமால் :** உங்களுடைய உக்கிரதாண்டவத்தால், என் பாற்கடலே குமுறிக் கொந்தளித்து விட்டது!

**சிவன் :** நீங்கள் போடும் நாடகத்தில், நானே நடிக்கும் பொழுது, அந்தப் பாற்கடலும் நடிக்காதா என்ன!

அதோ, அனுமன், அண்டமும், திசைகள் எட்டும், அதிரத் தோள் கொட்டி ஆர்த்து, வானிலே தாவி விட்டான்!

## காட்சி-174

*வானம்*

[அனுமன் வானில் பறந்து செல்கிறான். வானில், நாரதர் தோன்றிப் பேசுகிறார்.]

**நாரதர் :** ராவண அரக்கனை, முன்புபோல் அமுக்குவோம் என்று கயிலை மலை, சிவனை விட்டுத் தனித்துச் செல்வது போல, அனுமன் செல்கிறான்.

அனுமன் போகின்ற வேகம் கண்டால், ராவணன் வீழ்கின்ற காலம், கண்ணிற் தெரிகிறது!

## காட்சி-175

*ராவணன் அரசவை*

[பலத்த காற்று அடிக்க, ராவணனின் தலைக்கிரீடம் உருண்டு கீழே விழுகிறது.]

***அமைச்சன் :*** *ராவணேஸ்வரா! காற்றிலே மணிமுடி கீழே விழுகிறது!*

*இந்த நிமித்தம் நல்லதைச் சொல்லவில்லை!*

***ராவணன் :*** *நவக்கிரகங்களே எனக்கஞ்சி இருக்கும்பொழுது, இந்த நிமித்தத்திற்கு நான் அஞ்சுவேனா?*

*என் காலடியைத் தொட அஞ்சும் வாயு, என் மணிமுடியைப் பறித்து விளையாடுகிறதா?*

*வரட்டும்! வீரனுக்கும் வேசையருக்கும், ஓய்வு என்பதே இருக்கக் கூடாது!*

## காட்சி-176

*கடற்பரப்பும், வானவெளியும்*

[அனுமன் வானிற் பறந்து, கடலைக் கடந்து கொண்டிருக் கிறான். அப்பொழுது திடீரென்று, கடலுக்குள்ளிருந்து ஒரு மலை வெளிக்கிளம்பி, வான்முட்ட எழுந்து, அனுமனை மறித்து நிற்கிறது.]

***அனுமன் :*** *என்னுடைய ராம சேவைக்கு இடையூறா? மலை குறுக்கிட்டால், மலைத்துப் போய் விடுவேனா? உன்னை நிலைகுலையச் செய்து, அந்த நீச அரக்கனைப் போய்ச் சந்திக்கிறேன்!*

*[இவ்வாறு கூறிவிட்டு, அனுமன், அந்த மலையைத் தன் கைகளால் புரட்டப் போகும்பொழுது, அம்மலை பேச ஆரம்பித்து விடுகிறது.]*

**மலை :** பொறு அனுமான்! நான் உன் பகைவன் அல்ல! உன் ராம சேவையில் நானும் பங்கு கொள்ள ஆசைப்பட்டேன்.

சமுத்திர ராஜன் கேட்டுக்கொண்டபடி, நீ தங்கி இளைப்பாற, சமுத்திரத்தில் இருந்து வெளிவந்தேன்.

உன்னைத் தடுத்து நிறுத்தும் நோக்கமில்லை. தக்கபடி உபசரித்து அனுப்பும் எண்ணமே எனக்கு.

நான், மைந்நாக பர்வதம். உன் தந்தை வாயுதேவனால், இந்தக் கடலுக்குள் கொண்டு வந்து சேர்க்கப்பட்டேன். இந்திரனின் வஜ்ராயுதத்திற்கு அஞ்சிய போது, வாயுதேவன் கருணையே இப்படி என்னைக் காத்தது.

அவர் புதல்வனுக்கு, நான் விருந்தளித்து அனுப்ப வேண்டாமா?

**அனுமன் :** நன்றி பர்வதமே, நன்றி! என் அன்னையைக் காணு முன்பு, அயர்வு எனக்குத் தோன்றாது. உன் அன்பையே விருந்தாக உண்டவன் ஆனேன். தேன் கனிகளைச் சாப்பிட்ட திருப்தி, உன் வாய் உதிர்த்த வார்த்தைகளில் கிடைத்து விட்டது.

**மலை :** என் மன ஆறுதலுக்காக, ஒரு சிறிது பொழுது தங்கிப் போகக் கூடாதா?

**அனுமன் :** ஒரு சிறிது பொழுதும், என் அன்னைக்குப் பெரும் துன்பம் விளைவிக்கும் பருவமாகும்.

ஆதலால் விரைந்து சென்று கொண்டிருக்கிறேன். ராம சேவையை முடித்துத் திரும்பும் பொழுது, உன் விருந்தாக இருந்து செல்கிறேன்.

[இப்பொழுது மைந்நாக மலை கடலினுள் மறைய, அனுமன் தொடர்ந்து பறந்து செல்கிறான்.]

## காட்சி-177

சுபர்வகிரிப் பிரதேசம்

[கேசரி, அஞ்சனை முன்னிலையில், ஒரு முனிவர் பேசிக் கொண்டிருக்கிறார்.]

**முனிவர் :** ஆஞ்சநேயனின் கட்டு அறுந்து விட்டது! சாபம் விலகிவிட்டது!

உங்கள் புத்திரன் இப்பொழுது விஸ்வரூபம் எடுத்து, விண்ணிலே, லங்கையை நோக்கிப் பறந்து கொண்டிருக்கிறான்!

தெய்வராமரே, இவன் துணையைத் தேடிப் பெறுகிறார்!

உங்கள் செல்வன், ஊர் உலகமெல்லாம் கொண்டாடப் போகும், புண்ணியனாகத் திகழப் போகிறான்!

**கேசரி :** எங்கள் உள்ளத்தில், அமுதத்தை வார்த்து விட்டீர்கள்!

**அஞ்சனை :** என் வயிற்றில் பிறந்தவன், மீண்டும் வன்மை பெற்று விட்டானா? இந்த வையகம், அவனைக் கொண்டாடப் போகிறதா?

இந்த வார்த்தையைக் கேட்ட இந்தப் பொழுது, சொர்க்கத்தில் இருக்கும் பொழுதை விடச் சுகம் அளிப்பதாகும்!

## காட்சி-178

*இந்திர சபை*

**ஒரு தேவர் :** அனுமன் சிறு வயதிலே, சூரியன் தேர்மேல் குதித்தவன்! அது உண்மைதான்!

ஆனால், இப்பொழுது அவன் ஆற்றலை, நாம் பார்த்து விடுவது நல்லது!

ராவணனை எதிர்கொள்ளும் வல்லமை, அனுமனுக்கு இருக்கிறதா என்பதை அறிய வேண்டும்.

**தேவேந்திரன் :** இது தேவைதானா? சிவனின் அம்சம் ஆயிற்றே அனுமான்!

**அந்தத் தேவர் :** முனிவரால் வலிமை இழந்தவனும் அனுமான் தான்! தெம்புடையவன் என்றால், சோதனையில் தேற மாட்டானா?

**தேவேந்திரன் :** *சிங்கத்தை நடக்கத் தெரியுமா என்று நடந்து காட்டச் சொல்கிறாய்!*

*சரி, உன் விருப்பப்படியே, என்ன செய்யவேண்டு மென்று சொல்.*

**அந்தத்தேவர் :** *சுரசையை அரக்கி உருவில் அனுப்பி, அனுமனை விழுங்கச் சொல்லுங்கள்!*

**தேவேந்திரன் :** *கடினமான சோதனை!*

**அந்தத் தேவர் :** *அனுமனைக் கணிக்கின்ற சோதனை!*

## காட்சி-179

*சுபர்வகிரிப் பிரதேசம்*

*முனிவரின் ஆஸ்ரமம்*

**அஞ்சனை :** *(கோபத்தோடு, குமுறலோடு) என் மகன் பட்டதெல்லாம் போதாதா? இனியும் படவேண்டுமா?*

*பழைய வல்லமை பெறாமலா, வானத்திலே பறந்து கொண்டிருக்கிறான்!*

*சோதனை செய்யப் போகிறார்களாம், சோதனை! என்னை வேதனைப்படுத்துவதற்காகவே, தேவலோகத்தில் தேவர்கள் இருக்கிறார்கள்!*

*அரக்கி உருவெடுத்து, அந்தச் சுரசையை, என் முன்னாலே நிற்கச் சொல்லுங்கள்!*

*அவளை நான் விழுங்கித் தீர்க்கிறேன்! என் பெற்ற வயிறு, குளிர, அதையாவது நான் செய்ய வேண்டாமா?*

**கேசரி :** *அஞ்சனை! கோபதாபத்திற்கு இடங்கொடுத்தால், மனம், எந்த உண்மையையும் ஏற்றுக் கொள்ளாது.*

*ஆஞ்சநேயன், இந்த அவனிக்காக அவதரித்த திவ்ய புருஷன்!*

*அதை உணர்த்துவதற்காக, அவனுக்கு ஆயிரம் இடர்கள் வரலாம்!*

*அவற்றிலிருந்து மீளும்போது, அவன் புகழ் நீளும்! இந்தப் புவி அவனைக் கொண்டாடும்!*

**அஞ்சனை :** *மனம் சமாதானப்பட, இந்த வார்த்தைகளை எழுதி வைத்துச் சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள்!*

*அந்தப் பாவி மகள் சுரசையிடமிருந்து, என் செல்வனுக்கு, எந்த ஆபத்தும் இல்லை என்பதைத் தெரிந்த பிறகுதான், நான் இங்கிருந்து வீடு திரும்புவேன்!*

## காட்சி-180

*தென் கடற்பரப்பு*

[கடற் பரப்பின் மேல், வானத்தில் பறந்து வருகின்ற அனுமனை, அரக்கி வடிவத்திலே, சுரசை, பெரிய உருவம் எடுத்து, மறித்து நிற்கிறாள்.]

**சுரசை :** *அனுமானே! அற்பமான குரங்குக் குலத்தில் பிறந்து விட்ட ஜீவனே! இன்று எனக்கு உணவாகச் சிக்கி விட்டாய்! பசியோடு இருக்கும் எனக்குப் பதார்த்தமாக, உன் பெரிய உடல் கிடைத்து விட்டது!*

**அனுமன் :** *பெண்மணியே! உன் பசிக்கு இரையாவதில், எனக்கு மாறுபாடு ஒன்றுமில்லை!*

*நோயில் விழுந்து மடிவதை விட, உன் பசிநோய், தீர்க்கத் தன்னைத் தருவது தர்மமே ஆகும்!*

*ஆனால், இடையிலே, எனக்கிட்ட பணியை நிறை வேற்றி விட்டு வருகிறேன்!*

*ராம சேவையை முடித்து விட்டு, உன் பார்வையில் வந்து நிற்கிறேன்! அப்பொழுது நீ என்னை உண்டு கொள்ளலாம். இதனால் பெருமையும் எனக்கு உண்டு!*

**சுரசை :** *(கோபத்தோடு) இப்பொழுது பசிக்கிறது என்று துடிக்கிறேன்!*

*எரியும் நெருப்பைக் கண்டவுடன் அணைக்காமல், பஞ்சாங்கம் பார்த்துக் கொண்டா அணைப்பார்கள்?*

உன்னை இப்பொழுது இங்கிருந்து விடுவதாக இல்லை. மறித்து நிற்கும் என்னைக் கடந்து செல்ல உன்னால் முடியாது. வால் இருப்பதால், வல்லமை உனக்கு இருப்ப தாக எண்ணவேண்டாம். நீ மானிடப் பிறவி அல்ல என்று மட்டம் தட்டத் தொங்கிக் கொண்டிருக்கும், ஓர் அங்கம் அது!

**அனுமன் :** என்னைப் பற்றி, நான் பெருமையாக எண்ணுவ தில்லை. பெருமைக்குரியவர்கள் அவ்வாறுதான் இருப் பார்கள். பிறரை இழிவுபடுத்திப் பேசுபவர்கள், செய்யும் கர்மம், அது ஒன்றாகத்தான் இருக்கும்!

**சுரசை :** (கோபத்தோடு) என்னோடு வார்த்தையாடுகிறாயா?

என் வாய்க்குள், பற்களுக்கிடையே, நீ ஆடிக் கொண்டிருப்பாய்! கடிபட்டுக் கொண்டிருப்பாய்!

உனக்குத் துணிவிருந்தால், என் திறந்த வாய்க்குள் சென்று மீண்டுவிடு பார்க்கலாம்!

**அனுமன் :** நான் பெரிய உருவம் எடுத்து, உன் வாயைக் கிழித்து விடுவேன்!

**சுரசை :** உன் உருவத்தை விட, நான் என் வாயைப் பெரிதாக்கி, உன்னை விழுங்கிக் கொள்வேன்!

**அனுமன் :** பார்க்கலாம்! பார்ப்போர் பார்த்துக் களிக்க, நாம் இந்த வினையில் பங்கேற்போம்!

[அனுமன், மிகப்பெரிய உருவமாக வளர, அதை விடப் பெரியதாகத் தன் வாயைக் குகைபோல் ஆக்கிக் கொள்கிறாள் சுரசை.

அனுமன் இன்னும் பெரிய உருவம் எடுக்க, சுரசையும், தன் திறந்த வாயை, இன்னும் பெரிதாக்கிக் கொள்கிறாள்.

சட்டென்று அனுமன் மிகச் சிறிய உருவமெடுத்து, அவள் வாயினுள் சென்று, வெளியே வந்து விடுகிறான்.

இப்பொழுது அனுமன், தன் இயல்பான உருவத்தை எடுத்துக் கொள்கிறான்.]

**அனுமன் :** நீ அறைகூவி அழைத்தபடி, நான், உன் வாயினுள் சென்று, மீண்டு வந்து விட்டேன்!

[சுரசையும் அரக்கி உடலை நீத்து, தன் உண்மை உருவோடு தோன்றுகிறாள்.]

**சுரசை :** நான் தோற்றுவிட்டேன்! உன் புத்தி கூர்மையால், நீ தேவர்களின் நம்பிக்கையைப் பெற்று விட்டாய்! நீ நாடிய செயலை, நயம்படச் செய்து முடிப்பாய்!

பாம்புகளின் தாய் நான்! உன்னைப் பரீட்சித்துப் பார்க்கத் தேவர்கள் ஏவலால், இங்கு வந்தேன். உன்னைக் கண்டேன். உன்னால் வெல்லப்பட்டேன். உனக்கு வெற்றியே கிடைக்கட்டும் என்று ஆசி கூறி மறைகிறேன்.

[இவ்வாறு கூறிவிட்டுச் சுரசை, அங்கிருந்து மறைந்து விடுகிறாள்.]

## காட்சி-181

சுபர்வகிரிப் பிரதேசம்

முனிவரின் ஆஸ்ரமம்

**கேசரி :** அஞ்சனை! முனிவர் மொழிந்ததைத் கேட்டாயா? ஆஞ்சநேயன் வென்றுவிட்டான். சுரசையும் அகன்று விட்டாள். தேவர்களும் திருப்தி கொண்டு விட்டனர். ஆஞ்சநேயனுக்கு இனிமேல், எந்த ஆபத்தும் இல்லை. வா.. நாம் வீட்டிற்குத் திரும்புவோம்.

**அஞ்சனை :** தவமுனிவரே! என் பிள்ளைக்கு இனிமேல் எந்த ஆபத்தும் வராதே?

**முனிவர் :** அப்படிச் சொல்ல முடியாது. இப்பொழுது சிம்ஹிகை என்னும் அரக்கி, அனுமனை மறித்து நிற்கிறாள்.

**அஞ்சனை :** இவளும் தேவர்கள் அனுப்பிய பெருமாட்டிதானா?

**முனிவர் :** இல்லை-இவள் உண்மையிலேயே அரக்கி! ஆஞ்சநேயனை விழுங்க வந்திருப்பவள்! இவள் யானையின் தோலைப் போர்த்திக் கொண்டு, யானையைப் போல்,

*ஆஞ்சநேயன் முன், பயங்கரமாகப் பிளிறிக் கொண்டிருக்கிறாள்! இந்த அண்டத்தையே விழுங்கும் அளவு, தன் வாயைத் திறந்து வைத்துக் கொண்டு, ஆஞ்சநேயனை எடுத்து விழுங்கத் துடித்துக் கொண்டிருக்கிறாள்!*

[இதைக் கேட்டு அஞ்சனை, வாய் புதைத்து அழுகிறாள்.]

## காட்சி-182

*தென் கடற்பரப்பு*

[சிம்ஹிகை என்னும் அரக்கி, கடற்பரப்பின் மேல் மலைபோல் நின்று, அனுமனை மறிக்கிறாள்.]

**அனுமன் :** *ராம்! ராம்! நான் ராம சேவைக்காகச் சென்று கொண்டிருக்கிறேன்.*

*அரக்கியே! என்னைத் தடுத்து, மரணத்தை அணைத்துக் கொள்ளாதே!*

**சிம்ஹிகை :** *(ஏளனமாகச் சிரித்து விட்டு) எனக்கு உன்னால் மரணமா! உன் நிழலைப் பற்றி இழுத்து, உன்னை நிறுத்தி விட்டேன்! உன் உடலை விழுங்கி விட்டு, நானும் 'ராம்! ராம்!' என்று கூறப்போகிறேன்!*

*அந்த ராமனால் தானே, இந்தக் குரங்கு உடல், இன்று என் குடலை நிரப்பக் கிடைத்தது!*

**அனுமன் :** *தர்மத்திற்குத்தான், ராம நாமம் அரணாக இருக்கும்!*

**சிம்ஹிகை :** *நான் செய்வதுதான் தர்மம்! வலிமை இருக்குமிடத்தில், தர்மம் நாயைப்போல வாலாட்டிக் கொண்டு கிடக்கும்!*

**அனுமன் :** *வீண் பேச்சு எதற்கு? விண்ணிலே, எனக்கு வழியை விடு.*

**சிம்ஹிகை :** *என்னுடைய திறந்த வாய்க்குள் போவதைத் தவிர, உனக்கு வேறு மார்க்கமில்லை!*

விதி, இன்று உன் ஆயுளை முடித்து விட்டது! நீயெல்லாம் வாழ்ந்து என்ன பயன்? மரத்திற்கு மரம் தாவுவதைச் செயற்கரிய செயல் என்று செப்பித் திரிய முடியுமா?

**அனுமன் :** கண்ணிற் கண்டவரையெல்லாம் பிடித்து விழுங்கும் நீ வாழும்போது, நான் வாழக்கூடாதா?

நல்லோர்க்குத் துன்பமின்றி வாழுபவன் நான்!

எல்லோர்க்கும் துன்பமாக வாழுபவள் நீ! உன் குகை போன்ற வாயைத் திற! ராம நாமத்தைச் சொல்லியபடி, அதற்குள் புகுந்து விடுகிறேன்!

**சிம்ஹிகை :** இதுதான் உன்னைப் போன்ற குரங்கு செய்கின்ற உத்தமமான காரியம்!

போராடி, எலும்பெல்லாம் முறிவுபடாமல், உருட்டி வைத்த கவளம்போல், என் வயிற்றுக்குள் சங்கமம் ஆகிவிடு!

உன் பிறப்பிற்கு, இம்மாதிரி இறப்பே விதிக்கப்பட்டது!

[இவ்வாறு கூறிவிட்டுச் சிம்ஹிகை, வாயைப் பெரிதாகத் திறந்துகாட்ட, அனுமன் சிறிய உருவம் எடுத்து, அரக்கியின் வாய்க்குள் புகுந்து, வயிற்றை அடைந்து, அங்கு பெரிய உருவம் எடுத்துக்கொள்ள, அரக்கியின் வயிறு வெடிக்கிறது. அனுமன் வெளிப்படுகிறான். 'ராம்! ராம்!' என்று கூறியபடி, அனுமன், தன் பயணத்தைத் தொடர்கிறான்.]

**அனுமன் :** ராம்! ராம்! - எனச் சொன்னால், எல்லா இடர்களும் அகலும். இந்த மந்திர கவசம் எனக்கு இருக்கும்பொழுது, ஏது பயம்? எல்லாம் ஜெயமே! விரைவில் லங்கை சேருவேன். ராமசேவைக்குரிய, என்பங்கை ஆற்றுவேன்!

## காட்சி-183

*தேவலோகம்*

**இந்திரன் :** அனுமன், நாம் எதிர்பார்த்ததுபோல், இளைக்காமல், களைக்காமல், பகையெல்லாம் வென்றுவிட்டான்!

விருந்து அருந்து என்று சொன்னபோது, அதை மறுத்துக் காரியத்திற் கண்ணாகப் பறந்து சென்றான்.

அவன் நாவுக்கோ, ஐம்புலன்களுக்கோ அடிமைப்பட வில்லை.

ராமனின் அடிமை என்ற எண்ணத்திலிருந்து விடுபட வில்லை.

அடுத்து, தன் புத்தி கூர்மையால், ரெண்டாவது கண்டத்தையும் தாண்டி விட்டான்.

வீரன், விவேகமாகச் செயல்பட்டால்தான், வெற்றியைக் காண முடியும்.

இல்லையென்றால், மரத்தை முறித்து வரும் காட்டு யானை, குழிக்குள் விழுந்த கதையாகிவிடும்!

இறுதியாக, அரக்கியைக் கொன்று, தன் ஆற்றலை மெய்ப்பித்து விட்டான்.

எனவே அனுமனால் ராமன் வெல்வான்! தர்மம் வெல்லும்! நாம் மகிழ்வோம்!

## காட்சி-184

*சுபர்வகிரிப் பிரதேசம்*

*முனிவரின் ஆஸ்ரமம்*

**முனிவர் :** (கேசரி, அஞ்சனையிடம்) ஆஞ்சநேயன் லங்கை சேர்ந்து விட்டான். அங்குள்ள பவள மலையின் உச்சியில் போய் நிற்கிறான் இப்பொழுது. விரைவில் லங்கைக்குள் போய், அன்னையைக் கண்டு விடுவான்!

**கேசரி :** ஹப்பா! எங்கள் நெஞ்சில் தேன் வார்த்தீர்கள்! அஞ்சனை! வா.. வீட்டிற்குப் போவோம். இனிமேல், ஆஞ்சநேயனுக்கு எந்த ஆபத்தும் வராது! அப்படி வந்தாலும், நெருப்பிடை இட்ட பஞ்சாக, அவை அழிந்து விடும்!

**அஞ்சனை :** (நிம்மதியோடு) ராம்! ராம்! ராமனின் அம்பு என் பிள்ளை! பிள்ளைமேல் உள்ள அன்பால், ஏதேதோ

*பிதற்றினேன், ராமனைத் தெரிந்துகொண்டேன். வீண் பயத்தை இப்பொழுது தொலைத்து விட்டேன்.*

*வாருங்கள்... போவோம்!*

## காட்சி-185

*பவளக்குன்று*

[பவளக்குன்றின் உச்சியில், அனுமன் நின்று கொண்டிருக்கிறான். அப்பொழுது அங்கு சுழற்காற்று வீச, அதிலிருந்து வாயுதேவன் வெளிப்படுகிறான்.]

**வாயுதேவன் :** *அனுமான்! உன் தந்தை வாயுதேவன், உனக்குத் தக்கது சொல்ல வந்திருக்கிறேன்.*

*இங்கிருந்து லங்கையின் எழிலை, இப்பொழுதே பார்த்துக்கொள்!*

*ஏனென்றால், இது உன்னால் விரைவில் அழியப் போகிறது!*

*தேவ மங்கை, தன் அழகுமேனி பார்க்க, எடுக்கும் கண்ணாடி போன்று, இந்தக்கவின்நகர் தோன்றுவதைப்பார்!*

*உன் கவிக்குலத்தால், இந்தக் கண்ணாடி உடைபடும்; உருக்குலையும்!*

*இந்த நல்நகரை நோக்கும்போது, தேவர்களின் பொன்னகர் புறம் தள்ளப்பட்டுவிடும்!*

*போக இன்பம் உள்ள இடமே சொர்க்கம் என்றால், இந்நகரே சொர்க்கம்!*

*இங்கு வேண்டியதை, வேண்டியபோது, வெறுப்பு இன்றி விளைந்து துய்க்கலாம்!*

*இந்நகரிலுள்ள மாடங்கள், பொன்கொண்டு இழைத்ததா? மணியைக் கொண்டு பொதிந்ததா? மின்னலைக் கொண்டு அமைத்ததா? கதிரோன் வெயில் கொண்டு சமைத்ததா? எதைக் கொண்டு இயற்றியது என்று தெரியவில்லை!*

ஆனால், அவை மேகம் விட்டுத் தோன்றும், நிலவு தொட்டு உறவாடிக் கொண்டிருக்கின்றன!

தெய்வ தச்சன் விஸ்வகர்மா, தொட்டு இழைத்த பட்டு நகர் இது!

இங்குள்ள மரம் எல்லாம் கற்பகமே! மனை எல்லாம் பொன்னே! தேவர் என்பவர் யாவரும், இத்திருநகர் வீரர் ராவணனுக்கு ஏவல் செய்பவரே!

ஐங்கரக் களிறு ஆன விநாயகனைத் தவிர, மற்ற யானைகள் எல்லாம், இங்குதான் நிற்கின்றன!

ஒற்றைச் சக்கரமுடைய சூரியனின் தேர் தவிர, மற்றத் தேர்கள், இங்குதான் தேங்கிக் கிடக்கின்றன!

அருக்கனின் தேர்க்குதிரைகளைத் தவிர, மற்ற குதிரைகள், இங்குதான் குவிந்து கிடக்கின்றன!

இந்நகரின் மதில் கடந்து, காற்றுப் புகாது; கதிரவன் ஒளி புகாது; காலனின் ஆற்றல் புகாது; கர்வத்தோடு தேவர்கள் புகமுடியாது!

இந்நகரில், மதுவுண்டு ஆடுவோரும் பாடுவோரும் உண்டே தவிர, கவலையால் துவண்டு விடுபவர் யாருமில்லை!

இங்குள்ள அரக்கர்கள், உடலால் பெரியவர்கள்! வீரம் கணக்கு இலர்! உலகை நிர்மூலமாக்கும் உரம் கொண்டவர்கள்! வரபலம் பெற்றவர்கள்! மாயச் செயல்புரியும் சூரர்கள் அவர்கள்!

**அனுமன்** : தந்தையே! உங்கள் கூற்றுப்படிப் பார்த்தால், எங்கள் வானர சேனை, இந்நகருக்குள் புக முடியுமா என்ற ஐயம் தோன்றுகிறது.

ஆனால், என் பரமனின் விற்படை பெரிது என்கேனோ? வேற்படை மிகும் என்கேனோ? மற்படை உடைத்து என்கேனோ? வாட்படை வலிது என்கேனோ? மற்றும் கற்பணம், தண்டு, பிண்டி, பாலம் இவை சேர்ந்த நாற்படை பெரிது என்கேனோ? இவை எல்லாவற்றையும் விட, என் நாயகனின் நாமம் ஒன்றே போதும் - இந்த அணிநகரை அழித்தொழிக்க!

**வாயுதேவன் :** *உண்மைதான்! ராம நாமம், தர்மத்திற்கு க்ஷேமம்!*

*ராமனின் வில்லுக்குமுன், அணிலங்கை அழிவைக் காணும்!*

*அதற்காக, நீ அலட்சியமாக இருந்து விடாதே.*

*இப்படி அங்கத்தைப் பெரிதாக வளர்த்துக் கொண்டால், அரக்கர்கள் உன்னைக் கண்டுவிடுவர்.*

*தேவியைக் காணும் உன் திட்டம் உடைபடும்.*

*இப்பொழுது நீ போர் புரிய வரவில்லை! பொன் மகளைக் கண்டு பேச வந்திருக்கிறாய்!*

*ஆதலால், உன் மேனி சுருக்கி, இருள் செறிந்த பின்பு, லங்கை நகரில் போய், ராமனுக்கு இனியவளைப் போய்த் தேடு!*

*வெற்றியே பெறுவாய்! அதர்மம் வீழ்ச்சி பெறா விட்டால், தெய்வங்கள் ஆராதிக்கப் பெறுவதில், அர்த்தமே இல்லாமற் போய்விடும்!*

*(இவ்வாறு கூறிவிட்டு, வாயுதேவன் மறைந்து விடுகிறான். அனுமன், சிறியதொரு உருவம் எடுத்துக் கொள்கிறான்.)*

## காட்சி-186

*லங்கை நகர் மதிலின் வெளிப்புறம்*

[சிறிய உருவத்தோடு அனுமன், மதிலின் வெளிப்புறம் நின்று கொண்டிருக்கிறான்.]

**அனுமன் :** *(தனக்குள்) கடலையே அகழியாகக் கொண்டிருக்கிறது இந்த மதில்.*

*அமரர் வாழும் ஏழ் உலகிற்கும் மேலே செல்கிறது இதன் முகடு.*

*மேருவை நிறுத்தி, வாயில் கண்டது போல் காணப் படுகிறது, இந்த மதில்.*

இங்குள்ள அரக்கர்களின் கட்டுக் காவலைக் கண்டு, சூரியனே அஞ்சி விலகிச் செல்கிறது.

இவர்களோடு போரிடுவது எளிதாக இருக்காது. நெடு நாள், இந்த நீசர்களோடு, களம் காண வேண்டியிருக்கும்.

எதிரியின் கோட்டைக்குள் செல்பவன், வாயில் வழியே செல்வது வீரமாகாது!

வழியில்லாத இடத்தில், ஒரு வழியை ஏற்படுத்திக் கொண்டு, அங்கு புகவேண்டும் என்று நீதி சாஸ்திரம் சொல்கிறது.

எனவே, வாயில் இல்லாத மதிலின் பக்கம், தாவி ஏறிக் குதிக்கிறேன்.

[இவ்வாறு எண்ணமிட்டபடி, அனுமன் மதிலின் ஓரமாக நடக்கிறான். அப்பொழுது பெரிய உருவம் கொண்ட பெண்ணொருத்தி, அனுமனைக் கண்டு, தடுத்து நிறுத்து கிறாள்.]

**லங்கிணி :** அற்பக்குரங்கே! இந்த இரவில் மதிலைத் தாவும் எண்ணமா உனக்கு? மடமையால், உன் உயிர் இழக்கப் போகிறாய்!

**அனுமன் :** யாரம்மா நீ?

**லங்கிணி :** லங்கையின் காவல் தெய்வம் லங்கிணி நான்! அந்நியர் நகருக்குள் நுழையாமல் காவல் காத்து வருகிறேன். காலனும், என்னைக் கண்டு, இங்கு வர அஞ்சுவான். காய்கனிகளைத் தின்று வாழும் நீ, சிறுபிள்ளைத்தனமாக, சிற்றறிவோடு இங்கிருந்து ஓடிப்போய்ப் பிழைத்துக்கொள். உன்னைக் கொல்வது, என் புகழைக் குறிக்காது. எதற்காக இங்கு வந்தாய்?

**அனுமன் :** ஊர் காணும் ஆசையால் வந்தேன். நான் ஊருக்குள் போவதால், யாருக்கு என்ன ஊறு ஏற்பட்டு விடப்போகிறது?

**லங்கிணி :** (ஏளனமாகச் சிரித்தபடி) அற்பனே! ஊர் காண இரவிலா வருவார்கள்? கரவு கொண்ட நெஞ்சோடு வந்திருக் கிறாய்! திரிபுரம் எரித்த சிவனே, இங்கு வர அஞ்சி வருவதில்லை! காடுகளில் திரிகின்ற நீ, இந்த நாடு நகரைப்

பார்க்க ஆசைப்படுகிறாயா? உன் கூற்றைக் கோணல் மதி கொண்டவனும் ஒப்பமாட்டான்!

போ என்றால் போய் விடு! இல்லையென்றால், என் கோபத்தில் பொசுங்கி விடுவாய்!

**அனுமன் :** உன் பேச்சு, என்னைப் பின்னடைய வைக்காது. முன் வைத்த காலைப் பின் வைக்க மாட்டேன்.

**லங்கிணி :** உனக்கொரு உடம்பு! அதற்குக் கைகால்! நான் விடும் மூச்சில், அவை உதிர்ந்து விடும்!

**அனுமன் :** இதற்கெல்லாம் தேவர்கள் தான் பயப்படுவார்கள். நான் நகருக்குள் செல்லும் தீர்மானத்தோடு வந்திருக்கிறேன்.

**லங்கிணி :** நீ உண்மையிலே வானரமா? இல்லை... வானில் உள்ளோர் அனுப்பி வைத்த ஒற்றனா?

நீ யாராக இருந்தாலும், உன்னை வேரோடு சாய்க்க வேண்டியது, இப்பொழுது என் கடமை.

[இவ்வாறு கூறி, லங்கிணி, தன் கைச்சூலத்தை எறிய, அனுமன் அதைக் கையில் வாங்கி, முறித்துப் போடுகிறான்.

உடனே லங்கிணி ஓடிவந்து, அனுமனைத் தன் கைகளால் அறைய முயல்கிறாள்.

அவள் கைகளைப் பிடித்து, அவளைத் தடுத்து விடுகிறான் அனுமன்.]

**அனுமன் :** பெண் நீ என்பதால், உன்னைக் கொல்வது பிழை! என்னை நீ தடுத்து நிறுத்துவதால், உன்னை மண்ணில் வீழ்த்துவது, முறையான செயலாகும்.

[இவ்வாறு கூறிவிட்டு, லங்கிணியின் மார்பில், அனுமன், தன் கைகளால் தாக்குகிறான்.

லங்கிணி நிலத்தில் உருண்டு விழுகிறாள். பின்னர் எழுகிறாள். இதயத்தில் அன்பு தோய, இன்மொழிகளைப் பேசுகிறாள்.]

**லங்கிணி :** என் சாபம் தீர்ந்தது! என் சங்கடம் தீர்ந்தது! பிரம்மனின் ஆணையால், இந்த லங்கை நகரைக் காவல் காத்து வந்தேன்.

இந்த அரக்கி உருவெடுத்து அல்லற்பட்டுக் கொண்டிருந்தேன்.

'எப்போது எனக்கு விடுதலை?' என்று பிரம்மனைக் கேட்டேன்.

'வானரம் ஒன்றால் நெஞ்சில் அறைபட்டு, நிலத்தில் வீழ்வாய்! அப்போது இந்தச் சழக்கன் நகரை விட்டு, சத்தியலோகம் வந்து சேர்வாய்; அதற்குப் பிறகு இந்தச் சித்திரலங்கை நகரம் சிதைவது திண்ணம்' என்று பிரம்மன் செப்பினார்.

அந்தப் பொழுது, இப்பொழுது வந்துவிட்டது! அறம் வெல்ல, பாவம் தோற்கும் பருவம் வந்துவிட்டது!

நீ பொன் நகர் புகுந்து, உன் பணியினைச் செய். நான், என் நகர் நோக்கிப் போகின்றேன்.

[இவ்வாறு கூறிய லங்கிணி, தேவமாதின்
உருவமெடுத்து, வானை நோக்கிச் செல்கிறாள்.]

## காட்சி -187

*மதில்*

[வழியில்லாத மதிலின்மீது தாவி ஏறுகிறான் அனுமன்]

**அனுமன்** : *(தனக்குள்)* இங்கிருந்து, எனது இடது பாதம் முதலில் தரையில் பட, லங்கை நகருக்குள் குதிப்பேன்.

வலது பாதம் பட்டால், மங்கலமாகிவிடும். இந்த அணி நகர்க்கு, அமங்கலத்தைக் கொண்டு சேர்க்கவே வந்திருக் கிறேன்.

பாலில் விடும் பிரை மோராக, இந்த நகரைக் கலக்கு கிறேன்; கலங்க வைக்கிறேன்.

[மதிலின் உச்சியிலிருந்து, இடது பாதம் முதலில் மண்ணிற் படக் குதிக்கிறான் அனுமன்.]

## காட்சி-188

*லங்கை நகர வீதி*

[அனுமன், அந்த நள்ளிரவு நேரத்தில், சிறிய உருவத்தோடு, லங்கை நகரின் வீதியிலே, பதுங்கிப் பதுங்கிச் சென்று கொண்டிருக்கிறான்].

**அனுமன் :** *(தனக்குள்) இங்குள்ள மாடங்கள், கூடங்கள், மாளிகைகள், ஆடல் அரங்குகள், அம்பலங்கள், பாடல் மேடைகள், பட்டி மண்டபங்கள், எல்லா இடத்திலும் பார்த்துவிட்டேன். என் தெய்வத்தைக் காணவில்லை! என் அன்னை அடைபட்டிருக்கும் இடம் தெரியவில்லை! இதனால் தளர்ச்சி எனக்கு ஏற்படலாம்! ஆனால், என் முயற்சி முற்றுப் பெற்றுவிடாது!*

## காட்சி-189

*நாடக சாலை*

[அனுமன், நாடக சாலைக்குள் வந்து, மறைந்திருந்து பார்க்கிறான். அங்கு பாட்டோடு நடனமும் நடந்து கொண்டிருக்க, அதைக் காணப் பொறுக்காமல், அங்குள்ள பொருட்களை உருட்டிவிட்டுக் கலவரப்படுத்தி, அங்கிருந்து மறைகிறான்.]

## காட்சி-190

*ஒரு மாளிகை*

[ஒரு மாளிகைக்குள் நுழைகிறான் அனுமன். அங்கு அரக்கியர், கள்ளுண்டு மயங்கிக் கண்மூடிப் பிதற்றிக் கொண்டிருக் கின்றனர். அவர்களை வெறுப்போடு பார்க்கிறான் அனுமன்]

**அனுமன் :** (தனக்குள்) எந்த மாளிகையிலும், சீதாதேவி சிறை வைக்கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.

கள்ளுண்டு மயங்கிப் பிதற்றும் இந்த அரக்கிகளைப் பெண்ணென்று ஏனோ பிரம்மன் படைத்துவிட்டான்!

அவன் மயக்கத்தோடு, இவர்களை மண்ணுக்கு அனுப்பியிருக்கவேண்டும்!

**ஓர் அரக்கி :** (மயக்கத்தோடு பிதற்றுகிறாள்) ராவணா! நீ என்னோடு ஓர் இரவு தங்க மாட்டாயா?

**இன்னொரு அரக்கி :** (மயக்கத்தோடு) ராவணா! நீ என் உடல்மீது ஒரு நாள் முழுதும் தங்கி இருக்கமாட்டாயா?

**வேறொரு அரக்கி :** (மயக்கத்தோடு) ராவணா! நீ என் உடலை, உன் உடலாக்கி, எப்பொழுதும் இருக்கமாட்டாயா?

**அனுமன் :** மூதேவிகளா! உங்கள் மன்னனுக்கும், உங்களுக்கும், கடவுள் இருக்கவேண்டிய நெஞ்சில், காமம் நிரம்பித் தளும்பிக் கொண்டிருக்கிறது!

புணர்ச்சிக்காகவே, இந்தப் பூமிக்கு வந்திருப்பவர்கள் நீங்கள்!

வேறு புண்ணிய காரியத்தை, உங்களிடம் இருந்து எப்படி எதிர்பார்க்க முடியும்?

[அந்த அரக்கிகளின் தலைமுடிகளை, ஒன்றாக முடிச்சுப் போட்டுவிட்டு, மறைந்து நிற்கிறான் அனுமன்.

எழுகின்ற அவர்கள், விலகிச் செல்ல முடியாமல் அலறுகின்றனர்.]

**அனுமன் :** இந்தக் குரங்குச் சேட்டைக்கே, இப்படி அலறுகிறீர்களே!

என் ஐயன் கோதண்டத்திற்கு, எப்படி அலறுவீர்கள்?

[இவ்வாறு கூறிவிட்டு, அனுமன் அங்கிருந்து செல்கிறான்.]

## காட்சி - 191

*கும்ப கர்ணன் மாளிகை*

[கும்ப கர்ணன் மாளிகைக்குள் நுழைகின்ற அனுமன், கும்பகர்ணன் படுக்கை அறை வாயிலில் வந்து நிற்கிறான். மலைபோல் படுத்து உறங்கும் கும்பகர்ணன் உள் வாங்கி விடும் மூச்சுக் காற்றால், அனுமன் உள்ளே இழுக்கப்பட்டுப் பின் வெளியே தள்ளப்படுகிறான்.

இப்படி அல்லாடுகின்ற அனுமன், பின்னர் காலூன்றி நிலையாக நின்று கொள்கிறான்]

**அனுமன் :** *முழு மதியைப் பிளந்து, தன் வாயின் இரு பக்கத்திலும் வைத்துக்கொண்டதுபோல, கோரப் பற்களை உடைய இந்தக் கொடூர உருவமுடையான் ராவணனா?*

*இருக்காது! ராவணனுக்கு இப்படி ஆழ்ந்த உறக்கம் வராது! ஏக்கம் இருக்கும் இடத்தில், தூக்கம் தொடர்ந்து இருக்காது!*

*[இப்பொழுது அறைக்கு வெளியே, வாயிற்காப் போனின் குரல் ஒலிக்கிறது].*

**வாயிற்காப்போன் :** *பேரரசர் ராவணரின் இளவல், கும்பகர்ணர், தம் நித்திரையைத் தொடங்கிவிட்டார்! மகளிர் யாரும், இளவலைப் பார்க்க இப்போது வரவேண்டாம் என்ற செய்தி அறிவிக்கப்படுகிறது!*

**அனுமன் :** *இன்னும் சில நாள், இவன் நிம்மதியாக உறங்கட்டும்! சிரம் அறுபடும்வரை, இந்தச் சுகத்தை அனுபவிக்கட்டும்!*

*[அங்கிருந்து செல்கிறான் அனுமான்].*

## காட்சி - 192

*விபீஷணன் மாளிகை*

[விபீஷணனின் படுக்கை அறைக்குள் நுழைகிறான் அனுமன். கண்மூடிப் படுத்திருக்கும் விபீஷணன், 'ராம்! ராம்!' என்று

உறக்கத்திலும், ராமநாமத்தை உச்சரித்துக் கொண்டிருக்கிறான்].

**அனுமன் :** *(தனக்குள்) யார் இவன்? உறக்கத்திலும் ராமநாமத்தை உச்சரிக்கும், இந்த உத்தமன் யார்?*

*சேற்றிலே செந்தாமரை போல, இந்த அரக்கர் கூட்டத்திடையே, ஒரு புண்ணிய ஆத்மாவும் இருக்கின்றதே!*

*ராவணனுக்கும், இவனுக்கும் என்ன உறவு?*

*விஷத்திலே புழு நெளியும்! இங்கு புத்தொளி வீசும் நட்சத்திரம் ஜொலிக்கிறதே!*

*[இப்பொழுது உறக்கத்தில் வாய் புலம்புகிறான் விபீஷணன்]*

**விபீஷணன் :** *(உறக்கத்தோடு) அண்ணா! உன் தம்பி நான்! உனக்கு வேண்டாதன சொல்வேனா? இந்த விபீஷணனின் நெஞ்சு, உன் வீழ்ச்சியைப் பார்க்கச் சகிக்குமா?*

*அந்த சீதாதேவியை விட்டுவிடு! அயோத்தி ராமன், திருமாலின் அவதாரம் என்று சொல்கிறார்கள்!*

*அறத்திற்கு மாறாக நடந்து, நம் குலத்தை அழித்துவிடாதே! அழித்துவிடாதே!*

**அனுமன் :** *ஓஹோ! ராவணன் தம்பி விபீஷணனா நீ! வாழ்க நீ!*

*(இவ்வாறு கூறி, அங்கிருக்கும் மலர்களை எடுத்துப் படுத்து உறங்கும் விபீஷணன்மேல் கொட்டிவிட்டுப் போகிறான். இதனால் உறக்கம் கலைந்து, எழுந்து, சுற்றுமுற்றும் பார்க்கிறான் விபீஷணன். அதற்குள் அனுமன் அங்கிருந்து சென்று விடுகிறான்)*

## காட்சி - 193

*இந்திரஜித் மாளிகை*

[இந்திரஜித் மாளிகை வாயிலில், ஆயுதங்களோடு அரக்கர்கள், பரபரப்பாக உலவிக் கொண்டிருக்கின்றனர். மறைந்திருந்து இதைப் பார்த்துக் கொண்டிருக்கிறான் அனுமன்]

**ஓர் அரக்கன் :** இந்திரன் சிறையிருந்த இந்த இந்திரஜித் மாளிகையைக் கருத்தோடு காவல் காக்கும்படி, கட்டளை வந்திருக்கிறது.

ஊர்க்காவல் தெய்வம் மறைந்துவிட்டதாம்! இதைத் தீக்குறி என்று தீர்மானித்து, எச்சரிக்கை செய்திருக்கிறார்கள்.

யாரோ ஓர் எதிரியின் நடமாட்டம், இங்கிருப்பதாகத் தெரிகிறது! விழிப்போடு இருக்கவேண்டும்! மனம் களிக்கும் படியான சிற்றின்பக் கற்பனைகளில் மிதக்கவேண்டாம்!

**அனுமன் :** (தனக்குள்) ராவணன் மகன் இந்திரஜித் மாளிகையா இது! சமரில் சந்திக்கப் போகின்றவனைச் சயனத்தில் பார்த்துவிடுவோம்!

[அனுமன் இப்பொழுது எறும்பு போன்ற சிறிய உருவம் எடுத்து, அரக்கர்களைக் கடந்து செல்கிறான். ஓர் அரக்கன் இதையும் பார்த்து விடுகிறான்]

**அந்த அரக்கன் :** வால் முளைத்த ஓர் எறும்பு உள்ளே போகிறது!

**இன்னொரு அரக்கன் :** எறும்பைப் பிடித்துச் சிறையில் அடைக்கப் போகிறாயா? சிதறிக் கிடக்கும் கற்கண்டை நோக்கி, அது போகும்! போகட்டும்! அதை வேலால் குத்தினால், விலா நோகச் சிரிப்பார்கள்!

## காட்சி - 194

இந்திரஜித் மாளிகை

படுக்கை அறை

[எறும்பு உருவில் இருக்கும் அனுமன், இந்திரஜித் அழகிகளோடு சயனித்திருப்பதைப் பார்க்கிறான்]

**அனுமன் :** (தனக்குள்) இவன்தான் ராவணன் மகன் இந்திரஜித்தா?

உறங்குகின்ற இந்த அரக்கர் மறவன், முக்கண் சிவனின் புகழ் மகன் முருகன் போலத் தெரிகின்றான்!

இவனோடு போர் என்றால், இளைய வீரன் லட்சு மணனோடு, என் ஏந்தல் ராமபிரான், பல நாள் போரிட வேண்டியிருக்கும்!

அப்படிப்பட்ட சிங்கம் இவன் என்பது, பார்த்தாலே தெரிகிறது!

இப்படி இவனைப் பார்த்து மலைத்துவிட்டுப் போகவா இங்கு நான் வந்தேன்?

குரங்குச் சேட்டை இங்கேயும் தொடரட்டும்!

என் அன்னையைக் காணாமல், நான் வாடிக் கொண்டிருக்க, இங்கு பாவையரோடு இவன் சுகித்துக் கொண்டிருப்பதா?

[அனுமன் கட்டில் காலை எற்றி விடக் கால் உடைந்து, கட்டில் கீழே விழுகிறது.

அழகிகளும், இந்திரஜித்தும், ஒருவர்மேல் ஒருவர் உருண்டு, பதறி எழுந்திருக்கின்றனர்].

## காட்சி - 195

இந்திரஜித் மாளிகை

படுக்கை அறை வாயில்

[ஓர் அரக்க வீரன் உரக்கக் கூச்சலிடுகிறான்]

**அந்த அரக்க வீரன் :** ஏமாற்றப்பட்டோம்! எவனோ பகைவன் உள்ளே புகுந்திருக்கிறான்! இளவரசின் நித்திரையைக் கெடுத்திருக்கிறான்!

**வேறொரு அரக்கன் :** வால் உள்ள எறும்பு ஒன்று நுழைகிறது என்று அப்போதே எச்சரித்தேன்! நீங்கள் கேட்கவில்லை!

[இப்பொழுது எறும்பு உருவில், அனுமன், அந்த அரக்கனின் உடையில் இருக்கிறான். அதை யாரும் கவனிக்கவில்லை)

(இவ்வாறு சொன்னவனை, ஓங்கி அறைகிறான், மற்றொரு அரக்கன்].

**அறைந்த அரக்கன் :** எங்களைக் குற்றம் சாட்டுகிறாயா? கோடாரிக் காம்பே! நீ முதலில் இங்கிருந்து வெளியேறு... போ!

[அடிபட்டவன் அங்கிருந்து வெளியேறுகிறான், தன் உடையிலுள்ள எறும்பு வடிவ அனுமனோடு]

**அறைந்த அரக்கன் :** (மற்றவர்களைப் பார்த்து) அறைக்குள் நுழைந்து, அணு அணுவாகச் சோதனையிடுங்கள்! புழு நெளிந்தாலும், அதற்கு விலங்கு பூட்டி இழுத்து வாருங்கள்!

## காட்சி - 196

*மாளிகைக்கு வெளியே*

**வெளியேறிய அரக்கன் :** இரவும் மனையாளும் இணைந்து வரமாட்டார்களா? என்று ஏக்கம் கொண்டிருந்தேன்! இன்று வாய்ப்புக் கிடைத்துவிட்டது.

வால் உள்ள எறும்பே! உன் வம்சம் வாழட்டும்!

[இவ்வாறு கூறிவிட்டு, அந்த அரக்கன் நடக்கிறான். எறும்பு வடிவில் இருக்கும் அனுமன், அவன் உடையிலிருந்து உதிர்ந்து விழுகிறான்].

## காட்சி - 197

*மண்டோதரி மாளிகை*

[மண்டோதரியின் மாளிகையினுள் நுழைகிறான் அனுமன்]

**அனுமன் :** (தனக்குள்) திருமாலின் திரு மார்பில் ஒளி உமிழும் கௌஸ்துப மணிபோல, இம்மணி மாளிகை விளங்குகிறது. எங்கள் நாயகர்க்கு உயிரினும் இனியாளை, இங்குதான் சிறை வைத்திருக்கவேண்டும்.

## காட்சி - 198

*மண்டோதரி மாளிகை*

*படுக்கை அறை*

[தேவ மகளிர் கால் பிடித்துவிட, ஒருத்தி கவரி வீச, இன்னொருத்தி வீணை இசைக்க, ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறாள், ஓர் அழகு மங்கை. அனுமன் மறைந்திருந்து இதைப் பார்க்கிறான்]

**அனுமன் :** *(தனக்குள்) தேவ மங்கையர் கால் பிடித்துவிடக், கவரி வீச, வீணை இசைக்க, இங்கு துயில்கின்ற மங்கை, சீதாதேவியரா?*

*என் ராகவன் துன்பத்தில் துடித்துக் கொண்டிருக்க, அவர் தேவியார், கற்பக மலர்களின் மணம் நுகர்ந்தபடி, கட்டிலிலே படுத்துறங்குவார்களா?*

*சீச்சீ! எண்ணக் கூடாதன எண்ணி விட்டேன்! என் அறிவு கெட்டுத் தடுமாறிவிட்டேன்! கற்புடைச் செல்வி, மாற்றான் மாளிகையின் கனகக் கட்டிலிலே கண் உறங்குவார்களா?*

*பாதகன் நான்! பாவத்தை எண்ணிவிட்ட பழிகாரன் நான்!*

*இதற்கெல்லாம் பரிகாரம், என் அன்னையைக் கண்டு ஆறுதல் சொல்வதுதான்!*

*என் அண்ணலிடம், அன்னை சிறையிருக்கும் இடத்தைச் சொல்வதுதான்!*

*ஆனால், உறங்குகின்ற இந்த மங்கை, உத்தம பெண்ணுக்குரிய இலக்கணத்தோடு இருக்கின்றாள்!*

*இவள் மலர் சூடிய கூந்தல், அவிழ்ந்து தொங்குகிறது! மருட்சியோடு உறக்கத்தில் புலம்புகிறாள்!*

*இவள் கணவனும், இவள் இருக்கும் நகரும், விரைவில் அழியும். என்பதற்கு, இவை அடையாளங்கள்!*

**ஓர் அரக்கி :** *(உரத்த குரலில்) அந்நிய ஆடவர் ஒருவர், நம் மண்டோதரி மகாராணி மாளிகைக்குள் நுழைந்திருப்பதாகத்*

*தெரிகிறது. மோப்பம் பிடித்து, ஓர் அரக்கி, இதை மொழிந் திருக்கிறாள்.*

*எனவே, தேவ மகளிரே! கவனமாக அரசியைப் பார்த்திடுங்கள்!*

**அனுமன் :** *(தனக்குள்) ஓ! பட்ட மகிஷி மண்டோதரியா இவள்! ராவணன் பேராசைக்காரன்! கையிலே சுவைக்கனி இருக்க, வேலி தாண்டிப் போய், மாற்றான் தோட்டத்திலே, பழம் பறித்துக் கொண்டிருக்கிறான்!*

*இனிமேல், இந்த மாதரசிக்கு, நிம்மதியான உறக்கம், சாவிலேதான் கிடைக்கும்!*

*[இவ்வாறு கூறிவிட்டு, அனுமன் அங்கிருந்து செல்கிறான்]*

## காட்சி - 199

*ராவணன் மாளிகை*

[ராவணன் மாளிகைக்குள், அனுமன் நுழைந்ததும், பூமி நடுங்குகிறது. இடி முழக்கம் கேட்கிறது. உயரே உள்ள கலசங்கள் உடைந்து விழுகின்றன]

**அனுமன் :** *(தனக்குள்) இங்கு நான் அடியெடுத்து வைத்தவுடன், பூமி நடுங்குகிறது. இடி குமுறுகிறது. கலசங்கள் உடைந்து விழுகின்றன.*

*இந்தத் தீய நிமித்தங்களைப் பார்க்கும்பொழுது, தீயவன் ராவணன் மாளிகை, இதுவாகத்தான் இருக்க வேண்டும் என்பது உறுதியாகிறது.*

*கொடியவன் மாளிகையிலே, தர்மத்தின் கொடி இருக்கிறதா என்று பார்த்து விடுவோம்!*

# காட்சி-200

*ராவணன் மாளிகை*

['சீதா! சீதா!' என்று உறக்கத்தில் வாய் பிதற்றிப் படுத்திருக்கும் ராவணனை, சிறிய உருவமெடுத்த அனுமன், கோபத்தோடு பார்க்கிறான்.]

**அனுமன் :** *(கோபத்தோடு தனக்குள்) மிதிலைச் செல்வியை வஞ்சித்துக் கொண்டு வந்த இந்த வஞ்சகனை, மிதித்துத் துவைத்து, அவன் மணிமுடியை, என் காலால் எற்றி உதைக்காவிட்டால், என்தோள் ஆற்றலால் என்ன பயன்?*

*இவனையும் இவன் நகரையும் நாசமாக்கித் திரும்பாவிட்டால், 'என் நாயகன் ராமனின் அடிமை நான்!' என்று சொல்லிக் கொள்ள, என்னால் முடியுமா?*

*[அனுமனின் மனச்சாட்சி, ஓர் உருவம் எடுத்து, அவன் முன் நின்று பேசுகிறது.]*

**அனுமனின் மனச் சாட்சி :** *கோபத்தில் கொதித்து, கொண்ட பணியை மறந்து விடாதே!*

*கரையைக் கடக்காமல், கட்டுண்டு கிடக்கும் கடலைப் பார்!*

*அந்தப்பாடம், உன் நெஞ்சிற் பதிந்திருக்க வேண்டும்!*

*ராவணனை, நீ இப்பொழுது கொல்வதால், உன் ராமனுக்கு இழுக்கே ஏற்படும்!*

*ஒரு குரங்கு பகையை முடித்து விட்டது, கோவேந்தன் வீணே இருக்க-என்று ஊர் ஏளனம் பேசும்!*

*சீதையைத் தேடுவதில் சிந்தையைச் செலுத்து! உன் இயலாமையை மறைக்க, எங்கோ பாய்கிறாய்! இது வீரமல்ல, விவேகமல்ல; அயோத்தி வீரனுக்குச் செய்யும் தொண்டும் அல்ல!*

*தேவியைக் கண்டுபிடி! உன் தேவன் ராமனிடம் அதைத் தெரிவி! அதை விட்டுத் தடம் மாறாதே!*

*விடம் உண்ட சிவனும், தனக்கிட்ட தொழிலைத்தான் செய்கின்றான்!*

**அனுமன் :** புரிந்து கொண்டேன். என் பணி என்ன என்பதைப் புரிந்து கொண்டேன்.

இந்த நகர் எங்கும் அலைந்து திரிந்து, என் நாயகனின் நாயகியைத் தேடுகிறேன்.

அழிய வேண்டியவர்களை, என் ஐயனின் வில் அழிக்கும்!

[இவ்வாறு கூறிவிட்டு, அனுமன் அங்கிருந்து செல்கிறான்.]

## காட்சி-201

*வெட்டவெளி*

[வெட்டவெளியில் வேதனையோடு நின்று கொண்டிருக்கிறான் அனுமன்.]

**அனுமன் :** (தனக்குள்) இந்நகரெங்கும் தேடினும், நல்லாளைக் காண முடியவில்லையே!

கொன்றானோ கற்பு அழியாக் குலமகளை? கொடுந் தொழிலான் தின்று விட்டானா? லங்கைக்கு அப்பால், எங்கேயாவது சிறை வைத்திருக்கிறானா? என் ராமனிடம் போய், நான் என்ன சொல்லுவேன்?

இட்ட பணியை முடிக்கவில்லை! பாவி, என் வாழ்வு முடியாது இருக்கின்றது!

சம்பாதி, லங்கையிலே திருமகள் இருக்கின்றாள் என்று சொன்ன சொல் பொய்த்து விட்டது!

பறவைகள் பகவர்தை உண்மையெனக் கொண்டு, நாட்களை நகர்த்தி விட்டேன்!

இனியும் காலங்கடத்துவது, தவறான செயலாகும்!

அறத்தின் செல்வியைக் கவர்ந்து வந்த அதர்ம ராவணனின் லங்கை நகரை அழித்து விட்டு, நானும் மடிவதே, பிறர் மதிக்கின்ற செயலாகும்!

இந்த லட்சணத்தில், எனக்கு வாயுபுத்திரன் என்று பெயர்!

அந்த வாயுதேவனுக்கு மானம் இருந்தால், என்னை இப்படி மயங்கிக் கலங்கித் தடுமாறித் தத்தளிக்க விடுவானா?

[இப்பொழுது பெருங்காற்று அடித்து, அனுமனை உருட்டிச் செல்கிறது.]

## காட்சி-202

*அசோக வனம்*

[காற்று அனுமனை ஒரு சோலையில் போய்ச் சேர்க்கிறது.]

**அனுமன் :** (தனக்குள்) இந்தச் சோலையை, நான் இதுவரை பார்க்கவில்லை! குறைமதி உடைய குரங்குதானே நான்! அதனால், இதைத் தவறவிட்டு விட்டேன்! வாயுதேவன், என்னை உருட்டிக் கொண்டு வந்து, இங்கு சேர்த்து விட்டான்!

நான் வணங்கும் ராமனின் தேவி, இங்குதான் இருப்பதாக, என் காதைத் திருகிச் சொல்லி விட்டான்!

அசோக மரங்கள் நிறைந்த இந்த அசோக வனத்தில்தான், என் அன்னை இருக்க வேண்டும்!

ஒரு மரத்தின் மேலேறி, என் மாதாவின் நடமாட்டம் தெரிகிறதா என்று பார்க்கிறேன்.

## காட்சி-203

*சுபர்வகிரிப் பிரதேசம்*

*முனிவரின் ஆஸ்ரமம்*

[கேசரியும் அஞ்சனையும், முனிவரின் ஆஸ்ரமத்திற்கு வந்து, அவரை வணங்கி நிற்கின்றனர்.]

**முனிவர் :** ஏதாவது குறையுண்டா உங்களுக்கு?

**அஞ்சனை :** சுவாமி! மனநிறைவாகப் பெற்ற பிள்ளை, மன்னன் ராமனின் சேவைக்காகச் சென்றானே! கைமேல் பலன் கிடைத்ததா? தெய்வ காரிகையை, என் புதல்வன் கண்டு விட்டானா?

இதைத் தெரிந்து கொள்ளாமல், என்னால் நிம்மதி பெறமுடியவில்லை! என் மதி மயங்கிக் கலங்குகிறது!

**முனிவர் :** நம்பிக்கையோடு இருங்கள். தெய்வமகளைத் தீமை தீண்டிவிடுமோ? தர்மம், அதன் தகிப்பில் வாடி விடுமோ?

**அஞ்சனை :** தர்மத்தின் வலிமையைச் சொல்கிறீர்கள். தலை மாத்திரம் உள்ள ராகு, சூரிய சந்திரரை விழுங்கிக் கொண்டிருக்கிறானே!

இதுதானே நடைமுறையாக இருக்கிறது! நான் நடுங்கு வதெல்லாம், என் பிள்ளை என்ன ஆனான் என்பதைப் பற்றி சுவாமி!

**முனிவர் :** லங்கையில், சீதாதேவி இருக்கும் சோலைக்குள், உன் சுந்தரன் சென்றுவிட்டான். ஆனால், இன்னும், அந்த ஜோதி தரிசனம் கிட்டவில்லை. விரைவில் பார்த்து விடுவான். தர்மத்தின் ஆற்றல் அப்போது வெளிப்படும்.

**அஞ்சனை :** (உணர்ச்சிப் பெருக்கோடு) நல்லன மொழிந்தீர்கள்! நாழித் தேனை, என் செவியிலே சேர்த்தீர்கள்! பெற்ற வயிற்றைக் குளிரச் செய்தீர்கள்!

பெருமானே! தங்களை, என் நெஞ்செடுத்துக் கும்பிட முடியாததால், கையெடுத்துக் கும்பிடுகிறேன்!

**முனிவர் :** உணர்ச்சி வசப்பட வேண்டாம். சோதனை வந்தாலும், யுகம் தோறும் தர்மந்தான் வெல்லும். வேத மொழியை நம்பி, வீடு செல்லுங்கள்.

**அஞ்சனை :** என் கண்ணைத் துணியால் கட்டிக் கொண்டு, குருடி போல, தட்டுத் தடுமாறி, விழுந்து எழுந்து, நான் வீடு போய்ச் சேரப் போகிறேன்! யாரும் எனக்கு உதவ வேண்டாம். என் மகனுக்காக, நான் செய்கின்ற நேர்த்திக் கடன் இது! எவரும் இதில் குறுக்கிட்டு, என் விரதத்தைச் சிதைத்து விட வேண்டாம்!

[இவ்வாறு கூறிவிட்டு, அஞ்சனை, தன் கண்களை, ஒரு துணியால் கட்டி, மறைத்துக் கொள்கிறாள்.]

## காட்சி-204

*காட்டு வழி*

[அஞ்சனை, கண் கட்டப்பட்ட கோலத்தில், காட்டு வழியிலே, உருண்டு புரண்டு, மரங்களில் மோதித் தடுமாறி விழுந்து எழுந்து சென்று கொண்டிருக்கிறாள்.

கேசரி, பக்கத்தில் நடந்தபடி, அவளைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்.]

**கேசரி :** *இதெல்லாம் தேவைதானா அஞ்சனை?*

**அஞ்சனை :** *தேவை என்று என் மனது தீர்மானமாகச் சொல்லி விட்டது! வீண்வேலை என்று நினைப்பவர்கள் விலகிச் சென்றுவிடலாம்!*

*எனக்கு யாரும் வழிசொல்ல வேண்டாம்! குருடாக இருந்து, நான் வீடுபோய்ச் சேர்ந்தால்தான், என் குமரன் வெற்றி பெறுவான்! அப்படியொரு நம்பிக்கையை நான் கொண்டு விட்டேன்! எனக்கு நன்மை செய்யக் கருது பவர்கள், ஒதுங்கி இருப்பதுதான் உத்தமம்!*

*[இவ்வாறு கூறிக் கொண்டிருப்பவள், ஒரு குழிக்குள் விழுந்து விடுகிறாள். கேசரி, வேதனையில் முகம் சுளிக்கிறார்.]*

## காட்சி-205

*அஞ்சனையின் வீடு*

[ஆடை கிழிய, ரத்தக் கிளறியோடு, கண் கட்டப்பட்ட கோலத்திலேயே, வீடு வந்து சேருகிறாள் அஞ்சனை.]

**கேசரி :** *(மகிழ்ச்சியோடு) அஞ்சனை! நீ, நம் வீடு வந்து சேர்ந்து விட்டாய் அஞ்சனை!*

*[அஞ்சனை மகிழ்ச்சியோடு, தன் கண்கட்டை அவிழ்க்கிறாள். கணவனின் காலடி விழப் போனவளைக் கேசரி தடுத்து, மனையாளை அணைத்துக் கொள்கிறார்.*

*அவள் உணர்ச்சிப் பெருக்கோடு அழுகிறாள்; சிரிக்கிறாள்; இரண்டையும் கலந்து செய்கிறாள்.]*

**கேசரி :** *உன் விரத பலத்தால், ஆஞ்சநேயன், இந்நேரம் சீதாதேவியைக் கண்டிருப்பான் அஞ்சனை!*

## காட்சி-206

*அசோக வனம்*

[அனுமன், ஒரு மரத்தின் மேலேறி, நாலு பக்கமும் தன் பார்வையைச் செலுத்துகிறான்.

அச்சோலையிலே, பர்ணசாலைக்கு வெளியிலே, ஒரு மரத் தடியில், சோகமே உருவாக, ஒரு மாது அமர்ந்திருப்பதைக் காண்கிறான். அரக்கியர் பலர், அவளைக் காவல் காத்துக் கொண்டு இருப்பதையும் பார்க்கிறான்.

அப்பெண் நல்லாள் சீதையே என்ற முடிவுக்கு வருகிறான் ]

**அனுமன் :** *(தனக்குள் பரவசத்தோடு) கண்டுவிட்டேன் தேவியை! துயில் எனக் கண்கள் இமைத்தலும் முகிழ்த்தலும் துறந்த தெய்வத் தோகையைக் கண்டு விட்டேன்!*

*வெயிலிடை வைத்த விளக்கு என ஒளியிழந்து இருக்கும் உத்தமியைக் கண்டுவிட்டேன்!*

*புலிக் குழாத்திடை அகப்பட்ட மான் என அரக்கி யரிடை, என் மாதரசியைக் கண்டு விட்டேன்!*

*விழுதல், விம்முதல், மெய்உறவெதும்புதல், வெருவல், எழுதல், ஏங்குதல், இரங்குதல், என் ராமனை எண்ணித் தொழுதல், சோருதல், துளங்குதல், துயர் உழந்து உயிர்த்தல், அழுதல், அன்றி மற்று அயல் ஒன்றும் செய்வதறியாத சேயிழையைக் கண்டுவிட்டேன்!*

தர்மம் சாயவில்லை! நானும் இனி ஓயமாட்டேன்! என் நாயகன் ராமன், பாற்கடலில் இருந்து நீங்கிய தேவனே!

இப்பெருமாட்டியோ, கமலச் செல்வியே! பாவி ராவணன், தன் உயிரைப் பறிகொடுக்க, இந்தத் திருமகளைக் கவர்ந்து வந்து, காலனை அழைத்து விட்டான்!

இந்தத் தேவியைத் தீண்ட அஞ்சி, சிறை வைத்திருக்கிறான் சிறுமதியாளன்!

இந்த நல்லாளைத் தருமமே காத்ததோ? ஜனகன் நல்வினைக் கருமமே காத்ததோ? கற்பின் காவலோ இது?

இந்த அருமையை உரைக்க, மொழி உளதோ?

## காட்சி-207

*கயிலை மலை*

[சிவனார் மகிழ்ச்சியோடு, தன் கையிலுள்ள உடுக்கையை அடிக்கிறார்.]

**சிவன் :** என் அம்சமான அனுமான், சீதையைக் கண்டு விட்டான்! கதை நகர்ந்து விட்டது! தர்மத்தின் காலம் தொடங்கி விட்டது!

## காட்சி-208

*மூங்கிற் காடு*

[மூங்கிற் காட்டிலே, வாயுதேவன் பரவசத்தோடு நின்று கொண்டிருக்கிறான்.]

**வாயுதேவன் :** வாயுபுத்திரன் வல்லமை, இனியுகம் தோறும் பேசப்பெறும்!

இந்த மகிழ்ச்சியை, இசையாக, இந்த மூங்கிலிலே பேச வைக்கிறேன்!

[காற்றில் அசைந்தாடும் மூங்கில்கள், கான இசையைக் கொட்டுகின்றன.]

## காட்சி-209

*வானம்*

[வானிலே தேவர்கள் திரண்டிருக்கின்றனர்.]

**ஒரு தேவர் :** *செயற்கரிய செய்யப் போகும் செம்மலுக்கு, நம் கரம் நிறைய மலர் எடுத்துத் தூவுவோம்!*

*(தேவர்கள், அனுமன் மீது மலர்மாரி பொழிகின்றனர்.)*

## காட்சி-210

*பாற்கடல்*

[திருமால் அருகிருக்க, திருமகள் மகிழ்ச்சியோடு சிரிக்கிறாள்.]

**திருமகள் :** *அப்பாட! அந்தச் சீதையின் துன்பம் தொலைந்தது! அனுமன் அவளை ராமனிடம் கொண்டு சேர்ப்பித்து விடுவான்!*

**திருமால் :** *அவ்வளவு சீக்கிரம், இந்தக் கதை முடிந்து விட்டால், சுவை ஏது?*

*யுகம் கடந்தும் பேசப்பட, இன்னும் பல தடை கடந்து செல்ல வேண்டும்!*

**திருமகள் :** *அப்படியானால், இனியும் அவள் அல்லற்பட வேண்டுமா?*

**திருமால் :** *கண்ணீரால் எழுதப்படுகின்ற காவியந்தான், மானிடத்தின் உள்ளத்தைக் கரைக்கும்! தர்மத்தை அங்கு விதைக்கும்!*

*ஓர் உத்தமியின் கண்ணீரிலே, ஓராயிரம் நீதிகளை, இந்த உலகம் படிக்கும்!*

## காட்சி-211

*அசோக வனம்*

[அனுமன் மரத்திலிருந்து குதித்து, சீதை இருக்குமிடம் நோக்கிப் பதுங்கிப் பதுங்கிச் செல்கிறான்.

அப்பொழுது தேவமகளிரோடு, ராவணன் அங்கு வருவது கண்டு, அங்கு உள்ள ஒரு மரத்தில் ஏறி, மறைந்து கொள்கிறான்.

ராவணன் அருகில் வர, சீதை நடுநடுங்குகிறாள்.]

**ராவணன் :** *தோகையே! தூக்கம் பிடிக்காமல், இந்த நள்ளிரவில், உன்னை நாடி, இந்த அசோகவனம் வந்தேன்!*

*இந்த நேரத்திலும், ஊர்வசி, என் உடைவாளை ஏந்திக் கொண்டு, என்னோடு வந்திருக்கிறாள்!*

*மேனகை, தாம்பூலத் தட்டோடு, கை தாழ நின்று கொண்டிருக்கிறாள்.!*

*திலோத்தமை மாற்றுச் செருப்பினை, மனம் உவந்து ஏந்தியபடி நிற்கிறாள்!*

**அனுமன் :** *(தனக்குள் கோபத்தோடு) வெட்டுண்ட உன் தலையை ஏந்திக் கொண்டு, யார் நிற்கப் போகிறார்கள்? அதுதான் இனிமேல் பார்க்கப்பட வேண்டிய காட்சி!*

**அனுமன் :** *(உரத்தகுரலோடு) வாழி ஜானகி! வாழி ராகவன்! வாழி நான்மறை! வாழி நல் அறம்!*

**ராவணன் :** *என்ன சத்தம் அது? யார் பேசுவது?*

**ஓர் அரக்கி :** *ஒன்றுமில்லை மாமன்னா! காற்றில் மரக்கிளைகள் ஆடி, கலகலவென்று பேசுகின்றது. வேற்று மனிதர் இங்கு காலூன்ற, அரக்கியர் நாங்கள் விடுவோமா?*

**ராவணன் :** *சரி, எல்லோரும் கொஞ்சம் விலகி இருங்கள். நான், இந்தப் பெண்ணிடம் தனித்துப் பேச வேண்டும்; என் தாகம் தணிக்கப் பேச வேண்டும்!*

*[அரக்கிகளும் தேவமகளிரும் விலகிச் செல்கின்றனர்.]*

## காட்சி-212

*வானம்*

[வானிலே தேவர்கள் திரண்டிருக்கின்றனர்.]

**ஒரு தேவர் :** *சீதைக்கு ஏதாவது ஆபத்து வருமோ?*

**இன்னொரு தேவர் :** *அறத்தின் செல்வியைத் தொட்டால், அவன் தலை வெடித்து விடும்!*

*மேலும் அனுமனும் அங்கு இருக்கிறான். வரம்பு மீறி எதுவும் நடக்காது.*

**மற்றொரு தேவர் :** *சாமவேதம் பாடிய வாயால், சரசமொழி பேசுவான் சழக்கன்!*

*தீயோடு விளையாடும் ஈசல் பூச்சி, இந்த ராவணன்!*

## காட்சி-213

*அசோக வனம்*

[சீதை, தொடைகளால் வயிற்றையும், கைகளால் மார்பையும் மறைத்துக் கொண்டு, கண்ணீர் வழிய அமர்ந்திருக்கிறாள்.]

**ராவணன் :** *(காமத்தின் வயப்பட்டவனாக)*

*சீதா! அந்த ராமன் இன்னும் இறக்காமல், காடு கடந்து போய், அயோத்தியில் வாழ்ந்தாலும், அவனோடு வாழும் அந்த அற்பமானிட வாழ்வில், என்ன சுகம் இருக்கிறது?*

*இளமையை வீணே பலியிட்டு விடாதே!*

*இந்த ராவணனோடு இணைந்திருந்தால், தேவலோக இன்பத்தை, நீ திகட்டும் அளவு அனுபவிக்கலாம்!*

*உயிர்களுக்கு இரங்கும் கருணைக் குணம், ஜனகர் குலத்தில் இல்லாமற் போயிற்றா?*

*என் மீது கருணை வை! மூன்று உலகத்தையும் நீ கட்டி ஆளலாம்!*

காதணியோடு உறவாடும் உன் செங்கண், என்னைச் சித்திரவதை செய்கிறது!

உன் கூந்தல், என்னைக் கூவிக்கூவி வெறியேற்றுகிறது!

உன் இடையோ, என்னை நடை தடுமாறச் செய்கிறது!

எந்தப் போரிலும், நான் தோற்றதில்லை! மன்மதன் தொடுக்கும் இந்தப் போரில், தோற்றுத் துவண்டு கொண்டிருக்கிறேன்!

உன் மார்பகம், மா முனிவர்கள் வேதத்தைக் கண்டு வியப்பது போல், என்னை வியக்க வைக்கிறது. நான் உன் அடிமை!

எனக்கு உயிர்ப் பிச்சை கொடு! என் மோகத்தைத் தாகத்தைத் தீர்த்துவிடு!

கயிலையை எடுத்தவன், உன் கால்களில் விழுகிறேன்!

[இவ்வாறு கூறி, ராவணன், அவள்முன் விழுந்து கும்பிடுகிறான்.]

## காட்சி-214

*வானம்*

(வானிலே உள்ள தேவர்கள், இதைக் கண்டு, விலாநோக சிரிக்கின்றனர்.)

## காட்சி-215

*அசோக வனம்*

**அனுமன் :** *(தனக்குள்)* செய்த பாவத்தை எண்ணி, இப்படிக்கீழே விழுந்து மன்னிப்புக் கேட்டால், உன் உயிர் பிழைக்கும், உன் லங்கையும் அழிவிலிருந்து தப்பிக்கும்!

அதை விட்டுவிட்டு, ஒரு தாயிடம் காமத்தை யாசிக்கும் கயவனே! நீயும், உன் குலமும் பூண்டற்றுப் போகும்!

## காட்சி-216

*வானம்*

**ஒரு தேவர் :** *தவத்தால் வரம்பல பெற்றவன், காமத்தால் கண் அவிந்து விட்டான்!*

*அவன் பார்ப்பதெல்லாம், இனி இருட்டுத்தான்!*

*அவன் பேசுவதெல்லாம், இனிப் பிழைதான்!*

*அவன் செய்வதெல்லாம், இனிப் பாவந்தான்!*

*அவன் மாள்வது, தர்மத்தின் வாழ்வுதான்!*

## காட்சி-217

*அசோக வனம்*

[ஆடையில் படிந்த மண்ணைத் துடைத்தபடி, எழுந்து நிற்கிறான் ராவணன்.]

**சீதை :** *ஒரு துரும்பு போன்ற அற்பனே! இரும்பு நெஞ்சோடு நீ பேசியவை, அழியப் போகிறவனின் அர்த்தமற்ற அலறல்!*

*என் கணவனின் வில் அம்பை, உன்னால் சந்திக்க முடியுமா?*

*சமர் வந்தால், உன் தலை சிதறிப் போகும்!*

*அவர் தொடுக்கும் அம்பு, மேருவை உருவிச் செல்லும்! விண்ணைப் பிளந்து காட்டும்! ஈர் ஏழு புவனத்தையும் அழித்தொழிக்கும்!*

*அதைத் தெரிந்துதான், பயந்துதான், துறவிக் கோலத்தில் வந்து, பேடி போல், பெண்ணைக் கவர்ந்து வந்தாய்!*

*வீரம் பேச, உனக்கு நாவேது? பிறர் உதிரம் குடிக்கத் தான், உனக்கு அது இருக்கின்றது!*

*கயிலைக் குன்றை நீ எடுத்த நாள், தன் சேவடி அழுத்தத்தால், உன்னை வென்றவன் சிவன்!*

அந்தச் சிவனின் தனுசை இற்று வீழ்த்தியவன் என் வேந்தன்!

மலை எடுத்த நீ, எண்திசைக் களிறுகளின் நிலை கெடுத்த நீ, ஏன் சிலை எடுத்த இளவல் லட்சுமணன் முன் வர அஞ்சினாய்?

இளையவன் இல்லாதபோது, நுழைந்து நீ பிழை செய்தாய்!

உன்னைப்பற்றி, நீ பெருமை பேச என்ன இருக்கிறது?

நான் இருக்குமிடம், என் கோமகனுக்குத் தெரிந்தவுடன், இந்த லங்கை அழியும்! உன் உயிர் ஓயும்!

மானிடர் இவர் என்று, என் மணாளனையும், அவர் இளவலையும் எளிதாக எண்ணி விட்டாய்!

மலை எனும் கார்த்த வீரியனை, வலியொடுங்கச் செய்த பரசுராமனின் தனுசை வளைத்து, வெற்றி கண்டவர், என் வேந்தர்!

நீ பகைப்பது, உலகு அழிக்கும் ஊழியானை!

இந்த உணர்வைப் பெற்றால், நீ உயிர் பிழைக்கும் உபாயம் உண்டு!

இப்பெருஞ்செல்வம், ஈசன் உனக்கு அளித்தது, நீ செய்த தவத்தால்!

இப்பொழுது நீ செய்கின்ற பாவத்தால், இத்திருவைத் தொலைத்து, உறவைத் தொலைத்து, அறத்தைத் தொலைத்து, மரணத்தை அணைக்கப் போகிறாய்!

தென் தமிழ் உரைத்தோன், தீதுதீர் அகத்திய முனிவன், அரக்கர் புன்தொழில்பற்றி, அன்றே சொன்னான்!

கடிக்கின்ற பாம்புகூட, மந்திரத்திற்குக் கட்டுப்படும்! உன்னை இடித்துரைத்து, ஏற்புடையன சொல்ல, உன் அமைச்சரவையிலே, ஒருவரும் இல்லையா?

நீ அழியப் போகும் முடிவு, உனக்கு விதியாக வந்து கொண்டிருக்கிறது!

**ராவணன்** : *(கோபத்தோடு) அதிகமாகப் பேசிவிட்டாய்! என் சீற்றத்தைக் கிளறிவிட்டாய்! அணைக்கு வேண்டிய உன் உடலை, நான் பிளந்து தின்னப் பெருங்கோபத்தை மூட்டிவிட்டாய்!*

## காட்சி-218

*அசோக வனம்*

*அனுமன் மறைந்திருக்கும் இடம்*

**அனுமன்** : *(தனக்குள்) ராவணா! உன்னைப் பிளந்து நரிக்கு விருந்தாக்குகிறேன்!*

*என் தெய்வத்திடம் பேசத் தகாதனப் பேசியவனைப் பிணமாக்குகிறேன்!*

*[இவ்வாறு கூறி, அனுமன் மறைவிலிருந்து வெளிவரும் பொழுது, வாயுதேவன் குரல் அவனைத் தடுக்கிறது.]*

**வாயுதேவன் குரல்** : *பொறு அனுமான்! உன் தந்தை வாயுதேவன் பேசுகிறேன்!*

*இப்பொழுது ராவணனைக் கொன்று விட்டால், லங்கை திரண்டு விடும்!*

*அப்பொழுது சீதையின் உயிருக்கு என்ன பாதுகாப்பு?*

*காலமறிந்து போரைத் தொடங்க வேண்டும்!*

*அதைக் காகுத்தன் பொறுப்பில் விட்டு விடு!*

*தொண்டன் தலைவன் ஆகக் கூடாது!*

*சேவகன், ஜெகம் ஆளுபவனாகத் தன்னை நினைத்து முடிவெடுக்கக் கூடாது!*

*[இதைக் கேட்டவுடன், அனுமன் அமைதியாகி, மறைவிடத்திற்குத் திரும்புகிறான்.]*

# காட்சி-219

*அசோக வனம்*

*சீதை இருக்குமிடம்*

**ராவணன் :** *அறியாப் பெண்ணே! என்னை வீரமற்றவன் என்று ஈரமின்றிப் பேசினாய்! நான் பெற்ற தோல்விகளைத் தொகுத்துச் சொன்னாய்! வெல்வதும் தோற்பதும், மாறி மாறி வரும் நிகழ்ச்சிகள்!*

*எங்கோ தோல்வி கண்டதால், என் வல்லமை குறைந்து விட்டதாக, நான் நினைக்கவில்லை!*

*உன் ராமனைக் கொன்று, உன்னைக் கொண்டு வந்திருந்தால், நீ உயிரை விட்டிருப்பாய்!*

*அந்த இழப்பைத் தவிர்க்கத்தான், அந்த ராமனை வாழவைத்தேன்! அவனுக்கு அஞ்சி ஒதுங்கவில்லை!*

*ராவணன் உன்னை எடுத்துச் சென்றான் என்று கேட்ட பின்பு, உன்னை மீட்க, இந்திராதி தேவர்களும் இங்கு வரமாட்டார்கள்! உன் ராமனுக்கு அந்தத் துணிவு வந்து விடுமா?*

*வேண்டுமானால், அந்த ராமலட்சுமணரைப் பிடித்து வந்து, எனக்கு ஏவல் செய்ய வைக்கிறேன்!*

*உன் இருவிழிப் பார்வையில், உன் சிங்கங்கள், சிறு எலியாக, இங்கு வளைய வருவதைப்பார்!*

*அவர்களைக் கொன்றால்தான், உன் மனம் மாறும் என்றால், அதையும் அட்டியின்றிச் செய்கிறேன்!*

*அவர்களின் அயோத்தி நகரையும், உன் அப்பனின் மிதிலை நகரையும், ஊழித் தீயைப்போல், சூறையாடி விடுகிறேன்!*

*இவ்வளவு அழிவையும் தடுப்பது, இணக்கமான உன் மொழியில்தான் இருக்கிறது!*

*இன்னும் ஓர் இரண்டு மாதம் எடுத்துக்கொள். அதற்குள் என் மார்பிலே நீ படர, சம்மதம் தெரிவிக்க வேண்டும்!*

*இல்லையென்றால், உங்கள் குடியும் குலமும், சர்வநாசமடையும்!*

*[விலகி நிற்கும் அரக்கிகளைப் பார்த்து]*

*ஏ அரக்கிகளே! உலக்கைகளாக, உரலாக இங்கு இருக்காதீர்கள்!*

*இவளிடம் நயமாகச் சொல்லுங்கள். பயப்படுத்திப் பேசுங்கள். நல்ல முடிவுக்கு, இவளைக் கொண்டு வாருங்கள். நாழிகையை வீணாகக் கடத்திக் கொண்டிருந்தால், உங்களுக்கு நஞ்சு ஆகிவிடுவேன்!*

*[இவ்வாறு கூறிவிட்டு, ராவணன் அங்கிருந்து செல்கிறான்.]*

## காட்சி-220

*அசோக வனம்*

*அனுமன் மறைந்திருக்கும் இடம்*

**அனுமன் :** *(தனக்குள்) இரண்டு மாதம் கெடுவா வைக்கிறாய் கெடு!*

*கேடு கெட்டவனே! உன் ஆயுளுக்கு நீ கெடு வைத்து விட்டாய்!*

*மூடனே! நீ விரைவில் அழியப் போவதை உணர்த்தும் முறையிலே, இப்பொழுது உருளப் போகிறாய்!*

*[அனுமன், தன் வாலைப்பெரிதாக வளரச் செய்கிறான்.]*

## காட்சி-221

*அசோக வனம்*

*பிறிதோர் இடம்*

[நடந்து போகும் ராவணன், அனுமனின் வளர்ந்த வால்பட்டுக் கால் இடறிக் கீழே உருளுகிறான். அரக்கியர் ஓடிவந்து, அவனைத் தூக்கி விடுகின்றனர்.

அனுமன் வாலைச் சுருக்கிக் கொள்ள, ராவணன் சுற்று முற்றும் பார்க்கிறான்.]

**ராவணன் :** எது என்னை இடறச் செய்தது?

**ஓர் அரக்கி :** மரத்தின் வேராக இருக்கும் மன்னவா! தங்களைத் தீண்டி மகிழ, மங்கையரோடு மரமும் ஆவல் கொள்கின்றது!

[ராவணன் அங்கிருந்து போகிறான்.]

## காட்சி-222

*அசோக வனம்*

[அரக்கியர்கள் சீதையிடம் கடுமொழி பேசுகின்றனர்.]

**ஓர் அரக்கி :** பிரஜாபதி புலஸ்தியரின் பேரன், எங்கள் மன்னன் ராவணன்! அவன் பஞ்சணைக்குக் கூப்பிட்டால், தஞ்சம் என்று ஓட வேண்டாமா? இதை விட உயர்ந்த பேறு, உனக்கு என்ன கிடைக்கப் போகிறது?

[இப்பொழுது அனுமன் விட்டகல், இப்படிப் பேசியவளின் தலையில் படுகிறது. அவள், இதைச் செய்தது யார் என்று திரும்பிப் பார்க்கிறாள்.]

**வேறொரு அரக்கி :** (சீதையை நோக்கி) இந்திரனை வென்றவரை, நீ உன் அழகால் வென்றிருக்கிறாய்! இப்படி வீழ்ந்தவரோடு மஞ்சத்தில் வீழ்ந்து கிடக்காமல், எவனுக்கோ நான் மனைவி என்று எள்ளும்படி பேசுகிறாயே!

[இப்பொழுது இவள் தலையிலும், அனுமன் குறிபார்த்துச் சிறு கல்லை எறிய, அவள் சுற்று முற்றும் பார்க்கிறாள்.]

**கல்லடிபட்ட அரக்கி :** யாரடி என் மேல் கல்லை எறிந்தது?

**மற்ற அரக்கிகள் :** நாங்கள் இல்லை.

**கல்லடிபட்ட அரக்கி :** உங்களைத் தவிர, வேறு யார் இங்கு இருக்கிறார்கள்?

**இன்னொரு அரக்கி :** (சீதையை நோக்கி) பேரழகி மண் டோதரியை விட்டு, உன் மடியை நாடி வருகிறார் என்றால்,

*பட்ட மகிஷி என்ற கொடியை நீ நாட்டி விடலாம்! அதை விட்டுப்பட்டுப் போன அந்த மனிதனுக்காக வாழப் போகிறேன் என்று வாய் பிதற்றாதே!*

*[இப்பொழுது இவள் தலையிலும், அனுமன் விட்ட சிறு கல் விழுகிறது.]*

**கல்லடிபட்டவள் :** எவளடி இப்படிக் கல்லை எறிந்து கலகம் செய்வது?

**சீதை :** *அரக்கிகளே! அருவெருப்பான வார்த்தைகளைப் பேசுகிறீர்கள்!*

*அக்னிசாட்சியாகக் கல்யாணம் செய்து கொண்டவரே, பிறவிதோறும் கணவர் என்று கொள்வதுதான், எங்களுக்குப் பெருமை!*

*சசிதேவி, இந்திரனுக்கு உரியவள் போல, அருந்ததி வசிஷ்டருக்கு உரியவள் போல, சாவித்திரி சத்தியவானுக்கு உரியவள்போல, ஸ்ரீமதி கபிலருக்கு உரியவள்போல, கேசினி சகரனுக்கு உரியவள் போல, தமயந்தி நளனுக்கு உரியவள் போல, இந்துமதி அஜனுக்கு உரியவள்போல, நான் ரகுகுலத் தோன்றல், ஸ்ரீராமனுக்கு உரியவள்!*

*இதை உணர்ந்து கொண்டு, பாவமான பேச்சைப் பேச வேண்டாம்.*

**ஓர் அரக்கி :** *(மிரட்டலோடு)* என்னடி சொன்னாய்? பாவம் புண்ணியமெல்லாம், பரதேசிகள் பேசும் பேச்சு! எங்கள் மன்னர் மனம் கோணாமல் நடந்து கொள்! உன்னை அலங்கரித்துக் கொள்!

ராவணனின் படுக்கை அறைக்குள் நுழைய, மனிதப் பிறவி எடுத்த நீ, என்னை பாக்கியம் செய்திருக்க வேண்டும்!

*[இப்பொழுது இவள் தலைமேலும், அனுமன் விட்ட கல் விழுகிறது.]*

**கல்லடிபட்டவள் :** துரோகிகளா! திருட்டுத்தனமாகக் கல் வீசும் கழிசடைகளா!

**இன்னொரு அரக்கி :** *அடிசீதை! உள்ளங்கையிலுள்ள நீரைப் போன்றது இளமை! விரைவில் ஒழுகிப் போய்விடும்! இருக்கின்றபோது அனுபவித்து விடவேண்டும்!*

மன்னரோடு மது அருந்தி, அவர் மார்பில் சாய்ந்த கிடக்க, எத்தனை பெண்கள் ஏங்கிக் கொண்டிருக்கிறார்கள்! உனக்கு எளிதாகக் கிடைத்து விட்டது இந்தப் பாக்கியம்! அமிர்தத்தை ஒதுக்கி வைத்து விட்டு, நஞ்சைத் தின்று, நாக்கை எரித்துக் கொள்ளாதே!

[இப்பொழுது இவள் தலையிலும் கல்விழ, இவள் கோபமாகச் சுற்று முற்றும் பார்க்கிறாள்.]

**வேறொரு அரக்கி :** நாங்கள் சொன்னதைக் கேட்காவிட்டால், உன்னைப் பச்சையாகவே தின்று விடுவோம்!

[இவள் தலையிலும் கல் விழுகிறது.]

**சீதை :** இப்படி வார்த்தைகளால் கொல்வதைவிட, உங்கள் கைகளால் என்னைக் கொன்று தின்று விடுங்கள்!

இந்தத் துன்பத்திலிருந்து, எனக்கு விடுதலை கிடைத்து விடும்!

**ஓர் அரக்கி :** அப்படியா! இவள் கையைக் கடித்துச் சுவைக்க, நான் எடுத்துக் கொள்கிறேன்.

(இவள் தலையில் கல் விழுகிறது.)

**வேறொரு அரக்கி :** இவள் காலை, என் பங்குக்கு எடுத்துக் கொள்கிறேன்.

(இவள் தலையிலும் இப்பொழுது கல் விழுகிறது.)

**மற்றொரு அரக்கி :** இவள் மார்பை, மாமன்னருக்கு ஒதுக்கி விடுவோம்.

[இவள் தலையிலும் கல் விழுகிறது. கல்லடிபட்ட அரக்கிகள், கல்லெறிந்ததாக மற்ற அரக்கிகள் மேல் சந்தேகப்பட்டு, அவர்கள் மீது பாய்ந்து, கட்டி உருண்டு சண்டை போடுகின்றனர். அரக்கிகள் கத்திக்கொண்டு, கதறிக்கொண்டு, மண்ணிலே புரண்டு, ஒருவரோடு ஒருவர் சண்டையிடுகின்றனர்.]

## காட்சி-223

*அசோக வனம்*

[மரத்தின் மறைவில் இருக்கும் அனுமன், ஓர் எறும்பு உருவம் எடுத்துக் கொள்கிறான்.]

## காட்சி-224

*அசோக வனம்*

[திரிசடை வந்து, சண்டையிடும் அரக்கியரை அதட்டி, அமளியைத் தடுத்து நிறுத்துகிறாள்.]

***திரிசடை :*** *பேய்களா! எதற்காக இப்படிக் கட்டிப் புரண்டு சண்டை போட்டுக் கொண்டு இருக்கிறீர்கள்?*

***ஓர் அரக்கி :*** *எங்களுக்குப் பசி எடுக்கிறது. (சீதையைக் காட்டி) இவளைத் தின்னப் போகிறோம்!*

*[இப்பொழுது இந்த அரக்கி, வலியால் துடித்து, தன் தலையைத் தடவிக் கொள்கிறாள்.*

*இவள் தலைமேல், எறும்பு உருவில், அனுமன் இருக்கின்றான்.]*

***திரிசடை :*** *பசி எடுத்தால், உங்கள் காலைக் கையைப் பிய்த்து எடுத்துத் தின்று கொள்ளுங்கள்!*

*விடிகாலை வேளையில், கனவு ஒன்று கண்டு, நான் இங்கு ஓடி வருகிறேன்.*

***அரக்கிகள் :*** *என்ன கனவு? என்ன கனவு?*

***திரிசடை :*** *வெள்ளி முளைக்கும் போது கண்ட கனவு, தள்ளுதல் இல்லாமல் பலிக்கும் என்று சொல்வார்கள்!*

***ஓர் அரக்கி :*** *(கோபத்தோடு) விபீஷணன் மகள் திரிசடையே! அந்தக் கனவு என்னவென்று சொல்லித் தொலையேன்!*

**திரிசடை :** இரு மானிடர், யானைமேல் அமர்ந்து, நம்லங்கை நகர்க்கு வருகின்றனர். இந்தச் சீதையை அழைத்துக் கொண்டு, வடக்கு நோக்கிச் சென்று விடுகின்றனர்.

**ஓர் அரக்கி :** அதை நம் மன்னர் பார்த்துக் கொண்டா இருந்தார்?

[இப்பொழுது, 'ஆ!' என்று வலியால் துடித்து, அந்த அரக்கி, தன் காதைத் தடவிக் கொள்கிறாள். காதுப்பக்கம், எறும்பு உருவில், அனுமன் இருக்கின்றான்.]

**திரிசடை :** மன்னர், தைலத்தை உடலெங்கும் பூசிக்கொண்டு, மதுவுண்டு, மண்ணிலே புரண்டு கொண்டிருந்தார்!

பின்னர் மன்னர் புஷ்பக விமானத்தில் இருந்து, தலை குப்புற விழுந்தார்!

பின்னர் கழுதைகள் பூட்டிய தேரில் ஏறிக்கொண்டு, தெற்கு நோக்கிப் பித்துப் பிடித்த நிலையில் சென்றார்!

[அரக்கிகள், இதைக் கேட்டுப் பயத்தால், வாய் பிளந்து இருக்கின்றனர்.]

**ஓர் அரக்கி :** மன்னர் தென்திசை சென்றாரா? அப்படியென்றால் லங்கை அழியப் போகிறதா?

**திரிசடை :** லங்கை அழிவதையும், என் கனவில் பார்த்தேன்! ஒரு வானரம், இந்நகரைக் கொளுத்துவதைப் பார்த்துத் திடுக்கிட்டு எழுந்தேன்!

**வேறொரு அரக்கி :** வாங்கடி! லங்கை அழியும்போது, நாமும் அழிந்து விடுவோம்! அந்தத் துன்பம் நம்மைத் தொடாமல் இருக்க, மதுவுண்டு உருண்டு விடுவோம்!

**இன்னொரு அரக்கி :** ஆமாம். உணர்வு இருந்தால் தானே உயிரைப் பற்றிய கவலை இருக்கும்!

மயக்கத்திலே அமைதி காண்போம்!

கிறக்கத்திலே ஆறுதலைக் காண்போம்!

அரக்கிகளுக்கு இதுவே சுகம்! சொர்க்கம்!

[கூச்சலிட்டபடி அங்கு இருந்து ஓடுகின்றனர் அரக்கிகள்.]

## காட்சி-225

*அசோக வனம்*

[அரக்கிகள் மதுக்குடங்களை எடுத்துக் குடிக்கின்றனர். மது வெறியில், ஒருவர் தலைமேல் மற்றொருவர், மதுக் குடங்களைப் போட்டு உடைக்கின்றனர். பின்னர் மயங்கிக் கீழே சாய்கின்றனர்.]

## காட்சி-226

*அசோக வனம்*

[சீதையிடம் திரிசடை ஆறுதல் மொழி பேசுகிறாள்.]

**திரிசடை :** *சீதா! உன் உடலில் இடப்பக்கம் துடித்தலால், உன் துணைக் கணவனை, நீ அடைதல் உறுதி!*

*பொன் நிற வண்டு ஒன்று, உன் செவியில் மெல்லென ஊதிப் போனதால், உன் ஆவி நாயகன் ஏவிய தூதுவன், விரைவில் வருவான்! உன்னைப் பார்ப்பான்!*

*தீயது தீயவர்க்கு எய்தல் திண்ணம். ஆண்தகை ராவணன் வளர்த்த யாகத் தீ, எரியாமல் அணைந்ததையும், என் கனவில் கண்டேன்!*

*எங்கள் மன்னரின் அரண்மனை, இடி தாக்கி, பொடியுண்டதையும் கண்டேன்!*

*லங்கை வானிலே உள்ள நட்சத்திரங்கள், உதிரக் கண்டேன்!*

*அடிப்பாரின்றி முழங்கும் முரசுகளையும், ஆகாயத்தில் வலம் வரும் சூரியன், பிளவுபட்டு அச்சமூட்டியதையும் கண்டேன்!*

*திசைகள் எரியக் கண்டேன்!*

*மங்கலக் கலசங்கள் உடையக் கண்டேன்!*

தோரணம் முறியக் கண்டேன்!

யானையின் தந்தங்கள் உடையக் கண்டேன்!

பூரண குடத்துப் புனித நீர், பொங்கும் கள்ளாக மாறக் கண்டேன்!

அரக்க மங்கையரின் மங்கலத் தாலி மற்றவரால் பற்றப்படாமல், அறுபட்டு வீழக் கண்டேன்!

மண்டோதரியின் கூந்தலில் தீ பற்றிக் கொள்ளும் தீய நிமித்தமும் கண்டேன்!

இரண்டு ஆண் சிங்கங்கள், புலிக் கூட்டத்தோடு, லங்கை நகருக்கு வரக்கண்டேன்!

இங்கு அடைப்பட்டுக் கிடந்த ஒரு மயிலை மீட்டுக் கொண்டு, அந்தச் சிங்கங்கள் செல்லக் கண்டேன்!

என் கனவில் கண்டவை நனவாகும் - நம்பு தாயே! நல்லுறக்கத்தைச் சிறிதுநேரமாவது கொள். நான் உன்னைப் பிறகு வந்து பார்க்கிறேன்.

[இவ்வாறு கூறிவிட்டுத் திரிசடை அங்கிருந்து போகிறாள்.

அவள் காலடியில், ஒரு மலரை எறிகிறான், மறைந்திருக்கும் அனுமன்.]

## காட்சி-227

பாற்கடல்

**திருமகள் :** (திருமாலிடம் கோபமாக) இப்படிப் பத்து மாத காலமாக, அந்நியன் இடத்திலே சிறைப்பட வேண்டி யிருக்கும் என்றால், நான் பூலோகத்தில் பிறப்பே எடுத்திருக்க மாட்டேன்!

அந்தச் சீதையை இவ்வளவு காலமாகவா அழ விடுவது! இது அக்கிரமம்!

*(அங்கு வந்திருக்கும் சிவனை நோக்கி) அண்ணா! நீங்களாவது செய்கின்ற உதவியைச் சீக்கிரமாகச் செய்யக் கூடாதா?*

*விஷத்தை எடுத்து விழுங்கியவர்கள், ஒரு பெண்ணின் வேதனையை உடனே போக்கக் கூடாதா?*

**சிவன் :** நானென்ன செய்ய முடியும் சகோதரி! இந்தக் கதைக்குச் சூத்ரதாரி, அந்தச் சக்ரதாரிதான்! அவர் ஏவல்படிதான், நான் எதுவும் செய்ய முடியும்!

**திருமகள் :** மாற்றான் இடத்திலே மாதக் கணக்கில் இருந்தால், என்ன மரியாதை இருக்கும்?

## காட்சி-228

*அசோக வனம்*

[அரக்கியர் மயங்கிக் கிடக்க, மரத்தடியில் சீதை தனித்தவளாய்க் கண்ணீர் விட்டுக் கலங்குகிறாள்.]

**சீதை :** *(தனக்குள்)* மாற்றான் இடத்திலே, மாதக் கணக்கில் இருந்தால், எனக்கென்ன மரியாதை இருக்கும்?

என் வள்ளல் வாராது இரார் என்னும் எண்ணத்தால், ஓர் ஆயிரம் கோடி இடர்க்கு நடுவே உழல்கின்றேன்!

'காட்டிற்கு வராதே!; வருந்துவாய்!' - என்று சொன்ன செம்மல், இந்த அரக்கன் நாட்டிலே, என்னைத் தவிக்க விட்டு விடுவாரா?

அவர், 'நாராயணன்' என்று உலகு கூறுகிறதே!

நான் ஒப்ப, என்னை மீட்க அவர் வரவேண்டாமா?

தந்தையின் ஈமச் சடங்குக்குச் செல்ல முடியாதபடி தடுத்த விதி, தாரத்தைக் கைப்பிடிக்க அனுமதிக்குமா என்ன!

என் உயிர் உள்ள அளவும், எனக்கு இடர் உண்டு என்பதைப் புரிந்து கொண்டேன்.

நான் இறக்கும் பொழுது, எனக்கு இறவாப் புகழ் வந்து சேரலாம்!

இந்த அரக்கன் நகரிலே, சிறை இருந்த என் உடலை, அந்தப் புனிதன் தீண்டுவாரா? துறந்தேன் என்று தாண்டிச் சென்று விடுவாரா?

பிறர் மனை எய்திய பெண்ணைப் பேணுதல், பெருமை இல்லை என்று பேசிவிடுவாரா?

வஞ்சனையான மானின் பின்னே, என் மன்னனை அனுப்பிவைத்தேன். பின் என் மைத்துனனை வைது, அவர் பின்னே போக வைத்தேன்.

நஞ்சு அனையான் மனை புகுந்து, நாணம் இன்றி வாழ்ந்து கொண்டிருக்கிறேன்!

இதை உலகம் ஒழுக்கம் என்று கொள்ளுமோ?

என்னை ஏற்றுக் கொண்டால், என்னைப் பற்றிய பழி, அவரையும் சுற்றுமோ?

மானம் காக்கக் கவரிமானாக உயிர்விட்ட மாதவ மடந்தையர் கதை இருக்க, கருந்தனிமுகிலினைப் பிரிந்து, கள்வன் ஊரிலே நெடுநாள் இருந்தவள் இவள் என ஊர் ஏச வாழ வேண்டுமா?

நான் இப்பொழுது இறத்தலே அறமாகும்! எனக்கு நிழல் அளித்த இந்த மரத்தின் கிளைகள், எனக்கு நிம்மதியை அளிக்கட்டும்! உன் உயிரைப் போக்கட்டும்!

[இவ்வாறு கூறி, மரக்கிளைகளைப் பற்றுகிறாள் சீதை. இதைப் பார்த்து, அனுமன் பதறுகிறான். மறைவிடத்திலிருந்து வெளிப்பட்டு, அவள்முன் வந்து குதிக்கிறான்]

**அனுமன் :** ராம்! ராம்! ராம்! ராம்! ராம தூதன் நான்! அயோத்தி ராமனின் அருட் தூதன் நான்! வள்ளல் ராமனின் வானரத் தூதன் நான்!

[சீதையைக் கைகுவித்து வணங்குகிறான்.]

## காட்சி-229

*ருஷ்யமூக பர்வதம்*

[இருள் விலகாத அதிகாலை வேளை. ஒரு குகையில் படுத்து உறங்கிக் கொண்டிருக்கிறான் ராமன். ராமனின் காலடியில் காவலாக நின்று கொண்டிருக்கிறான் லட்சுமணன். திடீரென்று திடுக்கிட்டு எழுந்திருக்கிறான் ராமன்.]

**லட்சுமணன் :** *என்ன அண்ணா! ஏதாவது கனவு கண்டீர்களா?*

**ராமர் :** *ஆமாம் - என் சீதை, என்னை நாடி வருவதுபோலக் கனவு கண்டேன்!*

**லட்சுமணன் :** *இது நல்ல நிமித்தம் அண்ணா! நம் தூதுவர்கள் பெருமாட்டியைக் கண்டு விட்டார்கள் என்று எண்ணுகிறேன்.*

## காட்சி-230

*அசோக வனம்*

[எதிரில் வணங்கி நிற்கும் அனுமனைச் சீதை மனக் கலவரத் தோடு பார்க்கிறாள்.]

**சீதை :** *என் நாயகனின் தூதுவன் என்று கூறுகிறாய்!*

*அந்த ராவணனின் மாய உருவமா நீ? துறவி போல வந்து, என்னைக் கவர்ந்து வந்த நீ, வானரம் போல வந்து, என்னை வதைக்க வந்திருக்கிறாயா?*

**அனுமன் :** *(கை குவித்து வணங்கியபடி) தாயே! என்னைச் சந்தேகிக்காதீர்கள்!*

*என் நல்வினையால், தங்கள் சேவடியைத் தரிசிக்கும் பேறு பெற்றேன்!*

**சீதை :** *என் நாயகரே இங்கு வருவதற்கு என்ன தடை?*

**அனுமன் :** நீங்கள் இங்கிருப்பது, அவர்களுக்குத் தெரியாது தாயே! பல திசைகளுக்கும் தூதுவர்கள் சென்றிருக்கிறார்கள். தென்திசை வந்த நான், இந்தப் பெண் தெய்வத்தைக் கண்டு விட்டேன்! நீங்கள் இங்கிருப்பதை, என் இனியவர்க்குச் சொன்னால், வானரப்படை கொண்டு வந்து, தங்களை மீட்டுச் செல்வார்கள்.

**சீதை :** வானரப் படையா?

**அனுமன் :** ஆம் தாயே! தங்களைப் பிரிந்த பின்பு, சுக்ரீவன் என்னும் வானர மன்னனோடு, நம் வள்ளலுக்கு நட்பு ஏற்பட்டது. அந்தச் சேனையோடுதான், இங்கு வந்து, பகை முடித்து, தர்மப் பாவையான தங்களை அழைத்துச் செல்வார்கள்.

**சீதை :** (மனநிம்மதி பெற்றவளாக) எப்படியோ, எம்பிரான் நாமம் சொல்லி, என் உயிர் காத்து விட்டாய்!

**அனுமன் :** தாயே! அடியேன், சுக்ரீவ மன்னனின் அமைச்சன். என் ஐயன், ராமபிரானின் அடிமை! ஆஞ்சநேயன், அனுமன் - இவை என் நாமங்கள்.

**சீதை :** உன்னை நான் நம்புமாறு, என் நாயகர் ஏதேனும் செய்தி சொல்லி அனுப்பியிருக்கிறாரா?

**அனுமன் :** ஆம் தாயே! தாங்கள் கணவரோடு காட்டிற்குப் புறப்பட்டபோது, கோட்டை வாயிலைத் தாண்டியவுடனேயே, 'காடு வந்து விட்டதா?' என்று கேட்டீர்களாம்!

**சீதை :** அவ்வளவு வெகுளியாய் இருந்திருக்கிறேன்! அதனால் தான், மாயமானை நம்பி, என் மன்னனை, இளவலைப் போக்கி, அரக்கனின் பிடியில் சிக்கி விட்டேன்!

**அனுமன் :** தர்மத்திற்கு வருகின்ற சோதனை, மானிடத்திற்குக் கிடைக்கின்ற போதனை!

சந்தனம் அரைபட்டு மணப்பதுபோல, சத்தியமும் அல்லற்பட்டுத்தான் ஜொலிக்கும்!

தாயே! அறத்திற்கு விடிவு காலமும், அரக்கர்களுக்கு அழிவு காலமும், இந்த விடிகாலை வேளையிலே தொடங்கி விட்டது!

இந்த மோதிரத்தையும், அடையாளப் பொருளாக அண்ணல் தங்களிடம் அளிக்கச் சொன்னார்கள்.

[மோதிரத்தை, மகிழ்ச்சியோடு, சீதை பெற்றுக் கொள்கிறாள்.]

**சீதை :** என் நாயகரின் மோதிரத்தைக் கண்டவுடன், துறந்த உயிர், மீண்டும் இணைந்ததைப் போன்ற உணர்வைப் பெறுகிறேன்!

[அந்த மோதிரத்தைத் தன் மார்பில் பதித்துக் கொள்கிறாள்.]

**சீதை :** இழந்த மணியை நாகம் பெற்றது போல, வருந்திய மலடிக்குக் குழந்தை பிறந்ததுபோல, தொலைத்த விழிப் பார்வை கிடைத்த வரம்போல, எனக்கிந்த மோதிரம் மகிழ்ச்சியை மட்டின்றித் தருகிறது.

[மோதிரத்தைத் தன் தலைமேல் வைத்துக் கொள்கிறாள். மோதிரத்தைத் தன் கண்களில் ஒற்றிக் கொள்கிறாள்.]

**சீதை :** இந்த மோதிரத்தின் வடிவிலே, மாதிரத்திற்கே ஒளியூட்டும் என் நாயகன் தெரிகின்றார்!

[அதை முகர்ந்து பார்த்து மகிழ்கின்றாள்.]

**சீதை :** பசியால் இடர் உற்றவர்க்கு, அருந்தும் அமுதுபோல, நோயால் வீழ்ந்தவர்க்கு உதவும் உயிர் மீட்கும் மருந்துபோல, இந்த மோதிரம், எனக்குத் தெரிகின்றது.

(அனுமனை நோக்கி) என் முதல்வனின் தூதனாய் வந்த தோன்றலே! எனக்கு நீ உயிர் தந்தாய்!

எனக்கு நீ இப்பொழுது அம்மையாய், அப்பனாய்த் தெய்வமாய்த் தெரிகின்றாய்!

துணையில்லாமல் துவண்டிருந்த என் துன்பம் தீர்த்த வள்ளலே! நீ வாழ்க!

மறு இலா மனத்தையுடைய நான் சொல்வது பலிக்குமென்றால், ஊழிவந்து, உலகமெல்லாம் அழிந்தாலும், மாளாது, எப்பொழுதும் சிரஞ்சீவியாக நீ வாழ்வாயாக!

[இதைக் கேட்டவுடன், அனுமன் சீதையை விழுந்து கும்பிடுகிறான்.]

## காட்சி-231

*மண்டோதரி மாளிகை*

[உறக்கத்திலிருந்து மண்டோதரி பதறி எழுந்திருக்கிறாள்.]

**ஒரு பணிப்பெண் :** *அரசியே! ஏன் இந்தப் பதற்றம்? ஏதாவது தீக்கனா கண்டீர்களா?*

**மண்டோதரி :** *இந்த மண்டோதரியின் படுக்கை அறைக்குள், ஒரு குரங்கு நுழைந்து, என் மாங்கல்யத்தைப் பற்றி இழுப்பது போலக் கனவு கண்டேன்!*

## காட்சி-232

*அசோக வனம்*

**சீதை :** *(அனுமனிடம்) உன் மூலமாக, நடந்ததெல்லாம் தெரிந்து கொண்டேன்.*

*எனக்காக உயிர் விட்ட கழுகு வேந்தன் ஜடாயுவுக்கு என் கண்ணீரைக் காணிக்கையாக்குகிறேன். என்னால் இடரில் வீழ்ந்தனர் அண்ணன் தம்பியர்!*

**அனுமன் :** *ஆம் - உத்தமன் ராமர், தங்களைப் பிரிந்ததால், உன்மத்தன் போல் ஆனார் தாயே!*

*தாங்கள் இருக்கும் இடத்தைக் காட்டாததால், நதியிடம் சினம் கொண்டார்!*

*மலையைப் பிளந்து, எரித்துக் கரியாக்குவதாகக் கடுமொழி கூறினார்!*

*ஒரு மானால் வஞ்சிக்கப்பட்டதால், மான் குலத்தையே மாய்ப்பதாக, வெகுண்டு பேசினார்!*

**சீதை :** *அவர் பட்ட துன்பம் அதுவென்றால், நான் பட்ட துன்பத்தை, எந்த நாவாலும் சொல்ல முடியாது!*

*அவர் பெருமையை எண்ணி எண்ணியே, நெஞ்சத்தைத் தேற்றிக் கொண்டிருந்தேன்!*

*அயோத்தி நாடாளு என்ற போதினும், நாட்டைத் துறந்து காடேகு என்ற போதினும், சித்திரத்தின் அலர்ந்த செந் தாமரை ஒத்திருக்கும் அவர் முகத்தினை, மனதில் நிறுத்திக் கலக்கம் தவிர்ப்பேன்!*

*அது மாத்திரமல்ல - ஆழ நீர்க் கங்கையிலே ஓடம் செலுத்திய ஏழை வேடன் குகனை நோக்கி, 'என் தம்பி, நின் தம்பி! நீ என் தோழன்; இந்த மங்கை சீதை, உன் கொழுந்தி!' - எனச் சொன்ன வாழி நண்பினை உன்னி மயங்குவேன்!*

*இப்பொழுது அவர் வருவார் படையோடு என்று கூறி, துன்பத்தில் தொலைந்த என் உள்ளத்தில், உவகைத் தேனை ஊற்றி, உயிர்ப்பிக்கின்றாய்!*

*அனுமனே! எனக்கொரு சந்தேகம். நீயோ சிறிய வானரம்! அளப்பரும் கடலை, எப்படிக் கடந்து இங்கு வந்தாய்?*

**அனுமன்** : *தாயே! நான் வாயு புத்திரன்! என்னால் காற்றைப் போலக் ககனத்தில் பறக்க முடியும்! என்னால் விஸ்வரூபமும் எடுக்க முடியும்!*

*[அனுமன் விஸ்வரூபம் எடுத்து நிற்கச், சீதை அனுமனைப் பார்த்துத் திகைப்புக் கொள்கிறாள்]*

**சீதை** : *அனுமான்! உலகு எலாம் அளந்த நாயகன் திரிவிக்கிரமன் போல், நீ பேருரு எடுத்து நிற்கிறாய்! உன் ஆற்றலைத் தெரிந்து கொண்டேன்! அரக்கர் இனி இறப்பர் என்பதில் உறுதி கொண்டேன்! இனிக் குறுகி, இயல்பான உன் உருவெடுத்து, என்னோடு பேசு.*

*[அனுமனும் அவ்வாறே மாற்றம் பெறுகிறான்.]*

**சீதை** : *அனுமான்! ஆழி நெடுங்கை ஆண்தகையான, என் அண்ணலின் அருளும் புகழும் அழிவு இன்றி, ஊழி பலவும் நிலை நிறுத்தற்கு, ஒருவன் நீயே உளன் ஆனாய்! நெடுந்தோள் வீரா! நின் பெருமைக்கு, இந்தப் பகை லங்கை, ஏழு கடற்கு அப்பால் இருக்க வேண்டும்!*

*என் துணைவர்க்குப் பின்னே பிறந்த தம்பியின் துணை யின்றி, வேறு துணை இலாத பிழை நோக்கி, மனம் உடைந்திருந்தேன்!*

இன்று உன்னைக் கண்டவுடன் உயிர் உயிர்த்தேன்!

நீயே, எம்மவர் துணை என்றால், இந்த அரக்கர்கள் கதி என்ன ஆகும்?

இனி நான் மாண்டாலும், அதனால் பழுதில்லை! சிறை மீள்வேன்! என் பதியின் தாள், சரண் புகுவேன்! புன் பழி தீண்டேன்! புகழையே புனைவேன்!

**அனுமன்** : தாயே! இப்பொழுது அந்த ராவணனால், தங்கள் உயிருக்கு ஆபத்து வரலாம்.

அதற்குப் பிறகு, படை திரட்டி வந்து, என்ன பலனைக் காணப்போகிறோம்?

ஆதலால், இப்பொழுதே, உங்களை, என் தோளிற் சுமந்து கொண்டு, என் இறைவன் இருக்கின்ற குன்றிலே கொண்டுபோய், உங்களைச் சேர்ப்பேன்!

இதற்குத் தாங்கள் அனுமதி தர வேண்டும்!

**சீதை** : அனுமான்! இதனால், உன் அண்ணலின் வெற்றி பொருந்திய வில்லுக்கு மாசு வரும்!

என்னை வஞ்சித்து எடுத்து வந்த நாயைப்போல், நீயும் பிறர் அறியாமல், வஞ்சனையாக, என்னை எடுத்துச் செல்ல நினைக்கலாமா?

நடக்கும் போரிலே, என் நாயகனின் வில்லால், அந்தக் காமுகன் பிணமாக விழ வேண்டும்!

என்னைக் காம எண்ணத்தோடு பார்த்த அவன் கண் களைக் காகங்கள் உண்ண வேண்டும்!

பொன்னாற் பொலியும் இந்த லங்கை மாநகர், எலும்பு மலையாக மாற வேண்டும்!

என் நற்குடிப் பிறப்பையும், ஒழுக்கத்தையும், இழுக்கம் இல்லாத கற்பையும், இந்த அகிலம் உணர, இந்த அழிவுகள் நடக்க வேண்டாமா?

இந்த அரக்கர்களைச் சொல்லால் சுட்டெரிக்க என்னால் முடியும்! அது, தூயவன் வில்லின் ஆற்றலுக்கு மாசு உண்டாக்கும் என்று கண்டுண்டு இருக்கிறேன்!

நீ ஐம்பொறிகளை அடக்கியவன் ஆனாலும், நீ ஓர் ஆணே! உன் உருத் தீண்டுதல், என்னால் கூடுமோ?

ஆதலால், என் நாயகன்பால், இப்பொழுது நீ திரும்பிச்செல். இங்கு கண்டதைக் கேட்டதைக் கூறு.

காத்திருக்கிறாள் சீதை என்பதைப் பேச்சுக்குப் பேச்சு, மூச்சுக்கு மூச்சு சொல்லிவிடு.

இன்னும் ஒரு மாதமே நான் உயிர் தரிப்பேன்! இதை என் மன்னன் மேல் ஆணையாகச் சொல்கிறேன்!

அதற்குள் நெஞ்சில் ஈரத்தோடு, தன் தாரத்தைக் காக்க வராவிட்டாலும், தன் வீரத்தைக் காக்கவாவது, அவர் இங்கு வரவேண்டும்!

மாதம் ஒன்றில், என் மன்னர் இங்கு வரத் தவறினால், கங்கையாற்றங்கரையில், தன் செங்கையால், எனக்குரிய ஈமச்சடங்கைச் செய்து விடச்சொல்லு!

என் மாமியார் மூவரிடமும், 'சீதை லங்கையிலே இறந்து கொண்டிருக்கிறாள்; உங்களைத் தொழுது கொண்டிருக் கிறாள்' - என்பதை மறக்காமல் சொல்லிவிடு!

[சீதை அழுகிறாள்.]

**சீதை :** அனுமான்! என் நாயகனை எண்ணுந்தோறும், என் நயனங்கள் கண்ணீரைக் கொட்டுகின்றன.

மிதிலையில், என்னைக் கரம் பற்றிய நாளில், இந்த இப்பிறவியில், இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன் என்று சொன்ன சொல், என்னை வாழவைத்துக் கொண்டிருக் கிறது!

என் விதிப்படி என் வாழ்க்கை அமையட்டும்! என் நாயகருக்கு நடக்க வேண்டிய நல்லன உடனே நடக்கட்டும்.

அனுமான்! உன் குல மன்னனைச் சுக்ரீவனை, என் சுந்தரத்தோளான், ஆடவர் சுவர்ணத்தைத் தொடர்ந்து காத்துப் போய், அந்தம் இல் திருநகர் அயோத்திக்கு இப்பொழுதே அரசனாக்கும்படி கூறு!

**அனுமன் :** தாயே! என்ன வார்த்தை பேசுகிறீர்கள்! தாங்கள் இங்கு தவித்திருக்க, என் தலைவர் அயோத்தி நகர் புகுந்து, மகுடம் புனைந்து கொள்வாரா?

தங்களைக் கவர்ந்து வந்த இந்த அரக்கனைக் கொல்லாமல், அவர் வில்லோடு அயோத்திக்குச் செல்ல முடியுமோ?

தங்களைச் சிறை மீட்காமல், நாங்களெல்லாம் கிஷ்கிந்தையில் சுகமாக இருந்தால், எங்களையெல்லாம் பிணம் என்றுதானே பெரியவர்கள் பேசுவார்கள்!

தாயே! தாங்கள் குறிப்பிட்ட கால அளவுக்குள், தாங்கள் மீட்கப்படாவிட்டால், அந்தப் பழியும் பாவமும் ராமனைப் பற்ற, அவர் ராவணன் ஆகிவிடுவார்! இந்த ராவணன் ராமன் ஆகிவிடுவார்!

**சீதை :** அனுமான்! உன் மாசு இல்லாத வாசகம் கேட்டு, நம்பிக்கை கொண்டேன். நீ, என் வேந்தனிடம் விரைந்து செல்வதே, இப்பொழுது நான் வேண்டுவது.

**அனுமான் :** தங்களை நான் பார்த்ததற்கு அடையாளமாகச் செய்திகளைச் சொல்லுங்கள். செம்மலின் செவியில் அதைச் சேர்க்கிறேன்.

**சீதை :** வனவாசத்தின் போது, என் மார்பைக் கொத்திய காகத்தைப் புல்லையே அஸ்திரமாக்கி எறிந்த செயலைக் கூறு.

என் இன் உயிர் மென் கிளிக்கு, யார் பெயர் வைப்பது என நான் கேட்க, மாசு அறு கேகயன் மாது, அன்னை கைகேயி பெயர்வை என்று, அவர் பேசிய மொழியைக் கூறு.

சுடர் வெல்லும், இந்தச் சூளாமணியை, அவரிடம் கொண்டு போய்க் கொடு.

[ஆடையில் முடிந்து வைத்திருந்த சூளாமணியை, அனுமனிடம் கொடுக்கிறாள் சீதை.]

**சீதை :** இதுவே, நீ என்னைக் கண்டதற்கு நல்ல அடையாளமாக, என் நாயகருக்கு உணர்த்தும்.

[அனுமன் சூளாமணியைத் தொழுது வாங்கித்தன் ஆடையில் சுற்றிப் பத்திரப்படுத்துகிறான்.

அவளை மூன்று முறை வலம் வந்து தொழுகிறான். கீழே விழுந்து வணங்குகிறான். கும்பிட்ட கையோடு பின்னோக்கிச் சென்று மறைகிறான்.

கண்ணீரோடு விடை கொடுக்கிறாள் சீதை.]

## காட்சி-233

*அசோக வனம்*

[நன்றாக விடிந்து விடுகிறது. அனுமன் அமைதியின்றி, அசோக வனத்தின் இன்னொரு புறத்தில், உலவிக் கொண்டிருக்கிறான்.

எதிரே சுவர்ச்சலாதேவி வந்து நிற்கிறாள்.]

**அனுமன் :** *(வியப்போடு) நீயா?*

**சுவர்ச்சலாதேவி :** *ஆமாம் - உங்களையே சுற்றி வரும் சுவர்ச்சலா தேவி!*

**அனுமன் :** *இங்கு எப்படி வந்தாய்?*

**சுவர்ச்சலாதேவி :** *மீன் உரு எடுத்துக் கடலைக் கடந்து, உங்களைப் பின் தொடர்ந்து வந்தேன்.*

**அனுமன் :** *ஒரு பிரம்மச்சாரியை பெண் சுற்றிக் கொண்டிருப்பது பேதைமை!*

**சுவர்ச்சலாதேவி :** *தாய்மை அடைய முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது!*

**அனுமன் :** *விதி உன்னோடு விளையாடுகிறது!*

**சுவர்ச்சலாதேவி :** *அந்த விதி, உங்களோடும் விளையாடி, நம் குழந்தையைக் கொடுக்கும்!*

**அனுமன் :** *உன்னோடு வார்த்தையாட எனக்கு நேரமில்லை!*

**சுவர்ச்சலதேவி :** *பெருமாட்டியைத்தான் கண்டு விட்டீர்களே! பிறகென்ன!*

**அனுமன் :** *இப்படியே திரும்பிப்போக, எனக்கு மனமில்லை! ஜானகித்தாயை, என் இதய நாதமாம் ராமனின் திருவடியில் சேர்க்கவில்லை.*

*வஞ்சக ராவணனை, வாளால் வதைக்க வில்லை! அவன் மனைவி மண்டோதரி மலர்க்குழல் பிடித்து இழுத்துச் சிறை வைக்கவில்லை!*

*அரக்கர் கூட்டத்தை அழித்தொழிக்கும் வீரத்தையும் நிகழ்த்த வில்லை!*

'சீதையைக் கண்டுவிட்டேன்' என்று ஒரு பெண்ணைப் போல, ராமனிடம் ஓடிப்போய்ச் சொல்வதிலே, எனக்கென்ன பெருமை இருக்கிறது?

**சுவர்ச்சலாதேவி :** உண்மையான பேச்சு. என் பிள்ளையின் அப்பனுக்குப் பெருமை சேர வேண்டும் என்பதில், எனக்கு அக்கறை இருக்காதா?

உங்கள் தினவு தீர, இந்தச் சோலையை அழியுங்கள்!

வால் முளைத்த வானரத்தாலா, இந்த அழிவு வந்தது என்று அரக்கர்கள் ஓடி வருவார்கள்.

அவர்கள் தலை எடுத்து. அவர்க்ள் தலைவனாம் ராவணனைச் சமருக்கு அழையுங்கள்!

இப்படி அரக்கர் படையோடு மோதிச் சாடி, உங்கள் அகத்தில் திருப்தி கண்ட பின்பு, அயோத்தி அண்ணலைப் பார்க்கப் பறந்து விடுங்கள்!

**அனுமன் :** (மகிழ்ச்சியோடு) சுவர்ச்சலாதேவி! நீ எனக்கு மந்திரியாக இருக்கத் தக்கவள்!

**சுவர்ச்சலாதேவி :** மனைவி மந்திரியாகவும் செயற்படுவாள். வலிந்து போர்த்திக் கொண்டிருக்கும் வேஷத்தைக் கலைத்து விட்டு, என்னை ஏற்றுக் கொள்ளுங்கள்!

**அனுமன் :** அது முடியாத காரியம். ஐம்பொறிகளை நான் ஆள்வேனே தவிர, அவை என்னை ஆளமுடியாது!

**சுவர்ச்சலாதேவி :** தங்கள் புகழ் வாழ, அந்த விரதம் அவசியம் தான்! நான் வருகிறேன்.

**அனுமன் :** தோல்வியை ஒப்புக் கொண்டு விட்டாயா?

**சுவர்ச்சலாதேவி :** (சென்றபடி) வெற்றி பெறுவேன் என்பதை ஒப்புக் கொள்கிறேன்!

## காட்சி-234

*அசோக வனம்*

[அனுமன் விஸ்வரூபம் எடுத்து மரங்களைப் பிடுங்கி எறிகிறான். பறித்தெறிந்த மரங்கள், ஆகாயத்தில் பறக்கின்றன. விலங்குகள் பதறி ஓடுகின்றன. பறவைகள் தஞ்சம் தேடிப் பறக்கின்றன. அரக்கிகள் ஓடிவந்து, அனுமனை அச்சத்தோடு பார்க்கின்றனர். அவர்கள் மேல் மரங்கள் விழ, தப்பித்து ஓடுகின்றனர்.]

## காட்சி-235

*அசோக வனம்*

[ஓடி வருகின்ற அரக்கியர், சீதையைச் சூழ்ந்து கொள்கின்றனர்.]

**ஓர் அரக்கி :** *ஏ மானிடப் பெண்ணே! உன்னோடு அந்த வானரம் பேசிக் கொண்டிருந்ததே! உனக்குத் தெரியுமா அதை? அந்த வானரம் யார்? அசோக வனத்தையே அழித்துக் கொண்டிருக் கிறதே!*

**சீதை :** *மாயா உருவம் எடுப்பதில், நீங்கள்தான் வல்லவர்கள்! ஒரு மாய மானைக் காட்டித்தானே, என்னை மடக்கிக் கொண்டு வந்தார், உங்கள் மன்னர்!*

**இன்னொரு அரக்கி :** *மதி கெட்ட பெண்ணே! எங்கள் குலத்தார், எங்களுக்கெதிராக ஏன் கலகம் செய்ய வேண்டும்?*

*நாங்கள் அரை மயக்கத்தில் இருக்கும்பொழுது, மறைவான பேச்சை, உன்னோடு ஏன் பேசவேண்டும்? நீ உண்மையைச் சொல்லாவிட்டால், உன் பெண்மையை நாவால் ருசி பார்த்துத் தின்று விடுவோம்!*

*[இப்பொழுது அனுமனின் கர்ஜனைக்குரல் அங்கு கேட்க, அரக்கியர்கள் அங்கிருந்து ஓடுகின்றனர்.]*

## காட்சி-236

*அசோக வனம்*

[அசோக வனத்தைக் காவல் காக்கும் அரக்கர்கள், தங்கள் மேல் மரங்கள் வந்து விழ, ரத்தக் காயம்பட்டு, அங்கிருந்து ஓடுகின்றனர்.]

## காட்சி- 237

*ராவணன் அரசவை*

[புண்பட்ட உடம்போடு, காவல் அரக்கர்கள், அவைக்கு ஓடிவருகின்றனர்.]

***ஓர் அரக்கன் :*** *சிங்கத்தைப்போல சீற்றத்தைக் கொண்ட மன்னா! ஒரு சிறு குரங்கு, நம் அசோக வனத்தை அழித்துக் கொண்டிருக்கிறது!*

***இன்னொரு அரக்கன் :*** *திசை யானைகள் இருக்கும் எல்லை வரை, காவலைக் கொண்டிருக்கும் காவலனே! நம் நகருக்குள் புகுந்து, ஒரு குரங்கு மரங்களைப் பிடுங்கி எறிந்து, நம்மை வம்பிற்கு இழுக்கிறது!*

***வேறொரு அரக்கன் :*** *பஞ்ச பூதங்களும் அஞ்சி நடுங்கும் தங்கள் நாட்டில், அரக்கர்களாகிய நாங்கள் ரத்தக் காயம் பட்டோம்! அசோக வனமும் தீப்பட்ட ஆடையாக, இப்பொழுது தீய்ந்து போய்க் கிடக்கிறது!*

***மற்றொரு அரக்கன் :*** *மன்னா! அது உண்மையிலேயே ஒரு குரங்கா?; இல்லை..... தேவர்களின் குரங்குச் சேட்டையா? - என்பதைத் தாங்கள் கண்டறிய வேண்டும்.*

*[இப்பொழுது அனுமனின் கர்ஜனைக்குரல் இங்கு கேட்க, காவல் அரக்கர்கள் நடுங்குகின்றனர்.]*

***ராவணன் :*** *நன்றாக இருக்கிறது, உங்கள் அச்சம்! அந்தக் குரங்கின் ஆரவார ஒலி கேட்டு, ஆடையிலேயே சிறுநீரைக் கழிக்கின்ற பேடிகளாய் இருக்கின்றீர்கள்!*

*வான் வழியையும் மறித்து, அந்தக் குரங்கு தப்பிப் போகாதபடி, உயிரோடு பற்றிக் கொண்டுவர, கிங்கரரை அனுப்பி வைக்கிறேன்.*

*(காவல் வீரர்களைப் பார்த்து) நீங்கள் ஆடை மாற்றிக் கொண்டு, பெண்டுகளின் அருகில், பாதுகாப்பாக இருங்கள்!*

## காட்சி-238

*லங்கை நகர் வீதி*

[கிங்கரர் பலர், லங்கை நகர் வீதியில், ஆயுதங்கள் பலவோடு ஆரவாரமாக நடந்து வருகின்றனர்.]

**ஒரு கிங்கரர் :** *நாங்கள் பிரளய காலத்தில் பொங்குகின்ற கடல் போன்றவர்கள்! போர்தான் எங்களுக்கு மதுவை விடக் களிப்பை அளிக்கும்!*

**இன்னொரு கிங்கரர் :** *ஒரு குறுங்குரங்கோடு போரிடுவது, எங்களுக்கு நாணத்தையே தரும்! ஆனாலும் மன்னன் கட்டளை என்பதால், மனம் ஒப்பிச் செல்கின்றோம்.*

**வேறொரு கிங்கரர் :** *யானையையும் பிடியையும் வாரி விழுங்கும் எங்கள் வாய்க்கு, இந்தக் குரங்கின் உடல், தாம்பூலமாக இருக்கட்டும்!*

**மற்றொரு கிங்கரர் :** *அமரரை வென்ற நாங்கள், இந்தக் குரங்கோடு சமர் செய்ய வேண்டும் என்பதைக் கேட்டு, எங்கள் மனைவியர் ஏளனமாகச் சிரிக்கின்றனர்!*

**பிறிதொரு கிங்கரர் :** *மலைகளைக் காலால் இடறித் தள்ளுவோம்! கடலைப் பருகி ஆரவாரிப்போம்! சூரியனை விழுங்குவைப் போம்! மேகத்தைப் பிழிந்தெடுப்போம்! ஆதிசேஷனைத் தரையோடு அரைத்துத் தள்ளுவோம்! இந்தத் தரையை எடுத்துத் தரணியை நடுங்கச் செய்வோம்!*

*எங்களைப்போய், ஒரு குரங்கைப் பிடித்து வாருங்கள் என்று கொற்றவன் கட்டளையிட்டு இருக்கிறார்! இதற்காக, எங்கள் விதியைத்தான், நாங்கள் நொந்து கொள்ள வேண்டும்!*

# காட்சி-239

*பாழ்பட்ட அசோக வனம்*

[அனுமன், தன் வாலால், கிங்கரர்களை வளைத்து, ஒவ்வொருவராகத் தூக்கி எறிகிறான்.]

**ஓடி வந்த அரக்கி :** (அனுமனைக் கும்பிட்டபடி) ஐயா! வானரக் கண்ணு! உன்னை அற்பக் குரங்கு என்று நினைத்து, அறிவு கெட்டு இங்கு வந்து விட்டார் என் கணவர்!

அவருக்கு உயிர்ப்பிச்சை கொடுய்யா! ஏழு நாளாக உடல் நலிவாகப் படுத்திருந்தார். எட்டாம் நாள், உயிரை விட, இங்கு வந்து நிற்கிறார்! அவர் இல்லாத இரவு, எனக்குக் கொடும் நரகம்! என்னை உன் சகோதரியாக நினைத்து, என் கணவரை விட்டு விடய்யா!

**அனுமன் :** யார் உன் கணவர்?

**ஓடி வந்த அரக்கி :** அதோ, வாளைத் தூக்கிக் கொண்டு, பலி ஆடு போல நிற்கிறாரே! அவர்தான்!

**அனுமன் :** (அரக்கியைப் பார்த்து) அவரை இழுத்துக் கொண்டு, இங்கிருந்து போய்விடு!

[அந்த அரக்கி, தன் கணவரைக் கையைப் பிடித்து
இழுத்துக்கொண்டு, அங்கிருந்து
ஓட்டமெடுக்கிறாள்.
இன்னொரு அரக்கி இப்பொழுது ஓடிவந்து,
அனுமனை விழுந்து கும்பிடுகிறாள்.]

**கும்பிட்ட அரக்கி :** வானர வள்ளலே! இன்று காலையில்தான் மணம் செய்து கொண்டோம். பள்ளியறை காணு முன்பு, சாவைக் காண, இங்கு வந்து நிற்கிறார்!

கருணை உள்ளத்தோடு, என் கணவரை விட்டு விட்டால், இங்கு ஒதுக்குப் புறமாய்ப் போய் இன்பத்தைப் பரிமாறிக்கொள்வோம்!

**அனுமன் :** அப்படியே செய்யுங்கள்! அதற்குப் பிறகு, இங்கு அனுப்பி வைக்காதீர்கள்! அப்படியே பொத்தி வீட்டிற்கு அழைத்துச் சென்று விடுங்கள்.

**கும்பிட்ட அரக்கி :** *(கணவரை நோக்கி) வாய்யா!*

*[கணவரின் கையைப் பிடித்து இழுத்துச் செல்கிறாள்.]*

**அனுமன் :** *அவசரப்படாதீர்கள்! மறைவாகப் போங்கள்!*

*[கர்ப்பிணியான ஓர் அரக்கி, இப்பொழுது அங்கு ஓடி வருகிறாள்.]*

**கர்ப்பிணி அரக்கி :** *ஐயா! வானரக் கொழுந்தே! யார் யாருக்கோ வாழ்வளிக்கும் நீ, என் வயிற்றில் இருக்கும் கருவுக்கு வாழ்வளிக்கக் கூடாதா?*

*கருவைக் கொடுத்தவர், கத்தியை எடுத்துக்கொண்டு, இங்கு உதிர வந்த நிற்கிறார்! அப்பனைத் தொலைத்து விட்டேன் என்று என் குழந்தை பிறந்தவுடன் அழ வேண்டுமா?*

**அனுமன் :** *வேண்டாம் தாயே! உன் கணவரை இங்கிருந்து அழைத்துச் சென்று விடு.*

**கர்ப்பிணி அரக்கி :** *நீ சிரஞ்சீவியாக வாழவேண்டும், என் ராசாவே!*

*[தன் கணவரின் கையைப் பிடித்து இழுத்துச் செல்கிறாள்.]*

## காட்சி-240

*சுபர்வகிரிப் பிரதேசம்*

*அஞ்சனை வீடு*

[தன் வீட்டின் முன்பாக, நெருப்பு எரிந்து கொண்டிருப்பதைப் பார்த்துப் பதறிக் கூச்சலிடுகிறாள் அஞ்சனை. கேசரியும் ஓடிவந்து இதைப் பார்க்கிறார். இப்பொழுது ஒரு முனிவர் அங்கு வருகிறார்.]

**கேசரி :** *என்ன சுவாமி இது! வீட்டின் முன்பாக நெருப்பு எரிந்து கொண்டிருக்கிறது!*

**அஞ்சனை :** *இது தீய நிமித்தமா சுவாமி?*

**முனிவர் :** உங்கள் ஆஞ்சநேயன், லங்கையிலே, பகைவரோடு போரிட்டுக் கொண்டிருக்கிறான். அவன் சுட்டெரிக்கும் நெருப்பாக, அங்கு சுழன்று கொண்டிருக்கின்றான். அதைத்தான், இந்த நெருப்பு நிமித்தமாகக் காட்டுகிறது.

**அஞ்சனை :** என் மகனுக்கு வெற்றி கிடைக்க வேண்டுமே சுவாமி!

இப்படிப் போராடத்தான், நான் புத்திரனைப் பெற்றிருக்கிறேன்! அவன், மனையாள், மக்கள் என்று சீராடக் கொடுத்து வைக்கவில்லை சுவாமி!

**கேசரி :** ஆஞ்சநேயன் அம்பாகப் பிறந்திருப்பவன்! ஒருத்திக்கு மட்டும் துணையாக, அவன் சுருங்கிப் போகமாட்டான்!

[இப்பொழுது எரிந்து கொண்டிருக்கும் நெருப்பு அணைந்து விடுகிறது.]

**முனிவர் :** ஆஞ்சநேயன் வென்று விட்டான்! திரண்டு வந்த அரக்கர்களை அழித்து விட்டான்! வீர காவியம் உருவாகத் தொடங்கி விட்டது!

**அஞ்சனை :** *(மகிழ்ச்சியோடு)* தர்மம் வாழத் தனயனைப் பெற்றுக் கொடுத்திருக்கிறேன்!

இந்தப் பெருமை, வேறு எந்தத் தாய் பெற முடியும்?

## காட்சி-241

*ராவணன் அரசவை*

**ராவணன் :** *(வந்து நிற்கும் காவல் வீரர்களைப் பார்த்து அதிர்ச்சியோடு)* என்ன! கிங்கரர்களை அந்தக் குரங்கு வென்று விட்டதா?

**ஒரு வீரன் :** *(அச்சத்தோடு)* ஆம் மன்னா! வந்த கிங்கரர்கள் எல்லோரையும் கொன்று விட்டது - ஓடிப் போனவர்களைத் தவிர!

**ராவணன் :** ஓடிப் போனார்களா!

**அந்த வீரன் :** சில அரக்கியர், அக்குரங்கிடம் கெஞ்சி, தங்கள் கணவரைத் தங்களோடு கூட்டிச் சென்று விட்டனர்!

**ராவணன் :** *அரக்கர்களுக்கு உயிர்ப்பிச்சை, அந்தக் குரங்கு அளித்ததா? அதற்கு நான் உயிர்ப்பிச்சை அளிக்கப் போவதில்லை! ஜம்புமாலி...!*

[கும்பிட்ட கையோடு, ஜம்புமாலி எழுந்து நிற்கிறான்.]

**ராவணன் :** கும்பிடும் கையுடையவனே! குன்றுபோல் நிற்பவனே! பாம்பு போன்றவனே! பாஷாணமாகப் பகைவரைக் கொல்பவனே! நீ அந்தக் குரங்கைக் கயிற்றால் பிணைத்து, என் கண்முன் கொண்டு வந்து நிறுத்து!

[ஜம்புமாலி தலை தாழ்த்தி, மன்னனை வணங்குகிறான்.]

**ஜம்புமாலி :** இந்தப் பெருமையை எனக்கு அளித்த வேந்தர் பெருமானே! தாங்கள் எண்ணியதைத் திண்ணமாகச் செய்து முடிப்பேன். அந்தக் குரங்கின் அவலக்குரலை, இந்த அவை கேட்கும்! வருகிறேன்.

[ஜம்புமாலி அங்கிருந்து செல்கிறான்.]

## காட்சி-242

*ஜம்புமாலியின் வீடு*

[ஜம்புமாலியின் வீட்டிற்கு ஓர் அரக்கி ஓடி வருகிறாள்.]

**ஓடிவந்த அரக்கி :** (ஜம்புமாலியின் மனைவியிடம்) அடி, புத்திகெட்ட அரக்கியே! உன் கணவன் ஜம்புமாலியை, அந்தக் குரங்கு பிணமாக்குவதைப் பார்க்கப் போகிறாயா?

**ஜம்புமாலியின் மனைவி :** மன்னர் கட்டளையிட்டு விட்டால், வேறு என்ன செய்ய முடியும்?

**ஓடிவந்த அரக்கி :** மன்னர் தன் மகனை அனுப்பாமல், மந்திரி மகன்தானே என்று, உன் கணவரைச் சாவைநோக்கி அனுப்பி யிருக்கிறார்!

அது சாதாரண குரங்கு அல்ல. அரக்கர்களைச் சந்தனமாக அரைத்துப் பூசும் வலிமை கொண்டது!

**ஜம்புமாலியின் மனைவி :** இப்பொழுது என்னால் என்ன செய்ய முடியும்?

**ஓடி வந்த அரக்கி :** அந்த வானரத்திடம் ஓடிப்போய், உன் கணவரின் உயிரைப் பிச்சையாகக் கேள்! பல அரக்கர்கள், தங்கள் மனைவியரால், இப்படி உயிர் பிழைத்திருக் கிறார்கள்!

கணவனும் கள்ளும் இல்லாமல், நம்மைப் போன்ற அரக்கிகள் உயிர் வாழ்வதிலே அர்த்தம் இருக்கிறதா?

**ஜம்புமாலியின் மனைவி :** இப்பொழுது போய் மடிப்பிச்சை கேட்கிறேன்!

**ஓடிவந்த அரக்கி :** சீக்கிரமாக ஓடிப்போ. உன் சேலை முந்தானையில் சிறைப்படுத்தி, உன் கணவரைக் கொண்டு வா!

[ஜம்புமாலியின் மனைவி, வீட்டிலிருந்து
வெளியேறுகிறாள்.]

## காட்சி-243

*அசோக வனம்*

**அனுமன் :** (ஜம்புமாலியிடம்) ஜம்புமாலியே! படை திரட்டி வந்தாய். அவர்கள் அனைவரும் கைகால் உடைபட்டு, உயிரை விட்டு விட்டனர்.

இப்பொழுது தனியனாய், என் எதிரே நிற்கிறாய்.

இந்த நிலையில், உன்னைக் கொல்வது நீதியாகாது என்று, என் வீரம் பேசுகிறது.

உன் உயிர் காக்க, இங்கிருந்து ஓடிப்போய் விடு.

**ஜம்புமாலி :** உன் இரக்கத்தால், உயிர் வாழ நினைக்கும் அரக்கன் நானில்லை!

என்னை வெற்றி கொள்ளலாம் என்ற நம்பிக்கை, உனக்கு இருக்கிறதா? அதையும் பார்த்து விடுவோம்.

**அனுமன் :** நீ பார்க்காத லோகத்தை இனிப்பார்க்கப் போகிறாய்!

## காட்சி-244

*அசோக வனம்*

[அசோக வனத்திற்குள் ஓடி வருகின்ற ஜம்புமாலியின் மனைவி விரித்த கைகளில், ஜம்புமாலியின் பிணம் வந்து விழுகிறது. கணவனின் பிணத்தைக் கட்டிப் பிடித்து அழுகிறாள்.]

**ஜம்புமாலியின் மனைவி** : *(அனுமனைப் பார்த்து) கணவரின் உயிரைத் தானமாகக் கேட்க வந்தேன்!*

**அனுமன்** : *தாமதித்து விட்டாயே சகோதரி! உன் கண்ணீரைக் கண்டு கலங்குகிறேன். என்னைக் காத்துக்கொள்ள, எதிர்க்கின்றவர்களை அழிக்கிறேன். இதைச் செய்யாமல், என்னால் இருக்க முடியாது; வாழ முடியாது; எனக்கிட்ட பணியை நிறைவேற்ற முடியாது.*

## காட்சி-245

*ராவணன் அரசவை*

[அரசவைக்கு ஓர் அரக்க வீரன் ஓடி வருகிறான். மன்னனைக் கும்பிட்டு, நடுநடுங்கி, வெலவெலத்து நிற்கிறான்.]

**ராவணன்** : நடுங்க வேண்டாம் - சொல்ல வந்த செய்தியைச் சொல்.

**அரக்க வீரன்** : *(பயத்தோடு) ஜம்புமாலியும்.....*

**ராவணன்** : *இறந்தானா?*

*[அரக்க வீரன் ஆமாம் என்கின்ற பாவனையில் தலையசைக்கிறான்.]*

**ராவணன்** : *படையிலே மிஞ்சியவர்கள்...*

**அரக்க வீரன்** : *எவருமில்லை!*

**ராவணன்** : *ஒரு குரங்கு, சிரங்காக எனக்கு அரிப்பைத் தந்து கொண்டிருக்கிறது!*

அதை நானே போய்ப் பிடித்துப் பிசைகின்றேன்!

**விரூபாட்சன் :** மன்னா! சிலந்தியைப் பிடித்து உண்ணும் ஒரு குரங்கோடு போரிட, சினத் தீ காட்டும் திசைக் களிறுகளோடு போரிட்ட, நீங்கள் போவதா?

**யூபாசன் :** ஒரு கொசுவின் கொட்டமடக்கக் கருடனா புறப்படுவது?

**துர்த்தரன் :** தோல்வியுற்ற மும்மூர்த்திகள், இதைக் கண்டு, ஏளனமாக முறுவல் பூக்க மாட்டார்களா?

**பிரகசன் :** ராவணேஸ்வரனுக்கு ஆள்பலம் இல்லையென்று, இந்த அவனியெங்கும் அவதூறாகப் பேசப்பட வேண்டுமா?

**பாசகர்ணன் :** பஞ்ச சேனாபதிகளாக, நாங்கள் எதற்காக இருக்கிறோம்? பகைவரை அழிக்கத்தானே! இந்தப் பால பாடத்தை, மாமன்னர் மறக்கலாமா?

**ராவணன் :** உங்கள் பேச்சில் உள்ள நியாயத்தை உணர்கிறேன். அரக்கரின் பெருமையைப் பேசும் விதம்போல, அந்தக் குரங்கைப் பிடித்து இழுத்து வாருங்கள். கைதவறிக் கொன்று விடாதீர்கள்! இதை அனுப்பியவன் யார் என்பது தெரிய வேண்டும். இது, இந்திரன் தந்திரமாகச் செய்த வேலையா?; இந்தக் குரங்கை மந்திரித்து விட்ட மாயாவி யார் என்பதை அறிதல் வேண்டும்.

பஞ்ச சேனாபதிகள், படைதிரட்டிப் புறப்பட, இசைவு அளிக்கிறேன்.

இடியென முழங்கிப் போய், கடிக்கின்ற அந்தக் குரங்கின் கழுத்தைப் பற்றிக் கொண்டு வாருங்கள்!

## காட்சி-246

*லங்கை நகர் ராஜவீதி*

[பஞ்ச சேனாபதிகள் ஐவரும், போர்க்கோலம் பூண்டு புறப்படுகின்றனர். அவர்கள் மனைவியர், அவர்களை வழிமறித்துப் புலம்புகின்றனர்.]

**ஒரு மாது :** *அசோக வனம் போகாதீர்கள்! எங்களை சோக வனத்திற்குள் தள்ளாதீர்கள்!*

**இன்னொரு மாது :** *அங்கு வந்திருப்பது குரங்கு அல்ல! கூற்றுவன் மாற்றுரு எடுத்து வந்திருக்கிறது!*

**மற்றொரு மாது :** *பூவைப் பிய்த்து எறியும் குரங்கு, அரக்கர்களின் தலையைப் பிய்த்து எறிந்து கொண்டிருக்கிறது!*

*அங்கு போய், எந்த அரக்கரும் உயிரோடு மீண்டதில்லை!*

**வேறொரு மாது :** *உங்கள் பிணத்தைப் பார்த்து, நாங்கள் அழுது புலம்ப வேண்டுமா?*

*அதுதான், ராவணேஸ்வரனுக்குச் சங்கீதமாகத் தெரியுமா?*

**பிறிதொரு மாது :** *மன்னர் வெற்றிக் கொடி பிடிக்க, எங்கள் தாலிக் கொடியை நாங்கள் பறிகொடுக்க வேண்டுமா?*

**இன்னொரு மாது :** *எங்களை மீறிச் செல்வதாக இருந்தால், எங்களையும் அழைத்துச் செல்லுங்கள்.*

*மணமேடையிலே ஒன்றாக இருந்து வாழ்க்கையைத் தொடங்கிய நாம், பலி பீடத்திலும் ஒன்றாக இருந்து, வாழ்க்கையை முடித்துக் கொள்வோம்!*

**ஒரு சேனாபதி :** *என்ன பேசுகிறீர்கள்? வெங்களம் காண அரக்க வீரன் அஞ்சலாமா?*

**இன்னொரு சேனாபதி :** *உண்டு உடுத்தி உறவாடவா சேனாபதி பதவியைக் கொடுத்திருக்கிறார்கள்!*

**மற்றொரு சேனாபதி :** *நகரிலே பகை நுழைந்த பிற்பாடு, எங்கள் வாள், இரை தேடிச் சுழல வேண்டாமா?*

*உங்கள் கேசத்தைச் சிக்கெடுத்துச் சிங்காரிக்கவா, வாளை வைத்திருக்கிறோம்!*

**வேறொரு சேனாபதி :** *ஒரு குரங்குக்கு அஞ்சி வீட்டிலே அடைபட்டுக் கிடந்தால், உங்கள் வயிற்றிலே பிள்ளை பிறக்காது; அற்பப் புழுதான் பிறக்கும்!*

**பிறிதொரு சேனாபதி :** *எங்கள் வீரத்திற்கு இழுக்குத் தேடாதீர்கள்! எங்கள் காதணி, தோற்றோடிய திசை யானைகளின் தந்தத்தால் செய்யப்பட்டவை!*

**இன்னொரு சேனாபதி :** எங்கள் அணிகலன், குபேரனிடம் கொள்ளையிட்டவை!

**வேறொரு சேனாபதி :** வால் உள்ள ஐராவதத்தை அடக்கிய நாங்கள், வால் உள்ள ஒரு குரங்குக்கு அஞ்சிப் பின் வாங்குவோமா?

**மற்றொரு சேனாபதி :** மலைகளை நகும் எங்கள் தடமார்பு! கடல் அலைகளை நகும் எங்கள் நெடுந்தோள்! எமன் செய்யும் கொலைகளை நகும், நெடுங்கொலையர் நாங்கள்!

கொல்லன் ஊதும் உலைகளை நகும், அனல் உமிழும் எங்கள் கண்கள்!

வழி விடுங்கள். அந்த அற்பக் குரங்கைப் பற்றி, இந்த ராஜ வீதி வழியே இழுத்து வருகிறோம்.

அப்பொழுது அதைப் பார்த்து, எள்ளும்படிச் சிரியுங்கள்!

அந்தப் பொழுது, எங்களுக்கு, உங்களைப் புணர்ந்த பொழுதாகத் தித்திக்கும்!

[மனைவியரை மீறிச் செல்கின்றனர்.]

## காட்சி - 24

*சுபர்வகிரிப் பிரதேசம்*

*அஞ்சனை வீடு*

[வானம் குமுறிப் பயங்கரமாக இடி இடிக்கிறது. பலத்த மழையும் கொட்டத் தொடங்கி விடுகிறது.

இயற்கையின் இந்தச் சீற்றம் கண்டு, அஞ்சனை அஞ்சுகிறாள்.]

**அஞ்சனை :** (தனக்குள்) என் ஆஞ்சநேயனுக்கு ஏதோ ஆபத்து வந்திருக்கிறது என்று அஞ்சுகிறேன்! இயற்கையின் சீற்றம், இதைத்தான் எனக்கு உணர்த்துகிறது. தவமுனிவரின் ஆஸ்ரமம் சென்று, ஆறுதல் மொழி கேட்காவிட்டால், என் ஆவி சோர்ந்து விடும்; என் அங்கம் துடித்து அடங்கி விடும்! போகிறேன். நல்வாக்கு, நான் கேட்டால் தான், நடமாடும் மனைவியாவேன்!

## காட்சி-248

*சுபர்வகிரிப் பிரதேசம்*

*காட்டு வழி*

[கொட்டும் மழையில், காட்டு வழியிலே, விழுந்து எழுந்து செல்கிறாள் அஞ்சனை.]

## காட்சி-249

*சுபர்வகிரிப் பிரதேசம்*

*முனிவரின் ஆஸ்ரமம்*

**முனிவர் :** *(அஞ்சனையிடம்)* இந்த இடிமழையிலே, உன் மகனின் நலம் பற்றிக் கேட்க, கடலிலே கவிழ்ந்து விட்ட கலம் போல வந்து நிற்கிறாய்!

ஆஞ்சநேயன் இப்பொழுது, லங்கையின் பஞ்ச சேனாதிபதிகளோடு சண்டையிட்டுக் கொண்டிருக்கிறான்!

## காட்சி-250

*அசோக வனம்*

[ஆஞ்சநேயன் பஞ்ச சேனாபதிகளோடு போர் புரிகின்றான்.]

## காட்சி-251

*சுபர்வகிரிப் பிரதேசம்*

*முனிவரின் ஆஸ்ரமம்*

[இப்பொழுது வானம் வெறித்து, மழை நின்று விடுகிறது.]

**முனிவர் :** பெய்து முடித்து விட்ட மழை, உன் மைந்தன் கொய்து முடித்த விட்ட வெற்றியைக் குறிக்கிறது!

*கொல்ல வந்த பஞ்ச சேனாபதிகள், உன் புத்திரன் ஆற்றலால் கொல்லப்பட்டார்கள்!*

*ஐம்புலன்களைத் தன் நல் அறிவால் அடக்கியாளும் ஆஞ்சநேயன், இந்த வெஞ்சின அரக்கர் ஐவரையும் வென்று காட்டி, 'ராம்! ராம்!' என்று முழக்கமிடுகிறான்!*

## காட்சி-252

*அசோக வனம்*

[பஞ்ச சேனாபதிகள் பிணமாகக் கிடக்க, அனுமன், 'ராம்! ராம்!' என்று முழங்கி ஆர்ப்பரிக்கிறான்.]

## காட்சி-253

*ராவணன் அரசவை*

**ராவணன் :** *பஞ்ச சேனாபதிகளும் பட்டுப் போனார்கள்! என் மானம் காக்க, நானேதான் செல்லவேண்டும்.*

*ராவணன் அரியணையில் அமர்ந்திருப்பதைவிட, அமரில் முனைந்திருப்பதைத்தான் விரும்புவான்!*

*கயிலையை அசைத்தவன், ஒரு குரங்கைப் பிடிக்கக் கிளம்புகிறேன்!*

*விதி, என் வீரத்தை, இப்படியும் எழுதிக் காட்டட்டும்!*

**அட்ச குமாரன் :** *(எழுந்து நின்றபடி) வேண்டாம் தந்தையே! தாங்கள் இதற்காகப் போக வேண்டாம்.*

**ராவணன் :** *அட்ச குமாரா! நம்பி அனுப்பியவர்கள் எல்லாம் வெம்பி உதிர்ந்து விட்டார்கள்.*

*இந்நாட்டுக்கு மன்னன் நானா? அந்தக் குரங்கா? - என்று தேவர்கள் பேச ஆரம்பித்து விடுவார்கள்.*

**அட்ச குமாரன் :** உங்கள் வேதனை புரிகிறது தந்தையே! உங்கள் குமாரன் நான் இருக்க, நீங்கள் களம்புக வேண்டுமா? அதுவும் ஒரு குரங்கைப் பிடிக்க!

அது என்ன, முக்கண்ணன் சிவனின் ஊர்தியான காளையா? மூன்று உலகும் அளந்த திருமால் ஊர்ந்து செல்லும் கருடனா? இல்லை, அவன் துயில் கொள்ளும் ஆதிசேஷனா? திசை மாறி வந்திட்ட, திசையானைகளில் ஒன்றா அது? அங்கத்தைச் சொறிந்து சுகம் காணும் அற்பக் குரங்கு அது!

எண் திசை வென்ற நீங்கள், இதைப் பிடிக்க எழுந்து போவதா? அதைக் கண்டு நான் வாளா இருப்பதா?

என் தமையன் இந்திரஜித்தை, இந்திரனை வென்று, கொண்டு வரும்படிக் கட்டளையிட்டீர்கள்! அன்னவனும் அதைச் செய்து புகழ் பெற்றான்! உங்களுடைய இன்னொரு மகன் அட்ச குமாரனுக்கு, இந்தக் குரங்கைப் பிடித்து வரும் வாய்ப்பையாவது வழங்கக் கூடாதா மன்னா?

சிவனே, அந்தக் குரங்கின் உருவிலே வந்திருந்தாலும், அதன் சிரசைப் பிடித்து, இங்கு இழுத்து வருகிறேன்!

தூணை உடைத்துத் தோன்றிய நரசிங்கமாக இருந்தாலும், அதன் கரத்தைக் கட்டிக் கொண்டு வருகிறேன்!

பூமியைத் தூக்கிய வராகமாக அது இருந்தாலும், லங்கை நகர் வீதியிலே, அதைப் புரளவிட்டு, உங்கள் திருமுன், ஒரு பொதியாக நிறுத்துகிறேன்!

**ராவணன் :** அட்சகுமாரா! என் இசைவை, உன் வசை இலாச் சொற்கள் மூலம் பெற்று விட்டாய்.

**அட்சகுமாரன் :** இதைச் செய்யத் தவறினால், என்னைத் தண்டியுங்கள் மன்னா!

**ராவணன் :** தண்டனையா? குமுறுகின்ற கடல், அலைவீசாமல் இருக்குமா? உன் வீரத்தின் முன், வெறுங்குரங்கால் என்ன செய்ய முடியும்?

குரங்கோடு வா! கை கொள்ளாத அளவு, வெற்றி மாலையை எடுத்து, உன் கழுத்தில் போடுகிறேன்.

## காட்சி-254

*மாளிகை*

[தன் மாளிகையில் போர்க் கோலம் பூணுகிறான் அட்சன்.]

**அட்சன் :** *அந்த அற்பக் குரங்கை, என் சுண்டு விரலால் மடக்கி, லங்கை வீதிகளில் உருளவிடுகிறேன்!*

**உடன் இருக்கும் அரக்க வீரன் :** உருவு கண்டு எள்ளாமை வேண்டும் இளவரசே!

நம் மாமன்னரை, வாலில் கட்டிக் கொண்டு, இம் மண்ணெங்கும் உலவியதும் ஒரு குரங்குதான்! எந்த உருவத்திலும், வீரம் ஒளிந்து கிடக்கலாம்

**அட்சன் :** நீ சொல்வது உண்மையே! அதனால் குரங்கு இனத்தையே அழித்து விடுகிறேன்! மூவுலகிலும் குரங்கு இனம் இல்லாததால், ஒன்றும் குடிமுழுகிவிடாது! கருவில் இருக்கும் குரங்குகளும், என் சீற்றத்தால் சிதைந்து விடும்! என் தந்தையைத் தலை குனிய வைத்த இனத்தைக் களையெனப் பிடுங்கி எறிகிறேன்!

## காட்சி-255

*அசோக வனம்*

[அட்சன் பிணமாக விழுகிறான்.]

## காட்சி-256

*இந்திரஜித் மாளிகை*

**இந்திரஜித் :** (வேதனையோடு) என்ன! என் தம்பி அட்சன் மாண்டானா?

இந்தத் தரையிலே நான் வீரன் என்று நின்று கொண்டிருக்க, என் கையிலே அவன் பிணமா?

*என் அங்கத்தைக் கூறு போட்டது போல, என் தம்பியைச் சாகடித்த அந்தச் சண்டாளக் குரங்கைக் கொல்லாவிட்டால், என்னைப் பார்த்துத் தேவமகளிர் நகைக்க மாட்டார்களா? அவர்களுக்கு நாணி நான் வாழ வேண்டுமா?*

*இந்திரனைச் சிறையெடுத்த என் வீரச் சிறப்பு, செருப்பு தேய்ந்தது போலத் தேய்ந்து மறந்து விட்டதா?*

## காட்சி-257

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

*தேவலோகம்*

[இந்திரனைக் கட்டி இழுத்து வருகிறான், இந்திரஜித் என்ற சிறப்புப் பெயர் பெற்ற மேகநாதன்]

**மேகநாதன் :** *இந்திரா! லங்கை மன்னன் ராவணனின் மகன், இந்த மேகநாதனிடம் தோற்று, கட்டுண்டு இருக்கிறாய்! இந்த வெற்றி, அரக்கர் குலத்திற்கு அணியாகத் திகழும்; தேவர் உலகைப் பிணியாக வாட்டும்!*

**இந்திரன் :** *மேகநாதா! தேவமகளிர் பார்த்துக் கொண்டிருக்க, என்னை விலங்கைப் போல் எங்கு இழுத்துச் செல்கிறாய்?*

**மேகநாதன் :** *என் லங்கைக்கு! உன்னை அங்கு சிறை வைத்தால் தான், என் தந்தையின் தலையில் உள்ள மணிமுடி ஜொலிக்கும்!*

## காட்சி-258

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

*லங்கைச் சிறை*

[சிறையில் இந்திரன் அடைக்கப்படுகிறான். இந்திரனைப் பார்த்து, ராவணனும் மேகநாதனும் ஏளனமாகச் சிரிக்கின்றனர்.]

**ராவணன் :** இந்திரா! கற்பகத் தருவின் நிழலில், தேவ கன்னியரோடு உறவாடி மகிழ்ந்த நீ, இந்த இருட்சிறையில், தனிமையில் தவித்து, வாடியிரு!

**மேகநாதன் :** அமிர்தம் உண்ட நீ, அரக்கர் தரும் உணவுக்குக் கையேந்திக் காத்திரு!

(இப்பொழுது அங்கு பிரம்மதேவர் தோன்ற, ராவணனும் மேகநாதனும் பணிவோடு அவரை வணங்குகின்றனர். இந்திரனும் வணங்குகிறான்.)

**ராவணன் :** பிரம்மதேவா! நீ இங்கு வரவேண்டுமா? நீ ஆணையிட்டால், உன் சத்தியலோகத்திற்கு நான் சண்டமாருதமாக வந்து நிற்பேனே!

**பிரம்மதேவர் :** என்னைப் பூஜிக்க என்றால், உன்னை வரச் சொல்லியிருப்பேன்.

உன்னிடம் யாசிக்க, நான்தானே உன்னிடம் வர வேண்டும்!

**ராவணன் :** சிவ சிவா! பெரிய வார்த்தைகளைப் பேசி, என்னைப் பித்துக் கொள்ளச் செய்யாதீர்கள்! என்னவேண்டுமோ, அதைக் கட்டளையிட்டுக் கேளுங்கள்! நீ அளித்த வரத்தால், அளப்பரிய ஆற்றல் பெற்று விளங்குபவன் நான்!

**பிரம்மதேவன் :** உன்னையும் மிஞ்சி விட்டான், உன் மைந்தன் மேகநாதன்.

இந்திரனை வென்று, பிணைத்து இங்கு இழுத்து வந்து விட்டான்.

இந்த வெற்றி போதாதா? இந்திரனைச் சிறையிட்டுச் சிறுமைப்படுத்த வேண்டுமா?

பகைவனை வென்று, அவனை நாணங்கொள்ளச் செய்வதில்தான், நல்ல வீரம் புலப்படும்.

பகைவனைத் துன்புறுத்துவது வீரமல்ல; ஈரமற்ற இழி செயல்!

இந்திரனை வென்ற உன் மைந்தன், 'இந்திரஜித்' என்ற புகழ் நாமத்தோடு, இந்தப் புவனமெங்கும் பேசப்பெறட்டும்!

கூனிக் குறுகி நிற்கும் இந்த இந்திரனை விட்டுவிடு! இதனால், உன் பெருமை, பரந்து விரிந்து எங்கும் படரும்!

**ராவணன் :** உன் வாக்கு வேறு, வேதவாக்கு வேறா? இப்பொழுதே இந்திரனை விடுவிக்கிறேன். இந்திராணி மகிழட்டும்! தாபத்தில் பெண்கள் தவித்திருக்க, ராவணன் உடன்படான்!

**இந்திரஜித் :** பிரம்மதேவா! என் வார்த்தையையும் சற்றுக் கேளுங்கள். இந்திரனை வென்றதற்காகப் பெருமைப் படுத்தினீர்கள்! நன்றி நாயகரே!

இந்திரனை விட்டு விடுமாறு கட்டளையிட்டீர்கள். ஏற்றுக் கொள்கிறோம். தங்கள் ஆளுகையைப் போற்றி மதிக்கிறோம்.

பதிலுக்கு, அருளாளர்களிடம் வரம் கேட்பது தவறல்லவே?

**பிரம்மதேவர் :** கேள் இந்திரஜித்! என்ன வரம் வேண்டும்? நான் சொன்னபடி நீ கேட்டுநடக்கப் போவதால், நீ சொன்னபடி, நானும் நடக்கத்தானே வேண்டும்!

**இந்திரஜித் :** அமிர்தம் அருந்தாத குறை நீங்க, எனக்கு மரணம் இல்லா வாழ்வைத் தரவேண்டும்!

**பிரம்மதேவர் :** இந்திரஜித்! பிறந்த உயிர் இறப்பது, இப்பிரபஞ்ச நியதி! அந்த விதியை மீறி, என்னால் வரமளிக்க முடியுமா? வரம்பிற்கு உட்பட்டு வரத்தைக் கேள்.

**இந்திரஜித் :** அப்படியானால், அபூர்வமான சக்தியொன்றை எனக்கு அளியுங்கள்.

**பிரம்மதேவர் :** அதற்கு ஆட்சேபணையில்லை.

**இந்திரஜித் :** நான் போர்க்களம் காணும் முன்பு, வேள்வித் தீ வளர்ப்பேன்.

**பிரம்மதேவர் :** வேள்வித் தீ வளர்ப்பது, அரக்கர்கள் விரும்பிச் செய்யும் வினைதானே.

**இந்திரஜித் :** அந்த வேள்வி முற்றுப் பெற்றவுடன், அந்தத் தீயிலிருந்து, ஒரு தெய்வத்தேர், குதிரைகளோடு தோன்ற வேண்டும்!

அந்தத் தேரில் ஏறி, நான் போர் செய்தால், எனக்குத் தோல்வி ஏற்படக் கூடாது!

**பிரம்மதேவர் :** இந்த வரத்தை நீ பெறுகின்றாய்!

**இந்திரஜித் :** இந்திரனும் விடுதலை பெறுகின்றான்!

## காட்சி-259

*ராவணன் அரசவை*

**இந்திரஜித் :** தந்தையே! இந்த 'இந்திரஜித்' என்ற பெயர் எனக்கு இருப்பது, கூப்பிட்டு மகிழவா? இசைபாடிக் கொண்டாடிக் கூத்தடிக்கவா?

லங்கையிலே பகை நுழைந்தவுடன், என்னையல்லவா அனுப்பியிருக்க வேண்டும்!

அந்தப்புரத்தில் சுகம் காண, நான் பிறப்பெடுக்க வில்லை! அமிர்தம் உண்ணாத அரக்கர் குலத்தை முன்னிருத்த, உங்கள் மைந்தனாக வந்திருப்பவன் நான்!

தம்பி அட்ச குமாரன் ஒரு தளிர்! அநியாயமாக அவன் சிதைந்து விட்டானே! விருது பெற்ற நான், வீணாக இருக்க, அந்த அரும்பைப் போய், குரங்கோடு அமருக்கு அனுப்பி வைத்தீர்களே!

அனுப்பி வைத்த அரக்கர்கள், ஒருவரும் திரும்ப வில்லையே!

அந்தக் குரங்கின் வலிமை இன்னுமா தெரியவில்லை? அது, சிவன், பிரம்மன், திருமால் - இவர்கள் சேர்ந்த வடிவமோ என்னவோ!

யாராக இருந்தாலும், பகை என்று லங்கை மண்ணை மிதித்து விட்டால், அவர்கள் பட்டுப்போக வேண்டியதுதான்!

எனக்கு விடை கொடுங்கள். மரத்திற்கு மரம் தாவும் அந்தப் பிறவியைக் குதிக்காமல், கூத்தாடாமல், இந்த அவையிலே கட்டி வைத்து, நிறுத்தி வைக்கிறேன்!

**ராவணன் :** மைந்தா! என்னிடம் நீ அதைத் தா, இதைத் தா - என்று இதுவரை கேட்டதில்லை.

போருக்கு அனுமதி தா என்றுதான் கேட்டிருக்கிறாய்! இப்போதும் அதையே கேட்கிறாய்!

களம் கண்டு வா! வென்று வா! அந்த விலங்கைக் கையோடு கொண்டு வா!

## காட்சி-260

*அசோக வனம்*

[அனுமனும் இந்திரஜித்தும் எதிர் எதிர் நிற்கிறார்கள்.]

**இந்திரஜித் :** (அனுமனை நோக்கி) இந்த மண்ணுக்கு வந்து, வெறியாட்டம் ஆடிய, வானரம் நீதானா?

**அனுமன் :** தர்மத்திற்கு எதிர் ஆட்டம் போட்டுக் கொண்டிருக்கும், ராவணனின் மைந்தன் இந்திரஜித் நீதானா?

**இந்திரஜித் :** இந்திரன் பட்டபாடு, உனக்குத் தெரியுமல்லவா?

**அனுமன் :** காற்று இப்போது, உனக்கு எதிர்த்திசையில் வீச ஆரம்பித்து விட்டது!

**இந்திரஜித் :** மடிவதற்காகக் கடல் தாண்டி வந்திருக்கிறாயா?

**அனுமன் :** யாரெல்லாம் மடிந்தார்கள் என்று, கடல் தாண்டிப் போய்ச் சொல்லப் போகிறேன்!

**இந்திரஜித் :** நீ இங்கிருந்து தப்பிப் போவதா? அது முடியாத செயல்!

**அனுமன் :** உன்னால் முடிந்த செயல், என்னிடம் உயிர்ப் பிச்சை கேட்பது!

**இந்திரஜித் :** சீ! குரங்கே!

**அனுமன் :** தூ! அரக்கனே!

**இந்திரஜித் :** நான் ஆயுதமெடுத்தால், உன்னால் தாங்க முடியாது!

**அனுமன் :** ஆயுதம் எடுக்காமல், மலர்தூவி, என்னை அர்ச்சிக்கவா இங்கு வந்திருக்கிறாய்!

[உடனே இந்திரஜித், சீற்றத்தோடு, தன் வில்லை எடுத்து நாணைப் பூட்டுகிறான்.]

## காட்சி-261

*தேவலோகம்*

**இந்திரன் :** என்னை இழிவுபடுத்திய அந்த மேகநாதனோடு, அறத்தின் செல்வன் அனுமன் போரிடத் தொடங்கி விட்டான். வெற்றி அனுமனுக்கே கிடைக்கும்! வீழ்ச்சி அரக்கர் குலத்திற்கு! மகிழ்ச்சியும் எழுச்சியும் இந்த இந்திரலோகம் பெறும்!

**ஒரு தேவர் :** வெற்றி கிடைக்கு முன்பே, வெற்றி விழாவைக் கொண்டாட ஆரம்பித்து விடுவோம்!

**இந்திரன் :** மழைக்கு முன்பு, மேகம் குமுறவில்லையா? நாமும் இசை முழக்கி, இனிய நடனம் ஆடி, அனுமனின் வெற்றியை, ஈரேழு அகிலமும் உணரச் செய்வோம்!

[தேவர்களும், தேவமகளிரும், வாத்தியங்களை இசைத்து, மகிழ்ச்சியோடு ஆடுகின்றனர்.]

## காட்சி-262

*அசோக வனம்*

[இந்திரஜித் ரத்தம் ஒழுக, மண்ணிலே வீழ்ந்து கிடக்கிறான்.]

**அனுமன் :** (இந்திரஜித்தைப் பார்த்து) நீ என்னை நோக்கிச் செலுத்திய அம்புகளை, உன்னை நோக்கிச் செல்லும்படி செய்தேன்.

உன் தடந்தேரில் பூட்டப்பட்ட பேயோடு சாரதியைத் தரைபடப் புடைத்தேன்.

உன் தேரிலே குதித்து, உன் வில்லைப் பறித்து முறித்தேன்.

உன் முடித்தலையிலே, மரத்தைப் பிடுங்கி அடித்தேன்.

அடிபட்ட புண்ணின் புலால் நாற்றத்தோடு, குருதி வழிய, இந்த மண் மாதா குலுங்கி நகைக்க, விழுந்து கிடக்கிறாய்!

**இந்திரஜித் :** அற்ப வானரமே! உன்னை அடக்கப் பிரம்மனின் பெரும் படைக்கலத்தைத் தொடுப்பேன்!

அந்த அஸ்திரத்திற்குச் சாயாதவர்களை, எந்தச் சமரும் கண்டதில்லை!

## காட்சி-263

*தேவலோகம்*

**ஒரு தேவர் :** (கலவரத்தோடு) மேகநாதன், பிரம்மாஸ்திரத்தை அனுமன் மேல் தொடுக்கப் போகிறான்!

பூவும் தீபமும் புகையும் காட்டி, அர்ச்சனை செய்து, நான்முகன் படைக்கலத்தைத் தன் தடக்கையில் ஏந்தி விட்டான்!

**இன்னொரு தேவர் :** இந்த மண் நடுங்க, மாதிரம் எல்லாம் நடுங்க, மதி தோய் விண் நடுங்க, மேருவும் நடுங்க, மாருதி தோளுக்குக் குறிவைத்து, மாபாவி செலுத்தி விட்டான்!

**மற்றொரு தேவர் :** என்ன கொடுமை இது! தழல் உமிழ்ந்து சென்ற அந்த அஸ்திரம், அனுமனின் தடந்தோளைக் கட்டி அவனைக் கீழே சாய்த்து விட்டது!

**வேறொரு தேவர் :** ஊழிக் காலத்தில், மாமதியோடு கோள்கள் உதிர்ந்து விழுவது போல, அறக்கடவுள் கண்ணீர் சிந்த ஐயோ, அனுமன் கட்டுண்டு, மண்ணிலே கிடக்கிறான்!

**ஒரு தேவர் :** தர்மம் காக்க வந்தவனைத் தன் கர்மம் ஆற்ற வந்தவனை அந்தப் பிரம்மாஸ்திரம், நாகாஸ்திரம், விஷம் பட்ட விலங்கைப் போல வீழ்த்தி விட்டது!

**இன்னொரு தேவர் :** தேவர்கள் உய்யும் வழி அடைபட்டு விட்டதா? ஊழிக்காலம் நெருங்கி விட்டதா?

## காட்சி -264

*அசோகவனம்*

[பாம்பால் கட்டுண்டு, மண்ணிலே கிடக்கிறான் அனுமன். அரக்கர்கள் அனுமனைச் சுற்றி நின்று ஆரவாரிக்கின்றனர். அனுமன் உடம்பைச் சுற்றியிருக்கும் பாம்பு சீற்றம் கொள்ள அதைச் சீண்டி விடுகின்றனர்.]

**ஓர் அரக்கன் :** ஏ குரங்கே!

**இன்னொரு அரக்கன் :** வால் உள்ள குரங்கே! வகையாக மாட்டிக் கொண்டாயா?

**வேறொரு அரக்கன் :** லங்கையிலே ஈசனே நுழைய அஞ்சுவான்! குறைமதியால் நீ இங்கு வந்துகுதித்துவிட்டாய்? உன் வாழ்வின் இறுதியைக் குறித்து விட்டாய்!

**மற்றொரு அரக்கன் :** இந்த விலங்கை, அம்பு செலுத்திக் கொல்வோம்!

**பிறிதொரு அரக்கன் :** வாளால் வகிர்வோம்!

**வேறொரு அரக்கன் :** ஈட்டி எறிந்து, இதற்கு இறப்பை அளிப போம்!

**மற்றொரு அரக்கன் :** கோடாலியால் இதன் குறு உடம்பைப் பிளப்போம்!

**வேறொரு அரக்கன் :** இவன் குடலினை உருவி, நம் உடம்பில் மாலையாகப் போட்டுக் கூத்தாடுவோம்!

**மற்றொரு அரக்கன் :** இவன் உயிரோடு இருந்தால், நம் உயிர் நிலைக்காது! இவனை மண்ணிலே தேய்த்தால்தான், நம் மகளிர் மங்கலமாக இருக்க முடியும்!

**ஓர் அரக்கன் :** இவனைக் கடலில் மூழ்கடிப்போம்!

**வேறொரு அரக்கன் :** இல்லையென்றால், எரியும் நெருப்புக்கு இரையாக்குவோம்!

**இந்திரஜித் :** (அங்கு வந்தபடி) பொறுங்கள்! இவனைக் கொன்று விடாதீர்கள். இவனை அனுப்பியவன் யார் என்பதை நாம் அறிதல் வேண்டும்.

அரசவைக்கு இவனை இழுத்துச் செல்வோம். மன்னரின் கட்டளை பெற்று இவன் மரணமடையட்டும்! இங்கு இறந்துபட்ட அரக்கர்களின் ஆவி சாந்தி பெற, இவன் சடலத்தை, அந்த ஆவிகள் காண வேண்டும்!

மன்னர் கையால், இவன் சாவைச் சந்திக்கட்டும்! அதனால்தான் சமரிலே, இவனைக் கொல்லாமல் தவிர்த்தேன்!

## காட்சி-265

*தேவலோகம்*

**இந்திரன் :** தேவர்களே! அஞ்சாதீர்கள். பிரம்மாஸ்திரம், அனுமனை ஒன்றும் செய்யாது. பிரம்மன் கொடுத்த வரம் அது.

**ஒரு தேவர் :** பின் ஏன் அனுமன் இப்படிக் கட்டுண்டு களத்தில் கிடக்கிறான்?

**இந்திரன் :** ஒரு முகூர்த்த நேரம் மாத்திரம், அதற்குக் கட்டுண்டு இருப்பது பிரம்மனுக்குச் செலுத்தும் அஞ்சலி! - அவ்வளவு தான்.

**மற்றொரு தேவர் :** தேவந்திரா! நேரம் கடந்தும், அனுமன் கட்டுண்ட நிலைமைதானே நீடிக்கிறது!

**இந்திரன் :** அனுமன் இப்பொழுது கட்டுண்டதுபோல நடிக்கின்றான். ராவணனைக் காண எண்ணுகிறான். தூது உரையாகச் சில சொல்லி, ராவணன் மனதில் உள்ளதைத் துருவி எடுத்து, ராமனிடம் சொல்ல, மண்ணிற் கிடந்து, தன்னை அரசவைக்கு இழுத்துச் செல்ல வழிகாட்டுகின்றான்.

## காட்சி-266

*அசோக வனம்*

*சீதை இருக்கும் இடம்*

**சீதை :** (மனப் பதைப்பதைப்போடு, திரிசடையிடம்) என்ன! அனுமன் கட்டுண்டானா?

**திரிசடை :** (வாட்டத்தோடு) ஆம் தாயே! அனுமனை அரசவைக்கு இழுத்துச் செல்கிறார்கள்.

**சீதை :** அனுமன் அரக்கர்களைக் கொன்றான் என்று நீ கூறிய போது, அதர்மத்திற்கு அழிவு வந்து விட்டது என்று மகிழ்ந்தேன்.

அந்த நம்பிக்கைக்கு இப்போழுது நாசம் வந்து விட்டதே!

விஸ்வரூபம் எடுத்தவன், ஒரு கள்ள அரக்கனின் வில்லுக்கு வீழ வேண்டுமா? தர்மத்தின் கதி இதுதானா?

கடல் கடந்து இங்கு புகுந்தவன், கடல் கடந்து நான் மீண்டு செல்ல உதவுவான் என்றெண்ணி இருந்தேன்! என்னைத் துன்பக் கடலிற் தள்ளிவிட்டு, அரக்கர் கைகளிலே சிக்கிவிட்டானே!

என் காதலர் கணையாழி காட்டி, என் ஆருயிர் பிரியாமல் காப்பாற்றினான்!

அவனை, ஊழி பெயரினும் நீ பெறுவாய் வாழ்வு என்று வாழ்த்தினேன்!

என் வார்த்தைக்குப் பழி வந்து விட்டதா? தீயைப் போன்ற என் கற்பு நிலையால், அந்த அறத்தின் தூதுவனுக்கு, ஒரு தீமை நேராது என்று எண்ணியிருந்தேன்!

அனுமன் வழிகாட்ட, என் மன்னவன் இங்கு வந்து, அரக்கனை மாய்த்து, எனைக் கொண்டு போவார் என்று நம்பியிருந்தேன்!

இவை எல்லாமே வெறும் கனவாகப் போயிற்றே!

*பாவி வேடன் கையிலே சிக்கிய அன்னப்பறவைபோல, நான் அல்லற்பட்டு மாய்வதுதான், எனக்கு எழுதப்பட்ட விதியா? தர்மத்திற்கு இறுதியிலே இழப்புத்தானா?*

*வேதம் இதையா சொல்கிறது? எனக்கு விளங்க வில்லையே!*

## காட்சி-267

*ராவணன் அரசவை*

[ராவணன் அரசவைக்கு அனுமன் கொண்டு வரப்படுகிறான். பிரம்மாஸ்திரத்தால் கட்டுண்டவன் போல், ராவணன் முன்பு, அனுமன் நின்று கொண்டிருக்கிறான்.]

**இந்திரஜித் :** *தந்தையே! புள் ஊர்ந்த திருமாலின் சக்கரமும், புரந்தரனின் வஜ்ராயுதமும், முக்கண் சிவனின் சூலமும், தாக்கிய தழும்போடு, மென் குழலார் நகக் குறியும், தங்கள் மேனியிலே தெரிய வீற்றிருக்கின்றீர்கள்!*

*இந்த வீரத்திரு முன்பு, இந்த விலங்கை இழுத்து வந்திருக்கிறேன்.*

**அனுமன் :** *(தனக்குள் இவ்வாறு சிந்திக்கிறான்.)*

*முன்பு உறங்குகிறான் என்று கருதி, இந்த உன் மத்தனைக் கொல்லாது விட்டேன்!*

*இப்பொழுது பழிகாரனை மீண்டும் கண் எதிரே பார்த்து விட்டேன்!*

*நஞ்சு போன்ற இவனைக் கொன்றொழிக்கும் முயற்சியில் நான் மாண்டாலும், புகழே எனக்கு மண்டும்!*

*கூடாது! இப்பொழுது நான் போரைத் தொடங்கினால், என் அன்னைக்கு ஆபத்து வந்துவிடும்! ஆதலால், தூதுவனாக வந்த நான், மனதில் தோன்றியதை எல்லாம் செய்யக்கூடாது!*

*மேலும், இவனை என்னால் வெல்ல இயலாது! என்னையும் இவனால் வெல்ல முடியாது! என் ராமன் வெல்வார் இவனை! இந்த அரக்கன் தலை சிதற, என் அண்ணல் இட்ட சூளுரை நிறைவேற வேண்டும்!*

**ராவணன் :** ஏ குரங்கே! நான் பேசுவது காதில் விழவில்லையா? என்ன சிந்தித்துக் கொண்டிருக்கிறாய்? நீ யார்? யார் சொல்லி இங்கு வந்தாய்?

என் அரக்கர் கூட்டத்தைக் கொன்ற உன்னை, எளிய வனாக நான் நினைக்கவில்லை!

நீ அந்த சக்ரதாரியா? சந்திக்கு வர அஞ்சும் இந்திரனா? சாம்பலைப் பூசிக் கொள்ளும் சிவனா? சதுர்முகப் பிரம்மனா? அதிராது இந்தப் பூமியைத் தாங்கும் ஆதி சேஷனா? நாமத்தையும் உருவத்தையும் மறைத்து, வானரமாக வந்து நிற்கும் நீ யார்? ஏன் இங்கு வந்தாய்?

சொல்லடா... வால் முளைத்தவனே! நீ உயிர் கவர் காலனா? குன்றில் இருக்கும் குமரனா? அந்தணர் வேள்வியில் ஆக்கிய பூதமா? இந்த லங்கையை அழிக்க வந்த தெய்வமா?

**அனுமன் :** லங்கை மன்னா! நீங்கள் அடுக்கிச் சொன்ன அத்தனை பேரின் உருவமல்ல நான். அழகிய செங்கண் வில்லி ஒருவரின் தூதன் நான்!

**ராவணன் :** யார் அந்த வில்லேந்தியவன்?

**அனுமன் :** முன்பு வாரணமாகிய கஜேந்திரனைக் காக்க வந்தவன், இப்பொழுது அமரரைக் காக்க, ராமனாக அவதரித்து வந்திருக்கிறார்.

அந்த அயோத்தி ராமனே என் தலைவன்! அவர் அடிமை நான்!

என் நாமமும் அனுமன் என்பது. கிஷ்கிந்தை ஆளும் சுக்ரீவ மன்னனின் அமைச்சன் நான்.

**ராவணன் :** (இகழ்ச்சியாக) ஓஹோ! மனைவியைப் பறி கொடுத்தவன் மண்டியிட்டு என்னிடம் யாசிக்கின்றானா?

அதற்காகக் கர்ணம் போடக் குரங்கு உன்னை அனுப்பி யிருக்கிறானா? நாட்டை இழந்தான்! மனையாளை இழந்தான்! இழப்பதற்கென்றே பிறப்பெடுத்த மானிடன் அந்த ராமன்!

**அனுமன் :** சுடும் வார்த்தைகளைப் பேச வேண்டாம்! உங்கள் வாழ்வு கெடாதபடி பார்த்துக் கொள்ளுங்கள். தீயினும்

*தூயவளைத் துயர் செய்தால், உங்கள் நகரமே தீப்பட்டு அழிந்துபோகும்!*

*நீங்கள் செய்த மாதவத்தால் பெற்ற புண்ணியத்தை, அந்த மாதரசி மேல் வைத்த காமநோயால் போக்குகின்றீர்!*

*பிறர் மனை நயப்பது ஆண்மையா? அதை உலகு ஒப்புக் கொள்ளுமா?*

*நரம்பு இழைத்துச் சாமவேதம் பாடிய நீங்கள், அறம் தவறினாலும், அறம் தவறாது உங்களைக் கொல்லும்!*

*மறை பிழையாதவன் விடும் சரம், உங்கள் உயிர் குடித்து விடும்! உங்கள் குலத்தை அழித்து விடும்!*

*ஆதலால் என் அண்ணலிடம் அன்னையை ஒப்படைத்து, உங்கள் ஆருயிரையும், அழகிய லங்கையையும் காத்துக் கொள்ளுங்கள்!*

**ராவணன் :** *அஞ்சுவது, இந்த அரக்கன் அறியாத ஒன்று!*

*கொண்டு வந்த சீதையைத் திருப்பிக் கொடுக்கும் எண்ணமில்லை.*

*அந்தத் தோகையைக் கண்ட பின்பு, ஏனைய மாதர் எல்லாம் மைந்தராக ஆடவராக, எனக்குத் தோன்றுகிறார்கள்!*

*ஆமாம் - தூதனாய் வந்த நீ, தொகை தொகையாய் அரக்கர்களைக் கொன்றது ஏன்?*

*அந்தக் குற்றச்சாட்டிற்கு உன் பதில் என்ன?*

**அனுமன் :** *என்னைக் கொல்ல வந்தவர்களைக் கொன்றேன்! அது தற்காப்பே தவிர, அறம் தவறிய செயல் அல்ல.*

**ராவணன் :** *ஏன் அசோகவனத்தை அழிக்கின்ற காரியத்தில் ஈடுபட்டாய்?*

**அனுமன் :** *இப்படி ஆர்ப்பரித்தால்தான் இந்த அரசவைக்கு இழுத்து வருவார்கள் என்று திட்டமிட்டு, அப்படிக் கொட்ட மடித்தேன்!*

*தங்களுக்குப் புத்தி சொல்லித் தங்கள் அழிவைத் தடுத்த நிறுத்த, ஓர் உபாயமாக அதைக் கொண்டேன்!*

**ராவணன் :** (சினத்தோடு) எனக்குப் புத்தி சொல்கிறாயா? ஈனபுத்தி கொண்ட அற்பக் குரங்கே! இந்த அரசவையிலே என்ன பேச்சு பேசிவிட்டாய்!

இந்தக் குரங்கை உடனே கொல்லுங்கள்!

[உடனே ஈட்டி தாங்கிய அரக்கர்கள், அனுமனை நெருங்குகின்றனர்.]

**விபீஷணன் :** (எழுந்து நின்றபடி) நில்லுங்கள்! அண்ணா! மாதரைக் கொலை செய்தவர்கள், நம் மரபில் இருந்திருக் கிறார்கள்!

தூதரைக் கொன்றவர்கள் எவரும் இல்லை! அந்தப் பழி, என் அண்ணனைச் சேர வேண்டாம்!

மறைகள் கற்றவர், இந்தப் பிழையைச் செய்யலாமா?

மாதவம் செய்தவர்க்கு, இது ஏற்கும் செயலா?

ஏவி விட்ட புலியை விடுத்து எலியைப் பிடித்து அழிப்பதுபோல், தூதுவனைப் பிடித்துக் கொல்வது இழிவான செயலாகும்! பிரம்மன் மரபிலே வந்தவருக்கு இது பெருமை தருமா?

நம் இளையவள் சூர்ப்பணகையை, ராமலட்சுமணர், இரு செவி மூக்கோடு அரிந்து அனுப்பினார்களே தவிர, கொன்று பகையைக் காட்டவில்லை!

இவனை அனுப்பியவர்களை அமருக்கு அழைக்க, இந்தத் தூதுவனை, அவர்களிடம் அனுப்பி வைக்க வேண்டும்.

அது வீரம்! அரக்கர் பெருமை பேசும் தீரம்! அதை விடுத்து, செய்தி சொன்னவனின் சிரம் அறுத்துத் தள்ளுதல் சிறுமை!

உங்கள் எண்ணத்தை அவர்களிடம் உரைக்க, இவனை விடுவிக்க வேண்டாமா?

இந்த அரசியல் நெறி, உங்கள் சிந்தைக்கு அப்பாற் பட்டதா?

**ராவணன் :** நல்லது உரைத்தாய் தம்பி! இவன் குற்றமே செய்தவன் ஆனாலும், என் கொழுந்து அட்ச குமாரனைக் கொன்றவனே

ஆனாலும், தூதுவனாக இருப்பதால் இவனைக் கொல்வது பழுதே!

என் தங்கையை அவமானப்படுத்தி அனுப்பியது போல், இவனையும் அவமானப்படுத்தி அனுப்ப வேண்டும்!

மூக்கு அரிந்த மூடர்களுக்கு, ராவணன் நெஞ்சில் மூண்ட சினத்தை உணர்த்த வேண்டும்!

இந்த வானரத்தின் வாலில் தீ வைத்து, வளநகர் லங்கையின் வீதிகளிலே நடக்க வைத்து, கடற்கரையிலே கொண்டுபோய் விட்டு விடுங்கள்.

இவன் போய் செய்தி சொல்லி, அந்த ஏலாத மனிதர்கள், இங்கு வந்து மடியட்டும்!

**அனுமன் :** அழியப் போகும் மன்னா! உங்கள் ஆணையை ஏற்றுக் கொள்கிறேன்.

ஆனால், தூதுவனுக்கு ஆசனமிட்டு, அதில் என்னை அமர வைத்துப் பின்னர் உங்கள் ஆணையை நிறைவேற்றி அனுப்பி வைக்கலாம்.

**ராவணன் :** ஒரு குரங்குக்கு இந்த அவையிலே ஆசனமா? இந்திரனே இங்கு சிறையில்தான் இருந்தான்! தெரியுமா உனக்கு!

**அனுமன் :** பழம் பெருமை பேசிப் பேசி, இருக்கப் போகும் சொற்பப் பொழுதை இன்பமாக்கிக் கொள்ளுங்கள்.

நீங்கள் அளிக்காத ஆசனத்தை, நானே அமைத்துக் கொள்கிறேன். ராமதூதன், ராவணனுக்கு எதிரிலே அமர்ந்திருந்தான் என்பது சரித்திரத்திலே ஏறவேண்டும்!

(அனுமன் உடலை உலுக்கப் பிரம்மாஸ்திரம் விடுபடுகிறது)

**அனுமன் :** பிரம்மாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டது போல் நடித்தேன். வரங்கள், அரக்கர் குலத்திற்கு மாத்திரம் உரியவை அல்ல! இந்த அனுமானுக்கும் சில சக்திகள் உண்டு! போரிலே நீங்கள் புரிந்து கொள்வீர்கள்!

(அனுமன் இப்பொழுது தன் நீண்ட வாலை வளரச் செய்து, அதை ஆசனமாக்கி, ராவணனுக்கு எதிரில் அமர்ந்து கொள்கிறான்.)

**ராவணன் :** (கோபத்தோடு) இந்தக் குரங்கைக் கயிற்றால் பிணைத்து இங்கிருந்து இழுத்துச் செல்லுங்கள்!

வாலிலே தீ மூட்டி, இதன் அங்கத்தைச் சிதையுங்கள்!

[அரக்க வீரர்கள், அனுமன் மேல் கயிறுகளை வீசுகின்றனர்.]

**அனுமன் :** அரக்க வீரர்களே! உங்களோடு இப்பொழுது நான் ஒத்துழைக்கிறேன். மன்னன் ஆணையைப் பதறாமல் நிறைவேற்றுங்கள். என் வாலில் தீ மூட்டி, மன்னன் குளிர்காய முடியாது! அவர் குலை நடுங்கிப் பதறும்படிச் செய்கிறேன்!

[அனுமனைக் கயிற்றால் பிணைத்து இழுத்துச் செல்கின்றனர்.]

## காட்சி-268

*தனியிடம்*

**விபீஷணன் :** (மகள் திரிசடையிடம்) திரிசடை! சாதுர்யமாக அண்ணனிடம் பேசி, அனுமனை உயிரோடு அனுப்பி விட்டேன்.

அனுமனைக் காத்த என்னால், அறத்தைக் காக்க முடியவில்லை. அந்தக் கற்பரசியை விடுவிக்க என்னால் இயலவில்லை.

போரில் நம் குலம் நாசமாக வேண்டுமென்று, விதி இருக்கும்பொழுது, மன்னனின் மதி அப்படித்தானே போகும்!

**திரிசடை :** அப்பா! என் கனவிலே, நான் ஒரு காட்சியைக் கண்டேன். செவ்வொளி விளக்கு ஒன்று ஏந்தி, செய்யவளான லட்சுமி, மன்னன் மனை விட்டு நீங்கி, உங்கள் அரண்மனைக்குள் புகுந்துவிடக் கண்டேன்!

இது உணர்த்துவது எதையப்பா?

**விபீஷணன் :** அதைக் காலம் சொல்லட்டும். நீ இந்தக் கனவைப் பிறரிடம் சொல்ல வேண்டாம்.

*தர்மத்தின் பக்கம் நிற்கும் என்னை, மகுடம் புனைய மாறி நிற்கின்றான் என்று ஊர் பேச, நாம் இடம் தர வேண்டாம்.*

*மண்ணுக்கு மன்னன் தேவை! மன்னனுக்குத் தர்மம் தேவை! தர்மத்தைத் தவறவிடும் மன்னன், மண்ணையும் தவறவிட்டு விடுவான்! இதுதான் ராஜநீதி! இந்த நியதிக்குள்தான் அரச குலத்தார் இருக்கிறார்கள்.*

## காட்சி-269

*லங்கை நகரின் வெட்டவெளி*

[அனுமனைக் கயிறுகளால் கட்டி, வெட்டவெளிக்கு இழுத்து வருகின்றனர், அரக்க வீரர்கள். நடக்கப் போவதைப் பார்க்க அரக்கர்கள் அங்கு திரண்டு விடுகின்றனர்.

அனுமனோ, ஒரு யோகியைப் போல அங்கு அமைதியாகக் கட்டுண்ட கோலத்தில் நின்று கொண்டிருக்கிறான்.]

**ஓர் அரக்கன் :** *அந்தக் குரங்கின் வாலிலே துணியைச் சுற்றுங்கள்! எண்ணெய்ப் பாத்திரத்தில் அதை நனைத்து எடுங்கள்! அந்த வாலின் நுனியிலே தீயைக் கொளுத்தி அண்டம் அதிர ஆர்ப்பரியுங்கள்!*

*[அவ்வாறு செய்து அனுமன் வாலிலே தீயைக் கொளுத்தி அரக்கர்கள் ஆர்ப்பரிக்கின்றனர்.*

*வாலில் பற்றிய தீயின் வெம்மை, அனுமனை வாட்டுகிறது. அவன் முகம் வாடுகிறது.]*

**அனுமன் :** *(தனக்குள்) இந்தத் தீயின் சூடே, என்னை வருத்துகிறதே! என் அன்னை படும் துயர், தீயினும் சுடுமே!*

# காட்சி-270

*அசோக வனம்*

[சில அரக்கிகள் ஆர்ப்பரிப்போடு சீதை இருக்குமிடத்திற்கு ஓடி வருகின்றனர்.]

**ஓர் அரக்கி :** *ஏ மானிடப் பெண்ணே! உன்னைச் சந்தித்து விட்டுப் போன குரங்கின் வாலிலே தீ வைத்து விட்டார்கள்!*

*இந்த ஊரார் பார்த்துக் களிக்க, அதை நகரெங்கும் அந்தக் கோலத்தோடேயே இழுத்துச் செல்கிறார்கள் அரக்கர்கள்!*

**இன்னொரு அரக்கி :** *வயிற்றிலே பசித் தீ இருந்தாலே, எதிரில் இருப்பவனைச் சாப்பிடலாமா என்று தோன்றுகிறது. வாலிலே தீயை வைத்துக் கொண்டு அந்த வானரம் என்ன பாடுபடப் போகிறதோ?*

*வாங்கடி... அந்தக் கேளிக்கையைப் போய்ப் பார்க்கலாம்!*

*நாம் பார்க்கும் நாட்டியமெல்லாம், பகைவன் நடுங்கித் துடிக்கும் நர்த்தனம் தானே!*

*(கூச்சலிட்டுக் கொண்டு அரக்கிகள் அங்கிருந்து ஓடுகின்றனர்.)*

**சீதை :** *(வாட்டத்தோடு தனக்குள் பேசிக் கொள்கிறாள்.)*

*அக்கினி தேவனே! தாயே அனைய கருணையுடைய வாயுதேவனின் துணைவனே! நாய் போன்ற அரக்கர், அனுமனைத் தீயிட்டு நலியச் செய்ய, நீ அனுமதிக்கலாமா? தெய்வங்களுக்குப் படைப்பதை தீயே! நீ பெருமையோடு ஏந்திச் செல்கிறாய்!*

*தீயவர் தூயவரை வருத்த, நீ உதவும் பொருள் ஆகலாமா?*

*தூயவளான நான், உன்னைத் தொழுகிறேன்! என் கற்பின் திறம் காட்டி அழுகின்றேன்!*

*அனுமனை எரிக்கும் தீ குளிரட்டும்! அவன் அங்கத்தில் சந்தனம்போல், அது வெம்மையின்றி விளங்கட்டும்!*

## காட்சி-271

*வானவெளி*

[வானவெளியில் அக்கினி தேவன் தோன்றுகிறான்.]

**அக்கினி தேவன் :** *கற்பின் செல்வியின் கட்டளையை ஏற்கிறேன்! எங்கும் எரியும் நெருப்பெலாம், சிறிது நேரம் குளிரட்டும்! அறத்தின் வடிவம் உரைத்த மொழிப்படி, நான் ஆணையிட்டிருக்கிறேன்!*

## காட்சி-272

*சத்தியலோகம்*

[யாக குண்டத்தில் போடும் பொருட்கள் எரியாமல் அப்படியே இருக்கின்றன.

இதைப் பார்த்துப் பிரம்மன் திகைக்கிறான்.]

**பிரம்மன் :** *என்ன இது! யாக குண்டத்தில் நெருப்பு எரிகிறது! ஆனால், எந்தப் பொருளையும் பற்றிக் கருக்கவில்லை! நெருங்கிப் போனால் குளிர்கிறது! அக்கினி தேவன் இப்படி ஆணையிட்டிருப்பான்!*

## காட்சி-273

*சூரிய மண்டலம்*

[சூரியனைச் சுற்றிச் சில பறவைகள் சிறகடித்துப் பறக்கின்றன.]

**சூரியன் :** *நான் குளிர்ந்தவுடன், பறவைகள் என் அருகில் வந்து பறக்க ஆரம்பித்து விட்டன! இந்த நிலைமை நீடித்தால் என் தலையிலேயே கூடு கட்டி விடும்!*

## காட்சி-274

*நரகம்*

[நரகத்தில் இருப்போர், அங்கு எரிந்து கொண்டிருக்கும் நெருப்பிற்குள் மகிழ்ச்சியோடு குதித்துக் கூத்தாடுகின்றனர்.]

**ஒருவர்** : *நெருப்பு இப்போது அருவியாக ஆனந்தமளிக்கிறது!*

**மற்றொருவர்** : *இனி இது நரகமல்ல; சொர்க்கம்! நெருப்பே நம்மைச் சுடாதபோது, இமயப் பொருப்பிலே உள்ள சிவனோ, அலை கடலில் தத்தளிக்கும் திருமாலோ, அவன் பெற்ற பிரம்மனோ, நம்மை என்ன செய்து விட முடியும்? காலனே! வா! எங்கள் கால்பட்டு நீ உருளப் போகிறாய்!*

## காட்சி-275

*லங்கை நகர் வீதி*

[அரக்கர்கள் லங்கை நகர் வீதியிலே, அனுமனை ஆர்ப்பரிப் போடு இழுத்துச் செல்கின்றனர்.

இதை வேடிக்கை பார்க்கின்ற அரக்கர்கள், குதித்துக் கூத்தாடுகின்றனர்.

அனுமனோ முகமலர்ச்சியோடு நடந்து கொண்டிருக்கிறான்.]

**அனுமன்** : *(தனக்குள்) என் வாலில் பற்றிய நெருப்பு, இப்பொழுது சுடவில்லையே! குளிர்ந்திருக்கிறதே! ஜனகன் பாவை அருளினால், இது விளைந்திருக்கும்! கற்புடைக் காரிகையர் வாக்குக்கு, வேதத்தை மிஞ்சிய செல்வாக்கு உண்டு!*

*இந்த அரக்கர்களுக்கு ஆற்றல் இருக்கும் அளவு, அறிவு இல்லை! ஊரையெல்லாம் பகைவனான நான் பார்க்கும்படி இழுத்துச் செல்கிறார்கள்.*

*இரவில்தான் முன்பு பார்த்தேன். இப்பொழுது பகலில் ஊர் முழுக்கப் பார்த்து விடுகிறேன்! பகைவனின் இடம்*

அனைத்தும் தெரிந்து கொள்வது, புகையும் போருக்கு உதவியாக இருக்கும்!

## காட்சி-276

*கயிலை மலை*

**உமையம்மை** : (சிவனிடம்) என்ன இது! உங்கள் அம்சம், பகைவன் மண்ணிலே, இப்படிக் கட்டுண்டு நடந்து கொண்டிருக்கிறது!

**சிவன்** : ஊரைப் பார்க்கிறான் அனுமன்!

**உமையம்மை** : பார்த்து முடித்தாகி விட்டதே! இன்னும் எதற்குப் பிணைப்புண்டு, தெய்வாம்சத்திற்குப் பெரும் களங்கமாக இழுபட்டுச் செல்ல வேண்டும்!

[இதற்குப் பதிலாக சிவன் புன்னகையே புரிகிறார்.]

**உமையம்மை** : நீங்கள் உக்கிர தாண்டவம் ஆடினால், அனுமன் வீறு கொண்டு எழுவான்!

**சிவன்** : உன் ஆசைக்காக நான் ஆடுவது, ஆனந்தத் தாண்டவம்.

**உமையம்மை** : அனுமனைப் பிறப்பித்து விட்டு, இப்படிப் பொறுப்பில்லாமல் நடந்து கொள்கிறீர்களே!

அனுமனுக்கு ஏற்படும் தலைக்குனிவு, உங்களுக்கு ஏற்படும் அவமதிப்பு! எனக்கு ஏற்படும் துயரம்!

சில சமயங்களில் நீங்கள் செயலற்று இருக்கிறீர்கள்! அது யோகநிலை என்று பக்தர்கள் கூறித் திரிகிறார்கள்!

[உமையாள், சிவன் பார்த்திருக்க உக்கிர தாண்டவம் ஆடுகிறாள். இதைப் பார்க்கின்ற சிவனும், மெல்ல மெல்ல உக்கிர நிலை அடைந்து தாண்டவம் ஆடுகிறார். உமையாள் மகிழ்கிறாள்]

## காட்சி-277

*லங்கை நகர் வீதி*

[அனுமன் வீதியிலே இழுபட்டுச் சென்று கொண்டிருக்கிறான்.]

**அனுமன் :** *(தனக்குள் சினக்குறி தோன்றப் பேசுகிறான்.) பார்த்தது போதும்! இந்த லங்கையைப் பஸ்பம் ஆக்குகிறேன்!*

*என் வாலில் இருக்கும் தீயும், இப்பொழுது வெம்மை பெற்று விட்டது! எரிக்கும் தன்மை பெற்று விட்டது! சுட்டுப் பொசுக்கும் வலிமை பெற்று விட்டது!*

*(அனுமன் விஸ்வரூபம் எடுக்க, கட்டுக்கள் தெறித்து விழுகின்றன. சுற்றியிருக்கும் அரக்கர்களைப் பிடித்து வீசி எறிகிறான். தன் வாலில் எரிந்து கொண்டிருக்கும் நெருப்பால், அங்குள்ள மாளிகைதோறும் தீ வைக்கிறான். மாளிகைகள் பற்றி எரிய, உள்ளிருந்த அரக்க மகளிர் அலறி யடித்துக் கொண்டு ஓடி வருகின்றனர். அரக்கர்களும் பீதியோடு, வீதியிலே, அங்கும் இங்கும் ஓடிக் கொண்டிருக்கின்றனர்.)*

**அனுமன் :** *ராவணன் தலையில் தீ வைப்பது போல, அவன் மாளிகையிலும் தீ வைக்கிறேன்! தீயவனுக்குத் தீ, புத்தி சொல்லட்டும்! (ராவணன் மாளிகையிலும் தீ வைக்கிறான் அனுமன்.)*

## காட்சி-278

*ராவணன் மாளிகை*

[தன் மாளிகை பற்றி எரிவது கண்டு ராவணன் திடுக்கிடுகிறான்.

சில அரக்கிகளின் தலையில் தீப்பற்றி எரிய, ராவணனிடம் அலறியபடி ஓடி வருகின்றனர்.]

**ஓர் அரக்க வீரன் :** *லங்கை நகரமே எரிந்து கொண்டிருக்கிறது மன்னா!*

**ராவணன் :** *ஊழிக்காலம் வந்து விட்டதா?*

**அரக்க வீரன் :** *இல்லை மன்னா! அந்தக் குரங்கு செய்த சேஷ்டை இது!*

*விஸ்வரூபம் எடுத்து, தன் வாலில் பற்றிய தீயால், வளநகர் மாளிகையெல்லாம் எரித்து விட்டது! தங்கள் அரண்மனையிலும் அக்கினியை விதைத்து விட்டது! அதை வானரம் என்று ஏளனமாக எண்ண முடியாது! யமன் உருமாறி வந்து நம்மைக் குலத்தோடு அழிக்க, வாலோடு வந்திருக்கிறான் மன்னா!*

**ராவணன் :** *ஒப்பாரி வைக்காதீர்கள்! அந்தக் குரங்கைத் தப்பாமல் பிடித்து வாருங்கள். வீதியில் நின்று கூக்குரல் இடாமல், குளிர்நீரைப் பெய்து, தீயை அணையுங்கள்.*

*லங்கை எரிவதைக் கண்டு தேவர்கள் சிரிப்பார்களே! தேவமகளிரின் ஏளனச் சிரிப்பு, என் தலையில் இடி என இறங்குமே!*

*என் கண் எதிரே, லங்கை எரிவதா?*

*என் தலையிலுள்ள மணிமுடி, விதூஷகன் அணிந் திருக்கும் வேடிக்கைப் பொருளா?*

*என் நகரை எரிக்க, அக்கினி தேவனுக்கு எப்படித் துணிவு வந்தது?*

*தேவர்களைத் தலை எடுக்க விடாமல், தேய்த்துக் கொண்டே இருக்க வேண்டும்! இல்லையென்றால் அவர்கள் தினவெடுத்து எதிர்க்கக் கிளம்பிவிடுவார்கள்!*

*முதலில் அந்தக் குரங்கைப் பற்றிக் கொண்டு வாருங்கள்! என் நெஞ்சும் எரிகிறது இப்பொழுது, என் லங்கையைப் போல!*

## காட்சி-279

*எரிந்து கொண்டிருக்கும் லங்கை வீதி*

[தன்னைப் பிடிக்க வந்திருக்கும் அரக்க வீரர்களை, நெருப்பு பற்றிய வாலால் சுழற்றி அடிக்கிறான் அனுமன். அவர்கள் உடலில் தீப்பற்றிக் கொள்ள, உருண்டு எழுந்து அங்கிருந்து ஓடுகின்றனர்.]

## காட்சி-280

*மகா சமுத்திரம்*

[தன் வாலில் பற்றிய நெருப்போடு சமுத்திரத்தில் மூழ்கி எழுகிறான் அனுமன். நெருப்பு அணைந்து விடக் கரை யேறுகிறான்.]

**அனுமன் :** *(தனக்குள்) அரக்கர் இட்ட நெருப்பு அணைந்து விட்டது! நான் இட்ட நெருப்பு இன்னும் எரிந்து கொண்டிருக்கிறது!*

*அந்தத் திரிகூட மலையின் உச்சியில் இருந்து, இந்த லங்கா தகனத்தைக் கண் குளிரப் பார்த்துக் களிக்கிறேன்!*

## காட்சி-281

*திரிகூட மலை உச்சி*

[மலை உச்சியில் இருந்து லங்கை எரிவதைப் பார்த்துக் கொண்டிருக்கிறான் அனுமன்.]

**அனுமன் :** *(தனக்குள்) லங்கை எங்கும் எரிகிறது. ராவணன் மாளிகையும் வெடித்துச் சிதறுகிறது. அப்படியானால் அசோகவனமும் எரிந்திருக்குமே! என் அன்னைக்கு ஆபத்து வந்திருக்குமோ? தெய்வம் அங்கிருக்க, லங்கை தேசத்திற்கே எரியூட்டி விட்டேனே!*

*குரங்குப் புத்தியால், கும்பிட வேண்டிய குலமகளுக்குக் கொடும் துன்பம் இழைத்து விட்டேனே!*

*அரக்கருக்கு இட்ட தீ, அன்னையைப் பற்றும் என்ற அறிவு இல்லாமல் போய் விட்டேனே!*

*அந்த மாதரசி மாண்டு விட்டால், என் ராமனும் மாள்வாரே!*

*அவர் இளவல்களும் இன்னுயிரை நீப்பார்களே!*

*இப்படி ரகுவம்சம் பூண்டற்றுப் போக, நான் வானர வம்சத்திலே பிறந்திருக்கிறேனா?*

வாயு புத்திரனாகப் பிறந்தது, இந்த வசையைப் பெறுவதற்கா?

சிவா அம்சமாக உதித்தது, இந்த அவப்பெயரோடு அலைந்து திரியவா?

செத்துத் தொலைக்கலாம் என்றால், சிரஞ்சீவி என்ற வரத்தைக் கொடுத்து, என்னை வதைபட வைக்கிறார்களே!

அரக்கர் மேலுள்ள கோபத்தால், அதர்மத்தோடு தர்மத்தையும் சேர்த்து எரித்து விட்டேனே!

மயிலிறகு போன்ற மாதாவை, பெரும் நெருப்பு சூழ்ந்து சுட்டுப் பொசுக்கியிருக்குமே!

அறிவிலி நான்! அற்பன் நான்! நானும் ஓர் அரக்கன்தான்! வால்முளைத்த அரக்கன்!

[இவ்வாறு கூறி மரத்தின் மீது தலையை மோதிக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுகிறான் அனுமன்.

(இப்பொழுது வாயுதேவன் அனுமன் முன் தோன்றுகிறான்.]

**வாயுதேவன் :** அனுமான்! உன் அப்பன், இந்த வாயுதேவன் வார்த்தையைக் கேட்டு, வாட்டத்தைப் போக்கு!

கற்பின் நெருப்பை, நீ மூட்டிய நெருப்பு தீண்டுமோ? இப்படி எண்ணியதே, அன்னையை அவமதித்தது ஆகாதா?

**அனுமன் :** (ஆர்வத்தோடு) அந்தப் பெண்ணின் பெருந்தெய்வம், நலமாக இருக்கின்றார்கள் அல்லவா?

**வாயுதேவன் :** அந்த மாதரசி, உனக்கு வந்த ஆபத்தை எண்ணி, மனம் கலங்கிக் கொண்டு இருக்கிறாள். அந்தத் தெய்வ நங்கையைக் கண்டுபேசி, உன் தெய்வத் திருமகன் ராமனைக் கண்டு பேச, இங்கிருந்து புறப்பட்டுப் போ!

புல்லர்கள் அழிவு, நீ புகலும் மொழியில் தான் இருக்கிறது!

## காட்சி-282

*அசோக வனம்*

[அனுமன் ஓடிவந்து சீதையின் முன் விழுந்து வணங்குகிறான்.]

***சீதை :*** *எழுந்திரு அனுமான்! நெருப்பால் உனக்கு ஒன்றும் ஆபத்து இல்லையே!*

***அனுமன் :*** *(எழுந்தபடி) தங்கள் அருளால், அனலும் என்னைச் சுடாமல் குளிர்ந்ததம்மா!*

*கோபத்தில் லங்கையைக் கொளுத்தினேன். உங்களையும் அது தகிக்கும் என்பதை மறந்து!*

*ஆனால் பஞ்ச பூதங்களும் உங்களுக்கு ஊறு செய்யா என்ற உண்மையை, இப்பொழுது தெரிந்து கொண்டேன். மனத்தெளிவு பெற்றேன்.*

*தங்கள் நாயகரிடம் நான் சென்று நீங்கள் இருக்குமிடம் கூறுகிறேன்.*

*கனைக்கும் கடல் போல் உள்ள வானரப் படையோடு வந்து, தங்களை அவர் மீட்டுச் செல்வார்.*

*மீண்டும் எனக்கு விடைகொடுத்து என்னை வாழ்த்தி அனுப்புங்கள். வள்ளல் ராமனின் வெற்றியை ஆரம்பித்து வையுங்கள்.*

***சீதை :*** *மாதர் படு துயரெல்லாம், இந்த மன்பதைக்குக் கதையாக வேண்டும் என்பது விதிபோலும்!*

*சென்று வா அனுமான்! என் செம்மலைக் கொண்டு வா! அரக்கன் சிரம் அறுத்து, என் கரம் பற்றி, அவர் கொண்டு போக ஆவன செய்! தர்மம் உனக்கு ஆதரவாய் இருக்கும்!*

## காட்சி-283

*கடற்கரை*

[கடற்கரையில் வந்து நிற்கிறான் அனுமன். அனுமனைப் பார்த்ததும் சுவர்ச்சலா தேவி மகிழ்ச்சியோடு ஆடி ஆர்ப்பரிக்கிறாள்.]

**அனுமன்** : ஏன் இந்தப் பேயாட்டம்? நீ இன்னும் இங்கிருந்து போகவில்லையா?

**சுவர்ச்சலா தேவி** : பெண், நினைத்ததை முடிப்பாள்!

**அனுமன்** : நீ எதைச் செய்து முடித்தாய்?

**சுவர்ச்சலா தேவி** : நீங்கள் அன்னை சீதாதேவியைக் கண்டீர்கள்! நான் என் கனவு நனவாகக் கண்டேன்!

**அனுமன்** : விவரமாகச் சொன்னால், விளங்கிக் கொள்ளமுடியும். இல்லையென்றால் மனக்கோளாறு என்றுதான் நினைக்க முடியும்!

**சுவர்ச்சலா தேவி** : காலம் வரும்போது உங்கள் கண் எதிரே காட்டுவேன்!

**அனுமன்** : யாரைக் காட்டுவாய்? உன்னோடு வெற்று வார்த்தையாட எனக்கு நேரமில்லை! என் ஐயனைக் கண்டு என் அம்மையை மீட்க வேண்டும்!

**சுவர்ச்சலா தேவி** : இந்தப் போராட்டத்தில் உங்கள் உதிரமும் உங்கட்கு உதவும்!

**அனுமன்** : என் உதிரம் எனக்கு உதவாமல், உனக்காக உதவும்?

[இதைக் கேட்டு சுவர்ச்சலா தேவி கலகலவென்று சிரிக்கிறாள்.]

**அனுமன்** : பித்தம் முற்றி சித்தம் சிதறிவிட்டது! (அனுமன் அங்கிருக்கும் ஒரு குன்றை நோக்கி வேகமாக நடக்கிறான்.)

## காட்சி-284

*குன்றின் உச்சி*

[அனுமன் குன்றின் உச்சியில் நின்றவாறு, 'ராம்! ராம்!' என்று முழக்கமிடுகிறான்.]

## காட்சி-285

*கயிலை மலை*

[கயிலை மலையிலே, சிவன் அபிநயித்து ஆடுகிறார்.]

## காட்சி-286

*குன்றின் உச்சி*

[அனுமன் விஸ்வரூபம் எடுத்து வானில் பறக்கிறான்.]

## காட்சி-287

*மைந்நாக பர்வதம்*

[வானில் பறக்கின்ற அனுமன், குறுக்கிடும் மைந்நாக பர்வதத்தில் குதிக்கிறான்.]

**மைந் நாகம் :** திரும்பும்போது இங்கு தங்கி விருந்து உண்பதாகச் சொன்னாயே!

**அனுமன் :** உண்மை. என் செம்மலிடம் சீதாதேவி இருக்குமிடத்தை விரைந்து போய்ச் சொல்ல வேண்டியது, இப்பொழுது என் கடமை!

**மைந் நாகம் :** உன் பணிக்குத் தடங்கலாக நான் இருக்க மாட்டேன்.

**அனுமன் :** உன் மனம் களிக்க, இங்குள்ள மரத்திலிருந்து கனி பறித்துத் தின்கிறேன்.

[அனுமன் மரத்திற்கு மரம் தாவி, பல பழங்களைப் பறித்து, அவசரமாகச் சாப்பிடுகிறான்.]

**அனுமன் :** எனக்கு உதவும் நீ, என் ராமனுக்கு உதவுகிறாய். தர்மத்திற்கு உதவுகிறாய். உனக்கே நீ உதவுகிறாய்.

*அறம் நிலைத்தால்தான், எல்லா உயிர்களும் இன்புற்று இருக்கும். வருகிறேன்.*

*[அனுமன் வானில் பறக்கிறான் .]*

## காட்சி-288

*கடற்கரை*

['ராம்! ராம்!' என்ற முழக்கம், வானிலே கேட்க, மகிழ்ச்சித் துள்ளலோடு, வானரர்கள் கடற்கரையிலே திரளுகின்றனர்.

அவர்களும்'ராம்! ராம்!' என்று முழக்கமிட்டபடி, வானையே பார்க்கின்றனர்.]

**ஜாம்பவான் :** *அனுமன், அறத்தின் செல்வியைக் கண்டுவிட்டான் என்று கருதுகிறேன்.*

*'ராம்! ராம்!' என்று ஒலிக்கும் அவன் முழக்கமே, நல்ல செய்தியை முந்திச் சொல்கிறது!*

*[சில வானரர்கள், அருகிருக்கும் குன்றின் மரஉச்சிகளில் அமர்ந்து வானைப் பார்க்கின்றனர்.*

*சில வானரர்கள், மரத்திற்கு மரம் தாவிக் களிக்கின்றனர்.]*

*['ராம்! ராம்!' என்ற ஒலி, அண்மையிலிருந்து வரக்கேட்க, வானரர்களும், அந்த ராம மந்திரத்தை எதிரொலிக்கின்றனர்.]*

*[இப்பொழுது அனுமனின் உருவம் வானில்தெரிய, வானரர்கள் கூத்தாடுகின்றனர்.*

*சில வானரர்கள், மரக்கிளைகளைக் கையில் பறித்து வந்து, அனுமனை நோக்கி, வரவேற்கும் முறையில் அசைக் கின்றனர். கடற்கரையில் கால் பதிக்கும் அனுமனைத் தூக்கிக் கூத்தாடுகின்றனர்.]*

**அனுமன் :** *அன்னையைக் கண்டுவிட்டேன்! அன்னை இருக்குமிடத்தை, லங்கையில் தெரிந்து கொண்டேன்! என்னைப் பெரியவர்களை வணங்கி மகிழ அனுமதியுங்கள்.*

*[வானரர்களின் பிடியிலிருந்து அனுமன் விடுபட்டு, அங்கதனை விழுந்து கும்பிடுகிறான்.]*

**அனுமன் :** இளவரசு அங்கதனுக்கு, என் இதயங்கனிந்த வணக்கங்கள்! நம் இனியவர் செல்வியைக் கண்டு பேசி மீண்டு விட்டேன்!

**அங்கதன் :** அந்த நம்பிக்கையோடுதான், நாங்கள் இங்கு இருந்தோம்.

*[அடுத்து அனுமன், ஜாம்பவானை விழுந்து வணங்குகிறான்.]*

**அனுமன் :** பிரம்மன் பிறப்பித்த பெருந்தகையீர்! தங்கள் வழி காட்டுதலோடு, தர்மத் தாயை வழிபட்டு வந்திருக்கிறேன்!

**ஜாம்பவான் :** உன் ஆற்றலைத் தெரிந்தே, அப்பணியை உனக்கு இட்டேன்.

அனுமான்! நீ இங்கிருந்து சென்றது முதல், வந்தது இறுதியாக, நடந்தவற்றை நாங்கள் தெரிந்திட உரைத்திடு.

## காட்சி-289

*லங்கையில் எரிந்து கிடக்கும் ராவணன் மாளிகை*

[எரிந்து கிடக்கும் மாளிகையைப் பார்த்து, மண்டோதரி அழுதபடி நின்று கொண்டிருக்கிறாள். ராவணன் அங்கு வருகிறான்.]

**ராவணன் :** லங்கை எரிந்து விட்டதே என்று கலக்கம் வேண்டாம் மண்டோதரி!

வீரர்கள் விழுவது எழுவதற்காக! இந்தக் கருத்துத்தான், வாளேந்தியவர்கள் கொள்ள வேண்டிய கொள்கை!

லங்கையைப் புதுப்பிக்கும் வேளை வந்து விட்டது என்று எண்ணிக்கொள்.

தேவரும் மருள்கொளத் தெய்வத்தச்சன் மயன், பொன்னகராக, இதை மீண்டும் பொலிவுறச் செய்து விடுவார்.

பூவிற் தோன்றிய பிரம்மனை, புதுநகரை உருவாக்கும் பணியினை மேற்பார்வையிடச் சொல்கிறேன்.

**மண்டோதரி :** நான் முகன், நீங்கள் கூப்பிட்ட குரலுக்கு ஓடோடி வருகிறார்! ஆனால், காடு விட்டு நாடு வந்த வானரம் ஒன்று, நம் நகரைக் கொளுத்தி விட்டது! நம் கட்டுக்காவலை உடைத்தெறிந்து விட்டது! இது தற்செயலாக நடக்க வில்லை. நம் தலையெழுத்து மாறப் போகிறதோ என்று அஞ்சுகிறேன்!

**ராவணன் :** ராவணன் மனைவி இப்படி அஞ்சலாமா? என்னைக் கண்டு அஞ்சுபவர்கள் தான், ஈரேழு பதினாலு லோகத்திலும் இருக்கிறார்கள்.

ஒரு குரங்கு செய்த சேஷ்டையை எண்ணி, மனதில் குழப்பத்தைக் குடி வைக்காதே!

## காட்சி-290

*கடற்கரை*

**அங்கதன் :** *(கோபத்தோடு)* அனுமான்! நீ சொன்ன விவரங்களைக் கேட்டு, என் ரத்தம் கொதிக்கிறது!

அந்த ராவணனைக் கொன்றொழித்து, அன்னை சீதா தேவியை, நம் அண்ணல் ராமரிடம் கொண்டு சேர்ப்போம். உடனே படையெடுத்து லங்கை செல்வோம். நாமெல்லாம் ஆண்மக்கள் தாமே! இதைச் செய்யாவிட்டால், நம் மனைவியரே, நம்மைப் பார்த்து நகைப்பர்!

**அனுமன் :** இளவரசே! தங்கள் வீரத்திற்கு என் வணக்கம்! ஆனால், அறத்தின் செல்வி விரும்புவதெல்லாம், தன் வேந்தர் ராமபிரானின் வில், தன்னை விடுவிக்க வேண்டும் என்பதே. அண்ணலின் வீரத்தை ஒதுக்கி வைத்து, நாம் அங்கு போய் ஆர்ப்பரிப்பது...

**ஜாம்பவான் :** வேண்டாத செயல்! சொல்லின் செல்வன், சொல்ல வேண்டியதை அழகாகச் சொல்லிவிட்டான். அன்னை இருக்குமிடத்தைக் கண்டு பிடித்து வரத்தான், நமக்குக் கட்டளையே தவிர, அன்னையை மீட்டுவர, நாம் கேட்டுக் கொள்ளப்படவில்லை.

**அங்கதன் :** உண்மையை உணர்கிறேன் இப்பொழுது. ஆர்வ மிகுதியால், வரம்பு மீறிச் சென்று, வசை ஏற்றுத் திரியக் கூடாது! உடனே நாம் ராமரிடம் சென்று செய்தியைச் சொல்லுவோம்.

அனுமான்! நீ முதலில் முந்திச் சென்று, நம் தலைமகன் மெலிவு தீரத் தலைவியைப் பார்த்ததைக் கூறிவிடு. வீரர்களோடு நாங்கள் பின்னால் வருகிறோம்.

**அனுமன் :** இது நன்று ஆன செயல். நல்லோர் ஒப்பும் செயல்.

## காட்சி-291

*ருஷ்ய மூக பர்வதம்*

[ராமரும் சுக்ரீவனும் தனித்திருக்கின்றனர்.]

**ராமர் :** *(வாட்டத்தோடு)* சுக்ரீவா! வடக்கு, கிழக்கு, மேற்குத் திசையில் சென்றவரெல்லாம், என் மடந்தையைக் காணவில்லை என்று கூறித் தலை கவிழ்ந்து வந்து நின்றார்கள்.

**சுக்ரீவன் :** ஆனால், தென் திசைக்குச் சென்ற அனுமன், இன்னும் திரும்பவில்லை பிரபு!

**ராமர் :** அதுதான் ஏன் என்று, என் உள்ளம் கலங்குகிறது.

மாண்டனளோ என் மாதரசி? அவள் மாண்ட வார்த்தையை, வந்து உரைப்பதிலே, பொருள் உண்டா என்று எண்ணித், தென்திசைச் சென்றவர்கள் மறைந்து விட்டார்களா? இல்லையென்றால், அனுமன், அரக்கனின் நெடுஞ்சிறையில் அடைபட்டுவிட்டானா? கூறின நாள் கடந்தும், அவர்கள் இங்கு வந்து கூடவில்லை என்றால், கூடாத செயலுக்காக நாணி, அவர்கள் கொடுந்தவம் மேற்கொண்டு விட்டனரா? சூரியன் போல் காலமறிந்து காரியம் ஆற்றுவான் அனுமன் என்று கூறுவாயே! அவனுக்கும் இது சோதனை ஆயிற்றோ? வேதனை ஆயிற்றோ?

**சுக்ரீவன் :** *நாதனாகிய தங்களை நம்பும் நான், நல்லறத்தை நம்பும் நான், அனுமனின் ஆற்றலையும் நம்புகிறேன்! அவன் வாயுபுத்திரன்! கயிலை வாசனின் அம்சம்! அவன் தோற்பான் என்று எனக்குத் தோன்றவில்லை!*

[*இப்பொழுது சில வானரர்கள், பரபரப்போடு அங்கு ஓடி வருகின்றனர்.*]

**ஒரு வானரன் :** *அனுமன் வருகின்றான்! வேகமாக வருகின்றான்! பாய்ந்து வருகின்றான்!*

[*முகமலர்ச்சியோடு, ராமரும் சுக்ரீவனும் எழுந்து நிற்கின்றனர்.*]

## காட்சி-292

*வனம்*

[மரக்கிளைகளில், ஒன்றிலிருந்து ஒன்றுக்குத் தாவி, வேகமாக வந்து கொண்டிருக்கிறான் அனுமன்.]

## காட்சி-293

*வானம்*

[தேவர்களும் தேவமகளிரும் ஆர்வத்தோடு, வானிலே திரள்கின்றனர்.]

**ஒரு தேவர் :** *அனுமன் ராமரைச் சந்திப்பதைப் பார்க்க வேண்டும்! அந்தத் தெவிட்டாத காட்சியைக் கண்களால் பருக வேண்டும்!*

## காட்சி-294

*ருஷ்ய மூக பர்வதம்*

**சுக்ரீவன் :** நாயகரே! அதோ பாருங்கள் - தென்புறத்திலிருந்து சூரியன் உதிப்பது போல, வந்து கொண்டிருக்கிறான் அனுமன்!

[அனுமன் அருகில் வந்தவுடன், தென்திசை நோக்கித் தலைமேல் கை வைத்து வணங்குகிறான்.]

**அனுமன் :** மாதா இருக்கும் திசை நோக்கி, இந்த ராமன் அடிமை, மனம் உவந்து வணங்குகிறேன்.

(ராமரை நோக்கி) ஐயனே! உன் பாத கமலங்களைப் பணிவோடு தொழுகிறேன்.

நான் கண்டனென் கற்பினுக்கு அணியை, என் கண்களால் பிரானே!

தென்திரை அலைகடல் லங்கைத் தென் நகரில், என் தெய்வத்தைக் கண்டேன்!

உங்கள் பெருந்தேவி என்னும் உரிமைக்கும், தங்களைப் பெற்ற தசரத மன்னர் மருகி என்னும் வாய்மைக்கும், மிதிலை மன்னன் தனயை என்னும் தகைமைக்கும், மாசு இல்லாமல், அந்தப் பெண் தெய்வம், அங்கு சிறைப்பட்டிருக்கக் கண்டேன் செம்மலே! விற்பெருந் தடந்தோள் வீரா! வீங்கு நீர் லங்கை வெற்பில், நான் ஒரு நங்கையைக் கண்டேன் அல்லேன்; கற்பெனும் பெயரது ஒன்று களிநடம் புரியக் கண்டேன்!

ஐயனே! பெருமாட்டியின் கண்ணிலும் நீங்களே இருக்கிறீர்கள்! கருத்திலும் நீங்கள்தான் இருக்கிறீர்கள்! அவர்கள் வாய்ச் சொல்லிலும், நீங்களே வாசம் செய்கிறீர்கள்!

நீங்கள் பிரிந்திருப்பதாக எண்ணுவது பொருத்தமோ?

வேந்தே! விரிநகர் லங்கையில், காலையும் மாலையும் தெரியாத கனகக் கற்பகச் சோலை ஒன்றில், இளவல் அமைத்துக் கொடுத்த பர்ணசாலைக்கு வெளியில், தவமாகிய அந்தத் தையல் இருக்கின்றார்கள்!

மாதாவின் புண்ணிய மேனி தீண்ட அஞ்சி, மண் ணொடும் கொண்டு போனான், அந்த அரக்க மன்னன்!

தன் மீது கருத்திலாளைத் தொட்டால், எண் அருங் கூறாய் சிதறி மாள்வாய் என்ற கமலத்து அண்ணல் பிரம்மனின் சாபமொழி, அந்தச் சண்டாளனைக் கட்டி வைத்திருக்கிறது!

அவன் தீண்டியிருந்தால், இந்த ஜெகம் சிதைந்து போயிருக்காதா? ஆதிசேஷனின் உச்சந்தலை கிழிந்து போயிருக்காதா? கடல்கள் கரை கடந்து பாய்ந்திருக்காதா? சூரிய சந்திரச் சுடர்கள், மண்ணிலே வீழ்ந்திருக்காதா? வேதங்கள் நாதமிழந்து மறைந்திருக்காதா? சோகத்தைச் சுமந்து, தன் கற்பினால், பெண்டிரெல்லாம் பெருமை கொள்ள, வானத்துத் தேவிமாரும் வான்சிறப்புக் கொள்ள விளங்கும் தங்கள் தேவி, கண்ணின் நீர்க்கடலிலே, கடல் நடுவே உள்ள லங்கையில் இருக்கக் கண்டேன்!

இரக்கம் என்ற ஒன்றுதானே, ஏந்திழை வடிவம் எய்தி, அரக்கியர் நடுவே சிறையிருக்கும் அவலத்தைக் கண்ணாற் கண்டேன்!

ஐயனே! தகுந்த நேரத்தில், தையல் முன்போய் நின்றேன்! அவர்கள் பொன் அடி வணங்கி, நின் பெயர் புகன்றேன்!

தாங்கள் சொன்ன அடையாள மொழிகளையும் தெளி வாகச் சொல்லி, தாங்கள் அளித்த வண்ண மோதிரத்தையும், அவர்கள் கையில் சேர்ப்பித்தேன்!

அந்த மோதிரத்தைக் கண்ணீரால் ஆயிரம் கலசம் ஆட்டி, இமைக்காது பார்த்து ஏங்கி இருந்தார்கள்!

மாதரசியும் செய்தி சொன்னார்கள் தங்களிடம்! மாதம் ஒன்று மட்டும் உயிர் வாழ்வேன் என்றும், அதற்குள், தான் மீட்கப்படாவிட்டால், மங்குவேன் உயிர் விட்டு என்று, தங்கள் மலரடி சென்னி வைத்துச் சொன்னார்கள்!

அத்தோடு, இந்தச் சூளாமணியை அடையாளமாகத் தங்களிடம் கொடுக்கச் சொன்னார்கள்!

[சூளா மணியைப் பெற்றுக் கொள்கிற ராமர், அனு மனை உணர்ச்சிப் பெருக்கோடு அணைத்துக் கொள்கிறார்.]

## காட்சி-295

*வானம்*

[வானிலே, மஹாலட்சுமியும் உமையம்மையும் தோன்றுகிறார்கள்.]

**மஹாலட்சுமி :** *சிவனாரும் திருமாலும் ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்து கொண்டார்கள்!*

*இந்த அற்புதமான காட்சியைப் பூலோகத்தில்தான் பார்க்க முடிகிறது! இங்கு இதுபோல நடப்பதில்லை!*

**உமையம்மை :** *தேவிமார் நாம் பொறாமைப்படுவோம் என்று,. வான் உலகில் அதைத் தவிர்த்திருக்கலாம்!*

*[இருவரும் சிரிக்கின்றனர்.]*

**மஹாலட்சுமி :** *இந்த அவனியை நன்னெறிப்படுத்த, நல்ல நாடகம் ஒன்றை அரங்கேற்றிக் கொண்டிருக்கிறார்கள்! நன்றாகவும் நடிக்கிறார்கள்!*

*ஆனால், உன்னவரைப் போல, என்னவரால் நடிக்க முடியாது!*

**உமையம்மை :** *அப்படியா சொல்கிறாய்! என்னவர் சாம்பலைப் பூசிக்கொண்டு, இடு காட்டில் ஆடிக் கொண்டிருப்பார்!*

*ஆனால், உன்னவர் எடுத்த வேஷங்கள் எத்தனை எத்தனை? மீனாய், ஆமையாய், நரசிங்கமாய், குறளாய்.... அப்பப்பா!*

## காட்சி- 296

*ருஷ்ய மூக பர்வதம்*

**ராமர் :** இந்தச் சூளாமணி என் கையில் இருக்கும் இக்காட்சி, திருமணத்தன்று, என் நங்கையின் கை பற்றிய நினைவைத் தருகிறது.

இந்த அணிகலன், தேவேந்திரனால் ஜனகருக்கு வழங்கப்பட்டது. என் மணநாளன்று, சீதையின் தலையிற் சூடுவதற்காக, ஜனகர், என் தந்தையிடம் அளித்தார். அன்று தலையில் சூளாமணியோடு, என் சீதையைக் கண்டு களித்தேன். இப்பொழுது வெறும் சூளாமணியை மாத்திரம் பார்க்கின்ற அவலநிலை, எனக்கு ஏற்பட்டிருக்கின்றது!

(அனுமனை நோக்கி) அனுமனே! அறிஞனே! சீதையை நான் பெற, தூது சென்ற தூயோனே! கருடனும் வாயுவும் நீயும் மாத்திரமே கடல் தாண்டிச் செல்லும் ஆற்றல் உடையவர்கள். ஈடு இணையற்ற உன் உதவி, எனக்குக் கிடைத்திருப்பது, என் சீதை, எனக்குக் கிடைத்து விடுவாள் என்ற நம்பிக்கையைத் தருகிறது!

சீதை இருக்குமிடம் அறிந்து வந்தாய்! சிறுமதி அரக்கரைக் கொன்று வந்தாய்! என் சீதை சிறை இருக்கும் லங்கையின் கோட்டை அமைப்பையும், ஊரின் பரப்பையும் குறித்து வந்தாய்! சீதையைக் காணாமல், நான் உயிர்விடும் அவலத்தைத் தடுக்க வந்தாய்!

செயற்கரிய செய்தவனே! இதற்குக் கைம்மாறாக, நான் எதுவும் செய்ய இயலாது!

**அனுமன் :** சேவகம் செய்வது, இந்தச் சிறிய திருவடியின் கடன்! லங்கை நோக்கிப் படை திரட்டிச் செல்லும் ஆணையைச் சுக்ரீவர், தங்களிடமிருந்து இப்பொழுது எதிர்பார்க்கிறார்!

**சுக்ரீவன் :** ஆம் பிரானே! தென் திசைக்கடல் நோக்கி, நம் வெள்ளச் சேனை பொங்கிப் பரவ ஆணையிடுங்கள்!

அரக்கரின் ஆயுளுக்கு அறுதி இடுவோம்!

அன்னையை நோகாமல் கொண்டு வருவோம்!

## காட்சி-297

ருஷ்ய மூக பர்வதம்

[வானரப் படை நடுவே, சுக்ரீவன் போர் முழக்கம் செய்கிறான்.]

**சுக்ரீவன் :** வானர வீரர்களே! நம் வள்ளல் ராமபிரான் ஆணை யேற்று, வஞ்சக அரக்கர் லங்கை நோக்கிப் படை யெடுப்போம்!

அறம் தவறியவர்களை அழித்தொழிப்போம்!

நம் அன்னையை மீட்டு வருவோம்!

நம் அண்ணல் ராமருக்கு ஜெயம் என்று கூவிக் குதித்து ஆர்ப்பரித்து அலைகடலெனப் புறப்படுவோம்!

**வானரர்கள் :** (ஆர்ப்பரித்தபடி) ராம்! ராம்!' ஜெயராம்! ஜெயராம்! ஜெயராம்!

[வானர சேனை, வன்மைப் புயலாகப் புறப்படுகிறது. அனுமனின் வீரத்திருமுகத்தின்மேல், உடுக்கை ஒலி கேட்கிறது.]

## காட்சி-298

வனப் பிரதேசம்

[வனப்பிரதேசத்தை, வானர சேனை, 'ஜெயராம்!' என்று முழக்கமிட்டபடி கடந்து செல்கிறது.

அனுமன் தோளில் ராமபிரானும், அங்கதன் தோளில் லட்சுமணனும் அமர்ந்தபடி செல்கின்றனர்.]

**லட்சுமணன் :** அண்ணா! நன்னிமித்தங்கள் தெரிகின்றன. நமக்கு வெற்றி நிச்சயம்!

**அனுமன் :** ஆமாம். இளவல் கூறுவது உண்மையே. காற்று தென்றலாக வீசுகிறது. பறவைகள் தேனிசையாகக் குரல் கொடுக்கின்றன. திக்குகள் விளக்குகள் போல் பிரகாசிக் கின்றன. மரங்களில் கனிகள் குலுங்குகின்றன. இங்கு ஓடுகின்ற தண்ணீர் தீஞ்சுவையையாகத் தித்திக்கிறது. இந்தக் காடும் மலையும், நம் வெற்றியைக் கணித்துச் சொல்கின்றன.

## காட்சி-299

*தெற்குக் கடற்கரை*

[வானரப் படையோடு, ராமலட்சுமணர், அனுமனோடும், தெற்குக் கடற்கரை வந்து சேர்கின்றனர்.]

***ராமர் :*** *பன்னிரு பகலில் நடந்து, இந்தத் தென்திசைக் கடலைக் கண்டோம்.*

*இனிப் படை கொண்டு, இம் மறிகடலைக் கடப்பது எப்படி என்பதைத் தீர்மானிக்க வேண்டும்.*

*நாள் ஆக நாள் ஆக, மனத்துன்பம் மட்டுப்படும் என்று சொல்வார்கள்.*

*சீதையைக் காணாத என் துன்பமோ. கொளுந்து விட் டெறியும் கனலாகி, என்னைக் கொடுமைப்படுத்துகிறது!*

*இதற்கொரு முடிவு காணக் கடலில் விழுந்த விடலாமா என்று கலக்கத்தில் எண்ணுகிறேன்!*

*ஆனால், அதனால், என் சீதைக்கு விடிவு ஏற்படாதே என்ற உண்மை, என் உள்ளத்தில் உறைக்கின்றது!*

*தன் கற்புக் கனலால், அவள் புல்லர்களை எரித் திருப்பாள்!*

*என் வில்லின் ஆற்றலுக்கு, அதனால் ஊறு வரும் என்று ஒடுங்கியிருக்கிறாள்!*

*மானோடும் மயிலோடும் விளையாடி இருப்பவளை, மாபாவத்தின் உருவாம் அரக்கியர் நடுவே, அல்லற்பட வைத்து விட்டேனே!*

*இதை எண்ணிப் பார்க்கும் பொழுது, அவளைவிட, என்னைத்தான், துயரம் மென்று தின்கிறது!*

***அனுமன் :*** *ஐயனே! கவலையை விடுங்கள்! காலம் கனிந்து விட்டது! தங்கள் கையில் கோதண்டம் இருக்க, அதர்மம் இன்னும் எத்தனை நாள் கொடி பிடித்துக் கூத்தாட முடியும்?*

*நிலவை மறைக்கின்ற மேகம், நிரந்தரமாக அங்கு நிலைப்பதில்லையே! எங்கள் வானரப் படையும், வளர்*

ஆற்றல் கொண்டது! வாலும், எங்களுக்கொரு ஆயுதம்! வஞ்சகர் அதனால் வீழ்வதும் நிச்சயம்!

பகலவன் கண்ட பனிபோல, பகை முடியும் வேளையும் நெருங்கி விட்டது!

திட்டமிடுவோம்! அரக்கர்களின் கொட்டம் அடக்கு வோம்! அன்னையை மீட்டு, தர்மத்தைத் தரணி ஆளச் செய்வோம்!

## காட்சி-300

*வானுலகு*

**திருமால்** : (சிவனை நோக்கி) மைத்துனரே! உங்களை நம்பித்தான், இந்த ராம அவதாரம் எடுத்திருக்கிறேன்.

மங்கலமாக முடித்து வைக்க வேண்டும்.

**சிவன்** : உங்கள் நாமத்தை உச்சரிக்கச் சிரஞ்சீவியாய் அவதரித் திருக்கிறேன். விட்டு விடுவேனா?

**லட்சுமி** : போரைத் தொடங்கலாமே! முடிவைக் காணப் பொறுமையின்றித் தவிக்கிறேன்.

**உமையாள்** : அதோ, வானிலே, வரவேண்டிய விபீஷணனும், சரண் அடைய வந்து கொண்டிருக்கிறான்.

இனிமேல் கதையில், களைகட்ட ஆரம்பித்து விடும்.

## காட்சி-301

*தெற்குக் கடற்கரை*

[விபீஷணனோடு நால்வரும் வானிலே வந்து கொண்டிருக் கின்றனர். இதை வானரர்கள் பார்க்கின்றனர்.]

**சுக்ரீவன்** : பகை நெருப்பிலிருந்து, பொறிகள் தெறித்து வருகின்றன! இதை எளிதாக எடுத்துக் கொள்ளக் கூடாது.

**ஒரு வானரன் :** *அவர்களை வெல்லுவோம்! கொல்லுவோம்!*

**இன்னொரு வானரன் :** *இவர்கள் உளவு அறிய வருகிறார்கள். இவர்கள் தங்கள் உருவத்தோடு திரும்பக் கூடாது.*

**வேறொரு வானரன் :** *நம்மிடம் உயிர் இழப்பது வீரம் என்று இவர்கள் எண்ணும்போது, அதை அளிப்பதிலே, நமக்கென்ன மறுப்பு இருக்க முடியும்?*

*இவர்கள் அங்கத்தைப் பிய்த்து எறிந்து, நாய் நரிகளுக்கு விருந்தளிப்போம்.*

*[வானர வீரர்கள், 'ஜெய்ராம்!' என்று கூவிக்கொண்டு, பாறாங்கற்களை, மரக்கிளைகளைக் கைகளில் ஏந்திக்கொண்டு, வருபவர்களை அழித்துவிட முனைந்து நிற்கின்றனர்.]*

**அனுமன் :** *(அவர்களை நோக்கி) பொறுங்கள்! வருபவர்கள், ராவணன் இளவல் விபீஷணனும், அவரைச் சேர்ந்தோரும்!*

*அரக்கர் கூட்டத்திலே உள்ள ஒரு நல்ல ஆத்மா, அந்த விபீஷணன்! வருபவர்களின் நோக்கம் தெரியாது, நாம் ஆர்ப்பரித்து அவர்களை அழித்துவிடக் கூடாது! அதை வீரம் என்று, விவரமறிந்தோர் கூறமாட்டார்கள்! நிராயுத பாணியாக வருபவர்களைக் கைகனக்கப் பாறாங்கற்களோடு எதிர்கொள்வதா?*

*அவர்களோ ஐவர்! நாம் நாற்றிசையும் பரவி நிற்கும் சேனை! அவர்களுக்கெதிராக ஆயுதம் ஏந்தினால், அது அச்சமாகக் கொள்ளப்படுமே தவிர, ஆற்றலாக மதிக்கப் படாது!*

*எடுத்தவற்றைக் கீழே போட்டு விட்டு, கைகளைக் கட்டிக் கொள்ளுங்கள். என்ன சொல்ல வருகிறார்கள் என்பதைக் காது கொடுத்துக் கேட்போம்.*

*வீரன் விலங்கல்ல - எப்போதும் பாய்ந்து கொண்டிருப் பதற்கு!*

*பகை தெரிந்து போரிடவேண்டும். எதிரியின் கூடாரத் திலிருந்து புகை வந்தாலும், அதை எதிர்த்துப் போரிடுவோம் என்பது புத்திசாலித்தனமல்ல!*

*[அனுமனின் இந்தப் பேச்சைக் கேட்டு, வானர வீரர்கள், தங்கள் கைகளில் உள்ளவற்றைக் கீழே போட்டு விட்டு, அமைதியாக நிற்கின்றனர்.]*

## காட்சி-302

*கடற்கரை*

[கூப்பியகைகளோடு, 'ஜெய்ராம்! ஜெய்ராம்!' என்ற முழக்கத்தோடு, நால்வரோடு, விபீஷணன் கடற்கரையில் இறங்குகிறான்.

வானர வீரர்கள், அவர்களைச் சுற்றி வளைக்கின்றனர்.]

**சுக்ரீவன் :** *அனுமான்! எதிரிகளுக்கு இரங்குவது இரக்கமாகாது! ஏமாளித்தனம் ஆகும்!*

*நீ இங்கிருந்து இப்பொழுது சென்றுவிடு, இவர்களை நான் எதிர்கொள்கிறேன்.*

*[அனுமன் அவ்விடம் விட்டுச் செல்கிறான்.]*

**சுக்ரீவன் :** *(விபீஷணனைப் பார்த்து) பகை இடத்திலிருந்து பதறாமல் வந்து நிற்கிறீர்கள்!*

*தூது வந்தீர்களா? துவண்டு இருக்கும் நேரம் பார்த்து, எங்களைக்கொல்ல வந்தீர்களா?*

**விபீஷணன் :** *பெருந்தகையீர்! நான் லங்கை மன்னன் ராவணன் இளவல் விபீஷணன்! இவர்கள் என் அமைச்சர்கள்.*

*சீதாதேவியைச் சிறையெடுத்தது சிறுமையான செயல் என்று அண்ணனிடம், மன்னனிடம் வாதிட்டேன்.*

*அந்தக் கற்பு நெருப்பை விடுவிக்காவிட்டால், கடல் சூழ்லங்கை எரிந்து விடும் என்று எச்சரித்தேன்.*

*பொல்லாதவர் காதில் விழும் நல்லுரைபோல, என் பேச்சு புறம் தள்ளப்பட்டது.*

*என்னை, லங்கை நாட்டை விட்டு, வெளியேற்றி விட்டான், காமவெறி உட்புகுந்த எங்கள் மன்னன்.*

*ராம பிரானிடம் சரணடைய வந்திருக்கிறோம்.*

*அவர் திருமாலின் அவதாரம் என்று சொல்கிறார்கள்.*

*அந்தத் தெய்வத்தையே புகல் என்று வந்திருக்கிறோம்.*

*தர்மத்தின் தாள்களைப் பற்ற வந்திருக்கிறோம்.*

*அறம் பிறழ்ந்தவன் தம்பி என்றாலும், அறம் நாடுகின்ற மனமோடு, அயோத்தி அண்ணலின் திருவடி தேடி வந்திருக்கிறோம்.*

*எங்கள் எண்ணத்தை, ஏந்தலிடம் தெரிவியுங்கள். சரண் என்று வந்திருக்கிறார்கள் என்று சொல்லுங்கள். சாவோ, வாழ்வோ, எங்களுக்கு, அவர் தருவதாக இருக்கட்டும்.*

***சுக்ரீவன் :*** *இவ்வளவு பேசி விட்டீர்கள். உங்களை ஏசி விரட்டியடிப்பது விவேகமாகாது. உங்கள் வேண்டுதலை, வேந்தனிடம் தெரிவிக்கிறேன்.*

*இதற்கான தீர்வை, எம்பிரானே தெரிவிக்கட்டும்.*

## காட்சி-303

*கடற்கரையில் ராமர் இருக்கும் பகுதி*

[ராமரைச் சுற்றி வானரர்கள் இருக்கிறார்கள்.]

***ராமர் :*** *விபீஷணன் சரண் அடைய வந்திருக்கிறானே! இது பற்றி, முரண் ஆன கருத்து உங்களுக்கு உள்ளதா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.*

***சுக்ரீவன் :*** *ஐயனே! வேதங்கள் நான்கும், மனுமுதல் யாவையும் வரம்பு கண்ட நீங்கள், எங்களையும் இது பற்றிக் கேட்பதால், எங்களுக்குத் தெரிந்ததைக் கூறுகிறோம்.*

*கொள்ளுவதைக் கொண்டு, தள்ளுவதைத் தள்ளிவிடுங்கள்.*

*அனலிலே குளிமை இருக்க முடியுமா? அரக்கரிலே நல்லவர் இருக்க முடியுமா? நடிப்பையெல்லாம் நடப்பாகக் கொள்ள முடியுமா?*

தனயனைத் தாயைத் தந்தையைத் தகுதி வாய்ந்த ஆசிரியனைத் தரணி ஆளும் மன்னனைப் பகை சூழ்ந்த காலத்தில், துறந்து வரும் பண்பு, அறவோர்க்குத் தகுமா? அதைத்தானே, இப்பொழுது, இந்த விபீஷணன் செய்திருக்கிறான்!

அறம் தவறினான் அண்ணன் என்றால், அவன் நகர் விட்டு நீங்கி, துறவு கொண்டிருக்க வேண்டும்!

அண்ணன் பகையோடு உறவு கொள்வது, பழி நீங்கிய செயல் என்று பகர்ந்தால், ஒப்பமுடியுமா?

வாழும் காலத்தில் அண்ணனோடு வாழ்ந்து விட்டு, போர் வருகின்ற போது, புறக்கணித்து விட்டுப் போகின்றவன், யாருக்கு உறவாக இருக்க முடியும்? யாருக்கு உண்மையாக இருக்க முடியும்?

கூற்றுவன் தன்னோடு, எவ்வுலகும் கூடி வந்தாலும், நாம் வெல்லத் திரண்டிருக்கிறோம்!

மாற்றான் தம்பி, நம் மருங்கு வந்து சேர்வதைத் துணையெனக் கொள்ளத் தேவையில்லை!

இரக்கம் இல்லா அரக்கரை அழிக்க, அந்தக் கூட்டத் திலிருந்து ஒரு பதரைச் சேர்த்துக் கொள்வதா?

இதனால், தங்கள் வில்லுக்கு, வீரத்திற்கு மாசு வராதா?

அஞ்சன வண்ண! வஞ்சனையாக வந்திருப்பவனுக்குத் தஞ்சம் கொடுக்கத் தேவையில்லை! அந்த நஞ்சினினும் கொடிய குலத்தோனை, நயந்து ஏற்கலாமா? கூடாது! கூடாது!

**ராமர் :** பெரியவர் ஜாம்பவான், இது பொருட்டுப் பேசுவதைக் கேட்க அவா.

**ஜாம்பவான் :** வஞ்சனையும் அரக்கரும், பிரிக்க முடியாத ஒரு கூறே!

அவர்கள் தர்மம் பேசினாலும், ஆற்றுகின்ற கர்மம் அதர்மம் ஆகவே இருக்கும்!

கூட இருந்து குழி பறிக்க, நல்லவர் வேடமிட்டு வருவார்கள்!

*இந்தச் சிற்றினத்தவரோடு சேருதல், சிறப்பைத் தராது! சீர்கேட்டைத் தந்து விடும்!*

*வேதத்தை, வேள்வியை, வேதியரை, இமையவரை எதிர்க்கும் இந்தப் பாதகர், நம் பக்கம் இருப்பதா?*

*பொன் மானாக வந்தவனைப் போல், பொய் மகனாக வந்து நிற்கிறான்,இந்த விபீஷணன்!*

*அவனை ஏற்பது, எரி நெருப்பை ஏற்பது போலாகும்!*

**ராமர் :** *நீலனே! நின் எண்ணத்தையும் சொன்னால் நல்லது.*

**நீலன் :** *ஐயனே! இந்தக் குரங்கின் சொல்லையும் நயந்து கேட்கும் நாயகனே!*

*என் அறிவுக்குப் பட்டதைச் சொல்கிறேன். கெட்டவரை ஏற்றுக் கொள்வது, அருள் ஆகுமா? ஆபத்துக் காலத்தில், அண்ணனைக் கைவிட்டு வந்தவனை, நம்ப முடியுமா? நம்மைக் கைவிட, காலத்திற்காக அவன் காத்திருக்க மாட்டானா?*

*என் எண்ணம் இதுவே எம்பிரானே!*

**பல வானரர்கள் :** *(ஒரே குரலில்) எங்கள் எண்ணமும் இதுவே ஐயனே!*

*[ராமர் அனுமனைப் பேசுமாறுப் பார்வையால் கூறுகிறார்.]*

**அனுமன் :** *ஐயனே! இங்கு உத்தமர் எல்லோரும் ஒரே கருத்தைச் சொன்னார்கள். வித்தக! இனியும் நான் பேச வேண்டுமா? ஆனாலும், ஒன்றை நான் சொல்லி ஆகவேண்டும்!*

*விபீஷணன் விஷம் போன்ற தீயவன் என்று நான் எண்ணவில்லை. அவன் வஞ்ச எண்ணம்கொண்டு, தஞ்சம் என்று வந்திருக்கிறான் என்பதையும் ஏற்பதற்கில்லை.*

*அகத்தில் உள்ளதை முகம் காட்டிவிடும். அவன், உண்மையில் சரண் என வந்தவன் என்பதை, அவன் முகம், அரண் எனக் காட்டிவிட்டது.*

*வாலி விண்பெற, இளையவர் அரசுபெற, தங்கள் வரிசிலை வழி கண்டது. அந்தக் கொற்றத்தைச் சீலத்தை உணர்ந்து, லங்கை அரசு எய்திட, இங்கு விரும்பி,*

விபீஷணன் வந்திருக்கலாம்! அது தவறாக எனக்குப் படவில்லை! வாலிக்குப் பொருந்திய வழக்கு, இங்கு ராவணற்குப் பொருந்தும்! அவர் தம்பிக்கும் பொருந்தும்!

எறிகடல் உலகு எல்லாம், பரத இளவலுக்கு ஈந்தது தாங்கள்! இப்படி இளவல்கள் அரசு பெறும், தங்கள் கருணையை நாடி வந்திருக்கலாம்!

பகை வலியது; அதனால் இறுதி வரும் என்று தெரிந்த பின்பு, உறவைப் பிரிந்து வருவது தவறா?

துறவு கொள்வது, ஷத்திரிய தர்மமா?

உறவை எண்ணித் தர்மத்தின் பக்கம் இருக்கத் தயங்கலாமா?

பகைவரில் ஒருவன், நம்மோடு இருப்பது, அவர்கள் வலிமையைக் குறைக்குமே!

போர் நெறிக்கு இதுபுறம் அல்லவே?

லங்கை அரசவையில், என் உயிர் காத்த உத்தமன், இந்த விபீஷணன்.

மேலும், இரவு நேரத்தில், நான் இந்த விபீஷணன் மாளிகையில் நுழைந்தபோது,இவன் உறக்கத்திலும், ராம மந்திரத்தைக் கூறிக் கொண்டிருப்பதைக் கண்டேன்!

அவன் மாளிகை, அரக்கர் மனையாக இல்லாமல், அந்தணர் மனையாகப் பொலிந்திருக்கக் கண்டேன்!

அவன் மகள் திரிசடைதான், நம் அன்னைக்கு இப்பொழுது ஆறுதலாக இருக்கின்ற ஒரே ஜீவன்!

அபயம் என வந்தவனைக் கண்டு நாம் அஞ்சுவது, பெருங்கடல், கிணற்றுச் சிறுபுனலைக் கண்டு, அஞ்சுவது போல் ஆகாதா?

இது தங்கள் ஆண்மைக்கு அழகாகுமா?

எங்கு இல்லை பகை? தந்தையரும், தம்பியரும், தமையரும், பொருளாசை குறித்துப் பொல்லாப் பகை கொள்வதில்லையா?

பகைப் புலத்திலிருந்து வருவோர், துணையாக மாட்டார் என்பது, அறிஞர் நகைக்கின்ற கூற்றாகும்!

ஆதலால், இவன் வரவு, நல்வரவே! ஐயனே! வேத நூலாக விளங்கும் தங்கள் திருவுளத்தில், என்ன இருக்கிறது என்ற குறிப்பு அறியேன்!

கலை அனைத்தும் கதிரோன் முன் சென்று ஓதிய தகுதியிலே, இதை உரைத்தேன்!

**ராமர் :** அனுமனே! பேரறிவாளா! நன்று நன்று நீ நவின்ற வார்த்தைகள்!

விபீஷணனுக்கு லங்கை அரசின்மீது நாட்டமிருந்தாலும், அதைப் பிழையாகக் கொள்வதற்கில்லை.

அனுமன் வடித்துச் சொன்ன வார்த்தைகளே, என் வார்த்தைகள்!

மேலும், அடைக்கலம் என்று வந்தவனைப் பற்றி ஆதரிப்பது, எனது கடமையாகும்!

அதனால் கிடைக்கும் வெற்றி தோல்வியை, நான் பகுத்துப் பார்ப்பதில்லை!

இங்கு வந்து சேர்ந்த பின்பு, இன்னல் நமக்கு அவன் செய்தாலும், இதனால் நமக்குப் புகழே அன்றிப் பிறிதுண்டோ?

பிறந்தவரெல்லாம், அடைக்கலமான ஒரு புறாவிற்காகத் தன்னையே ஈந்த சிபியை மறந்தவர் உண்டோ?

அவன் குலத்தில் வந்த நான், தஞ்சம் என்று வந்தவனை தள்ளி விட முடியுமா?

அவன் சூழ்ச்சியால் நான் இறந்தாலும், அந்த நாள், நான் வாழ்ந்திருந்த இனிய நாள் அன்றோ?

பாற்கடலைக் கடைந்தவர்களைக் காக்க, ஆலம் உண்ட சிவனைக் கண்டோமே!

இது கண்டு, நம் சித்தம் செம்மை பெற வேண்டாமா?

விளைவு எதுவாயினும், என்னை அடைந்தவனுக்கு உதவாமல் இருந்தால், அறம் என்னவாவது? என் ஆண்மை என்னவாவது?

வேதமும் முடிவு காணா மெய்ப்பொருள், 'ஆதியம் பரமே! யான் உன் அபயம்!' என்று ஒரு யானை அழைக்க,

வெளிவந்து, அதன் மாதுயர் துடைத்த மாண்பை மறக்கலாமா?

அந்தணன் மிருகண்டு, தன் மகன் மார்க்கண்டேயன் ஆயுளுக்காக, மழுவாளன் சிவனிடம் அபயம் என்று அஞ்சி நின்ற போது, நஞ்சினை மிடற்று வைத்த அந்த நாயகன், வெஞ்சினைக் கூற்றை உதைத்துத் தள்ளி, அந்தணன் விரும்பிய வரம் அருளவில்லையா?

அபயம் என்று வந்தவனின் உயிரைத் தன் உயிராகக் கருதாதவன், கடைமகன் என்று கற்றறிந்தோர் கூறுவார்களே!

எனவே, புண்ணியரோ, பூரியரோ, என்னைப் புகல் என்று புகுந்தோரைப் பொன்றா என் உயிர் கொடுத்தாவது, நான் காக்க வேண்டும்!

இதுவே என் நிலை! தர்மத்தின் வழி! தரணி வழிவழியாகக் கண்ட தடம்!

சுக்ரீவா! நீ சூரியன் மகன்! சூரியன் உயிர்களில் பேதம் பார்ப்பதில்லை. அந்த வேத விளக்கத்தை மனதிற் கொண்டு, விபீஷணனை என்னிடம் அழைத்து வா.

**சுக்ரீவன் :** தெய்வ நாயகனே! நின் திருவுள்ளம் அறிந்தேன். என் தெருள் உள்ளம் தேறினேன்.

அபயம் என வந்தவனை, நின் அருகில் கொணர்ந்து சேர்க்கின்றேன்.

## காட்சி-304

*ராமர் இருக்கும் இடம்*

[விரைவாக இங்கு வருகின்ற விபீஷணன், ராமரைக் கண்டதும், மெய்நடுங்க, கண் நீர் உகுக்க, கை குவித்து நிற்கிறான்.]

**விபீஷணன் :** வீரனே! தர்மம் காக்க வந்த தீரனே! நினைக் கண்டதும், என் அங்கம் சிலிர்க்க, கண்ணீர் உதிர, நெஞ்சு உருக நிற்கின்றேன் நான்!

*செங்கண் அஞ்சன மலையாக இருக்கும் என் செம்மலே!*

*கமலம் பூத்த கார் முகில் வண்ணனே!*

*நின் தாள் சரண் புக வந்து நிற்கின்றேன்!*

*இந்தப் பேற்றை எனக்களித்து, என் அண்ணன் ராவணன் எனக்கு உதவினான்!*

*நின் வில்லால் உயிர்விடப் போகும் அரக்கர்கள், அருந்தவம் உடையவர்கள்!*

*அநீதியிடை நெளிந்து கிடக்காமல், அபயம் என்று நின்னை வந்தடைந்தேன்!*

[இவ்வாறு கூறிவிட்டு, விபீஷணன், நெடுஞ்சாண் கிடையாக, ராமரை விழுந்து வணங்குகிறான்.

ராமர், விபீஷணனைத் தூக்கி நிறுத்தித் தன் மார்பு உற அணைத்துக் கொள்கிறார்.

சுற்றியிருப்போர், 'ராம்! ராம்!' என்று கூறுகின்றனர்.]

***ராமர் :*** *விபீஷணா! உன்னை ஏற்றுக் கொண்டேன்! எழில் லங்கை அரசையும் உனக்கே தந்தேன்! (சுற்றியிருப்போர், உள்ளக் கிளர்ச்சியோடு, 'ராம்! ராம்!' என்று கூறுகின்றனர்.)*

***ராமர் :*** *நால்வராகப் பிறந்த நாங்கள், குகனொடும் ஐவர் ஆனோம்! பின்குன்று சூழ்வான் மகன் சுக்ரீவனோடு அறுவர் ஆனோம்! இன்று, எம்மிடம் அன்பின் வந்த ஐய, நின்னோடும் எழுவர் ஆனோம்!*

[சுற்றியிருப்போர், 'ராம்! ராம்!' என்று உரக்கக் கூவுகின்றனர்.]

***விபீஷணன் :*** *(கண்ணீர் மல்க) நாயகனே! நாயினேனை, உன் உடன் உதித்தவர்களில் ஒருவன் என்று உரைத்து விட்டாய்! அடிமையின் சிறந்தேன்!*

*உன் தொடு கழலை, என் செம்பொன் முடியாகச் சென்னியிலே சூடிக் கொள்கிறேன்!*

## காட்சி-305

*லங்கையில் ராவணன் அரசவை*

[திடீரென்று சிம்மாசனத்திலிருந்து தலை குப்புற விழுகிறான் ராவணன்.

இது கண்டு அவையோர் அதிர்ச்சியடைகின்றனர்.

ராவணன் தட்டுத் தடுமாறி எழுந்து, மீண்டும் சிம்மாசனத்தில் அமர்கிறான்.]

***ராவணன் :*** *விபீஷணன், அந்த ராமன் காலில் விழுந்து விட்டான்! நான் இப்படிக் கீழே உருண்டது, அதைச் சொல்லும் நிமித்தம் தான்!*

*ஆனாலும் இதைக்கண்டு அஞ்சுபவன் நாணல்லன்! கயிலை மலையைக் கடிது எடுத்தவன் நான்! கடைப் பிறப்பான மானிடருக்கு, வானரருக்கு அஞ்சுவேனா?*

*என் ஆற்றல் கண்டு, மலையின் ஆட்டம் கண்டு, உமை மடந்தை, ஊடலை மறந்து, அச்சத்தால் அரனைத் தழுவினாள்!*

*விபீஷணன், அவர்களோடு மரணத்தைத் தழுவ, மார்க்கத்தைத் தேடிவிட்டான் - அவ்வளவுதான்!*

## காட்சி-306

*கடற்கரை*

[கடற்கரையில், வானர வீரர்கள் மத்தியில், ராமர் இருக்கின்றார்.]

***ராமர் :*** *கடற்கரை வந்து விட்டோம். இன்னும் நாம் கடலைத் தாண்டிச் செல்லவில்லை. காலம் கழியக் கழிய, அதர்மத்தின் கை ஓங்கிக் கொண்டிருக்கும். என் தர்மக் கொழுந்து வாடிக் கொண்டிருக்கும்.*

***அனுமன் :*** *இந்தக் கடலில் அணைகட்டி, அக்கரை சேர்வோம். அரக்கர்களை அழித்து விட்டு, அன்னையை மீட்போம்.*

**ராமர் :** கடலில் அணை கட்ட முடியுமா? ஆழமான கடலில், அணை மூழ்கி விடாதா?

[இப்பொழுது சமுத்திரராஜன் அங்கு தோன்றுகிறான்.]

**சமுத்திரராஜன் :** ரகு குலத்தோன்றலே! இந்த சமுத்திர ராஜனும், நின் பணியில் பங்கேற்கிறேன். தர்மத்தை மீட்கும் போரில், அலை கடலும் அணி வகுக்க வேண்டாமா?

அணை கட்டப் போடப்படும் கற்கள், பாறைகள், கடலில் மூழ்காமல், மிதக்கும்படிப் பார்த்துக் கொள்கிறேன்.

**ராமர் :** மிக்க மகிழ்ச்சி. சமுத்திர ராஜனுக்கு, என் மனம் உவந்த நன்றி!

**சமுத்திர ராஜன் :** கட்டளையிட வேண்டிய தாங்கள், இப்படிக் கனிவான சொற்களைப் பேசத் தேவையில்லை. எல்லாம் இனிது நிறைவேற விரும்புகிறேன்.

[சமுத்திர ராஜன் மறைந்து விடுகிறான்.]

**அனுமன் :** ஐயனே! கடலில் அணை கட்டும் ஆற்றல் உள்ளவன், எங்கள் வானர குலத்தில் இருக்கின்ற நளன் என்பான். அவன் விஸ்வகர்மாவின் புதல்வன். நாம் வேண்டுவதை, வேண்டியபடி செய்து முடிக்கும் வன்மையுள்ளவன்.

**ராமர் :** அப்படியானால், அந்த நளனை அழைத்து, நம் படை செல்லக் கடலில் பாதை சமையுங்கள்.

## காட்சி-307

கடற்கரை

**அனுமன் :** (வானர வீரர்களைப் பார்த்துப் பேசுகிறான்.) வானரர்களே! எங்கெங்கோ இருக்கும் பாறைகளை, இரு கையில், தோள்களில், சென்னியில் ஏந்தி வந்து, இந்த ஒரு கடலை அடைக்க, மற்ற ஆறு கடல்களும் வருவதுபோல, அணி அணியாக வாருங்கள்!

பேர்த்த மலையை, ஆடிப்பாடி ஆர்த்துக் கடலில் எறியுங்கள்!

*காலால் உருட்டியும், கைகளால் அணைத்தும், வாலால் இழுத்தும் வருகின்ற மலைப் பாறைகள், நமக்குப் பாதையைத் தரட்டும்!*

*நீங்கள் கடலில் வீசுகின்ற மலைப் பாறைகளால், தெறிக்கின்ற கடல் முத்துக்கள், வானில் நிறைந்திருக்கும் விண்மீன்களோடு ஒளி வீச வேண்டும்!*

*பெரிய மலைகள், கருங்கடலில் கவிழ்வதால், தெறிக்கும் கடல் நீர், வானவர் நாட்டில், மழையாகப் பொழிய வேண்டும்!*

*புலால் நாறும் கடல் நீர், நீங்கள் வீசும் மலைப் பாறைகளால், அங்கு குலுங்கி இருக்கும் பூக்களால், சந்தன மரங்களால், நறுமணம் பெற்றுச் சிறக்க வேண்டும்!*

*நீங்கள் கொண்டு வந்து குவிக்கின்ற மலைப் பாறைகளால், கடல் நீர் வெளியேறிப் பூமியெல்லாம் கடலாக வேண்டும்! கடல், மண் பூமியாக வேண்டும்!*

*இந்த ஜெகம் செழிக்க, 'ஜெய்ராம்' என்று முழக்கமிட்டு, வேலையைத் தொடங்குங்கள்! லங்கையின் வீழ்ச்சிக்கு, நாழிகையைக் கணியுங்கள்!*

*(எல்லா வீரர்களும் 'ஜெய்ராம்!' என்று கோஷமிடு கின்றனர்.)*

**அனுமன் :** இந்தப் புண்ணிய சேது பந்தனத்திற்கு, வடக்குக் கோடியில் இருந்து, நான் மலையைக் கொண்டு வருகிறேன்.

தென் திசைத் திருப்பணிக்கு, வடதிசையும் வந்து சேரட்டும்!

## காட்சி-308

*கடற்கரை*

[ஓர் அணில், வாயில் சிறு கல்லைச் சுமந்து வருவதை, லட்சுமணன், ராமரிடம் சுட்டிக் காட்டுகிறான்.]

**லட்சுமணன் :** *பாருங்கள் அண்ணா! அந்த அணிலும் அணை கட்ட, வாயில் சிறு கல்லைச் சுமந்து செல்கிறது.*

**ராமர் :** *லட்சும்மணா! அந்த அணிலைப் பிடித்து வா.*

*(லட்சுமணன் அணிலைப் பிடித்து வந்து, ராமர் கையில் கொடுக்கிறான்.*

*அதன் முதுகில் தடவிக் கொடுக்கிறார் ராமர். ராமரின் விரல் தடங்கள், அதன் முதுகில் பதிகின்றன.)*

**ராமர் :** *தர்மத்தைக் காக்க வில்லேந்திய எனக்கு, இந்த அணில் கல்லேந்தி உதவுகிறது!*

**லட்சுமணன் :** *அண்ணா! என்ன அதிசயம்! இந்த அணிலின் முதுகில்பட்ட, உங்கள் விரல் தடம், இப்பொழுது எல்லா அணில்களின் முதுகில் தெரிகிறது!*

*உங்கள் கால் வண்ணமும், கைவண்ணமும் கண்ட நான், இப்பொழுது உங்கள் விரல் வண்ணமும் வியப்புறக் கண்டு கொண்டேன்!*

## காட்சி-309

*வடதேசம்*

[பெரிய மலையைத் தூக்கியபடி அனுமன் வானிலே வந்து கொண்டிருக்கின்றான்.

வானில், ஒரு தேவர் தோன்றுகிறார்.]

**தேவர் :** *அனுமான்! வடதிசையிலிருந்து மலையை ஆவலோடு கொண்டு போகிறாய். ஆனால், சேது பந்தனம் முடிந்து விட்டது. ஐந்தே நாளில், அணை கட்டப்பட்டு, முழுமை பெற்று விட்டது.*

**அனுமன் :** *அப்படியா! அப்படியானால், இந்த மலையை, இந்திரப்பிரஸ்தம் என்னும் இந்த இடத்திற்கு அருகில் வைத்து விடுகிறேன்.*

*தேவை இல்லாமல் தோளில் சுமையைச் சுமந்து செல்வானேன்?*

என் நாயகர் அமர்ந்திருக்கும் புனித பீடம், என் பூரிக்கும் தோள்கள்!

[மலையை மண்ணில் வைக்கிறான் அனுமன். இப்பொழுது மலை, தன் மனக்குறையைத் தெரிவிக்கிறது.]

**மலை :** அனுமான்! திருப்பணியில் பங்கு கொள்கிறோம் என்று களிப்புற்று இருந்தேன்.

ராமசரணத்தில் சேர்த்து விடாமல், இந்த வனாந்தரத்தில் என்னை வைத்து விட்டாயே!

மலையாக இருந்தும், என் மனம் இதனால் நிலை குலைந்து போய்விட்டது!

கைக்குக் கிட்டியது, வாய்க்கு எட்டாதது போல, பகவத் சேவைக்கு எடுத்துச் சென்ற நீ, இடையிலே இங்கு கிடத்தி விட்டாயே!

**தேவர் :** மலையரசே! மனம் தளர வேண்டாம். ராம பிரானின் பாத ஸ்பரிசம், இப்பொழுது உனக்குக் கிடைக்காமற் போகலாம். ஆனால், அந்தத் தெய்வம், துவாபரயுகத்திலே, கிருஷ்ணனாக அவதாரம் செய்யும்பொழுது, கோவர்த்தனமாக நீ கொண்டாடப்பட்டு, ஏழு நாட்கள் தன் விரலால் உன்னைத் தூக்கி நின்று, ஆயர்குலத்தையே ரட்சிப்பான் அந்த ரட்சகன்!

தெய்வத்தின் கர ஸ்பரிசம், நீ வேண்டாது கிடைக்கப் போகும் வரமாகும்! இதனால், யுகம் கடந்தும், உன் பெருமை பேசப்பெறும்! உன்னைச் சுற்றி வருவதையே, நற்றவம் என்று மானிடர் கொள்வர்! பெரியதை எண்ணிச்சிறியதை மறந்து விடு!

(அனுமனை நோக்கி) அனுமான்! நீ சிரஞ்சீவியாக, என்றும் வாழ்பவனாக இருப்பதால், பகவான் மலை தூக்கி நின்று, ஆயர் மக்களைக் காக்கும் தெய்வீகக் காட்சியைத் தேன் உண்ணும் வண்டு போல மாந்தி மகிழ்வாய்!

## காட்சி-310

*துவாபர யுகத்தில் நடக்கப் போகும் நிகழ்ச்சி*

[கிருஷ்ணன், தன் விரல் நுனியில், கோவர்த்தன மலையைத் தூக்கி நிற்கப், பெய்யும் பெருமழையிலிருந்து தப்பிக்க, மலையின் அடியில், கோபர்களும், கோபியர்களும், மாடு கன்றுகளோடு ஒதுங்குகின்றனர்.

உருமாறி வருகின்ற அனுமன், இதைப் பார்த்து வியக்கிறான்.]

**அனுமன் :** *இந்திரன் கர்வத்தை அடக்க, அவன் ஏவிய மழையிலிருந்து ஆயர் மக்களைக் காத்து விட்டார், என் நாயகர்!*

*கர்வம் யார் கொண்டாலும், அது களையப்பட வேண்டும். கர்வம் கொண்டவன், பகவானின் காலடியைக் காணவே முடியாது! அகந்தைக்குக் கிடைக்கும் அடியால், அவன் திருந்த வேண்டும்!*

*[இப்பொழுது மலையின் அடியில் இருக்கும் கோகுல வாசிகள், 'கிருஷ்ணா! கிருஷ்ணா! என்று மகிழ்ச்சியோடு கூவுகின்றனர்.*

*அனுமனோ, 'ராம்! ராம்!' என்று ராம மந்திரத்தையே உச்சரிக்கிறான்.]*

## காட்சி-311

*கடலில் கட்டப்பட்டிருக்கும் அணை*

[கட்டப்பட்டிருக்கும் அணையைக் கண்டு, அனுமன் மகிழ்கிறான்.]

**அனுமன் :** *ஆஹா! என் அன்னையின் துயர் நீங்க, என் அண்ணல், இக்கடலைக் கடந்து செல்ல, ஆதிசேஷனே வந்து கிடந்தது போல, இந்த அணை பொலிந்து தோன்றுகிறது.*

*என் ஐயன் ஈட்டிய வானர சேனை கண்டு, அன்பினால் தன் கையை நீட்டி, வா, வா என்று அழைப்பதுபோல் தெரிகிறது.*

*இருளிடை இந்திரனின் வில், வானவில் கிடப்பதுபோல, வளைந்து விளங்குகிறது.*

*இதன் உறுதியை உலகோர் காண, நான் இதன்மேல் குதித்துக் கூத்தாடுகிறேன்.*

*[அனுமன் உற்சாகத்தோடு, 'ராம்! ராம்!' என்று கூறியபடி, அணையின் மேல் குதித்துக் கூத்தாடுகிறான்.]*

## காட்சி-312

*கயிலை மலை*

[உமையாள் பார்த்துக் கொண்டிருக்க, சிவனும் ஆனந்த நடனம் ஆடுகிறார்.]

## காட்சி-313

*அணை*

[அனுமன் தோளில் ராமரும், அங்கதன் தோளில் லட்சுமணனும் அமர்ந்திருக்க, வானர சேனை, 'ராம்! ராம்!' என்ற முழக்கத் தோடு, அணையைக் கடந்து செல்கிறது.]

**அனுமன் :** *அண்ணலே! அலைகடல், தங்கள் பாதங்களில் சிப்பிகளையும் சங்குகளையும் குவித்துச் சிரம் தாழ்த்துகிறது!*

*தண்ணீரோடு புரண்டு வருகின்ற நாகப் பாம்புகள், தங்களைப் பார்த்த மகிழ்ச்சியில், மாணிக்கங்களைக் கக்கி விட்டு மறைகின்றன! மீன்களோ, தங்களை வரவேற்பது போலக் குதித்து ஆரவாரிக்கின்றன!*

*இவற்றுக்கு உள்ள அறிவு, அந்த லங்கை அரக்கனுக்கு இருந்தால், அன்னையை விட்டு விட்டு, உய்யும் வழியைக் காணலாம்!*

*இல்லையேல், அழிவைத் தன் இருகையால் மெய் தழுவி, அவன் நிர்மூலமாகலாம்!*

## காட்சி-314

*ஸ்வேல பர்வதம்*

***அனுமன் :*** *அண்ணலே! லங்கையின் எல்லையில் இருக்கும் ஸ்வேல பர்வதத்தைச் சேர்ந்து விட்டோம்.*

***ராமர் :*** *என் சீதையைச் சேரும் நாள்தான், எனக்கு வாழும் நாள்! மற்ற நாளெல்லாம், நான் மாளும் நாளே!*

***அனுமன் :*** *பகைவனின் எல்லையில் கால் பதித்து விட்டோம். இனி முரசாகத் தங்கள் பேச்சு முழங்கட்டும்!*

***ராமர் :*** *கருட வியூகமாக, நம் படை அணி வகுக்கட்டும்.*

*பெண்ணாசை கொண்ட பித்தர்களுக்குக் காலன் படையாக அது விளங்கட்டும்.*

*போரிலே புல்லர்கள் மடிவதை உணர்த்துகின்ற நிமித்தங்களைக் காண்கிறேன்.*

*காற்று சுழன்றடிக்கிறது. பூமி குலுங்குகிறது. மலையின் சிகரங்கள், சிரம் அசைக்கக் காண்கிறேன். மரங்கள் முறிந்து விழுகின்றன. மேகங்கள் செந்நிறம் கொண்டு சீறுவதுபோல உறுமுகின்றன. விழுகின்ற மழைத்துளியில் ரத்தத் துளி தெரிகின்றது. எரிகொள்ளிகள் வானிலிருந்து விழுகின்றன. பறவைகள் பயந்து அலறுகின்றன.*

*இனித் தாமதம் வேண்டாம். கையிற் கிடப்பதை எடுத்து, காலால் எட்டி நடந்து, லங்கை நகரினுள் நுழைந்து, பகை மாளப் போர் செய்து, வெற்றிகொண்டு ஆர்ப்பரிப்போம்.*

*[இதைக் கேட்டவுடன், அனுமன், விஸ்வரூபம் எடுத்துக் கர்ஜிக்கிறான்.]*

## காட்சி-315

*ராவணன் சபை*

*[அனுமனின் கர்ஜனை ராவணன் சபையில் கேட்கிறது.]*

**ராவணன் :** *(திடுக்கிட்டவனாக) என் நாட்டிலே, எவன் இப்படி இடிக்குரலில் கர்ஜிப்பது?*

*மேகம் முழங்க அஞ்சும் என் லங்கையிலே, பகைவனின் முழக்கமா?*

*எங்கே ஒற்றன்?*

*[ஒற்றன் பதறியபடி ஓடி வந்து வணங்குகிறான்.]*

**ஒற்றன் :** *ஒற்று அறியப் போனேன். பகைவர், நம் நாட்டின் உட்புகுந்து விட்டதைக் கண்டேன்! சேதி சொல்லத்தான், காற்றாகி வருகிறேன்! மானிடர் இருவர் கடலில் அணை கட்டி, நம் நகர் வந்து விட்டனர்! வெள்ளம் போன்ற வானர சேனையோடு, நம் வியன்நகர் லங்கையை முற்றுகையிட்டு விட்டனர்! தங்களைக் காணக் கூசுகின்ற கதிரவனும், இன்று அச்சம் நீங்கியவனாக, இந்தத் தொல்நகரிலே தோற்றம் செய்து விட்டான்!*

**மாலியவான் :** *(எழுந்து நின்றபடி) ராவணா! இந்த மாலியவான், உன் பாட்டன். உனக்குப் பழுது வராதிருக்க, நான் சில சொல் பகர்கின்றேன்.*

*படையோடு வந்திருப்பவன், தசரதன் சிறுவனல்ல! அவன் ஈசற்கு ஈசன்!*

*அவன் இளவல் லட்சுமணனோ, தூயோன் திருமாலின் அணையான ஆதிசேஷனே என்று கூறுகிறார்கள்.*

*இங்கு தூதாக வந்த அனுமனோ, காலனைப் போன்றவன்! காற்றுக் கடவுளுக்கு மைந்தன்!*

*இப்பிறவிக்குப் பின்பு, அந்த அனுமனே, நான்முகப் பிரம்மன் ஆவான்!*

*அப்பதம் அனுமனுக்கு ஈந்த அண்ணல் ராமன், அரக்கரை வேர் அறுப்பதற்காக, இப்பதி எய்தியிருக்கிறான் என்று எல்லோரும் சொல்கிறார்கள்!*

*குரங்காய் வந்திருப்போர், தேவர்களே! இதை நீ தெரிவாய்.*

*நீ சிறையெடுத்திருக்கும் சீதாதேவியை, எளியள் என்று இகழ வேண்டாம்!*

*அவள் தூயவள்!; அமிழ்தோடு தோன்றியவள்!; உலகுக்கு எல்லாம் தாயவள்! - என்று சொல்கிறார்கள்.*

*நீ பெற்றிருக்கும் வரத்தை முறிக்கத் தருமத்தின் தலைவர் தாமே, மானுட வடிவம் கொண்டு வந்திருப்பதாகக் கூறுகிறார்கள்.*

*தீ நிமித்தங்களைத் திசையெங்கும் கண்டோம்!*

*நம் காவல் தெய்வமும், கடி நகரை விட்டகலக் கண்டோம்!*

*நாவிலே பொய் இலாத, ஞானத் தம்பி விபீஷணனும், உன் சீலம் கெட்டு விட்டது என்று விட்டுப் போய்விட்டான்!*

*இதையெல்லாம் நான் உணர்ந்து, நம் குலம் காக்கச் சில பல சொன்னேன்.*

*சீதாதேவியை விடுதி ஆயின், தீரும் இத்தீமை!*

**ராவணன் :** *பாட்டா! உன் அறிவு பட்டு விட்டதா? பேதை மானிடரோடு, குரங்கல்ல, பிற விலங்குகளும் சேரட்டும்! போரிலே என்னை வெல்ல முடியுமா?*

*தள்ளாத வயதானதால், இழிவான எண்ணம் வந்து விட்டதா?*

*ஆலம் விழுங்கிய சிவனே குரங்காய் வந்தாலும், என் அம்புக்கு அஞ்சி அலறி ஓடுவான்!*

*அந்தச் சக்கரக் கையான் சமருக்கு வந்தாலும், என் வில் அம்பு கண்டு வெருவி ஓடுவான்!*

*தேவர்கள் குரங்குகளாய் வந்ததாகக் கூறினாய்.*

*வஜ்ராயுதத்திற்கு அஞ்சாத நான், இதுகளின் வாலுக்கு அஞ்சி விடுவேனா?*

*போர், அரக்கருக்குப் பொழுது போக்கு! பகைவர், நாம் பந்தாடும் காய்கள்!*

*உயிர் இழக்க, லங்கைக்கு வந்தவர்களின் சிரம் அறுப்போம்! குருதி குடிப்போம்!*

*நம்படை புறப்படட்டும்!*

*பகை நுழையாத லங்கை மண்ணிலே, பாதகர்கள் நுழைந்து விட்டார்களா?*

*அவர்களைப் பிழையாது கொன்று குவிக்காவிட்டால், நம் குலத்திற்குப் பழி வந்து விடும்!*

*போர் முரசு ஒலிக்கட்டும்! ஆண்மக்கள், அணி சேரட்டும்! பதுங்குகின்ற பெண்டு உள்ளம் கொண்டோர், சேலைக்குள் பதுங்கி இருக்கட்டும்!*

*[போர் முரசு ஒலிக்கின்ற சத்தம் கேட்கிறது.]*

## காட்சி-316

*லங்கை வானம்*

[வானிலே தேவர்கள் திரண்டு நின்று, போர்க்களக் காட்சியைப் பார்க்கின்றனர்.]

**ஒரு தேவர் :** *அதோ பாருங்கள்! மலைகளையும் மரங்களையும் வீசி, லங்கையின் அகழியை, வானரப் படைகள் தூர்க்கின்றன.*

*துன்மார்க்கனுக்கு அழிவு காலம் ஆரம்பமாகி விட்டது.*

**மற்றொரு தேவர் :** *மதிலின் உச்சியிலே, வானர வீரர்கள் ஏறி விட்டனர். புகழின் உச்சியில் இருக்கும் ராவணனை உருட்டிவிடச் சென்று விட்டனர்.*

**வேறொரு தேவர் :** *பாருங்கள்! வானர வீரர்கள் எறிந்த பாறாங் கற்களால், வஞ்சக அரக்கர்களின் தலைகள் தகர்கின்றன!*

**பிறிதொரு தேவர் :** *போர்க்களத்தில், தலை இல்லாத அரக்கர் உடல், ஆடுகின்ற கோரத்தைப் பாருங்கள்!*

## காட்சி-317

*மலைப் பாங்கான இடம்*

*இரவு நேரம்*

[ராமர், தன் பிரதானிகளோடு, இரவு நேரத்தில், ஒரு மலைப் பாங்கான இடத்தில் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார்.

அப்பொழுது வானில் உள்ள முழுமதியை, விழி புரட்டாது பார்க்கிறார்.]

**ராமர் :** பால் வண்ணச் சந்திரனிலே, ஒரு கருமைத் திட்டு தெரிகிறதே! அது ஏன் என்று கூறுவீர்களா?

**சுக்ரீவன் :** ஐயனே! இந்தப் பூமியின் நிழல், சந்திரனில் பட்டு, அப்படித் தெரிகிறது.

**வேறொரு வானர வீரன் :** ராகு அடித்த இடம், அப்படிக் கறுத்துப்போய் விட்டது என்று கருதுகிறேன்.

**மற்றொரு வானர வீரன் :** மன்னவா! அந்தக் கறுப்பு, உடம்பின் மறுவே தவிர, வேறு அல்ல.

**பிறிதொரு வானர வீரன் :** பிரம்மா ரதியைப் படைக்கும் பொழுது, நிலவிலிருந்து பிட்டு எடுத்த இடம் அது! அந்த வெற்றிடமே, கருமையாகத் தெரிகிறது.

**ராமர் :** எல்லோரும், உங்கள் எண்ணத்தை, வண்ணமாகச் சொன்னீர்கள்.

ஆனால், நான் நினைப்பது என்னவென்றால், பாற்கடலில் இருந்து விஷத்தோடு பிறந்தவன், இந்தச் சந்திரன்.

உடன் பிறந்த நஞ்சைப் பற்றிய எண்ணம், நெஞ்சில் இருப்பதால், உடம்பின் அந்தப் பகுதி கறுத்துவிட்டது என்று கூறுகிறேன்.

**சுக்ரீவன் :** பொருத்தமான பேச்சு!

**அனுமன் :** அடியேன், ஐயன் புகழாக ஒன்று கூறுகிறேன். அனுமதிக்க வேண்டும்.

**ராமர் :** சொல் அனுமான்!

**அனுமன் :** கார்மேக வண்ணன் நீங்கள்! உங்களைக் காலமெல்லாம் நெஞ்சார அந்த நிலவு நினைப்பதால், அந்த நெஞ்சில் குடியிருக்கும் தங்களால், அதன் அங்கத்தில், நீலம் திட்டாகத் தெரிகிறது!

**எல்லாரும் :** ஆஹா! ஆஹா! அற்புதமான பேச்சு!

**ராமர் :** சொல்லின் செல்வனே! உன் பேச்சைக் கேட்டுச் சொக்கிப் போனேன்!

போரிலே உன் கை வீச்சும், மற்றப் பொழுதிலே, உன் சொல் வீச்சும், என்னைத் திகைக்க வைக்கின்றன!

## காட்சி-318

*போர்க்களம்*

**துன்முகன் :** (அனுமனை நோக்கி) குன்று நிகர் துன்முகன் நான்! குரங்கே! உன் குடல் கிழிக்க வந்திருக்கிறேன்.

**அனுமன் :** வீரத்தைச், செய்யும் போர் சொல்ல வேண்டும்! தின்னும் வாய் சொல்லக் கூடாது!

(தன்னோடு மோத வரும் துன்முகனை, உயரேத் தூக்கித் தரையில் அறைகிறான் அனுமன். துன்முகன் மடிகிறான்.)

**அனுமன் :** துன்முகா! அறம் தவறியதால், உன் ஆற்றல் சிதறி விட்டது. உன் அங்கம் கூறு கூறாக உதிர்ந்து விட்டது.

## காட்சி-319

*ராவணன் அரசவை*

**ராவணன் :** (சீற்றத்தோடு) என்ன! என் படை தோற்றுக் கொண்டிருக்கிறதா?

இப்படியொரு சொல்லை, என் செவி கேட்பதா?

புகை வடிவிலும் பகை நுழையாத லங்கையிலே, அரக்கர் படை அழிந்து மாள்வதா?

கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த என்னைக், கல் எறிந்து போரிடும் வானரப்படை எதிர்த்து நிற்பதா?

நான்கு கால்களும், ஒரு வாலும் உள்ள அற்பப் பிராணிகள் அவை! வித்தை காட்டப் பயன்படும் அந்த

விலங்குகள், என் வியன் நகரில் கொட்டமடிப்பதா? என் மக்களைக் கொன்று குவிப்பதா?

குரங்கோடு வந்த மதிப்பிலா மானிடரை, நான் எதிர்த்துப் போர் செய்வதா? - என்று எண்ணி ஒதுங்கி இருந்தேன்!

இப்பொழுது, என் கையிருப்பைக் காட்ட எழுந்து விட்டேன்!

என் தேர் கண்டாலே, அவர்கள் தேகமெல்லாம் நடுங்கும்!

ஆயிரம் குதிரைகள் கொண்டது அது - குரங்குகள் கொண்டது அல்ல!

அந்தக் குதிரைகள், அதிர்கின்ற குரலையுடையது! என் தேர், வானவர் தேசமெங்கும் திரிந்தது! இந்திரன் என்னிடம் தோற்றபோது, எனக்குக் கப்பமாகத் தந்தது!

அந்தத் தேரோடு போகிறேன். தெளிவு இல்லா மானிடரே! உங்கள் உயிர் குடிக்க வருகிறேன்!

அந்த ராமன் மாண்டால், சீதை, என் அண்மையில் வந்து, என்னை ஆலிங்கனம் செய்து கொள்வாள்!

அந்த வேளை வர, வாளெடுத்து விட்டேன்!

என் லங்கையை எரித்த, அந்த அனுமான் குரங்கு கொல்லப்படும்! அதன் ரத்தத்தால், லங்கையின் வரலாற்றில் படிந்த மாசு துடைக்கப்படும்!

பேய்களே! பிசாசுகளே! பூதங்களே! அணி திரண்டு என்பின்னால் வாருங்கள்! போர்க்களம் போவோம்! இந்த அரக்கர்கோன் காணும் களம், பகைவரின் ரத்தக்குளமாகும்!

## காட்சி-320

*போர்க்களம்*

**அனுமன் :** (ராவணனை நோக்கி) வா, ராவணா, வா! மூன்று உலகை வென்றவனே! நெடுவலியால், இந்திரனின் புகழைக்

கெடுத்தவனே! திசை யானைகளைத் திரித்தவனே! இன்று அழிவதற்காக, என் எதிரே வந்து நிற்கின்றாய்!

**ராவணன் :** ஒரு குரங்கின் பேச்சைக் கேட்டுக் கோபம் கொள்வதில் பொருள் இல்லை என்று பொறுத்திருக்கிறேன்.

**அனுமன் :** போரிடத்தானே வந்தாய்! பூப்பறிக்க வந்தாயா? மலை எடுத்தவனே! என் கையால் குத்தும் ஒரு குத்தை, உன்னால் தாங்க முடியுமா? அதன் பின்னரும், நீ மாளாமல் இருந்தால், என் நெஞ்சிலே, உன் கை ஓயும் வரைக் குத்தி ஆர்ப்பரி! நான் உன்னை எதிர்த்துப் போரிடமாட்டேன்! என்ன சொல்கிறாய்?

என் கை முஷ்டியைச் சந்திக்கும் துணிவு, உன் தட மார்புக்கு இருக்கிறதா?

இருந்தால் இங்கே நில்! இல்லையேல், உன் அந்தப் புரத்திற்கு ஓடிப்போ!

உன் ஆர்ப்பரிப்பை, இனி அங்குதான் அரங்கேற்ற முடியும்!

**ராவணன் :** குரங்கு என்றாலும் குன்றாத வீரத்தோடு பேசி விட்டாய்!

என் எதிர் நின்று, இப்படிப் பேசியவர், நீயின்றிப் பிறர் இலர்!

இதனால், நீ புகழ் பெற்று விட்டாய்! - உண்மை இது!

நீ அறை கூவி அழைத்த பிறகு, அதனை நான் ஏற்காமல் இருந்தால், இழிவு என்னை வந்து சேரும்!

என் அந்தப்புரமே, எனக்கு எதிராகக் கொந்தளிக்கும்!

வானர வீரனே! யானைகளின் தந்தங்களை ஏற்ற என் மார்பில், உன் கோணல் கையின் குத்தையும் ஏற்றுக் கொள்கிறேன்!

இனியவள் தரும் முத்தத்தைவிட, எதிரியின் தாக்குதலே எனக்கு இனிக்கும்!

வா! உன் கை வல்லமையைக் காட்டு! அசையா மலையாக நின்று, அரக்கர்கோன் ஆணவம் கொள்வதில் அர்த்தம் இருக்கிறது என்று இந்த அவனிக்குக் காட்டுகிறேன்!

[அனுமன் ஓங்கி, ராவணன் மார்பிலே குத்துகிறான். ராவணன் அதனால் தளர்ந்து தடுமாறுகிறான்.]

**அனுமன் :** ராவணா! தடுமாற்றத்தால், உன் கண்கள் கண்ணீரைக் கொட்டுகின்றன! உன் தலை நிலையில்லாமல் ஆடுகிறது! உன் மார்பிலே பதிந்திருந்த யானைக் கொம்புகள், உன் முதுகு வழி நீங்கி விட்டன! மேரு மலை போன்ற உன் மேனி, இப்பொழுது மலர்க்கொடி போலத் தள்ளாடுகிறது!

ஆனால், உன் உடல் இன்னும் சாயவில்லை! உன் உயிர் நீங்கவில்லை!

**ராவணன் :** (தலையை உலுக்கிப் புத்துணர்ச்சி பெற்றவனாக) என் உயிர் நீங்காது! விட்டுச் செல்ல இருந்த உயிர், என் உடலை உறுதியாகப் பற்றிக் கொண்டது!

இணையில்லாதவனே! என் வலிமையை அளந்து பார்த்த வானரனே!

உண்மையில் வலிமையுடையவன் நீயே! மற்ற மறவரெலாம், உன்னை நோக்கின் அலிகளே!

பிரம்மன் சாபமும், என்னைப் பிறழச் செய்யாது! ஆனால், உன் குத்து, என்னை நிலைகுலையச் செய்து விட்டது! மரணத்தின் விளிம்புவரை சென்று மீண்டு விட்டேன்!

இப்பொழுது என் முறை. நான் குத்த, நீ பிழைத்து விட்டால், பிழையாத மரணமும், உன்னை எப்பொழுதும் தழுவாது விலகும்!

நீ இன்றுபோல், என்றும் இருப்பவன் ஆவாய்! காதலால் இதைக் கூறவில்லை. மோதலால் கண்ட உண்மையைக் கூறுகிறேன்!

குரங்கு இனக் கூற்றுவனே! என் குத்தை ஏற்க, மார்பை நிமிர்த்திவா!

மானமுள்ள போரை, இந்த மண் காணட்டும்!

**அனுமன் :** (ராவணன் முன்பு போய் நின்றபடி) என் வல்லமையை இல்லையென்றாக்கி, என்னை வென்று விட்டாய், லங்கை வேந்தனே!

*இப்பொழுது உன் கை வல்லமையைக் காட்டு!*

*அது காட்டும் முடிவை, இருவரும் ஏற்போம்.*

*[இப்பொழுது, ராவணன் ஓங்கி, அனுமனின் மார்பில் குத்துகிறான். அனுமனும், அதனால் தளர்ந்து தள்ளாடுகிறான்.]*

**ராவணன் :** *தள்ளாடினாலும், என் குத்தையும், நீ பழுதின்றி ஏற்றுக் கொண்டாய்!*

*நம் இருவரில் வென்றவர், தோற்றவர் எவரும் இலர்!*

*வெற்றி காண, நான் போர்க்களத்தின் வேறு இடம் செல்கிறேன். வெற்றியோடு அரண்மனை திரும்பாவிட்டால், நான் வாசிக்கும் வீணை, அபஸ்வரம் பேசும்!*

*[ராவணன் தன் தேரில் ஏறி அமர, தேர் வேறிடம் நோக்கிச் செல்கிறது.]*

## காட்சி-321

*கயிலை மலை*

**உமையாள் :** *அனுமனிடம் ஏன் இந்தத் தளர்ச்சி? தர்மத்தின் வெற்றிக்கு, இது தடையாக இருக்காதா?*

**சிவனார் :** *ராவண சம்ஹாரம், திருமால் அவதாரத்தால் நிகழ்த்தப்படவேண்டும். என் அம்சத்தால் அல்ல!*

*போர்க்களத்தில், இப்படி வெற்றியும் தோல்வியும் மாறி மாறி வந்து கொண்டிருக்கும்.*

*அந்த ராவணன் எளிதானவனா? எல்லோரையும் ஆட்டி வைக்கும் நவக்கிரகங்களையே, இவன் அலைக்கழிப்பவன்!*

*இரை தேடும் முதலை, இப்பொழுது எங்கு போய் நிற்கிறது பார்!*

*இளவல் லட்சுமணனைச் சமருக்கு அழைக்கிறான் ராவணன். இந்த ராவணன் கையால் குட்டு வாங்காதவர்கள், இந்திரலோகத்தில் எவரும் இல்லை!*

## காட்சி-322

*போர்க்களம்*

[லட்சுமணன் எதிரில் வந்து, ராவணன் நிற்கிறான்.]

**ராவணன் :** *லட்சுமணா! உன் போர் வலிமையைப் பார்த்தேன், என்னால் போற்றாமல் இருக்க முடியவில்லை. உன் வீரம், என்னை வியக்க வைக்கிறது.*

*தண்டகாருண்யத்தில், கரன் படையை அழித்த உன் அண்ணன் கரியோனும், இந்திரனை வானில் வென்ற, என் மகன் இந்திரஜித்தும், வரிசிலை பிடித்து நிற்கும் என்னையும் தவிர, வேறு யார் உனக்கு ஒப்பாவார்கள்?*

*ஆனால், நீ கொல்லப்படும் நாள் இன்று என்பதையும், சிந்தையிற் கொள்வாய்!*

**லட்சுமணன் :** *துறவி வேஷத்தில் வந்து, ஒரு பெண்ணைக் கவர்ந்து சென்ற கோழையே! நீயா வீரம் பேசுகிறாய்! நீ கற்ற வித்தை, உன் உயிரைக் காக்க உதவுகிறதா என்று பார்க்கலாம்!*

**ராவணன் :** *நான் கற்ற வித்தை, இப்பொழுது எனக்குக் கைகொடுக்காது.*

*நீ வில்லினால் வெல்லப்படாய் என்பதைத் தெரிந்து கொண்டேன். ஆனால், நான் பெற்ற வரம், எனக்கு வெற்றியைப் பெற்றுத் தரும்!*

*நான்முகன் எனக்குக் கொடுத்த இந்த வேலால், பிரம்மாஸ்திரத்தால் உன்னை வீழ்த்துகிறேன்!*

*[ராவணன் பிரம்மாஸ்திரத்தை வீச, அது லட்சுமணன் மார்பிற் பாய, லட்சுமணன் மயங்கிக் கீழே சாய்கிறான்.]*

## காட்சி-323

*வானம்*

[வானிலே திரண்டிருக்கும் தேவர்கள், இதைப் பார்த்துப் பதறுகின்றனர்.]

**ரு தேவர் :** *நஞ்சினால் செய்த நெஞ்சினான், இளைய நம்பியை வீழ்த்தி விட்டான்!*

**ன்னொரு தேவர் :** *தர்மத்திற்கு வாழ்வே கிடையாதா? ராவணனின் தடங்கைகள் முன்பு, சக்கரமும் சூலமும் சிக்குண்டு சிதறுமா?*

**ற்றொரு தேவர் :** *பிரம்மாஸ்திரத்தை இவனுக்குக் கொடுத்த பிரம்மன், புத்தியை எவனுக்கோ கொடுத்து விட்டானா?*

**வறொரு தேவர் :** *அதோ, வீழ்ந்து கிடக்கும் லட்சுமணனைத் தூக்கிச் செல்ல முயல்கிறான் தூர்த்தன்!*

*தன் அந்தப்புரத்திலே, தன் பத்தினிகள் பரிகசிக்கப் பதுமையாக நிறுத்தி வைப்பான் பாவி!*

## காட்சி-324

*போர்க்களம்*

[ராவணன் வீழ்ந்து கிடக்கும் லட்சுமணனைத் தூக்க முனைகிறான். அவனால், லட்சுமணன் உடலை அசைக்கக் கூட முடியவில்லை.]

**ாவணன் :** *கயிலை மலையை எடுத்த என்னால், இந்த அற்ப மானிடனைப் புரட்ட முடியவில்லையா?*

*வேதனையான விந்தை இது! இவன் உடல், என் லங்கை நகரத் தெருக்களில் கிடந்து நாற வேண்டும்!*

*அதை, அந்தத் தேவர்கள் பார்த்துப் புலம்ப வேண்டும்! என் மீது கொண்ட அச்சம் விட்டுப்போனால், என் ஆட்சி பட்டுப் போய்விடும்!*

*(மீண்டும் லட்சுமணனைத் தூக்க, ராவணன் முயல்கிறான்.*

*இப்பொழுது அனுமன் அங்கு பாய்ந்து வந்து, ராவணனைப் பிடித்து, அவன் நெஞ்சில் பலமாகக் குத்துகிறான். ராவணன் நிலை தடுமாறித் தள்ளாடியபடி நிற்கிறான். தன் வாயாலும், மூக்காலும் ரத்தம் கக்குகிறான்.)*

*[அனுமன், ஒரு பூச்செண்டைத் தூக்குவதுபோல், லட்சுமணனைத் தூக்கித் தன் தோளில் போட்டுக் கொண்டு, அங்கிருந்து நடக்கிறான்.*

*ராவணன் பெருமூச்சு விட்டபடி, அதைப் பார்க்கிறான்.]*

## காட்சி-325

*கயிலை மலை*

[கயிலை மயிலையில், சிவ கணங்கள், சிவன்முன் கும்பிட்டு நிற்கின்றனர்.]

**ஒரு சிவகணம் :** *சிவாம்சமான அனுமன் வாழ்க! ஆஞ்சநேயன் வாழ்க!*

**வேறொரு சிவகணம் :** *சிவனுக்கு நிகர் வேறு எவன்?*

**மற்றொரு சிவகணம் :** *வரம் பெற்றவன் வரம்பு மீறலாமா? சிவன் சூலத்தின்முன், சீலம் கெட்டவன், சீரழிய வேண்டியதுதான்!*

**பிறிதொரு சிவகணம் :** *ராமனுக்குத் துணை போகும் அந்த அவதாரம், தர்மம் மாளாது என்பதைத் தரணிக்கு நினைவூட்டுகிறது!*

## காட்சி -326

*ராமர் இருக்கும் இடம்*

[லட்சுமணனைத் தூக்கி வருகின்ற அனுமன், அவனை ராமர் முன் கிடத்துகிறான்.

லட்சுமணன் இப்பொழுது மயக்கம் நீங்கி எழுந்து கொள்கிறான்.]

**ராமர் :** *என்ன நடந்தது?*

**அனுமன் :** *ராவணன், அவன் வில்லில், வாளில், வீரத்தில் நம்பிக்கையின்றிப் பிரம்மாஸ்திரத்தால், இளவலைச் சாய்த்துவிட்டான்!*

*இந்த மயக்கம் அதனால் ஏற்பட்டது. மயங்கிக் கிடந்த இளைய நம்பியை, லங்கை நகர்க்குள் எடுத்துச் செல்ல முயன்றான் மூர்க்கன்!*

*நான் அவனைத் தடுத்து, கையும், கால்களும், நயனமும் கமலமே அனைய, பொய் இலாத தங்கள் முன் கொண்டு வந்து ஒப்படைத்தேன்!*

*கதிரவனைக் கண்ட பனி போலத் தங்கள் பார்வை பட்டதும், இளையவரின் மயக்கம் பறந்தது!*

**லட்சுமணன் :** *அண்ணா! இன்று என் கையிலிருந்து, அந்த ராவணன் தப்பித்துவிட்டான்!*

**ராமர் :** *இன்னும் அந்தி சாயவில்லையே! அந்த அரக்கனை, நான் போய்ச் சந்திக்கிறேன்! சீதையைக் கவர்ந்தவனின் சிரம் அறுக்காவிட்டால், என் வில்லும், அம்பும் விறகாக எரிபடவா இருக்கின்றன?*

*(வில் அம்போடு, ராமர் அங்கிருந்து புறப்படுகிறார்.)*

**அனுமன் :** *ஐயனே! தேரில் அந்த அரக்கன் இருக்கத், தரையிலே தாங்கள் நின்று போரிடுவது, வறுமை ஆகாதோ?*

*இதை நான் பார்த்துக் கொண்டிருப்பது, எனக்குச் சிறுமை ஆகாதோ?*

*என் தோளின்மேல் ஏறி அமருங்கள் ஐயனே! என் திண்தோள், அவன் தேருக்கு ஈடாகி, வெறுமையை நீக்கும்!*

[அனுமன் குனிந்துகொள்ள, ராமர், அனுமனின் ஒரு பக்கத் தோளில் அமர்ந்து கொள்கிறார்].

## காட்சி-327

*வானம்*

[இதைக் காணுகின்ற வானில் உள்ள தேவர்கள் குதித்துக் கூத்தாடுகின்றனர்]

**தேவர்கள் :** *ஜெய்ராம்! ஜெய் ராம்! ஜெய் ராம்!*

*(இவ்வாறு முழங்குகின்றனர்).*

## காட்சி-328

*பாற்கடல்*

**கருடன் :** *(திருமகளைப் பார்த்து) தாயே! என் தெய்வத்தை, நான் சுமக்கின்ற உரிமையை, அந்த அனுமான் பறித்துக் கொள்வதா?*

*கூப்பிட்டால் நான் ஓடோடி அங்கு செல்லமாட்டேனா? சம்ஹார சமயத்திலே, என்னைப் பகிஷ்காரம் செய்வது முறையோ?*

*இவ்வளவு நாள் திருவடியாய் இருந்தவன், இந்த ஒப்பற்ற வேளையிலே, ஐயன் தீண்டாதவனாகக் கிடக்கலாமா? தர்மத்தைக் காக்கப் போனவர், எனக்கு அதர்மம் செய்யலாமா?*

**திருமகள் :** *கருடா! அந்த அனுமான் சிவாம்சம்! அதை, மனதில் இருந்து அகற்றிவிடாதே. பகவானைச் சுமக்கின்ற பெருமையிலே, நீதான் பெரிய திருவடி! அந்த அனுமான் சிறிய திருவடிதான்!*

*இப்படித்தான் உலகம் கூறி, உன்னை உயர்வுபடுத்தும்.*

*நாடகம் ஆடிக்கொண்டிருக்கிறார் பகவான். அதிலும் பாற்கடல் வாசிகளே பங்கேற்கவேண்டும் என்று கட்டாயப் படுத்தலாமா?*

**ஆதிசேஷன் :** *நீங்கள் சீதையாகப் பிறப்பெடுத்து விட்டீர்கள்! அதனால், உங்கள் மனதில் எந்தக் குறையும் இல்லை! நாளெல்லாம் பகவான் மேனியைத் தாங்குகின்ற நான்...*

**திருமகள் :** *ஆதிசேஷா! நீதான் இளவல் லட்சுமணனாக அங்கு இருக்கிறாயே!*

*இங்கு பாற்கடலிலே நீ உறங்கி வழிந்தாலும், அங்கு உறங்கா வில்லியாக நின்று, பகவானுக்குச் சேவை செய்கிறாயே!*

*உன் பேச்சிலே பொருள் இல்லை; அனுமான் மேல் பொறாமைதான் இருக்கிறது!*

**பாற்கடல் :** *திருமகளைப் பெற்றதே, இந்தப் பாற்கடலாகிய நான்தான்! என் பங்கும் ராவண சம்ஹாரத்தில் இருந்தால், எனக்கு மகிழ்ச்சியாக இருக்காதா?*

*ஒரு வானரன் பெற்ற சிறப்பு, எனக்கு இல்லையே என்ற வாட்டம் எனக்குண்டு!*

**திருமகள் :** *கார்மேகம், அதிகாலை நேரப் பனித் துளியைப் பார்த்துப் பொருமலாமா?*

*பகவானின் திவ்ய தேசமாகப் பாற்கடல் இருக்கும் பொழுது, பகவான் பரதேசம் போகும்பொழுது, உடன் போகவில்லையே என்று துயர் உறலாமா?*

*அதோ, ராம ராவணப் போர் ஆரம்பித்துவிட்டது! வருத்தத்தைப் புறம் தள்ளிவிட்டுக் காவியமாய் மலரப் போகும் அந்தக் காட்சியைக் காணுங்கள்!*

## காட்சி-329

*வானம்*

[வானிலே, தேவர்கள் மகிழ்ச்சியோடு குதித்து, ஆரவாரம் செய்கின்றனர்.

'ஜெய்ராம்! ஜெய்ராம்!' என்று கூவிக் கூத்தாடுகின்றனர்].

**ஒரு தேவர் :** அரக்கர்கள் தேர் இழந்தனர். வில் இழந்தனர். கார் போன்ற யானையை இழந்தனர். குதிரையின் கால்களை இழந்தனர். சூரத்தனத்தை இழந்தனர். சூழ்ந்திருக்கும் கவசத்தை இழந்தனர். துப்பிழந்தனர். தலை இழந்து, உயிர் இழந்தனர்.

**வேறொரு தேவர் :** ராம பாணங்களால், அந்த ராவணன் நிற்கும் நிலையைப் பாருங்கள்!

தன் வில் அறுபட்டு, வெறுங்கையோடு நிற்கிறான் அந்த வீணன்!

தேர் துண்டு துண்டாக, மண்ணிலே தேம்பி நிற்கிறான் அந்தத் தீயோன்!

அவன் கொற்ற வெண்குடையும், வீணைக் கொடியும் அறுக்கப்பட, அயர்வோடு நிற்கிறான், அந்த அரக்கன்!

அவன் கவசம் உடைக்கப்படக் கலக்கத்தோடு நிற்கிறான், அந்தக் கயவன்!

தன் முன்னிலையில் எமன் ஆடிக்கொண்டிருப்பதைப் பார்த்து, மனம் கொதித்துப் போய் நிற்கிறான், அந்தக் கொடியவன்!

தன் மணிமுடி, கடலில் வீழ்த்தப்பட்டது கண்டு, மனம் உடைந்து போய் நிற்கிறான், அநீதியை ஆசனமாக்கி அமர்ந்திருக்கும் அந்த மன்னன்!

இதுவரை தோல்வி காணாதவன், இன்று தோல்வியை வாங்கித் தோள்களில் போட்டுக்கொண்டான்!

ராம பாணங்களால், ராவணனின் வீரம், பொய் ஆயிற்று! பொல்லாதவன் கதை இப்படித்தான் முடியும் என்பது மெய்யாயிற்று!

அதோ, தன் கால் விரலால், நிலத்தைக் கீறியபடி, நாணி நிற்கிறான், அந்த நாயோன்!

இப்பொழுது, நம் தர்ம நாயகர், அவன் அருகில் சென்று, ஏதோ சொல்கிறார்...

## காட்சி-330

*போர்க்களம்*

**ராமர் :** *(ராவணனை நோக்கி) ராவணா! அறம் தவறியோர் செய்யும் போர், அவர்கள் அழிவில்தான் முடியும்! இதைத் தெரிந்துகொள்.*

*வெறுங்கையோடு நிற்கிறாய்! இப்பொழுது உன்னைக் கொல்வது, எனக்கு வீரமாகாது!*

*ஊருக்குள் போய் ஓய்வெடுத்து, இருக்கின்ற ஆயுதங்களையெல்லாம் எடுத்து வா! உன் வல்லமையில் உனக்கு இன்னும் நம்பிக்கை இருந்தால்!*

*சிறையெடுத்த என் சீதையை விடுவித்து, உன் தம்பி விபீஷணனை லங்கை மன்னன் ஆக்கி, அவனுக்கு நீ ஏவல் செய்துகொண்டிருந்தால், உன் தலை தப்பும்! உன் ஆயுள் நீளும்!*

*இல்லையென்றால், போரிட்டு மடிந்து, அதனால் பெறும் பொன்றாப் புகழை, உன் கதையோடு பொதிந்து கொள்!*

*மூவுலகும் ஆள்பவனே! மூல தர்மத்தை மறந்ததால், புயலில் புழுதியென, உன் படை சிதறியதைப் பார்த்தாய்! உன் வலிமை ஒடுங்கியதைக் கண்டாய்!*

*களைப்பு காரணமாக, இந்த இழப்பு ஏற்பட்டதாக நீ நினைக்கலாம்!*

*ஆதலால், இன்று போய், நாளை வா, போருக்கு! நன்றாக ஓய்வெடுத்து வா!*

*கருணையால், உன்னைக் கொல்லாது அனுப்பி வைக்கிறேன்!*

*மானிடன், மானிடன் என்று எள்ளி நகையாடுவாயே, அந்த மானுடம் இப்பொழுது வென்றுவிட்டது! தன் ஈர நெஞ்சால்! இனிய பண்பால்!*

# காட்சி-331

*வெட்டவெளி*

[ராவணன் கவிழ்ந்த தலையோடு, வெறுங்கையோடு, போர்க் களத்திலிருந்து, நகரை நோக்கி நடக்கின்றான்.

இதைக் கண்டு அனுமன், கர்ணம் போட்டுச் சந்தோஷத்தில் ஆரவாரிக்கிறான்.]

**அனுமன் :** *ராவணா! வாரணம் பொருத உன் மார்பு எங்கே? வரையினை எடுத்த உன் தோள் எங்கே?*

*நாரத முனிவர்க்கு ஏற்ப நயம்பட உரைத்த, உன் நாவு எங்கே? உன் தார் அணி மணிமகுடம், தரையிலே புரண்டது என்ன? சங்கரன் கொடுத்த வாளையும், வீரத்தையும் களத்திலே போட்டுவிட்டு, வெறுங்கையோடு, மீண்டு போகிறாயே!*

*திசையெல்லாம் வெற்றி கொண்ட நீ, இப்பொழுது எந்தத் திசையையும் பார்க்காது, பூமி என்னும் நங்கை தன்னையே பார்த்துப் போகின்றாய்!*

*உன் மந்திரச் சுற்றத்தாரும், மனைவியர் சுற்றத்தாரும், தந்திரச் சுற்றத்தாரும், தன் கிளைச் சுற்றத்தாரும், உன்னைப் பார்த்து, எந்திரம் போல் திகைத்து நிற்க, நீ அரண்மனை சேரப் போகிறாய்!*

*நெடு வயிரத் தோளா! உன் தோல்வியைப் பார்த்து, வான் நகும்; மண்ணும் எல்லாம் நகும்; நீ நகு பகைஞர் எல்லாம் நகுவர் என்று அதற்கு நாணாய்!*

*வேல் நகு நெடுங்கண், செவ்வாய், மெல்லியல், மிதிலை வந்த என் ஜானகித் தாய் நகுவள் என்றே, நாணத்தாற் கலங்குகிறாய்!*

## காட்சி-332

*ராவணன் அரண்மனை*

[ராவணன் முன்னிலையில், பல அரக்க வீரர்கள் கைகட்டி நின்று கொண்டிருக்கின்றனர்]

***ராவணன் :*** *என் தவமும், நான் பெற்ற வரங்களும் இந்தப் போரிலே, எனக்குக் கைகொடுக்கவில்லை! என்னைக் கைபிசைந்து நிற்க வைத்துவிட்டன!*

*ஒரு மானிடனால், நான் மானமிழந்தேன்! அவனால், என் உயிர் இழக்கும் தருணமும் வந்துவிடும் என்று அஞ்சுகிறேன்!*

*தேவ, தானவ, கந்தர்வ, யட்ச, பன்னக, அரக்கர்களால், எனக்கு மரணம் வரக்கூடாது என்று வரம் பெற்றிருந்தேன்! மனிதர்களை எளிதாக எண்ணி, அவர்களையும் சேர்த்துக் கேட்காமல், ஏமாந்துவிட்டேன்!*

*அயோத்தி மன்னன் அனரண்யன் சாபமொழி பலித்து விடுமோ என்று பதறுகிறேன்!*

*என்னை நோக்கி, வெந்தீயாகச் சொற்களைச் சொன்ன வேதவதிதான், இந்தச் சீதையோ என்று ஐயுறுகிறேன்!*

*நந்தியும், ரம்பையும் வேறு என்னைச் சபித்திருக் கிறார்கள்!*

*இந்தச் சாபமொழிகள், என்னைச் சாய்த்துவிடுமா?*

*முடியாது! கூடாது!*

*இறுதியில் வெல்லப் போவது இந்த ராவணனே! இது உறுதி!*

*மறதி படைத்த என் பாட்டன் மாலியவான் போன்றோர்க்கு, மண்டையில் அடித்து, இதைச் சொல்லுங்கள்!*

*தர்மம் வெல்லுமாம்! நான் நடக்கின்ற தடமே தர்மம்! நான் பேசுகின்ற மொழியே, உபவேதம்! நான் கும்பிடும் மலையே, கயிலை!*

*என் உடன் பிறந்த கும்பகர்ணன் இருக்க, நான் ஏன் மனம் குமையவேண்டும்?*

*தேவர்களைத் தலைவிரிகோலமாக ஓடவிட்டுச் சிரித்தவன் அவன்! என் சிந்தைக்கு இனியவன்!*

*உறங்குகின்ற என் தம்பியை எழுப்பி, என்னிடத்திலே அனுப்புங்கள்!*

*விற்பிடித்த அந்த மானிடரைக் காலதூதர் கையிலே உறங்க வைத்துவிடுவான்!*

*அவர்கள் உயிர் பறித்து, எனக்கு வெற்றியைப் பறித்து வருவான்!*

*செல்லுங்கள்!*

## காட்சி-333

*ராவணன் அரண்மனை*

**கும்பகர்ணன் :** *(ராவணன் முன் நின்று பேசுகிறான்). அண்ணா! ஆனதோ வெஞ்சமர்? அலகில் கற்புடை ஜானகி துயர் இன்னும் தவிர்ந்தது இல்லையோ?*

*வானமும் வையமும் வளர்ந்த நம் வான்புகழ் போனதோ? புகுந்ததோ நாம் பொன்றி மடியும் காலமே!*

*உறக்கத்தில் இருந்ததால், உண்மையை அறியாமற் போனேனே!*

*கிளர்பொன் சீதையைச் சுட்டிப் போர் கிட்டிவிட்டதா? திட்டியின் விடம் அன்ன கற்பின் செல்வியை, இன்னும் விட்டிலையோ? இது விதியின் வன்மை அண்ணா!*

*அண்ணா! புலஸ்தியன் வழிமுதல் வந்த பொய் அறுகுலத்து இயல்பு, உன்னால் அழியவேண்டுமா?*

*அந்த ராமலட்சுமணர், தஞ்சமும், தருமமும், தகவுமே, அவர் நெஞ்சமும், கருமமும், உரையுமாக இருக்கிறார்கள்!*

நாமோ, வஞ்சமும், பாவமும், பொய்யும் கொண்டிருக் கிறோம்! நாம் உஞ்சுவோமா?

கருங்கடலைக் கடந்து வந்த காற்றான அனுமன், அவர்கள் பக்கம் இருக்கிறான்!

நீயோ, இன்னும் சீதையை விடுவிக்கவில்லை!

வாலியை வதம் செய்த ராம பாணம், நம்மைப் பதம் பார்க்காது விடுமா?

தெய்வத் தையலை விட்டு, அந்த ராமனின் சரணம் தாழ்ந்து, நின் ஐயறு தம்பி விபீஷணனோடு அளவளாவுதல், உய்யும் திறம்! இல்லையென்றால், நீ செய்யும் திறம் ஒன்று உண்டு!

பந்தி பந்தியாய் படையை அனுப்பி, அவை சிந்துதல் கண்டு, தேம்பி இருத்தல், மந்திரம் அன்று! நம் வலியெல்லாம் ஒன்று சேர்த்து உந்துதலே, நல்ல கருமம்!

**வணன் :** (கோபமாக) எனக்கு உபதேசம் செய்ய, உன்னை நான் இங்கு அழைக்கவில்லை!

அறிவுடை அமைச்சன் என்று நீ உன்னை எண்ணிக் கொள்ளவேண்டாம்!

அந்தச் சிறுதொழில் மனிதரைக் கொன்றுவரச் சொன்னால், நீ அஞ்சி வெருவிப் புலம்புகிறாய்!

இதுதான் உன் வீரமா?

உனக்குக் கள் உண்ண வேண்டும்! எலும்பைக் கடிக்கவேண்டும்! நாளெல்லாம் உறங்கவேண்டும்! இதுவே வாழ்க்கை என்று எண்ணிக் கொண்டாய்!

அந்த மானிடர் இருவரை வணங்கி, மற்றும் அக்கூனுடைக் குரங்கையும் கும்பிட்டு, உய்யும் வாழ்வு, உன் தம்பி விபீஷணனுக்கும், உனக்குமே பொருந்தும்!

எனக்கு அது ஏற்காது! நீ எழுந்து போ! உறங்கப் போ!

வீரர்களே! கருக என் தேர்ப்படை!

**கும்பகர்ணன் :** *(கனிவோடு, கைகுவித்து வணங்கியபடி) அண்ணா!*

*என் வார்த்தைகளைப் பொறுத்துக் கொள்ளுங்கள்! பொங்கிய எண்ணங்களை வழியவிட்டேன்! அது பொருந்தாத பேச்சு என்றால், புறம் தள்ளிவிடு! உனக்காக உயிர்விடக் கடமைப்பட்டிருக்கிறேன்!*

*வென்று இங்கு வருவேன் என்று என்னால் உரைக்க முடியவில்லை!*

*விதி, என் பிடரியைப் பிடித்துச் சாவை நோக்கி, உந்தித் தள்ளுகிறது!*

*நான் செத்த பிறகாவது, அந்தச் சீதாதேவியை விட்டு விடுவது, நாயகா, உனக்கு நல்லது!*

*என்னை அவர்கள் வென்றுளர் எனில், லங்கைக் காவல, உன்னையும் வென்று அவர்கள் உயருதல் உண்மை!*

*இந்திரஜித்தை நம்பியிராதே! ராமன் தம்பி கை மந்திர அம்பினால், அவன் மடிதல் கூடும்!*

*சொல்லவேண்டியன சொல்லிவிட்டேன்! என் சொற் பொறுத்து, எனக்கு விடை கொடு! போர்க்களத்தில் நம் குலக் குருதியைக் கொட்டி, இறுதிவரை போராடுவேன்!*

**ராவணன் :** *தன்புலம் அறியா யானையைப் போல், என் தம்பியும், தன்னை, தன் ஆற்றலை அறியாமற் பேசிவிட்டான்!*

*கும்பகர்ணா! பேசியதெல்லாம் பிழையாய் இருந்தாலும், போருக்குப் புறப்பட்டுவிட்ட உன் வீரம், போற்றுதலுக்கு உரியது!*

*பெரும் படையோடு செல்! இதுவரைப் பேசாத வெற்றியைப் பெற்று வா!*

*[கும்பகர்ணன், அண்ணனை வணங்கிவிட்டு, அங்கிருந்து செல்கிறான்]*

# காட்சி-334

*போர்க்களம்*

[போர்க்களத்தில், கையில் சூலமோடு, மலை என நடந்து வருகிறான் கும்பகர்ணன். ராமர், அவனை வியப்போடு பார்க்கிறார்].

**விபீஷணன் :** *ஐயனே! மலை என நடந்து வரும் இவன், லங்கை வேந்தன் பின்னவன்; எனக்கு மூத்தவன்!*

*காலன் அன்ன கும்பகர்ணன் இவன்!*

*கூரியசூலத்தான்; இவன் துயில் நீங்கி எழுந்துவிட்டால், இமையவர்க்குக் கூற்றாவான்!*

*இவன் தாழ்வு இலா ராவணன் தம்பி! நாள், மாதம் கடந்து உறங்கும் இயல்பினான்!*

*இந்திரனின் ஐராவதத்தை, இந்திரன் தொங்கிக் கொண்டிருக்கச் சுழற்றி வீசியவன்!*

*இவன், ஊன் உயர்ந்த உரத்தினான்!*

*மேல் நிமிர்ந்த மிடுக்கினான்! தான் உயர்ந்த தவத்தினால், வான் உயர்ந்த வரத்தினான்!*

*இவன் இவ்வளவு நாளும் உறங்கிக் கொண்டிருந்ததால், இந்த உலகம் உய்ந்தது!*

*ஆலம் உண்ட சிவன் அளித்த சூலம் உண்டு இவன் கையிலே! அது தேவர்களின் வாழ்வை உண்டது!*

*ஆனால், இவன் நன்னெறி பேசுபவன்! தர்மம் அல்ல, தங்கள் மனையாளைச் சிறையெடுத்தது என்று ராவணர்க்கு, எத்தனையோ சொல்லி எடுத்து இயம்பியிருக்கிறான்!*

*மறுத்த ராவணன்மேல் வருத்தமடைந்து, தான் மாள்வது மெய் என்று வெறுத்து, இங்கு போர்க்களம் வந்து நிற்கிறான்!*

## காட்சி-335

*வானம்*

[வானிலை திரண்டிருக்கும் தேவர்கள், போர்க்களத்தில் நிற்கும் கும்பகர்ணனை அச்சத்தோடு பார்க்கின்றனர்].

**ஒரு தேவர் :** *கும்பகர்ணன் வந்து விட்டான்! நம் குலை நடுங்க வந்துவிட்டான்!*

**இன்னொரு தேவர் :** *அந்தக் கொடுமையைப் பாருங்கள்! வானர வீரர்களைக் குன்றின்மீது எறிகிறான்! தின்று தின்று உமிழுகிறான்! சிரங்களைத் திருகித் தேய்க்கிறான்! விண்ணிலே அவர்களை வீசுகிறான்! அவர்கள் உடம்பினைப் பிசைந்து, மேல் எலாம் பூசிக் கொள்கிறான்! கடலிலே வானரங்களை அமுக்குகிறான்! மண்ணிலே, அவர்களை அடிக்கிறான்! நெருப்பிலே வீசுகிறான்! தேரோடு மோது கிறான்! எட்டுத் திசையிலும் எறிகிறான்! மரத்தோடு, மலை யோடு புடைத்து, அவர்கள் மண்டையைச் சிதற அடிக்கிறான்!*

*(இப்பொழுது கும்பகர்ணன், வீரக் கர்ஜனை செய்யத் தேவர்கள், அஞ்சி நடுங்கி, அங்கிருந்து ஓட்டமெடுக் கின்றனர்).*

## காட்சி-336

*போர்க்களம்*

[ஆவேசமாகப் போரிடும் கும்பகர்ணன் முன், அனுமன் தோன்றுகிறான்].

**அனுமன் :** *கும்பகர்ணா! உறக்கம் கலைந்து வந்திருக்கும் கூற்றமே!*

*வானர வீரர்களை, வாரி விழுங்கும் சாவின் சரீரமே! உனக்கு ஒரு சோதனை வைக்கிறேன். அதைக் கடந்து விட்டால், நீ உன் மீசையை முறுக்கிக் கொள்ளலாம்!*

**கும்பகர்ணன் :** சொல்லு அனுமனே! நான் உறங்கியபோது, நீ லங்கை நகரிலே நுழைந்துவிட்டாய்! அதனால் தப்பித்து விட்டாய்!

விழித்திருக்கும் என் முன்பு, நீ பிழைத்துப் போவாய் என்ற நம்பிக்கை, உனக்கு இருக்கிறதா?

**அனுமன் :** சொல்ல வந்ததைச் சொல்லி விடுகிறேன். நான் எறியும் மலையை, நீ தாங்கிக் கொண்டால், உன் வீரத்தை நான் மதிக்கிறேன். உன்னோடு போரிடாமல், விலகிப் போவேன்.

**கும்பகர்ணன் :** இவ்வளவுதானா? நீ எறியும் மலையால், நான் தளர்ந்து விழுந்தால், உனக்குத் தோற்றவன் ஆவேன்! இதற்கு நான் ஒப்புகிறேன்.

நீ கற்ற வித்தையைக் காட்டு! என் கையிருப்பை, நான் காட்டுகிறேன்.

வானும் மண்ணும், இந்த வீர விளையாட்டை, விழியாரப் பார்க்கட்டும்!

[பெரிய மலையைத் தூக்கி அனுமன், கும்ப கர்ணன்மேல் எறிய, அதைத் தடுக்காமல், தன் மார்பில் தாங்கிக் கொள்கிறான் கும்பகர்ணன். அந்த மலை, இப்பொழுது சிதறி, உதிருகிறது].

**அனுமன் :** கும்பகர்ணா! உன் வலிமைக்கு என் வணக்கம். குலமலைகளும் உன் ஆற்றலால் குலைந்துவிடும். சுந்தரத் தோளன், என் ராமபிரானின் அம்பு மாத்திரமே, உன்னைச் சமரிலே சாய்க்க முடியும்.

சாயாத கொடுமையே! உன்னை விட்டு விலகிப் போகிறேன்.

[அனுமன் அங்கிருந்து செல்கிறான். கும்பகர்ணன், இதைப் பார்த்து நகைக்கிறான்].

## காட்சி-337

*கயிலை மலை*

**ஒரு தேவர் :** *(சிவனாரை நோக்கி) ஈசா!*

*தர்மத்தின் நேசா! அந்தக் கும்பகர்ணனை வதைக்காமல், ஒதுங்கி விட்டாயே!*

*அனுமனாகப் பிறப்பெடுத்து, வீரம் அறியாதவன் போல், விலகிப் போவதா?*

*திரிபுரம் எரித்தவனே! எங்கள் இந்திரபுரியை எரிக்கும் எமனாம் கும்பகர்ணன், விழித்தெழுந்து வெகுண்டு நிற்கிறானே!*

*நீ கொடுத்த சூலம் அதுவென்று, அதன் அழிவை அனுமதிக்கிறாயா?*

*அறம் தவறுவோர் ஆர்ப்பரித்து வாழ்ந்தால், வேதங்கள் மறைந்து விடாதா? என் நாதன் நாமம் நமச்சிவாயம் என்று சொல்லும் மந்திரத்திற்கு அந்தம் வந்து விடாதா?*

**சிவன் :** *தேவர்களே! நடப்பவையெல்லாம் தீர்மானிக்கப் பட்டவை! நடந்த சம்பவங்களால், பிறப்பெடுத்தவை!*

*இந்த கும்பகர்ணன் பிறப்பை நோக்கினால், எனை மறுத்து நீங்கள் பேசமாட்டீர்கள்.*

*முன்னர், சனகாதி முனிவர்களால் சபிக்கப்பட்ட துவார பாலகர்கள், இப்பொழுது, ராவண கும்பகர்ணனாகப் பிறந்திருக்கிறார்கள்!*

*அந்த வாசு தேவனால் சம்ஹரிக்கப்பட்டு, இந்த அசுரப் பிறப்பை ஒழிக்கத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள்!*

*சம்ஹாரம், அவர்களைப் பொறுத்த மட்டில், அவர்களுக்குச் செய்யும் உபகாரம்!*

*அதுவும் திருமால் அவதாரத்தால் நிகழ வேண்டும் என்பது தீர்மானிக்கப்பட்ட ஒன்று!*

*தொண்டு செய்யப் போயிருக்கிறேன் நான்! வால் தலையாக முடியாது!*

## காட்சி-338

*போர்க்களம்*

[கும்பகர்ணனின் வாளேந்திய வலக்கரம், ராமபாணத்தால் துண்டிக்கப்பட்டுக் கீழே விழுகிறது.

இது கண்டு, அனுமன் ஆர்ப்பரிக்கிறான்.]

**அனுமன் :** *தீ வினை துன்புற்றது! நல்வினை இன்புற்று எழுந்தது!*

*[கும்பகர்ணனின் மற்றொரு கையும், இப்பொழுது ராமனின் வில் அம்பால் துண்டிக்கப்படுகிறது.]*

**அனுமன் :** *லங்கை நகர்க்கும், ராவணனுக்கும் இனிப் பாதுகாப்பு இல்லை!*

*[கும்பகர்ணனின் வலக்கால் தெறித்து விழுகிறது.]*

**அனுமன் :** *ஐம்பூதங்களும், பூதாகரமாக உருவெடுத்து வந்த அரக்கன், தன் வலக்காலை இழந்தான்! வலிமை இழந்தான்!*

*[கும்பகர்ணனின் மற்றொரு காலும் துண்டிக்கப்படுகிறது.]*

**அனுமன் :** *சூறைக்காற்றெனச் சுழன்று போரிட்டவன், இன்னொரு காலையும் இழந்து, பூமிக்குப் பெரும் பாரமாக விழுந்து கிடக்கிறான்!*

*இது கண்டு, அறத்தோடு வேதங்கள் கூத்தாடுகின்றன!*

*[கும்பகர்ணனின் தலை கொய்யப்பட்டுக் கடலிற் போய் விழுகிறது.*

*அனுமன், 'ஜெய் ராம்! ஜெய் ராம்!' என்று குதித்துக் கூத்தாடுகிறான்.]*

## காட்சி-339

*வானம்*

[வானிலே, தேவர்களும், தேவ மகளிரும் திரண்டு வந்து, 'ஜெய் ராம்! ஜெய்ராம்!' என்று இசையோடு பாடி ஆடுகின்றனர்.]

## காட்சி-340

*ராவணன் அரசவை*

**ராவணன் :** *(அதிர்ச்சியோடு)*

*என் தம்பி கும்பகர்ணன் மாண்டு விட்டானா? வானவர் என்னும் தாமரைக் காட்டைத் துவம்சம் செய்த அந்த யானை வீழ்ந்துவிட்டதா?*

*பிரம்மனின் பேரனுக்கு மகனாகப் பிறந்தவன், பகையால் மரணம் அடைந்து விட்டானா?*

*கும்பகர்ணா! உன்னைப் பறிகொடுத்துவிட்டு, நான் உயிர் பேணி நிற்கின்றேன்!*

*உன் பெருமை என்ன, புகழ் என்ன!*

*வடக்கே உள்ள மேருமலை, நீ நீராடும் காலத்து, உன் கால் தேய்க்க உதவும்!*

*ஓர் அற்ப மானிடனின் வில் ஒன்று, உன்னை வீழ்த்தி விட்டதா?*

*இந்தச் சொல் அன்றோ, என்னைச் சுட்டெரிக்கின்றது!*

*சிவனின் சூலமும், மாலின் சக்கரமும், இந்திரனின் வச்சிரமும், உன்னைத் தீண்டியபோது, நீ மீண்டுவிட்டாய்!*

*கடல் கடந்தவன், ஒரு சிறு குழியில் விழுந்து விட்டதைப் போல, ஒரு மானிடனின் அம்பால், மெய் சிதற, உயிரைச் சிந்தி விட்டாயே!*

*என் தம்பி மாளவும், என் நகரம் பகைவர் வசப்படவும், என் மாமன் மாரீசன் மரணமடையவும், என் பின் பிறந்த சூர்ப்பணகை மூக்கு அறுபடவும், நான் வாழ்கின்றேன்! - ஒருத்தியின் மார்பின் மீது கொண்ட ஏக்கத்தால்!*

*கும்பகர்ணனை இழந்தும், குன்றுபோல் குலையாமல் இருக்கின்றேன்!*

*இந்தக் கொடுமையைக் காணத்தான், என் வாழ்நாள் நீண்டு இருக்கிறதா?*

*அந்த ராமனைத்தான், அவன் தம்பியைத்தான், அவன் தானைத் தலைவனைத்தான், அந்த சுக்ரீவனைத்தான், வாலி மைந்தனைத்தான், அனுமனைத்தான், ஜாம்பவானைத்தான், நீ கொன்றாய் என்ற சொல்லை, நான் கேட்கவில்லையே!*

*நீ கொல்லப்பட்டாய் என்ற கொடுஞ்சொல் அன்றோ, என் நெஞ்சில் நஞ்சினைப் பாய்ச்சுகிறது!*

*தேவமகளிர் அடி வருடப்பூம்பள்ளியில் படுத்து உறங்குவாய்!*

*இப்பொழுது பேய்கள் கூத்தாடப் போர்க்களப் புழுதியிலே உறங்குகின்றாயா?*

*நீ செந்தேன் பருகி, திசைதோறும் வாழ்த்த வாழும் போது, மகிழ்ந்தேன்!*

*மதகளிறே! இன்று நீ தனிவழி போக அனுமதியேன்!*

*உன்னைத் தொடர வருகின்றேன்!*

**ஓர் அரக்க வீரன் :** *மன்னவா! தாங்கள் வருத்தத்தை நீக்கி, அர்த்தமுள்ள கட்டளையை எங்களுக்கு இடுங்கள்.*

*கதிரவன் குடித்துக் கடல் வற்றாது! நம் சேனை மாளாது! வீழாது! வெற்றியைத் தராமற் போகாது!*

**ராவணன் :** *பகையை இதுவரை வெல்லாமல், பயனில்லா மொழி பேசுகிறீர்கள்!*

*அந்த ராமலட்சுமணர் சாகவில்லை! நீங்கள் சாகாமல், என் அவையை அலங்கரித்துக் கொண்டிருக்கிறீர்கள்!*

*என் தம்பியைக் காக்க, நீங்கள் செத்திருந்தால், இந்த ஜெகம், அதை வீரம் என்று புகழ்ந்து உரைத்திருக்கும்!*

*நீங்கள் புகழை விரும்பவில்லை; பூதம்போல் உடலை வளர்க்க விரும்புகிறீர்கள்!*

*நான் உலகம் மூன்றையும் வென்றது, என் வீரத்தால்! அதன் விளைவால் பெருஞ்செல்வத்தை, நீங்கள் பெற்று அனுபவிக்கின்றீர்!*

*இன்பம் துய்ப்பதே, வாழ்வின் இலட்சியம் என்று இருந்து விடாதீர்கள்!*

**தேவாந்தகன் :** *(கொந்தளிக்கின்ற மனதோடு எழுந்து நின்று பேசுகிறான்)*

*மன்னா! இதற்குமேல் வார்த்தைகளை வீசி எங்களை வதைக்க வேண்டாம்!*

*இந்தத் தேவாந்தகன், அந்த மானிடரைக் கொன்று திசையெலாம் எதிரொலிக்கக் கூத்தாடுகிறேன்!*

**திரிசிரன் :** *(எழுந்து நின்றபடி) இந்தத் திரிசிரனும், பகைவரைக் கொன்றொழிக்காமல், தங்கள் பார்வையில் படமாட்டேன்!*

**அதிகாயன் :** *(எழுந்து நின்றபடி)*

*வான் உள்ளோர் அஞ்சலாம்! வையகத்தார் அஞ்சலாம்! மாலும் அஞ்சலாம்! அஞ்சுமுக சிவனும் அஞ்சலாம்! ஆனால் தான்யமாலிக்குப் பிறந்த தங்கள் புத்திரன், இந்த அதிகாயன், போருக்கு அஞ்சுகிறான் என்று நீங்கள் நினைக்கலாமா?*

*தந்தையே! அந்த வானரங்களின் தலையை வெட்டித் தரை இட்டு, அந்த வில்லேந்திகளைக் கட்டிக் கொண்டு வருகிறேன்! இதை நீங்கள் காணுங்கள்!*

## காட்சி-341

*போர்க்களம்*

**அனுமன் :** தேவாந்தகா! தீயவனே! உன் கதையை இப்பொழுதே முடித்து வைக்கிறேன்!

*[அனுமன், தன் கை முஷ்டியால் தேவாந்தகனைத் தாக்கி வீழ்த்துகிறான்.*

*இப்பொழுது கோபத்தோடு அதிகாயன், அனுமன் முன் வந்து நிற்கிறான்.]*

**அதிகாயன் :** தேவாந்தகனை வீழ்த்தி விட்டோம் என்று குதிக்காதே!

குரங்கே! உன்னையும் லட்சுமணனையும் இன்று கொல்லாமல், நகருக்குத் திரும்பமாட்டேன்!

**அனுமன் :** அதிகாயா! நீ நகருக்கு இன்று திரும்பப்போவதில்லை. அது உண்மை!

திரிசிரனையும் உன்னோடு சேர்த்துக்கொள். உங்கள் இருவரையும் தரையில் போட்டு அரைக்கிறேன்! தர்மத்தின் வலிமையை உரைக்கிறேன்!

**திரிசிரன் :** (அங்கு வேகமாக வந்தபடி)

திரிசிரன் வந்து விட்டேன்! என்னைப் போருக்கு அழைத்து நீ மீண்டு விடுவாயா?

**அதிகாயன் :** திரிசிரா! அதோ லட்சுமணன் அங்கு நின்று கொண்டிருக்கிறான். அவனைக் கொன்றொழிக்கிறேன் நான்! நீ இந்தக் குரங்கை முறித்து எறி!

முதலையின் வாயிலே புகுந்து விட்ட மதலையர், இந்த மானிடர்!

[அதிகாயன் அங்கிருந்து போகிறான்.]

## காட்சி-342

ராவணன் அரசவை

**ராவணன் :** (அதிர்ச்சியோடு) என் அதிகாயன், லட்சுமணனால் மாண்டானா?

தேவாந்தகனும் திரிசிரனும், அனுமனால் கொல்லப் பட்டார்களா?

நடப்பதை நம்ப முடியவில்லையே! நமனுக்கு அரக்கர் உயிரைப் பறிக்கும் துணிவு எப்படி வந்தது?

கடல் கடந்து, அந்த அனுமன் இங்கு வந்தபோதே, யமனும் அவனோடு கைகோத்து நுழைந்துவிட்டான்!

*[தன் முன் அனுமன் நின்று ஆர்ப்பரிப்பது போல் ராவணனுக்குத் தோன்றுகிறது.*

*இப்பொழுது அழுது புலம்பியபடி ஆர்ப்பரிப்போடு அங்கு வருகிறாள் தான்யமாலி. தன் மார்பில் அடித்து அழுகிறாள்.]*

**ராவணன் :** தான்யமாலி! என்ன இது! ஏன் இங்கு வந்தாய்?

**தான்யமாலி :** என் வயிற்றில் பிறந்த அதிகாயனை, எமன் கையிலே, வாரிக் கொடுத்து விட்டாய் நீ!

பெற்ற வயிறு பற்றி எரிய, நீ பதறாமல் சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கிறாய்!

கொண்டவளுக்கே இப்படிக் கொடுமை செய்யும் நீ, குடிமக்களை எவ்வாறு காப்பாய்?

அந்த வானரம் அன்றே எச்சரித்தது! நீ அப்போது செவிடாகி விட்டாய்!

உன் தினவு தீர, தேசத்தையே பலி கொடுக்கிறாயே!

இதுதான் ஒரு மன்னனுக்கு அழகா? மண்டோதரியும் நானும் அந்தப்புர மகளிரும், என்ன குறை வைத்தோம் உனக்கு? தேனைத் தேகமெங்கும் தெவிட்டாமல் தந்தோமே!

கும்பகர்ணனை, அவன் நல்லுரையை ஏற்காமல், அன்றே அவனைக் கொன்று விட்டாய்!

இப்பொழுது உனக்கு எஞ்சியிருப்பது, மண்டோதரி மகன் இந்திரஜித்! என்ன செய்யப் போகிறாய்? எல்லோரையும் கொன்றுவிட்டு, அந்த மானிடப் பெண்ணோடு மஞ்சத்தில் உருளப் போகிறாயா?

எள்ளும் தண்ணீரும் இட ஆளில்லாமற் போனபின், ஆட்சி ஒரு கேடா? அரண்மனை ஒருகேடா?

**ராவணன் :** தேவ மகளிரே! இவள் பேசுவதைக் கேட்டு ரசித்துக் கொண்டிருக்கிறீர்களா?

இழுத்துச் செல்லுங்கள் இங்கிருந்து!

[தேவ மகளிர், தான்யமாலியை, அங்கிருந்து இழுத்துச் செல்கின்றனர்.]

**தான்யமாலி** : (இழுபட்ட நிலையோடு பேசுகிறாள்) அந்தச் சீதையால் இன்னும் வரப் போவதை அனுபவிக்க, நீ இருக்கின்றாய்!

சிரம் இழந்தவன், மணிமுடிக்கு ஆசைப்பட்டதுபோல, உன் ஆசையும் நிராசையாக முடியப் போகிறது!

மூவுலகையும் வென்ற நீ, உன்னுள் மூண்ட காமத்தை வெல்ல முடியாமல், உன் குலத்தோடு அழியப் போகிறாய்!

## காட்சி-343

*அரண்மனை*

[அரண்மனையின் ஒரு பக்கத்தில் அமர்ந்து கொண்டு அரக்கியர், ஒருவரையொருவர் கட்டிக் கொண்டும், மார்பில் அடித்துக் கொண்டும், அழுது கொண்டிருக்கின்றனர்.

இதைப் பார்த்துத் தேவமகளிர், கள்ளத்தனமாகச் சிரித்துக் கொண்டிருக்கின்றனர்.]

**ஓர் அரக்கி** : தோற்காத நம் அரக்கர் குலம் தோற்பதா?

**மற்றொருத்தி** : ஒரு மானிடத் தோலுக்காக, லங்கை மயான பூமி ஆவதா?

**வேறொருத்தி** : மரத்திலிருந்து கனி பறிக்கும் குரங்கால், நம் மாங்கல்யம் பறிக்கப்படுவதா?

**பிறிதொருத்தி** : அரக்கர்கள் போரிலே இறந்து விட்டால், அரக்கிகள் இரவைக் கழிப்பது எப்படி?

[அரக்கிகள் பெருங்குரலெடுத்து அழுகின்றனர். தேவமகளிர் கை கொண்டு வாய் பொத்திச் சிரிக்கின்றனர்.]

# காட்சி-344

*ராவணன் அரசவை*

**இந்திரஜித் :** *மன்னா! இவ்வளவு அழிவு ஏற்பட்ட போதும், உங்கள் மகன், இந்த இந்திரஜித்தைப் போருக்கு அனுப்ப வேண்டும் என்று உங்களுக்குத் தோன்றவில்லையா?*

*என் தம்பியரைப் பகைவரா கொன்றார்கள்? இல்லை - பகடைக் காய்களாக, நீங்கள் நிறுத்தி வைத்து வீழ்த்தி விட்டீர்கள்!*

*இந்திரனை வென்ற நான் இருக்க, அந்த நாமம் இருக்க, என்னை விலக்கி, ஒரு போரா? இது நெறியா? நியாயமா? இதன் விளைவு என்ன? என் சிற்றன்னை வயிற்றில் வேதனை!*

*என் தம்பி அதிகாயனைக் கொன்ற அந்த லட்சு மணனைக் கொல்லாமல், நான் குளிர மாட்டேன்!*

*எரியும் என் நெஞ்சு, அவன் பிணம் கண்டால்தான் ஆறும்! அடங்கும்!*

*அந்த லட்சுமணன், என் கையால் உயிர் விடப் பிறந்தவன்! இதுவே அவனுக்குப் பிரம்மன் எழுதி வைத்த எழுத்து!*

*தந்தையே! அட்சனைக் கொன்ற அனுமனை, அன்றே நாம் கொன்றிருக்க வேண்டும்!*

*அவனைக் கட்டி இழுத்து வந்தேன். நீங்கள் தூதுவன் அவன் என்று விட்டு விட்டீர்கள்! நெருப்புப் பொறியை அணைக்காமல் அனுப்பி வைத்தீர்கள்!*

*இப்பொழுது நடக்கின்ற சம்பவங்கள், நகைப்பிற்கு இடமாகிவிட்டன!*

*சிங்கங்களின் காட்டில், சிறு எலிகள் நுழைந்து, ஆர்ப்பரித்துக் கொண்டிருக்கின்றன!*

*இப்பொழுதாவது, எனக்கு அனுமதி கொடுங்கள். நான் போர்க்களம் செல்ல, இசைவைத் தெரிவியுங்கள். பகைவரை அழித்து, வெற்றிப் பாதையைச் சமைக்கிறேன்!*

**ராவணன் :** இந்திரஜித்! யார் தோற்றாலும், நீ தோற்கமாட்டாய்!

உன்னை நினைக்காமல் இல்லை. இதற்கு நீ தேவையா? - என்று நினைத்து இருந்தேன்!

காலத்தால் நீ களம் காணும் வேளை வந்து விட்டது!

புறப்படு என் சிங்கமே! பகைவர் சிரம் அறுக்கப் புறப்படு! அரக்கர் கரம் வலுக்கப்புறப்படு!

உன் தந்தை வாழ்த்துரைக்கப் புறப்படு! இளவல் லட்சுமணன், வல்லுயிர் பறிக்கப் புறப்படு! நாகபாசத்தால் அவன் தேகம் மாளப் புறப்படு!

## காட்சி-345

*இந்திரலோகம்*

**ஒரு தேவர் :** *(கலவரத்தோடு)* இந்திரஜித் போர்க்களம் புகுந்து விட்டான்.

லட்சுமணன் மேல் நாக பாசத்தை ஏவப்போகிறான். அதில் இருந்து லட்சுமணனால் மீள முடியாது!

**இன்னொரு தேவர் :** வேதம் நான்கும், மனுமுறை வந்த நூலும், வேள்வியும், சத்தியமும், தெய்வ வேதியர் பூஜையும் தோற்று விடுமோ?

**வேறொரு தேவர் :** திருமால் அவதாரம் எடுத்தும், அதர்மத்தின் ஆட்சி நீடிப்பதா?

## காட்சி-346

*போர்க்களம்*

**இந்திரஜித் :** லட்சுமணா! இந்திரன்தனை வென்ற நான், சிந்தன சரமாரி அம்புகளையெல்லாம் அகற்றிவிட்டு, உன் வெங்கணையால், ஆயிரம் அரக்கரின் தலைகளை உருட்டித் தள்ளினாய்!

*இனியும் உன்னை விட்டு வைத்தால், அரக்கர் குலம் பட்டுப் போய்விடும்!*

*நாகபாசந்தான் உன் நாட்களை முடித்து வைக்கும்! இதோ, அதை ஏற்றுக்கொள்!*

[*இந்திரஜித் நாகபாசத்தை விட, அது லட்சுமணனைத் தாக்கி, மண்ணிலே வீழ்த்துகிறது. லட்சுமணன் பேச்சு மூச்சற்றுப் பிணம் போல் கிடக்கின்றான்.*]

**இந்திரஜித் :** *எண்ணியதை முடித்தேன்! இளையவன் லட்சுமணன் வாழ்க்கை இன்றோடு முடிந்தது!*

*நாளை வந்து மூத்தவனின் வாழ்வையும் முடிப்பேன்!*

*(இந்திரஜித் மகிழ்ச்சியோடு போர்க் களத்தை விட்டுப் போகிறான்.)*

## காட்சி-347

*போர்க்களம்*

[விழுந்து கிடக்கும் லட்சுமணனைப் பார்த்து, ராமர் கதறி அழுகிறார்.]

**ராமர் :** *லட்சுமணா! என் செல்வமே! கடலிடைத் துயில்வான்போல் துயில்கின்றாயா? இல்லை, என்னைத் துன்பக் கடலில் கவிழ்த்து விட்டாயா?*

*எந்தை இறந்தும், நான் இருந்தேன்! நீ இருந்தாய் என்று உனக்காக உய்ந்து இருந்தேன்!*

*நீயின்றி இனி வாழேன்! உன்னோடு வந்து விடுகிறேன்! எனக்குத் தாயும் நீயே! தந்தையும் நீயே! தவமும் நீயே! சேயும் நீயே! தம்பியும் நீயே! திருவும் நீயே!*

*இப்பொழுது என்னை விட்டுப் போய்விட்டாயே! உன் உடம்பிலே புண்களைப் பார்க்கிறேன்! உயிரைப் பார்க்க வில்லையே!*

*படர் கானகத்தில் பயிலும் காலத்தில், எனக்கு வேண்டிய கனிகளை, நான் உண்ணத் தந்தாய்! நீ உண்டதை, நான் கண்டதில்லை!*

*அங்கு வெயில் மழை பாராமல் எனக்குக் காவல் இருந்தாய்! அந்தக் களைப்புத் தீர உறங்குகின்றாயா? இந்த உறக்கத்தை விட்டொழி! என் உள்ளத்தைக் குளிரவை!*

*நமக்கு நெஞ்சும் ஆவியும் ஒன்றெனக் கூறுவார்களே! இப்பொழுது உன்னை இழந்து, நான் உயிரோடு நிற்கின்றேனே! இது கொடுமை இல்லையா?*

*தாய், தந்தை, சுற்றம், மனையாள், மற்றும் எல்லாவற்றையும் துறந்து என் பின்னே கானகம் வந்தாய்! உனக்காக நான் செய்தது என்ன?*

*ஒன்றுமே இல்லை!*

*எனக்குப் பின்னே பிறந்த நீ, முன்னே இறக்கலாமா? இதுமுறையா?*

*லட்சுமணா! உன்னை இழந்து விட்டு, நான் தனியனாகப் பொன்னகர் போய், பொன்முடியைச் சூடிக் கொள்ள முடியுமா?*

*இந்த உலகம் நகைக்காதா? தர்மம் தலை கவிழ்ந்து திகைக்காதா? உன்னோடு மாளாவிட்டால், பழி என் குலத்தைப் பற்றும்!*

*[இவ்வாறு கூறி, லட்சுமணன் உடலை எடுத்து மார்புறத் தழுவிக் கொள்கிறார்.]*

## காட்சி-348

*பாற்கடல்*

[தேவர்கள் திரண்டு வந்து, திருமாலைத் தொழுது முறையிடுகின்றனர்.]

**ஒரு தேவர் :** *திருமாலே! உன்னை உள்ளபடி அறியோம்! முன் அறியோம்! பின்னை அறியோம்! இடையும் அறியோம்!*

பிறழாமல் நின்னை வணங்கி, நீ வகுத்த நெறியில் நிற்கின்றோம்!

எங்களால் செய்யக் கூடியது, வேறு எதுவும் இல்லை!

களத்திலே, லட்சுமணன் வீழ்ந்து விட்டானே! அந்தக் கலக்கம் உனக்கில்லை! எங்களுக்குண்டு!

அரக்கர் குலத்தை வேர் அறுத்து, எம் அல்லல் நீக்கி யருள, இரக்கம் மேற்கொண்டு, கருணையினால் மானிட உருவம் எய்தி, புரக்கும் மன்னர் குடிப் பிறந்து, அறத்தைக் காக்க வந்த காவலா!

அதர்மத்தை அழிக்கின்ற வழியைத் தேடும், உன் மாயத்தை, இப்பொழுது காட்டமாட்டாயா?

**திருமால் :** தேவர்களே! எம்பிரானே என்று இங்கு வந்து நிற்கும் நீங்கள், உங்கள் வெம்பு துயரம் தணிக்க, கயிலை மலையைப் பார்த்துக் கும்பிடுங்கள்!

சிவன் அம்சம், உங்கள் சிந்தை மகிழச் செய்யும்!

## காட்சி-349

*மலைப் பிரதேசம்*

[ஜாம்பவான் அருகில், வாட்டத்தோடு நின்று கொண்டிருக்கிறான் அனுமன்.]

**அனுமன் :** நாக பாசத்தால், லட்சுமணன் வீழ்ந்தார்! சகோதர பாசத்தால், ஐயன் ராமரும், அங்கு மயங்கிக் கிடக்கிறார்!

தர்மத்தின் கதை, இப்படித் தளர்ச்சியோடு முடிய வேண்டுமா?

**ஜாம்பவான் :** கூடாது! தர்மம் மீள்வதற்கு வழி இருக்கிறது. அதற்காகவே பிறப்பெடுத்து வந்திருப்பவன் நீ! நீ வாழு மட்டும், தர்மம் வீழாது! உன் வாழ்நாளுக்கோ எல்லை யில்லை! அதனால் தர்மத்திற்கு என்றும் அழிவில்லை!

மயங்கி இருக்கும் ராமலட்சுமணர், எழுந்து உயிர் கொள, நீ சஞ்சீவி என்னும் மூலிகை மருந்தைக் கொண்டு வர வேண்டும்.

அதன் காற்றுப் பட்டால் நாக நஞ்சு விலகி, நம் நாயகர்கள் எழுந்து விடுவர்.

**அனுமன் :** எங்கிருக்கிறது அந்தச் சஞ்சீவி? ஏழு கடலுக்கு அப்பால் இருந்தாலும், அதனைப் பறித்து வந்து, தர்மத்திற்கு உயிர் கொடுக்கிறேன்!

**ஜாம்பவான் :** இக் கடலைக் கடந்து வடக்கே இமயம் செல். அம்மலையைக் கடந்து, ஏம கூட மலை சேர். அம் மலையைக் கடந்து போனால், நிடதம் என்னும் மலையைக் காண்பாய். இதையும் கடந்து விடு. மேருமலையை அடைவாய். மேருவைத் தாண்டி, நீலகிரி தெரியும். நீலகிரி யையும் நீங்கிப் போனால், கரியமலையைக் காண்பாய்.

நம் கரியவன், காகுத்தன் குலத்தைப் பிழைப்பிக்கும் பச்சை மூலிகைகள், இங்கு படர்ந்திருக்கும்.

நாளை சூர்யோதத்திற்குள், நீ இதைக் கொண்டு வரவேண்டும்.

காலக் கெடுவைக் கவனத்திற்கொண்டு, ககனத்தில் பறந்து காரியமாற்று.

வெற்றியே, உனக்கு விளையட்டும். ராமபிரான் வெல்வதே, உன் எண்ணமாக இருக்கட்டும்.

[அனுமன், 'ராம்! ராம்! ஜெய்ராம்!' என்று கூறியபடி, விஸ்வரூபம் எடுக்கிறான்.]

## காட்சி-350

*வானம்*

[வானிலே, அனுமன் பறந்து செல்கிறான்.]

## காட்சி-351

*ராவணன் அரண்மனை*

[ராவணன் அருகில் ஓர் ஒற்றன் நிற்கிறான்.]

**ராவணன் :** *ஒற்றனே! நீ ஒப்பற்ற காரியத்தைச் செய்திருக்கிறாய். உனக்கு, அரண்மனைப் பொக்கிஷம் உரிமையாகிறது. வேண்டியதை எடுத்துக் கொள்ளலாம். நீ பொன்மணிகளில் விழுந்து புரளலாம்!*

*அந்த அனுமான் குரங்கு, ராமலட்சுமணரைப் பிழைப்பிக்கச் சஞ்சீவி மலைக்குப் போகிறதா? நாளை சூர்யோதத்திற்குள் அது திரும்பி விடுமா? அதையும் பார்க்கிறேன்!*

*காலநேமி, அந்த அனுமன் கதையை, அங்கு முடித்து வைப்பான்! அந்த அரக்கனின் கைகளில் சிக்கிய எந்த உயிரும் மீண்டதில்லை!*

*அனுமன் வதத்தை அந்த வல்லாளன் நிகழ்த்தட்டும்! காலநேமி கதையும், கௌரவம் பெற வேண்டாமா?*

## காட்சி-352

*சஞ்சீவி மலை*

[சஞ்சீவி மூலிகைகள் படர்ந்திருக்கும் கரியமலையில் இறங்குகிறான் அனுமன்.]

**அனுமன் :** *(தனக்குள்) இதுதான் அந்த சஞ்சீவி மலையாக இருக்கும். இங்கு இறங்கியவுடன் புதுத் தெம்பு பெறு கிறேன். இந்த மருந்து மலையில், எத்தனையோ மூலிகைச் செடிகள் மண்டிக் கிடக்கின்றன. இவற்றில் சஞ்சிவீ மூலிகையை எவ்வாறு நான் இனம் காண்பேன்? இருட்டு வேறு என்னை மருட்டுகிறது. சூர்யோதத்திற்குள் திரும்ப வேண்டுமென்று ஜாம்பவான் சொல்லி அனுப்பியிருக்*

கிறாரே! எனக்கு இங்கு உதவுபவர் யாரும் இருப்பதாகத் தெரியவில்லையே!

[அரக்கன் காலநேமி, இப்பொழுது ஒரு தவ முனிவன் போல் வேடமணிந்து, அங்கு வருகிறான்.]

**அனுமன் :** சுவாமி! தங்களை வணங்குகிறேன். ராம சேவையாக வந்திருக்கிறேன். சஞ்சீவி மூலிகை எதுவென்று தெரியாமல் திண்டாடுகிறேன். எனக்கு உதவினால், தர்மம் செழிக்க உதவிய பெருமை தங்களைச் சேரும்.

**காலநேமி :** பெருமைக்காக இந்த ஆத்மா எதையும் செய்வதில்லை! நான் விடும் மூச்சே, தர்மத்தை வாழ்விக்கும் சுவாசம்!

**அனுமன் :** அறிவேன் அதை. அறியாமற் பேசியதைப் பொறுத்தருள வேண்டும்.

**காலநேமி :** உனக்கு வேண்டியது சஞ்சீவி மூலிகை! எனக்கு வேண்டியது எதுவுமே இல்லை!

ராமசேவையாக நீ வந்திருப்பதால், அந்தச் சஞ்சீவி மூலிகையை, உனக்குக் காட்டுகிறேன்.

பாவம் ராமன்! நாடு நகர் இழந்து, நங்கையை இழந்து, நல்ல தம்பியை இழந்து, தன் உயிரை இழக்கும் அவலத்தில் இருக்கின்றான்!

என் பின்னாடி வா. அந்தச் சஞ்சீவி வளர்ந்திருக்கும் இடத்தைக் காட்டுகிறேன். கை கொள்ளும் அளவு பறித்துப் போ. உன் கைங்கர்யத்தால், அந்த ராமன் கதை மாறும்!

(முனிவர் வேடமிட்ட காலநேமியின் பின்னால், அனுமன் நடக்கிறான்.)

## காட்சி-353

*வானம்*

[வானிலே இரு தேவர்கள் தோன்றுகின்றனர்.]

**ஒரு தேவர் :** அடப்பாவி! பொய் வேடமிட்டு, அந்த அரக்கன் காலநேமி, அனுமனை எங்கோ அழைத்துச் செல்கிறான்!

**இன்னொரு தேவர் :** *சஞ்சீவி மூலிகை வளர்ந்திருக்கும் இடத்தைக் கடந்து செல்கிறார்கள்! இப்படி அனுமனை ஏமாற்று கிறானே! என்ன செய்வது?*

**முன்னவர் :** *அனுமனைக் கொல்ல அழைத்துச் செல்கிறான் அந்தக் கொடியவன்!*

**பின்னவர் :** *அனுமனுக்கு ஏது மரணம்? அந்தக் காலநேமிதான், அனுமன் கையால் அழியப் போகிறான்!*

*அதோ பார், பகவானின் விளையாட்டை! அணில் ஒன்று அங்கு தோன்றி விட்டது. அணைகட்ட உதவிய அணில், அனுமனுக்கு ஆபத்தில் உதவவும் வந்து விட்டது.*

## காட்சி-354

*சஞ்சீவி மலை*

**அனுமன் :** *சுவாமி! அந்த அணில், நாம் வந்த திசை நோக்கித் திரும்பித் திரும்பிப் பார்த்து ஓடுகிறதே!*

**காலநேமி :** *(எரிச்சலோடு) அணில் ஓடுவதற்கெல்லாம் அர்த்தம் கண்டு கொண்டிருக்க முடியுமா?*

*முனிவரை நம்பாமல், அணிலை நம்பி, அதன் பின்னால் போகப் போகிறாயா?*

**அனுமன் :** *அணிலை அப்படி அற்பமாகப் பேசாதீர்கள் சுவாமி! தென் கடலில் அணைகட்ட, அது கல்லைக் கொண்டு வந்து ராம கைங்கர்யம் செய்தது!*

**காலநேமி :** *அதன் தலையில் கல்லைப் போட்டால்தான், உன் பித்தம் தெளியும்!*

*(இவ்வாறு கூறிவிட்டுக் காலநேமி, ஒரு கல்லை எடுத்து எறிய, அது அணில் மேல்பட்டு, அணில் மடிகிறது.)*

**அனுமன் :** *(பதறியபடி) கொன்று விட்டீர்களே சுவாமி! உங்கள் கோலத்திற்கும் செயலுக்கும் சம்பந்தமே இல்லை! நீங்கள் வேடமிட்டு வந்தவரோ என்றெண்ணுகிறேன்! ராவணன் ஏவிவிட, இங்கு வந்தவரோ என்று ஐயுறுகிறேன்!*

**காலநேமி :** *உன் அனுமானம் சரியானதுதான்! உன்னை அழிக்க, ராவணன் அனுப்பி வந்த அரக்கன் நான் !*

*காலநேமி என்ற என் பெயரைக் கேட்டால், கர்ப்பத்திலுள்ள கரு கலைந்து விடும்!*

*வாலோடு பிறந்த நீ, தலை இல்லாமல் இப்பொழுது மடியப் போகிறாய்!*

*[இவ்வாறு கூறிவிட்டுக் காலநேமி, அனுமனைத் தாக்க வருகிறான். அனுமனோ, காலநேமியைக் கைகளால் தூக்கித் தொலைவில் எறிகிறான். காலநேமி மண்டை உடைந்து மடிகிறான்].*

## காட்சி-355

*சஞ்சீவி மலை*

**அனுமன் :** *(தனக்குள்) அப்பப்பா! எத்தனை இடர்கள்! அத்தனையும் என் ஐயன் ராம நாமத்தைக் கூறினால், சுடரைக் கண்ட இருள் போல, விலகிப் போகும்!*

*இப்பொழுது சஞ்சீவி மூலிகைகளைப் பறித்துத் திரும்ப வேண்டும், சூர்யோதயத்திற்குள்!*

*சஞ்சீவி மூலிகை எதுவென்று தெரியவில்லையே!*

*குருடன் உதிர்ந்து கிடக்கும் ரத்தினக் கற்களைத் தேடுவதுபோல, என் தேடுதலும் வாடுதலாக இருக்கிறது!*

## காட்சி-356

*வானம்*

[வானிலே தேவர்கள் திரண்டிருக்கின்றனர்]

**ஒரு தேவர் :** *அனுமனால் சஞ்சீவி மூலிகையைக் கண்டு பிடிக்க முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை.*

**இன்னொரு தேவர் :** ஆம் - மரத்தில் கனி பழுத்திருந்தால், அதைப் பறித்து உண்ணும் வர்க்கத்தைச் சேர்ந்தவன் அனுமன்! மருத்துவ மூலிகையை அவன் நாசி உணராது. சிவாம்சம், அனுமனிடம் மறைபட்டுப் போய்விட்டது!

**மற்றொரு தேவர் :** ஐயையோ! அப்போ, சூர்யோதத்திற்குள், மூலிகையோடு அனுமன் திரும்ப மாட்டானா?

ராம லட்சுமணர் உயிர் பிழைக்காவிட்டால், சீதை உயிர் வாழ்வாளா? தர்மம் வாழுமா? பின்னர் தெய்வங்கள் வாழ்வதில் பொருள் உண்டா?

**பிறிதொரு தேவர் :** உண்மைதான்! அறம் வாழாத உலகத்தில், இறைவன் விதூஷகன் போல்தான் மதிக்கப்படுவான்! அதோ, அனுமன் படுகிற பாட்டைப் பாருங்கள்! உருளுகிறான்! புரளுகிறான்! சஞ்சீவி தன் கையில் கிடைத்து விடாதா என்று ஏங்குகிறான்! தனக்கு உதவ ஒரு தெய்வமும் வராதா என்று கை கூப்புகிறான்! ராமநாமத்தைச் சொல்லிச் சொல்லி அங்கும் இங்கும் அலைகிறான்! கைகளால் கண்ட இலைகளைப் பறிக்கிறான்! இவை சஞ்சீவியாக இல்லாமற் போய் விட்டால், குடி முழுகிப் போய் விடுமே, என்று பதறுகிறான்! சூர்யோதயத்திற்குள், தான் சஞ்சீவியோடு மீள வேண்டுமே என்று துன்பத்தில் துடிக்கிறான்!

**மற்றொரு தேவர் :** (மகிழ்ச்சியோடு) ஆஹா! ஆஹா! அவன் அனுமன்! அவன் அறிவாளன்! அவன் ஆற்றலாளன்! பேசப் பெறும் மூவரோடு, நான்காவதாகக் கொண்டாடப் பெற வேண்டிய இறை இவன்!

மூலிகை எதுவென்று தெரியாததால், அச் சஞ்சீவி பர்வதத்தையே, கையிற் தூக்கிவிட்டான்! லங்கை நோக்கி, வானில் பறக்கிறான்!

இவன் இருக்குமட்டும், தர்மத்திற்கு ஏது வீழ்ச்சி? இவனை நம்பித்தானே, திருமாலும், லங்கை வீதியிலே இறங்கியிருக்கிறார்!

## காட்சி-357

*வானம்*

[சஞ்சீவி மலையை ஏந்திய கோலத்தோடு அனுமன் வானில் பறக்கிறான்.]

## காட்சி-358

*ராம லட்சுமணர் மயங்கிக் கிடக்கும் மலைப் பிரதேசம்*

[இந்த இடத்திற்குச் சஞ்சீவி பர்வதத்தோடு அனுமன் வந்து சேருகிறான்.

இப்பொழுது ராமலட்சுமணர் மயக்கம் நீங்கி எழுந்து கொள்கின்றனர்.]

**ஜாம்பவான் :** *அனுமான்! நீ கொண்டு வந்த சஞ்சீவி பர்வதத்தின் காற்றுப்பட்டே ராமலட்சுமணர் உயிர் பெற்று விட்டனர்!*

*நாகபாசம் தன் தோல்வியை ஒப்புக்கொண்டு நழுவி விட்டது!*

*வேதம் நான்கும் ஆர்த்து எழ, நீ தர்மத்திற்கு வேண்டியதைச் செய்துவிட்டாய்!*

**ராமர் :** *அனுமான்! உன் வலிமையால், மாண்ட எங்களை மீட்டு விட்டாய்! எங்கள் பகைக்குப் பகையானாய்! பழிவராமல் எங்களைப் பாதுகாத்தாய்! எங்களுக்கு வழிகாட்டும் தொழில் செய்தாய்! வேதம் வாழுமாறு வினையாற்றினாய்!*

*[ராமர், வாஞ்சையோடு அனுமனைக் கட்டித் தழுவிக் கொள்கிறார்.]*

**ராமர் :** *உன் வரவு இல்லாவிட்டால், எங்கள் வாழ்வு வசையாக முடிந்திருக்கும்!*

*உனக்குப் பிரதிஉபகாரமாக எதுவும் செய்ய இயலாது! உன்னை வாழ்த்தி மகிழ மட்டுமே என்னால் இயலும்!*

நீ நோய் நொடியின்றி, இன்னல் இடர் இன்றி, என்றும் இனிது வாழ, என் உள்ளம் இயம்புகிறது; என் சொற்கள் பேசுகின்றன; என் கண்ணீரும் அதையே எழுதுகிறது!

[அனுமன், 'ராம்! ராம்!' என்று கதறியபடி ராமரின் காலடி விழுந்து தொழுகிறான்.

ராமர் மீண்டும் அனுமனை எடுத்து அணைத்துக் கொள்கிறார்.]

**ஜாம்பவான் :** அனுமான்! இந்த சஞ்சீவிபர்வதம் இங்கேயே இருந்தால், அரக்கர்களும் போரிலே சாகமாட்டார்கள்! அதனால் அதர்மம் சாயாது! ஆதலால், இதை இருந்த இடத்தில் கொண்டு போய் வைத்துவிடு. நம் இனியவர்கள் எழுந்த பிற்பாடு, இந்தப் பர்வதத்தால், நம் பகைவர்கள் பலன் கண்டுவிடக்கூடாது!

**அனுமன் :** அப்படியே செய்கிறேன். ஒரு நாழிகையில் சென்று மீள்கிறேன்.

## காட்சி-359

ராவணன் அரசவை

**ராவணன் :** மாலியவான் இப்படி மனங் கலங்கிப் பேசலாமா? அஞ்சுதல் அரக்கர்குலம் அறியாத ஒன்றே!

**மாலியவான் :** அது முன்பிருந்த நிலைமை. இப்பொழுது அனுமனால் அஞ்சுகின்ற அவலத்தை அனுபவிக்கிறோம். இந்த மாலியவான், அச்சப்படுவதற்கு அர்த்தம் இருக்கிறது. பிரம்மாஸ்திரமே நமக்குக் கை கொடுக்கவில்லை! அனுமன் கொண்டு வந்த சஞ்சீவி பர்வதம் நம் கரத்தை முறித்து விட்டது!

செத்தவர் எழுந்து விட்டார் - ஜெகம் ஆளப்பிறந்த நாம் சாவதற்கு!

சஞ்சீவி மலையைக் கொண்டு வந்தவன், மேரு மலையைக் கொண்டுவந்து நம்மீது போடுவானாயின், நாம் தப்பிப் பிழைப்போமா?

ஆனால், அவன் அறத்தின் நாயகன்! நம் செயல் திறம் செம்மையாக இருந்தால், நம்மிடம் வெம்மை காட்ட மாட்டான்!

மன்னா! இப்பொழுதாவது அந்தச் சீதாதேவியை விடுவித்து, அந்தச் செம்மல் ராமனிடம் அடைக்கலம் புகுந்தால், அது, நம் அழிவைத் தடுக்கும்; நம் குலமும் மாளாது தழைக்கும்.

**ராவணன் :** விஷத்தைக் கக்கி விட்டீர்! உமக்கு இது வேண்டாத பொழுது! சீதையை விட்டுவிடவா, கொத்திக் கொண்டு வந்தேன்? எனக்குக் கரம் இருக்க, அக்கரத்தில் வாள் இருக்கப் பகைவனின் தாள்பணிய, எனக்கென்ன பித்தமா பிடித்திருக் கிறது? பித்துப் பிடித்தவர்கள், சித்தம் பேதலித்தவர்கள், மருத்துவம் காணட்டும்! மன்னன் சபை வந்து கூச்சலிட வேண்டாம்!

என் மகன் இந்திரஜித், இந்த அவையிலே இருக்க, சரண் அடைவோம் என்று, நம் வீரத்திற்கு முரணான வார்த்தை களைப் பேசலாமா? துணிவு இல்லாதவர்கள், தங்கள் வாயைப் பெருந்தீனி கொள்வதற்கு மட்டுமே பயன் படுத்தட்டும்!

**இந்திரஜித் :** (எழுந்து நின்றபடி) நன்று சொன்னீர்கள் தந்தையே! பகைவரைக் கொன்று மீள வழி சொல்ல வேண்டுமே தவிர, அவர் தாள் பணிந்து உய்யும் இழிநிலை காணக் கூடாது.

தந்தையே! அந்த ராமன் வெறும் மானிடன் அல்லன்! வானவன் அல்லன்! முனிவன் அல்லன்! ஞானிகள் நினைக்கும் பரம்பொருள் அவன்! இது ஐயமறத் தெரிகிறது.

அதற்காக அவன் அடி வீழ்வது நம் வீரத்திற்கு இழுக்கு! நம் அசுர குலத்திற்கு மாசு! நம் அன்னையர் வயிற்றில் சுமந்த கருவிற்குக் களங்கம்!

அந்த ராமனை வீழ்த்தும் வல்லமை எனக்கு இருக்கிறது! இந்த இனிக்கும் குறிப்பை, உங்கள் உள்ளம் களிக்கக் கூறுகிறேன்!

வில்லால், வேலால் ஆகாத காரியம், வேள்வியால் ஆகும்! நான் மறைவாகச் சென்று நிகும்பலை யாகத்தைச்

செய்து முடிக்கிறேன். அதற்குப் பிறகு என்னை வெல்வார், இறைவர் ஆனாலும் இலர்!

**ராவணன் :** நல்ல முடிவு. நம் வல்லமை சொல்லும் முடிவு. பகையை முடித்து வைக்கும் முடிவு.

ஆனால், பகைவர் யாகத்தைக் கெடுக்க வருவார்களே! யாகத்தால், நீ வல்லமை பெற்றுவிடுவாய் என்பதை அறிந்து, விபீஷணன் வழிகாட்ட, வேள்வித் தீயில் மண்ணைப் போட்டு அணைப்பார்களே!

**இந்திரஜித் :** அதைப் பற்றி நான் சிந்திக்காமல் இல்லை. அவர்களை நிலை குலைய வைக்க, நான் ஒரு நாடகத்தை நடத்தி விடுகிறேன். அவர்கள் எண்ணமெல்லாம், அப்போது என் மீது இருக்காது; என் யாகத்தின் மீது இருக்காது.

**ராவணன் :** ஆவலைத் தூண்டுகிறாய். அழகான அந்தச் சூழ்ச்சி என்ன?

**இந்திரஜித் :** சீதையின் உருவத்தை, மாயையால் சமைத்து, அதைக் கொன்று வீசுகிறேன்!

தங்கள் பிராட்டி கொலையுண்டாள் என்று, பெரும் கலக்கத்திற்கு ஆளாவார்கள்!

பின்னர், நான் அயோத்திமேல், சேனையோடு செல்வதாகப் போக்குக் காட்டுகிறேன்!

அயோத்தியைக் காக்க அங்கு ஓடுவார்கள்!

நான் நிம்மதியாக, இடையூறு இன்றி, யாகத்தை முடித்து, அதனால் பெறும் புது வலிவோடு, பகை மாய்த்துத் தங்கள் பாதங்களில், வெற்றியை விளையாட விடுகிறேன்!

**ராவணன் :** தந்தைக்குச் சந்தோஷம் தரும், சத்புத்திரன் நீயே! நீயே!

இந்திரஜித்! உன்னை மகனாகப் பெற்ற பின்பு, ஆயிரம் சீதைகளையும், என்னால் சிறையெடுக்க முடியும்!

## காட்சி-360

*போர்க்களம்*

[மாயா சீதையைக் கயிறுகளால் பிணைத்துப் போர்க்களத்திற்கு இழுத்து வருகிறான் இந்திரஜித். மாயா சீதை கதறுகிறாள். அனுமன் இதைக் கண்டு பதறுகிறான். கையில் வாளோடு, இந்திரஜித், அட்டகாசமாகச் சிரிக்கிறான்.]

**இந்திரஜித் :** *அனுமான்! இந்தப் பெண்ணின் காரணமாகத்தானே, பெரும்போர் நடைபெறுகிறது! இரு பக்கமும் பிணங்கள் விழுகின்றன! இவள் ஆவியைப் போக்கிப் போரை நிறுத்துகிறேன்!*

*நீ மீட்க வேண்டியவள் மாண்டுவிட்டால், பின் எதற்காக நீ வாலை வீசி, ஆர்ப்பரிக்கப் போகிறாய்? வாலைச் சுருட்டி ஊர் திரும்பி விடுவாய்!*

**அனுமன் :** *(பதறியபடி) இந்திரஜித்! பெண் கொலை செய்யவே கூடாது! அது பெரும் பாவம்! குற்றமற்ற பிராமண குலத்தில் பிறந்தவன் நீ! கொண்டாடித் துதிக்க வேண்டிய ஒரு குலமகளை, நீ வாள் வீசிக் கொல்வது, உன் குலத்தையே பாழ்படுத்தும் செயலல்லவா? உன் தாயும், உன் தாரமும் உன் நெஞ்சும், இதைச் சரியென்று சம்மதிக்குமா?*

*நான் முகன் மரபில் வந்தவன் நீ! நூல் முகம் முற்றும் உணர்ந்தவன் நீ! பால்முகம் மாறாத பாவையை, வெட்டுண்ட முகமாக வீழ்த்திக் காட்டுவது வீரமா? இதுதான் அரக்கர்தம் ஆற்றலா? தவம் செய்து வரம் பெற்று வந்ததெல்லாம், இந்தத் தளிர்க்கொடியைச் சாய்ப்பதற்கா?*

*வேண்டாம் இந்திரஜித்! உன்னைப் பார்த்து நடுங்குகின்ற வானவர், நகைக்கும்படி நடந்து கொள்ளாதே! ஈட்டியை எறிந்து எறும்பைக் கொல்பவனை, இந்த உலகம் பித்தனாகத்தான் பேசும்!*

**இந்திரஜித் :** *சாதுர்யமாகப் பேசி, என் மனதில் சலனத்தை ஏற்படுத்த முடியாது! இவள் உயிரோடு இருக்கும்வரை, என் குலத்தார் உயிர்விட்டுக் கொண்டிருப்பார்கள்! என் குலத்தைக் காக்க, இவளைக் கொல்வது போர் தர்மம்!*

[இவ்வாறு கூறி, மாயா சீதையின் தலையைத் தன் கை வாளால் துண்டாடி விடுகிறான் இந்திரஜித். இதைக் கண்டு அனுமன் தன் தலையில் அறைந்து கொண்டு அழுகிறான்.]

**இந்திரஜித் :** அனுமானே! ஆழம் தெரியாமல் காலை விட்டு அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் அற்பக் குரங்கே!

உன் சீதாதேவி மாண்டுவிட்டாள்! தலை வெட்டுண்டு, மண்ணிலே சாய்ந்து விட்டாள்!

உன் சீதாபதியின் வளநகர் அயோத்தியை, முடிந்தால் காத்துக் கொள்! இப்பொழுது அங்குதான், புஷ்பக விமானத்தில் போகிறேன்!

ராமனின் தம்பியரையும், தாயரையும், என் கை அம்புகளால் சிதைப்பேன்!

இங்கு ஓடிய, என் இனத்து ரத்தத்திற்குப் பழி தீர்க்க, அந்த அயோத்தியில், சரயுநதியை ரத்த வெள்ளமாக்குகிறேன்!

[இவ்வாறு கூறிவிட்டு, இந்திரஜித் அங்கிருந்து போகிறான். அனுமன் தளர்ந்து மயங்கிக் கீழே விழுகிறான்.]

## காட்சி-361

*போர்க்களம்*

[கண் விழித்துப் பார்க்கின்ற அனுமன், வெட்டுண்ட சீதையின் உடலைக் காணாது திகைக்கிறான். அவள் வெட்டுண்ட கொடுமையை எண்ணிப் புலம்புகிறான்.]

**அனுமன் :** வெட்டுப்பட்ட தேவியின் உடலையும் மாயத்தால் மறைத்து விட்டார்களா, மாபாவிகள்?

ஓர் அன்னம் சின்னா பின்னமானதைப் பார்த்து, அசையாமல் நின்று கொண்டிருந்தேனே! என்னைக் காட்டிலும் பெரும்பாவி யார் இருக்க முடியும்?

தெய்வங்களும் இதைத் தடுக்காமல், தேய்ந்து விட்டனவா?

பிராட்டியைச் சிறை மீட்க வந்த நான், அவர்கள் சிரம் அறுபட்டு வீழப் பார்த்துக் கொண்டிருந்தேன்! என் கண்கள் பாழும் குழியாகத் தூர்ந்து போகாதா?

ராமதூதன் என்ற நாமத்தோடு இருக்கின்றேன்! அந்த ராமனின் தேவி கொல்லப்படுவதைக் கண்ட, சண்டாளன் நான்!

முன்னர், 'கண்டேன் தேவியை' என்று என் நாதனிடம், கற்கண்டு மொழி பேசினேன்! இப்பொழுது, 'அரக்கன் கொல்லக் கண்டேன்' என்று கனலை உமிழப் போகிறேன்!

சஞ்சீவி பர்வதத்தைக் கொண்டு வந்து, என் செம்மல்களின் உயிர் காத்த என்னால், ஒரு மெல்லியல் மேனியைச் சிதையாமல் காக்க முடியவில்லை!

கொன்றவனைக் கொல்லாமல் நின்றேன்!

வாழ வேண்டிய தெய்வத்தை வாழ்விக்காமல், நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்! - மண்ணுக்குப் பாரமாக!

அந்தக் கொடியவன் அயோத்திக்கும் போகிறான். என் ஐயன் அனுமதியோடு, அங்கு சென்று, அவனைப் பழி தீர்க்கிறேன்!

இந்தத் துயரம் கண்டு, என் ஐயன் மாண்டால், நானும் மாள்வேன்! யாருக்கு வேண்டும் சிரஞ்சீவி என்னும் பேறு?

என் ஐயன் பொன் அடி சேர்ந்து, நடந்து விட்ட பொல்லாத்தனத்தை உரைத்து, அவர் நல் உரைகேட்டு நடக்கிறேன்!

வாழ்வோ, சாவோ, அதை அந்த வள்ளல் தீர்மானிக்கட்டும்!

## காட்சி-362

*மலைப் பாங்கான இடம்*

[ராமரோடு மற்றவர்களும் இங்கு இருக்கின்றனர்.]

**விபீஷணன் :** *அனுமன் சொல்வது கேட்டு, யாரும் பதற வேண்டாம்; மனம் சிதற வேண்டாம்!*

*மாயையில் வல்லவன் அந்த இந்திரஜித்! பத்தினி தன்னைப் பாதகன் கொலை செய்தால், இம்மூவுலகும் பற்றி எரிந்து சாம்பலாகி விடாதா?*

*அவன் அயோத்தி போகிறேன் என்று சொன்ன தெல்லாம், நம்மை ஏமாற்றும் பேச்சு! நம்மை இடம் பெயரச் செய்யும் சூழ்ச்சி!*

*ஐயனே! சற்றுமுன் வண்டு உருவெடுத்து, அசோகவனம் சென்றேன்! அங்கு நம் பிராட்டியார், ஓவியம்போல் நலமாக இருக்கக் கண்டேன்! அருந்ததி போன்ற அம்மைக்கு, அதர்மத்தால் ஏது அழிவு?*

*அந்த இந்திரஜித் நிகும்பலை யாகத்தை, இடையூறு இன்றிமுடித்திட, ஒரு மாயா உருவத்தை மாளச் செய்து, நம்மை வஞ்சிக்கும் எண்ணத்தோடு, கொலைக் களத்தைச் சித்திரித்திருக்கிறான்!*

*நாம் சித்தம் சிதறி, செயலற்று விடுவோம் என்று அந்தப் பித்தன் நினைத்திருக்கிறான்!*

**அனுமான் :** *பெரியீர்! என் அன்னை நலம் என்ற மொழி கேட்டு, என் மனம் சுகம் காணுகிறது.*

*இல்லையென்றால், என் நெஞ்சு வெடித்துச் செத்திருப்பேன்!*

*பழி, என் பேரில் வராமல், என்னைத் தர்ம வழியில் சேர்த்து விட்டீர்கள்!*

*அது, மாயா உருவம் என்பதால்தான், நான் கட்டுண்டு இருந்திருக்கிறேன்! நான் அறியாமல், நான் உண்மையை உணர்ந்திருக்கிறேன்!*

*நான் ராமனின் அடிமை ஆயிற்றே! என் ஐம்புலன்களும் உண்மை அறியத் தவறுமா?*

**ராமர் :** *அனுமான்! உன் துணை, தெய்வத்தின் துணை, நாம் செய்த தவத்தின் துணை, இந்த வீங்கு நீர் லங்கை விபீஷணன்*

*துணை, இவை இருக்கும்போது, இன்னலெல்லாம் என்னை என்ன செய்யும்?*

*விபீஷணா! இப்பொழுது நாம் செய்ய வேண்டியது என்ன?*

**விபீஷணன் :** *அந்த இந்திரஜித் தொடங்கும் நிகும்பலை யாகம் முற்றுப் பெறுமானால், அவனை யாராலும் வெல்ல முடியாது! தர்மம் புறம் தள்ளப்பட்டு விடும்!*

*ஆதலால், அந்த யாகத்தைச் சிதைத்து, அவன் தேகத்தைச் சிதைத்து, அவன் ஆவி போக்குவதே, அறத்திற்கு நாம் செய்யும் கர்மம்! அதுவே, அன்னையை விடுவிக்க, நாம் ஆற்றும் தக்க செயல்!*

**ராமர் :** *அப்படியே செய்து விடலாம். லட்சுமணனும் அனுமனும், அந்த யாகம் நடைபெறாமல் தடுத்து, இந்திரஜித்தின் வாழ்வை முடித்து வருவார்கள்!*

*விபீஷணா! உன் வழி காட்டுதலோடு, தர்மம் வெற்றியைக் காணும்! விழாக் காணும்! லங்கையோடு அயோத்தி நட்புக் காணும்!*

## காட்சி-363

*யாக பூமி*

[இந்திரஜித் மந்திரங்களை ஜபித்துக் கொண்டு யாகம் செய்கிறான்.]

*(இப்பொழுது அங்கு வந்து நிற்கும் அனுமான் வீசுகின்ற பாறையால், அங்கு வைக்கப்பட்டிருந்த பூரண கும்ப கலசம் உடைந்து, புனித நீர் வழிந்தோடுகிறது.*

*இன்னொரு பாறையை அனுமான் வீச, யாக நெருப்பு அணைகிறது.*

*அதிர்ச்சியடைந்து எழுந்து நிற்கிறான் இந்திரஜித்.)*

## காட்சி-364

*வானம்*

[வானிலே தேவர்கள் திரண்டு நின்று, மகிழ்ச்சியோடு ஆரவாரிக்கின்றனர்.]

**ஒரு தேவர் :** *மந்திர வேள்வி மடிந்தது! மடிந்தது! இந்திரர் பகைவன் இளைத்து விட்டான்! இளைத்து விட்டான்!*

**மற்றொரு தேவர் :** *அந்தரத்து அமரரை வென்றவன், சுந்தர புருஷர்களால், சோலையிலே குதிக்கும் வானரர்களால், வலி இழக்கப் போகிறான்! வாழ்வை இழக்கப் போகிறான்!*

**பிறிதொருதேவர் :** *இந்திரஜித்தா! உன் ஆட்டம் இதுவரைதானா? எல்லையைக் கண்டு விட்டாய்! நாளை இல்லை என்றாகி விடுவாய்!*

## காட்சி-365

*வெட்டவெளி*

[யாகபூமியிலிருந்து சினத்தோடு வெளிவரும் இந்திரஜித், அனுமனை எதிரில் பார்க்கிறான்.]

**அனுமன் :** *இந்திரஜித்தா! அயோத்தி சென்று, ராமர் தம்பியரை வென்று திரும்பி விட்டாயா? அதற்குள்ளாகவா?*

*ஆமாம் - பரதனோடு நீ போர் புரிந்த பாங்கைச் சொல்ல முடியுமா?*

*சத்ருக்னன், உன் வில்லின் ஆற்றல் கண்டு சரண் அடைந்தானா?*

*நஞ்சனையவனே! வஞ்சனையாகப் போர் செய்வதில் வல்லவனே! உன் மாயப் போர் ஆற்றல், இன்றோடு மடியப் போகிறது!*

*எம்மீது பாய, என்ன அஸ்திரம் வைத்திருக்கிறாய்? இப்பொழுது உன் மீது பாய, கூற்றுவன் உன்னைக் குறுகி நிற்கிறான்!*

*நீ பெற்ற வரங்களும், உன்னைக் கைவிட, உன் உடலின் இடம் துடிக்க, நீ இப்பொழுது இறப்பது உறுதி!*

உன்னைக் கொல்வதாக, இளவல் லட்சுமணனும், உன்னை நெருங்கி நிற்கிறார்! அவர் வில்லின் ஓசை, உனக்குக் கேட்கவில்லையா? அதுவே, உன் மரணத்தின் ஓலம்! அது அந்த மனிதரால் ஏலும்!

**இந்திரஜித் :** அவன் லட்சுமணன் ஆக இருந்தாலும் சரி, ராமனாக இருந்தாலும் சரி, இல்லை, இவர்களைச் சுமந்து திரியும் குரங்குக் கூட்டமானாலும் சரி, எல்லோரையும் போரில் கொன்றொழிப்பேன்! வேள்வி முற்றுப் பெறாததால், தோல்வி எனக்கில்லை! பட்டை தீட்டாவிட்டாலும், வைரம் வைரந்தான்! என் வாள், பகைவர் உயிரை மாய்க்கத்தான் செய்யும்! என் எதிரில் நிற்கும் குரங்குக் கோமானே! சிங்கம் யானையோடு போரிட்டால், ஜெகம் எல்லாம் பார்த்துக் களிக்கும்! சிறுகுரங்குகளோடு சண்டையிடுவதை, யாராவது ஏற்பரோ?

கூப்பிடு, உன் இளவல் லட்சுமணனை! அவனைப் பிணமாக்கி, உன் பித்தத்தைப் பெருகச் செய்கிறேன்!

## காட்சி-366

*பாற்கடல்*

[பாற்கடலில் உள்ள ஆதிசேஷன், பயங்கரமாகச் சீறுகிறது.]

**திருமகள் :** ஆதிசேஷன் ஏன் இப்படிச் சீறிக் கொண்டிருக்கிறான்?

**திருமால் :** ஆதிசேஷனின் அம்சமான லட்சுமணன், லங்கையிலே, இந்திரஜித்தோடு கடுமையாகப் போரிட்டுக் கொண்டிருக் கிறான்! அதுதான் காரணம்!

## காட்சி-367

*போர்க்களம்*

[லட்சுமணன் விட்ட அம்பு, இந்திரஜித்தின் தலையை வெட்டி வீழ்த்துகிறது.]

## காட்சி-368

*வானம்*

[வானிலே திரண்டிருக்கும் தேவர்கள், இதைப் பார்த்துத் தங்கள் மேலாடைகளை வீசி, மகிழ்ச்சியோடு ஆரவாரம் செய்கின்றனர்.

'ராம்! ராம்! ஜெயராம்!' என்று உரக்கக் கூவுகின்றனர்.]

## காட்சி-369

*போர்க்களம்*

[அனுமன், லட்சுமணனைத் தன் தோளில் தூக்கி வைத்துக் கொண்டு, கூத்தாடுகிறான்.]

## காட்சி-370

*ராவணன் அரண்மனை*

[ஓர் அரக்கவீரன் அழுதபடி, ராவணனை நெருங்குகிறான். ராவணன் திகைப்போடு எழுந்து நிற்கிறான். பணிப் பெண்கள் பதறியபடி அங்கு நிற்கின்றனர்.]

**ராவணன் :** *போரிலே என்ன நடந்தது? சொல்லி விட்டு அழு! உன் சோகத்திற்குக் குறுக்கே நிற்க மாட்டேன்!*

**வந்த வீரன் :** *இளவரசர் இந்திரஜித் போரிலே....*

**ராவணன் :** *போரிலே?*

**வந்த வீரன் :** *அந்த லட்சுமணனால்...*

**ராவணன் :** *சிறைப்படுத்தப்பட்டானா?*

**வந்த வீரன் :** *கொல்லப்பட்டார்!*

*[இவ்வாறு கூறிவிட்டு, அந்த வீரன் குலுங்கிக் குலுங்கி அழுகிறான்.*

*ராவணன் உடல் கோபத்தால் நடுங்குகிறது. தன் உடைவாளைக் கையில் எடுத்துச் சாவுச் செய்தியைச் சொன்ன வீரனைக் குத்திச் சாய்க்கின்றான். பணிப்பெண்கள் அஞ்சி அங்கிருந்து ஓடுகின்றனர். ராவணன், தானும் தளர்ந்து, கட்டிலில் சாய்கிறான்.]*

## காட்சி-371

*ராவணன் அரண்மனை*

['ராம்! ராம்!' என்று கூறியபடி, நாரதர், ராவணன் அரண்மனைக்குள் நுழைகிறார். அரக்க வீரர்கள் கோபத்தோடு நாரதரைப் பிடித்து வைத்துக் கொள்கின்றனர்.]

**ஒரு வீரன் :** *என்ன துணிவு உமக்கு? எங்கள் மன்னர் அரண்மனைக்கு வந்து, எங்கள் பகைவன் பெயரையா, மந்திரம்போல் கூறுகிறீர்?*

**இன்னொரு வீரன் :** *'நாராயணா' என்றுதானே எப்பொழுதும் கூறுவீர்! கேடு காலம் வந்தால், உம் வாயும் இப்படிக் குளறிவிடுமா?*

**நாரதர் :** *ராம நாமமும், நாராயணா என்ற மந்திரமும் ஒன்றுதானே என்று சொல்லி விட்டேன்!*

*தவறென்றால் பொறுத்துக் கொள்ளுங்கள்!*

*நாராயணா! நாராயணா! இதையே இனிமேல் சொல்கிறேன்! போதுமா? என்னை உள்ளே அனுமதியுங்கள்! எந்தச் சபையிலும், என்னைத் தடுப்பார் எவரும் இலர்! உங்களுக்கு அந்தத் துணிவு வந்து விட்டதா?*

**ஒரு வீரன் :** *நாராயணா! நாராயணா! தாராளமாக உள்ளே போங்கள்...*

**நாரதர் :** *நாராயணா!*

*[நாரதர் தொடர்ந்து அரண்மனைக்குள் செல்கிறார்.]*

# காட்சி-372

*ராவணன் அமர்ந்திருக்கும் தனி அறை*

**நாரதர் :** *நாராயணா!*

*ராவணா! போரிலே நீ தோற்றுக் கொண்டிருப்பதா? உன் இசை அபஸ்வரம் பேசாது!; உன் படை தோல்வியைக் காணாது!- என்று எண்ணியிருந்தேன்.*

*அந்த எண்ணத்தில், மண் விழுந்து விட்டதே! கும்பகர்ணன் முதல், இந்திரஜித் வரை, கொல்லப்பட்டு விட்டனரா? நம்பவே முடியவில்லை! மூவுலகையும் கட்டி ஆள்பவன், முயல் போன்ற மனிதரிடம் தோற்றுக் கொண்டிருப்பதா?*

*இதைப் பார்த்துக் கொண்டிருக்கும், என் உடல் பதறுகிறது! பழகிய நட்பால் பேசுகிறேன். இப்பொழுது உனக்கு உதவாவிட்டால், என் உள்ளம், எப்பொழுதும் என்னைக் கிள்ளிக் கொண்டே இருக்கும்!*

*நான் ஆயுதம் ஏந்த மாட்டேன்! அதற்குத்தான், அரக்க வீரர்களைத் தீனி போட்டுத் திரட்டி வைத்திருக்கிறாயே!*

*அருமையான யோசனைகள் சொல்வேன்!*

*இந்த நாரதன் பேச்சு, நயமான பேச்சு என்று, நான் சஞ்சரிக்கும் திரிலோகத்திலும் தீர்ப்பு வழங்கியிருக்கிறார்கள்!*

*காமத்தில், கட்டிய மனைவியை நினைக்க வேண்டும்! ஆபத்தில், கண்ணான நண்பனை நினைக்க வேண்டும்!*

*முன்னதைச் செய்யும் நீ, பின்னதைச் செய்யவில்லையே!*

*பாதாள லோகத்தை ஆட்சி செய்யும் உன் நண்பன், மயில் ராவணனை மறந்து விட்டாயா? மாயங்களில் வல்லவன் ஆயிற்றே அவன்! அவனை இப்பொழுது உதவிக்கு அழைத்தால், உன் பகைவர்கள் ஒழிந்துவிட மாட்டார்களா?*

**ராவணன் :** *(தீவிரமாகச் சிந்தித்தபடி) நல்ல யோசனை! மயில் ராவணன், இதில் தலையிட்டால், அந்த மானிடர் தலையெடுக்க முடியாது!*

**நாரதர் :** ராம்! ராம்! (இதைக் கேட்டு, ராவணன், நாரதரை உற்று நோக்குகிறான்.)

**நாரதர் :** நாராயணா! நாராயணா! பெயர்க் குழப்பத்தால், பெரிதும் தடுமாறிக் கொண்டிருக்கிறேன்!

ராவணா! நான் வருகிறேன். விதி இருந்தால், மீண்டும் சந்திப்போம்!

**ராவணன் :** நாரதரே! உமக்கு மரண பயம் வந்து விட்டதா?

**நாரதர் :** ராவணா! மரணத்திற்கு யார்மீதும் பயம் கிடையாது! இரணியன் கதையெல்லாம், இப்பொழுது நினைவுக்கு வருகிறது!

**ராவணன் :** இரணியன் என்று யாரைச் சொல்கிறீர்?

**நாரதர் :** இரணியன் என்று இரணியனைச் சொல்கிறேன்! விழுவதற்கான நேரம் வந்த பிற்பாடு, அழாமல் வீழ்வதுதான், ஆண்மைக்கு அழகு!

**ராவணன் :** யார் விழுவதற்கான நேரம்?

**நாரதர் :** காலம் சொல்ல வேண்டியதை, நான் கத்திச் சொல்லிக் கொண்டிருக்க முடியுமா?

ராம்! ராம்!

[ராவணன் உற்றுப்பார்க்க, நாரதர் அங்கிருந்து ஓட்டமெடுக்கிறார்.]

## காட்சி-373

*மலைப் பாங்கான இடம்*

[இரவு நேரம். மலைப்பாங்கான இடத்தில், ஒரு பர்ணசாலை அமைக்கப்பட்டிருக்கிறது. பர்ணசாலைக்குள் ராமலட்சு மணர் இருக்கின்றனர். இருக்கின்றனர். பர்ணசாலைக்கு வெளியே, விபீஷணனும் அனுமனும் இருக்கின்றனர்.]

**விபீஷணன் :** அனுமான்! பாதாள லோகத்தை ஆட்சி செய்யும் பாவி மயில் ராவணன், ராவணனுக்கு உதவ, இங்கு வருகிறானாம்!

**அனுமன்** : வருபவர் எல்லாம் வரட்டும்! வந்து மரணத்தைப் பெறட்டும்!

**விபீஷணன்** : அவன் மாயையில் வல்லவன்! இந்த இரவு நேரத்தில், ராமலட்சுமணரைப் பாதாள லோகத்திற்குத் தூக்கிப்போக வருகின்றானாம்! அங்கு கொண்டுபோய்க் காளிக்குப் பலியிடப் போகிறானாம்!

**அனுமன்** : இதெல்லாம் அவன் எண்ணம்! அவன் இங்கு வந்தால், அவனை மண்ணிலே தேய்க்க வேண்டியது, என் கால் வண்ணம்!

**விபீஷணன்** : உன் ஆற்றல்தான் எனக்குத் தெரியுமே! அவன் நேருக்கு நேர் மோத மாட்டான்! நீருக்குள் மீன்போல மறைந்திருந்து காரியமாற்றுவான்!

**அனுமன்** : இப்படி அஞ்சிக் கிடப்பது பேதைமை! இப்பொழுது நான் என்ன செய்ய வேண்டும்! அதைச் சொல்லுங்கள்.

**விபீஷணன்** : இந்த இரவு நேரத்தில், பகை நுழையாதபடிப் பர்ணசாலையைக் காவல் காக்க வேண்டும். அவன், பாதாள லோகத்தை விட்டுக் கிளம்பி விட்டதாகத் தெரிகிறது.

**அனுமன்** : என் வாலால், இந்தப் பர்ணசாலையைச் சுற்றிக் கோட்டை அமைத்துக் கோபுரம் சமைத்து, அதன் உச்சியில் குந்தியிருக்கிறேன்!

[அவ்வாறே, தன் வாலால் கோட்டை அமைத்து,
அதன்மேல் அமர்ந்திருக்கிறான் அனுமான்.]

**விபீஷணன்** : (வியப்போடு) ஆஹா! நீயிருக்க, எந்த மாயாவியும் என்ன செய்ய முடியும்?

உன் துணை இருந்தால் போதும்! வேறு தெய்வத்தின் துணை தேவையில்லை!

**அனுமன்** : இது வஞ்சப் புகழ்ச்சியில்லையே!

**விபீஷணன்** : ஐயையோ! அதெல்லாம் இல்லை! நான் பர்ண சாலைக்குள் சென்று, ராமலட்சுமணரை எச்சரித்துவிட்டு வருகிறேன்!

**அனுமன் :** சென்று வாருங்கள். ராமன் அடிமை காவல் இருக்கிறான் என்பதையும் சேர்த்துச் சொல்லிவிட்டு வாருங்கள்.

**விபீஷணன் :** ராம்! ராம்!

[விபீஷணன் பர்ணசாலைக்குள் போகிறான்]

## காட்சி-374

*பர்ணசாலைக்குள்*

[பர்ணசாலைக்குள் வந்து நிற்கும் விபீஷணனை, ராம லட்சுமணர் பார்க்கின்றனர்].

**ராமர் :** என்ன விபீஷணா! இந்நேரத்தில் இங்கு வந்திருக்கிறாய்!

(விபீஷணன், ராமலட்சுமணரை உற்றுப் பார்க்க, ராமலட்சுமணர் மயங்கிச் சாய்கின்றனர்.)

## காட்சி-375

*பர்ணசாலைக்கு வெளியே*

[பதறியபடி பர்ணசாலைக்கு வெளியே வருகிறான் விபீஷணன்.]

**விபீஷணன் :** (பதற்றத்தோடு) அனுமான்! அந்த மயில் ராவணன் இப்பொழுது, வானத்தில் எங்கோ ஒரு மேகத்தில் மறைந்திருக்கிறானாம்!

நீ கோட்டையைக் கலைத்து விட்டு, விஸ்வரூபம் எடுத்து, வானத்தைத் துருவிப்பார்! அவன் கிடைத்தவுடன், அவன் குடலை உருவி மாலையாகப் போட்டுக்கொள்!

**அனுமன் :** அப்படியே செய்கிறேன். தப்படி நடந்தவர்கள், தக்கபடி கவனிக்கப்பட வேண்டும். தர்மத்தின்படி கிடைக்கும் அந்தத் தீர்ப்பு.

*[அனுமான் இப்பொழுது, வாலால் அமைத்த கோட்டையைக் கலைத்து விட்டு, விஸ்வரூபம் எடுத்து நிற்கிறான்.*

*வானத்தை எட்டியிருக்கிறது அவன் முகம். வானமெங்கும் உன்னிப்பாகப் பார்க்கிறான். இப்பொழுது விபீஷணன், மயங்கிக் கிடக்கும் ராமலட்சுமணரைத் தன் இரு தோளில் தூக்கிக் கொண்டு, அனுமன் அறியாமல், அனுமனின் விரித்த கால்களுக்கிடையே நடந்து, அங்கிருந்து சென்று விடுகிறான்.]*

## காட்சி-376

*மலைப் பாங்கான இடம்*

[மலைப் பிரதேசத்தில், மயில் ராவணன், தன் சுய உருவத்தோடு, மயங்கிக் கிடக்கும் ராமலட்சுமணரைத் தூக்கிச் செல்கிறான்.]

## காட்சி-377

*மலைப் பாங்கான இடம்*

[வேறொரு திசையில் இருந்து, உண்மையான விபீஷணன், பர்ணசாலையை நோக்கி, விரைந்து வருகிறான்.]

## காட்சி-378

*பர்ணசாலைக்கு வெளியே*

[இங்கு வருகின்ற விபீஷணன், விஸ்வரூபம் எடுத்திருக்கும் அனுமனை வியப்போடு பார்க்கிறான்.]

**விபீஷணன் :** என்ன அனுமன் இது! இப்பொழுது எதற்கு இந்த விஸ்வரூபக் கோலம்?

**அனுமன் :** நீங்கள் தானே, விஸ்வரூபம் எடுத்து, வானத்தில் மயில் ராவணன் மறைந்திருக்கிறானா - என்று பார்க்கச் சொன்னீர்கள்!

**விபீஷணன் :** (அதிர்ச்சியோடு) நான் சொன்னேனா?

**அனுமன் :** ஆமாம் - சொன்னது அதற்குள் மறந்து விட்டதா?

**விபீஷணன் :** மாயாவி, என் உருவில் வந்து, உன்னை இடறச் செய்திருக்கிறான்!

(பதறியபடி) நம் நாயகர்கள் உள்ளே நலமாக இருக்கிறார்களா, என்று பார்ப்போம்.

## காட்சி-379

*பர்ண சாலைக்குள்*

[பர்ணசாலைக்குள், ராமலட்சுமணர் இல்லாததை, அதிர்ச்சியோடு பார்க்கின்றனர். விபீஷணனும் அனுமனும்.]

**விபீஷணன் :** அந்த மயில் ராவணன், என் உருவில் வந்து, தர்மத்தின் உருவங்களைப் பாதாள லோகத்திற்குக் கவர்ந்து சென்று விட்டான்!

தெய்வம் மண்ணில் படர்ந்ததுபோல, நடமாடிய மனிதர் களைத் தன் மாயையால் மயக்கமடையச் செய்திருப்பான்!

**அனுமன் :** (கோபத்தோடு) சஞ்சீவி மலையைத் தூக்கி வந்த வனைச் சந்திக்கு இழுத்து விட்டான், அந்தச் சண்டாளன்!

அவன் உயிரைப் போக்கி, உத்தமர்களை மீட்கா விட்டால், என் கதை கந்தலாகிவிடும்!

இப்பொழுதே எறும்பு உரு எடுத்து, மண்ணைக் கிளறிப்பாதாள லோகம் செல்கிறேன். அந்தப் பாவியைக் கொல்கிறேன்! பழி என்னைப் பற்றாமல் இருக்கப் பாற்கடல் அமுதன்ன, என் அண்ணல்களை மீட்கிறேன்!

*[அனுமன் இப்பொழுது எறும்பு உரு எடுத்து,
மண்ணைக் கிளறி மறைகிறான்.]*

**விபீஷணன் :** *(இதைப் பார்த்தபடி) ராம்! ராம்!*

## காட்சி-380

*பாதாள லோகத்தின் வாயில்*

[பாதாள லோகத்தில் நுழையப் போகும் அனுமனை, ஓர் இளவீரன் தடுத்து நிறுத்துகிறான்.]

**இளவீரன் :** *அன்னியர்கள், பாதாள லோகத்தில் நுழைய அனுமதியில்லை.*

**அனுமன் :** *கண்ணியமானவர்கள் இருக்கும் இடத்தில், நான் அனுமதியில்லாமல் நுழைவதில்லை.*

*ஆனால், இது கள்ள மனம் கொண்டோர் பதுங்கி இருக்கும் கொடுங்குகை!*

*கவர்ந்து கொண்டுவரப்பட்ட, அறத்தின் சித்திரங்களை மீட்க வந்திருக்கிறேன்!*

**இளவீரன் :** *நீ ஆயிரம் கதை சொன்னாலும், ஓர் அடி, உள்ளே எடுத்து வைக்க முடியாது!*

**அனுமன் :** *என் வலிமையைக் காட்டினால், நீ சிதறிப் போவாய்!*

**இளவீரன் :** *வீறாப்பு பேசுவது வீரமாகாது! நீ இங்கிருந்து போகாவிட்டால், மரணத்தோடு நீ போக வேண்டியிருக்கும்!*

**அனுமன் :** *பொடியனே! என்னடா சொன்னாய்?*

**இளவீரன் :** *சிறுத்திருக்கும் கடுகைச் சிறுமையாக எண்ணாதே!*

*போ, இங்கிருந்து! - உன் மனையாளின் மாங்கல்யம் நிலைத்திருக்க! போகமாட்டாய்..?*

*[அந்த இளவீரன், அனுமன் மேல் பாய, இருவரும்
கட்டிப்புரண்டு சண்டையிடுகின்றனர்.
இருவர்க்கும் வெற்றி தோல்வியின்றி, சண்டை
நீண்டு கொண்டே போகிறது.]*

**அனுமன்** : (சண்டையிடுவதை நிறுத்திவிட்டு, வியப்போடு) இளைஞனே! எனக்குச் சமதையாக ஆற்றலைக் காட்டுகிறாயே! யார் நீ? உனக்கு இவ்வளவு வலிமை எப்படி வந்தது?

**இளவீரன்** : நான் ஆல விருட்சத்தின் விழுது! வீர அனுமானின் மைந்தன், மகரத்துவஜன்!

**அனுமன்** : (அதிர்ச்சியோடு) யார்? அனுமானின் மைந்தனா?

**மகரத்துவஜன்** : (பெருமையோடு) ஆம். அந்த ராமதூதனின் புதல்வன் நான்! கடலைக் கடந்தவன், சஞ்சீவி மலையைக் கொணர்ந்தவன், என் பிதா! அவன் மகன் இளைத்தவனாக இருப்பானா? அதனால்தான் உன்னை எதிர்த்து இங்கு தடுத்து நிறுத்தினேன்.

**அனுமன்** : ஒரு பிரம்மச்சாரிக்கு எப்படிப் பிள்ளை இருக்க முடியும்?

**மகரத்துவஜன்** : ஊரெல்லாம் அப்படிப் பேசிக்கொள்கிறார்கள்! ஆனால், என் தந்தை, என்னை மறுக்க மாட்டார்!

ஏன் என்றால், அவர் சத்திய சீலர்!

**அனுமன்** : நீ பேசுகின்ற அனுமன் நான்தான்!

**மகரத்துவஜன்** : (இன்ப அதிர்ச்சியோடு) அப்படியா!

[அனுமனை வணங்கி எழுகிறான் மகரத்துவஜன்.]

**மகரத்துவஜன்** : அலை ஆர்ப்பரிப்பதுபோல், ஆர்ப்பரித்து விட்டேன்! ஆழமான கடலாக அடங்கியிருந்து, எனக்கு உயிர்ப்பிச்சை அளித்து விட்டீர்கள்! நீங்கள் அறியாமல், சொந்த பந்தம் இங்கு விளையாற்றி விளையாடியிருக்கிறது! என் உயிரைக் காத்திருக்கிறது!

**அனுமன்** : இதோபார், மகரத்துவஜன்! நான் எந்தப் பெண்ணையும் மனதாலும், காயத்தாலும் தீண்டியது இல்லை! எனக்குப் புதல்வன் நீ என்பது, ஏற்க முடியாத ஒன்று!

**மகரத்துவஜன்** : என் தாய் சொன்னதைச் சொன்னேன்! தாய் காட்டத்தானே, தந்தையை அறிகிறோம்!

**அனுமன்** : *யார் உன் தாய்? எனக்குத் தாரம் என்று உன்னை ஏமாற்றும், பெண் உரு எடுத்த பெருமையில்லாதவள்!*

[*இப்பொழுது சுவர்ச்சலாதேவி, அங்கு வந்து நிற்கிறாள்.*]

**சுவர்ச்சலாதேவி** : *நான்தான், இவனது அன்னை! தங்களது பத்தினி! உங்கள் சுவர்ச்சலாதேவி!*

**அனுமன்** : *(கோபத்தோடு) நான் உன்னைத் தொட்டதே இல்லை! என் ஐயன் ராமன் ஆணையாக, இதைக் கூறுகிறேன்!*

**சுவர்ச்சலாதேவி** : *உண்மைதான்! தெய்வீக புருஷர்களின் வாழ்க்கையிலே நடக்கின்ற நிகழ்ச்சிகள், இயற்கைக்கு மாறுபட்டுத்தானே இருக்கும்!*

*உங்களை வாயுபுத்திரன் என்றும், சிவாம்சம் என்றும் சொல்கிறார்களே!*

**அனுமன்** : *பேச்சைத் திசை திருப்ப வேண்டாம். என் புதல்வன் இவன் என்பது, நீ கட்டிவிட்ட கதை!*

**சுவர்ச்சலாதேவி** : *இல்லை. நான் கட்டிக் காத்த வைராக்கியத்தால், உங்கள் மூலமாக, இவனைப் பெற்றேன்!*

*நீங்கள் லங்கையைத் தகனம் செய்து விட்டுச் சமுத்திரத்தில் குளித்தபோது, மீன் உருவில், உங்கள் வியர்வையை உண்டு கருத்தரித்தேன்! நான் பெற்ற வெற்றியாக, இந்த வீரப்புதல்வனைப் பெற்றெடுத்தேன்! பிறந்தவுடனேயே பிரகாசமாக, இந்த வளர்ச்சியைப் பெற்றுவிட்டான், நம் செல்வன்!*

[*இப்பொழுது 'உண்மை! உண்மை!' என்று பல குரல்கள் ஒலிப்பது கேட்கின்றன.*]

**சுவர்ச்சலாதேவி** : *என் கூற்றை ஆமோதித்துத் தேவர்கள் எழுப்பும் குரல்கள், இந்தப் பாதாள லோகத்திலும் எதிரொலிக்கின்றன!*

**அனுமன்** : *உன் பேச்சை நம்புகிறேன். எனக்கொரு புத்திரன் பிறக்க வேண்டும் என்று எழுதிய எழுத்து, வென்று விட்டது.*

*ஆனால், நான் தோற்கவில்லை! என் பிரம்மச்சரியத்தை, நான் விட்டுக்கொடுக்கவில்லை!*

**சுவர்ச்சலாதேவி :** அந்தப் பெருமை நிச்சயமாக உங்களுக்கு உண்டு. கடையாமல் திரண்ட அமிர்தம் இவன்! கை கலவாமற் பிறந்தவனைக் கையாரத் தழுவிக் கொள்ளுங்கள் சுவாமி!

(அனுமன், மகரத்துவஜனைக் கைகளால், மார்புறத் தழுவிக் கொள்கிறான்.)

## காட்சி-381

*கயிலை மலை*

**உமையம்மை :** தான் அறியாமலேயே, தனக்கொரு பிள்ளையைக் கண்டுவிட்டது, உங்கள் சிவாம்சம்!

**சிவனார் :** 'நான் ஒன்றும் அறியேன் பராபரமே' என்று இருந்த அனுமனைப் பிதாவாக்கி, அவன் பிள்ளையைக் காட்டி விட்டாள், அந்தப் பெண்!

பெண்கள், நினைத்ததை முடித்துக் கொள்கிறார்கள்! அணிகலன்களைப் போல, ஆடவர்களையும் எடுத்தாளு கிறார்கள்!

பிரம்மச்சரிய விரதத்திற்கு எங்கும் ஆபத்து காத்திருக்கிறது!

[இதைக் கேட்டுச் சிவகணங்கள் சிரிக்கின்றனர்.]

## காட்சி-382

*பாதாள லோகம்*

**சுவர்ச்சலா தேவி :** (அனுமனைப் பார்த்து) பலவான் பிள்ளை பழுதாகுமா? உங்கள் பிள்ளையின் வீர தீரத்தைக் கண்டு, தனக்கு அடிமையாக்கிக் கொண்டான், அந்த மயில் ராவணன். இந்தப் பாதாள லோகத்தின் வாயிலில், காவல் காக்கும் பணியினைக் கொடுத்துவிட்டான். பிணி போன்ற அவனிடமிருந்து எங்களால் மீள முடியவில்லை.

இவனுக்கு மீட்சி, தங்களாலும், அந்த ராமபிரான் அருளாலும்தான் கிடைக்க வேண்டும்.

வரவேண்டியவர் வந்து விட்டீர். வசந்தகாலம் எங்களுக்கு அதனால் தொடர்ந்து வரும்.

**அனுமன் :** உன் நம்பிக்கைப்படி நலமே விளையும். அந்த மயில் ராவணனைக் கொன்று, என் தெய்வங்களான ராம லட்சுமணரை மீட்டு, நம் புதல்வனை, இந்தப் பாதாள லோகத்தின் மன்னன் ஆக்கி விடுகிறேன்.

**சுவர்ச்சலா தேவி :** அந்த அரக்கனைக் கொல்வது, அவ்வளவு எளிதல்ல. எந்த ஆயுதத்தாலும், அவனை அழிக்க முடியாது. அவனை நோக்கி வீசுகின்ற ஆயுதமெல்லாம் முனை மழுங்கிப் போகுமே தவிர, அவன் வெட்டின்றி, ரத்தத் திட்டின்றி, ஆர்ப்பரித்துக் கொண்டு நிற்பான்.

அவன் உயிர், ஓரிடத்தில் பத்திரமாக ஒளித்து வைக்கப்பட்டிருக்கிறது!

அவன் உயிர் பற்றிய அந்த ரகசியம், வாசுகி என்னும் நாகதேவதையின் மகள் சந்திரசேனைக்கே தெரியும்.

**அனுமன் :** எங்கு இருக்கிறாள் அந்தச் சந்திரசேனை?

**சுவர்ச்சலா தேவி :** இங்குதான், மயில் ராவணனால் சிறைப் பட்டிருக்கிறாள்.

ராமன் பத்தினியை, ராவணன் சிறை வைத்திருக்கிறான்.

ராமரையே எண்ணியிருக்கும் இந்தப் பக்தையை, இந்த மயில் ராவணன் சிறை வைத்திருக்கிறான்.

இந்தக் கொடியவர்கள் இருவரும் நண்பர்கள்.

**அனுமன் :** தங்கள் குடியோடு அழியப் போகும் நாசகாரர்கள்!

## காட்சி-383

*பாதாளச் சிறை*

**சந்திரசேனை :** ராம்! ராம்! ராம்!

[இப்பொழுது மயில் ராவணன் ஆர்ப்பரிப்போடு பாதாளச் சிறைக்கு வருகிறான்.]

**மயில் ராவணன் :** அந்த ராமனை அழைத்துக் கொண்டிருக் கிறாயா?

பைத்தியக்காரி! 'மயில் ராவணா!' என்று என்னை அழைத்தால், உன்னை மஞ்சத்தில் சேர்த்து, மிஞ்சு சுகம் அளிப்பேன்!

என் அரியணையில், என் அருகு அமரும் அந்தஸ்து அளிப்பேன்!

உன் கால் அளந்த இடத்தையெல்லாம், உனக்குக் காணிக்கையாக்குவேன்!

மாற்றானிடமிருந்து மனைவியை மீட்க முடியாதவன் அந்த ராமன்!

இப்பொழுது அந்த ராமனும் லட்சுமணனும், இந்தப் பாதாள லோகத்தில் சிக்கிக் கொண்டிருக்கிறார்கள்!

சிறகொடிந்த பறவையாகப் பல் இழந்த சிங்கமாகப் பரிதவித்துக் கொண்டிருக்கிறார்கள்!

இன்று இரவு, இங்குள்ள காளி கோயிலில் பலியாகப் போகிறார்கள்!

அவர்கள் ரத்தத்தைத் திலகமாக இட்டுக் கொண்டு வந்து, என் சித்தப்படி, உன் சந்தன மேனியைச் சுவைக்கிறேன்!

காதல் சமரிலும், நான் தீரன் என்பதை, உனக்குத் தெரியப்படுத்துகிறேன்!

அதுவரை வேண்டுமானால், சாகப் போகின்றவனின் பெயரைச் சத்தமாகச் சொல்லிக் கொண்டிரு!

அந்த ஆத்மா, அதனால் திருப்தியடையட்டும்!

[இவ்வாறு கூறிவிட்டு, மயில் ராவணன் அங்கிருந்து சென்று விடுகிறான்.]

## காட்சி-384

*காளி சிலை இருக்கும் இடம்*

[காளி சிலை முன் அனுமன், காளிபோல் கோலமிட்டுச் சிலைபோல் நின்று கொள்கிறான்.

அரக்கர்கள் புடைசூழ, ராமலட்சுமணர்களைப் பிணைத்து இழுத்து வந்தபடி, அங்கு வருகிறான் மயில் ராவணன்.]

**மயில் ராவணன் :** *(காளி சிலையை உற்றுப் பார்த்தபடி...) என்ன! இன்று காளி புதிய உருவம் காட்டி நிற்கிறாள்! நாமே மாய உருவம் எடுக்கும் பொழுது, அவள் எடுக்க மாட்டாளா என்ன!*

*[கட்டுண்டு இருக்கும் ராமலட்சுமணர், அனுமனை அடையாளம் கண்டு கொண்டு, புன்முறுவல் பூக்கின்றனர்.]*

**மயில் ராவணன் :** *தாயே! உன் வயிறு குளிரப் படையல் வைத்திருக்கிறோம். அதை ஏற்று, எங்களை ஆசீர்வதி! உன் ஆசிதான் எங்களுக்குச் சுவாசம் தாயே!*

*[அனுமன் தட்டில் வைக்கப்பட்டிருக்கும் பழங்களை எடுத்து உண்கிறான்.]*

**மயில் ராவணன் :** *தாயே! கனிகளோடு நீ திருப்திப்பட மாட்டாய் என்று எனக்குத் தெரியும்.*

*ரத்தம் ஒழுகிட, நர மாமிசம் தின்ன, நீ நாக்கைச் சப்புக் கொட்டிக் காத்திருக்கிறாய்! அப்படித்தானே?*

*அதற்காகத்தான், இந்த மானிடரைப் பலியிட இழுத்து வந்திருக்கிறேன்!*

*ராஜவம்சம்! அடி முதல் முடி வரை அமிர்தமாகச் சுவைக்கும்!*

*சாப்பிட்டுப் பார்! இப்படியொரு விருந்தை, நீ எந்த லோகத்திலும் கண்டிருக்க மாட்டாய்!*

*சரயு நதி தண்ணியில் விளைந்த சத்தான உடம்பு இவை!*

**காளியின் கோலத்தில் இருக்கும் அனுமன் :** *அடே மூடா! மனிதர்களைப் பலியிடுங்கள் என்று நான் எப்போதடா*

உங்களைக் கேட்டேன்? நீங்கள் நரமாமிசம் தின்பதற்கு, என்னையும் இழுக்கிறீர்களே, பாவிகளே!

உயிர்களைப் படைத்த நான், அந்த உயிர்களை உண்டு கொண்டிருந்தால், எப்படி நான் தாய் ஆவேன்?

மனித ரத்தம் குடிக்கும் பேய்களே! கும்பிடு போட்டு, உங்கள் கூட்டத்திற்குள், என்னையும் சேர்க்கிறீர்களா?

**மயில் ராவணன் :** இது காளியின் பேச்சல்ல! காளி வேஷத்தில் இருக்கும் அனுமன் பேசுகிறான்!

அவனை ஏமாற்றினேன்! என்னை ஏமாற்ற இங்கு வேஷங்கட்டி நிற்கிறான்!

இங்கு வந்தவன், உயிரைத் தந்துதான் ஆகவேண்டும்! காளியின் படையலுக்குப் பதார்த்தம் இன்னொன்று சேர்ந்து விட்டது!

அந்தக் குரங்கைப் பிடித்துக் கொன்று கிடத்துங்கள்!

[அரக்கர்கள் அனுமன் மேல் பாய, அனுமன் அவர்களை வீசி எறிகிறான். ராமலட்சுமணரும் கட்டுக்களிலிருந்து விடுபடுகின்றனர்.]

## காட்சி-385

*கயிலை மலை*

**உமையம்மை :** (சிவனாரிடம்) ராமலட்சுமணர்கள் விடுபட்டு விட்டார்கள். நாம் விரும்பியது நடந்து விட்டது. ஆனால், அவர்களாலோ, அனுமானாலோ, மயில் ராவணனைக் கொல்ல முடியவில்லையே!

**சிவனார் :** காரணம், அவன் உயிர், அவன் உடலில் இல்லை! அவன் உடலைச் சிதைத்தாலும், அவன் உயிர் பிரியாது!

**உமையம்மை :** அவன் உயிர் எங்கு இருக்கிறது? அவனை அனுமான் கொன்றால்தானே, சிவாம்சம் சிறப்பாகப் பேசப்பெறும்!

## காட்சி-386

*பாதாள லோகம்*

[ராம லட்சுமணர் முன் கயிறுகளால் கட்டுண்டு நிற்கிறான் மயில் ராவணன்.]

***ராமர் :*** *எந்த அஸ்திரத்தாலும், இவனைக் கொல்ல முடியவில்லையே! இவனை இப்படியே விட்டுப் போவதா?*

***அனுமன் :*** *ஐயனே! இவனைக் கொல்லாமல் செல்வது, நெருப்பை அணைக்காமல் போவதைப் போன்றதாகும்!*

*தர்மம் வாழ, இவன் தலை சாய வேண்டும்!*

*இவன் உயிர் எங்கு இருக்கிறது என்ற ரகசியத்தைத் தெரிந்து கொண்டு, இவன் கதையை முடித்து விட்டு வருகிறேன்!*

*[இவ்வாறு கூறிவிட்டு, அனுமன் அங்கிருந்து செல்கிறான்.]*

## காட்சி-387

*பாதாளச் சிறையின் வாயில்*

[பாதாளச் சிறையின் வாயிலில், காவல் இருக்கும் அரக்கனை, அனுமன் அடித்து வீழ்த்தி, அவனைக் கட்டிப் போடுகிறான்.]

***அனுமன் :*** *நாக கன்னிகை சந்திரசேனை சிறைப்பட்டிருக்கும் இடம் இதுதானே?*

***அரக்கன் :*** *ஆமாம். ஆனால் உன்னால் உள்ளே நுழைய முடியாது.*

*(அங்கு புரண்டு கொண்டிருக்கும் ஒரு மலைப் பாம்பைக் காட்டி) அந்த மலைப்பாம்பு வழி விடாது! அதோ, அது வாயைத் திறந்து விட்டது! அதன் வயிற்றுக்குள் அடக்கமாகி, உன் ஆயுளை முடித்துக் கொள்!*

[பாம்பு, அனுமனைப் பற்ற நகர்கிறது. அனுமனோ, எறும்பு உரு எடுத்து, அதன் திறந்த வாய்க்குள் போய் விடுகிறான், பின்னர், பெரிய உருவம் எடுத்து, மலைப்பாம்பின் வயிற்றைக் கிழித்து, வெளியே வருகிறான்.]

**அனுமன் :** (அரக்கனைப் பார்த்து) பாம்பு இறந்து விட்டது. அநீதிக்குக் கொம்பாக இருக்கும் உன் தலைவன் வீழ்வதற்கு வழி காண்கிறேன்!

[இவ்வாறு கூறிவிட்டு, அனுமன் சிறையினுட் செல்கிறான்.]

## காட்சி-388

*பாதாளச் சிறையின் உள்ளே*

['ராம்! ராம்!' என்ற சொற்களை முணுமுணுத்தபடி, சந்திரசேனை அமர்ந்திருக்கிறாள். அனுமன் அங்கு வந்து வணங்கி நிற்கிறான். சந்திரசேனையும் அனுமனை வணங்குகிறாள்.]

**சந்திரசேனை :** ராம தூதராகிய தாங்கள் இங்கு வந்திருப்பதை அறிந்தேன். ராமலட்சுமணர், ஆபத்திலிருந்து மீண்டு விட்டனர் என்பதையும், என் தியானத்தின் மூலம் உணர்ந்தேன். அந்த ராமபிரானின் மீது பிரேமை கொண்டு, அவர் கைப் பிடிக்கக் காத்திருக்கிறேன்! என்னால் ஆவது உண்டெனில், சொல்லலாம். ராம சேவையில், என் பங்கு இருந்தால், என் மனம் மகிழ்ச்சியால் பொங்கும்!

**அனுமன் :** நாக கன்னிகையே! ராமபிரானிடம் தங்களை அழைத்துச் செல்லும் பொறுப்பை ஏற்கிறேன்.

அதற்கு முன்பு, புகைந்து கொண்டிருக்கும் அந்த மயில் ராவணன் என்னும் நெருப்பு, அணைய வேண்டும்! அவன் உயிரைப் பற்றிய ரகசியம், தங்களுக்குத் தெரியுமென்று எண்ணுகிறேன்.

**சந்திரசேனை :** ஆம். தர்மம் என்று அறிஞர் சொல்லும் தனிப்பொருள் தன்னைக், கர்மம் என்று ஆக்கிக் காட்டும் அனுமன் நீங்கள்! சொல்ல வேண்டியவரிடம் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டால், அதனால் மாள வேண்டியவன் மாள, தர்மம் வாழும்!

ஆஞ்சநேயரே! அந்த மயில் ராவணனின் உயிர், ஏழு கடலுக்கப்பால் உள்ள ஒரு குகையில், அங்கு இருக்கும் ஒரு பேழையில் இருக்கிறது.

அந்தக் குகையின் முன்னால், யாருமே உள்ளே போக முடியாதபடி, நெருப்பு எரிந்து கொண்டிருக்கும்.

அதையும் மீறி உள்ளே சென்று, பேழையைக் கைப்பற்றி விட்டாலும், அந்தப் பெரும்பாவி செத்து விடமாட்டான்!

அந்தப் பேழைக்குள், ஐந்து வண்டுகள் பறந்து கொண்டிருக்கும். அந்த ஐந்து வண்டுகளையும் பிடித்து, ஒரே சமயத்தில் கொன்றால்தான், அவன் உயிர் போகும்!

**அனுமன் :** ஐந்து வண்டுகளையும் ஒரே சமயத்தில் கொல்ல வேண்டும்! - அப்படித்தானே!

**சந்திரசேனை :** ஆம். அப்பொழுதுதான், அவன் ஐம்புலன்களும் அடங்கி, மரணமடைவான்! வண்டுகளை ஒன்றன்பின் ஒன்றாகக் கொன்றால், அவன் உயிருக்கு எந்த ஆபத்தும் வராது!

**அனுமன் :** புரிந்து கொண்டேன். தெரிந்து சொன்ன மார்க்கத்திற் சென்று, அந்த மயில் ராவணனின் உயிர் பறித்துத் திரும்புகிறேன்! தங்கள் உயிர் அனைய ராமபிரான் திருமுன், தங்களைச் சேர்க்கிறேன்!

[இவ்வாறு கூறிவிட்டு அனுமன் அங்கிருந்து போகிறான்.]

## காட்சி-389

*வானம்*

[கடலைத் தாண்டிப் பறக்கிறான் அனுமன்]

## காட்சி-390

*குகை*

[குகை வாயிலில் நெருப்பு எரிந்து கொண்டிருக்கிறது. இங்கு வந்து சேர்கின்ற அனுமன் அதைப் பார்க்கிறான்.]

***அனுமன் :*** *வருணதேவா! நீ மழையாகப் பொழிந்தால் தான், மண் செழிக்கும். மன்னனால் ஆள முடியும். மக்களால் வாழ முடியும். தர்மமான கர்மங்களை இந்தத் தரணியில் காண முடியும்.*

*இப்பொழுது இங்கு நீ மழையாகப் பொழிந்தால்தான் இந்த நெருப்பு அவியும். அந்த நீசனின் உயிர் பறிக்க என்னால் இயலும். என் ஐயனின் வெற்றி சித்திக்கும். என் அன்னை சீதாதேவியாரின் துன்பம் தொலையும்.*

*தர்மத்தின் பக்கம் நீ என்றால், இங்கு தடதடவென மழையைக் கொட்டு. ராமராஜ்யத்தை நீ விரும்பினால், இடி முழக்கி, உன் இசைவைத் தெரிவி. அறம் அழிக்கும் அந்த அரக்கன் அழிய, மின்னலைக் காட்டி, மழையென ஆர்ப்பரி.*

*[இப்பொழுது இடி மின்னலோடு இங்கு மழை பொழிய, நெருப்பு அணைகிறது. அனுமன் குகைக்குள் செல்கிறான்.]*

## காட்சி-391

*குகையின் உட்பகுதி*

[குகைக்குள் வருகின்ற அனுமன் அங்கு ஒரு பேழை இருப்பதைப் பார்க்கிறான்.

அந்தப் பேழையில் ஐந்து பெரிய வண்டுகள், ரீங்காரமிட்டபடி பறந்து கொண்டிருப்பதைப் பார்க்கிறான்.]

**அனுமன் :** இந்த வண்டுகளை வாயில் போட்டுக் கடித்துக் கொல்ல வேண்டும். ஆனால், இந்த ஐந்து வண்டுகளையும்

*ஒரே சமயத்தில் கொல்ல வேண்டுமே! அதற்கு ஐந்து வாய்கள் அல்லவா வேண்டும்? ஒரு முகத்திற்கு ஒரு வாய் என்பது தானே படைப்பின் இலக்கணம்!*

## காட்சி-392

*பாதாள லோகம்*

[கட்டுக்களிலிருந்து விடுபடுகின்ற மயில் ராவணன், ராமலட்சுமணரைத் தாக்குகிறான்.

ராமர், தன் பாணங்களால் அவனைச் சாய்த்து வீழ்த்துகிறார். தன் மேல் தைத்திருக்கும் பாணங்களைப் பிடுங்கி எறிந்து ஆர்ப்பரிக்கிறான் மயில் ராவணன்.]

**மயில் ராவணன் :** *நீங்கள் எய்யும் அம்புகளால், எனக்கு மரண மேற்படாது! நீங்கள் வில்லை வளைத்தால், விளைவது ஒன்றுமில்லை!*

*பாதாள லோகத்தில், நீங்கள் பலியாக வேண்டு மென்பது, பிரம்மன் எழுதிய எழுத்துக்கு மேல், நான் எழுதிய எழுத்து!*

*உங்களை மீட்க வந்த குரங்கு, எங்கோ மீளாத்திசை, நோக்கிச் சென்றுவிட்டது!*

*உங்கள் அந்திம காலம் நெருங்கி விட்டது! ஆத்ம சாந்திக்கு, ஏதாவது மந்திரம் இருந்தால், கூறிக் கொள்ளுங்கள்!*

## காட்சி-393

*பேழை இருக்கும் குகை*

[ஐந்து முகங்களோடு நிற்கிறான் அனுமன்.]

**அனுமன் :** *ஐந்து வண்டுகளையும் ஒரே சமயத்தில் கடித்துக் கொல்ல, பஞ்சமுகம் கொண்டுவிட்டேன்!*

சிவனுக்கு அஞ்சுமுகம்! இந்தச் சிறியவனும், பெரியதொரு கர்மத்திற்காக, அஞ்சுமுகம் கொண்டு விட்டேன்!

[தன் இருகைகளாலும் ஐந்து வண்டுகளைப் பற்றி, வாய்க்கு ஒன்றாகப் போட்டு, ஒரே சமயத்தில் அவைகளைக் கடித்துக் கொன்று வெளியே துப்புகிறான் அனுமன்.]

## காட்சி-394

*பாதாள லோகம்*

[இப்பொழுது ராம பாணம் பட்டு, மயில் ராவணன் தடுமாறுகிறான்; தத்தளிக்கிறான்.]

**மயில் ராவணன் :** *(பீதியோடு) எனக்கு மரணமா? எனக்கு மரணமா?*

*[பிணமாகப் பொத்தென வீழ்கிறான்.]*

**ராமர் :** *என் வில் அம்பால், இவன் இறக்க வில்லை! அனுமன், எங்கோ இருந்து, ஆற்றிய வினையால் இறந்து விட்டான்!*

## காட்சி-395

*குகை*

[பஞ்ச முகத்தோடு நிற்கும் அனுமன் முன், அசரீரிக் குரல் ஒலிக்கிறது.]

**அசரீரி :** *பஞ்சமுக ஆஞ்சநேயா! அஞ்சுகின்ற மானிடரெல்லாம், இந்தக் கோலத்தில், உன்னை வழிபட்டால், ஆறுதலைக் காண்பார்கள்!*

*பேய், பிசாசு, பில்லி சூனியம், பெருந்தீமை செய்யும் கொடிய மிருகங்கள், இவைகளால் எந்தத் தீங்கும் நேராது - உன் பஞ்ச முகத்தை ஆராதித்துத் துதித்தால்!*

***அனுமன் :*** *நான் வழிபடத் தக்கவனா?*

***அசரீரி :*** *ஆம். நீ மூவரோடு வைத்து எண்ணப் பெற வேண்டிய மூர்த்தி! வேதம் நான்காவது போல, நீ நான்காவதாக நாட்டப்பட வேண்டிய தெய்வம்!*

***அனுமன் :*** *நான் ராமபிரான் அடிமை! ராம கைங்கர்யம் செய்யும் சேவகன்!*

***அசரீரி :*** *உன் ராமன் மறைந்து விடுவான்! ராம மந்திரத்தைச் சொல்லும் நீ மறைய மாட்டாய்!*

***அனுமன் :*** *என் தாயை இன்னும் மீட்கவில்லை! இந்நிலையில் எனக்கேது பெருமை? என்னைத் தெய்வம் என்று கூறுவது தெய்வ நிந்தனையாகும்!*

*வாலோடு பிறந்த நான், என் தோளிலே ராம லட்சுமணரைச் சுமப்பேன்!*

*இந்தப் பணி எனக்குப் போதும்! வேறு எந்த ஆராதனையும் எனக்கு ஏற்றதல்ல!*

*குரங்கைக் கூத்தாடச் சொல்லிப் பார்க்கலாம்! அதைக் கும்பிட்டுப் பார்ப்பதா?*

***அசரீரி :*** *உன் கீர்த்தியை நீ அறியவில்லை! இந்த உலகு, அதை அறியும் நாள், வெகு தூரத்தில் இல்லை!*

***அனுமன் :*** *ஒரு சேவகன், மயக்கும் சொற்களில் கிறங்கிவிட்டால், அவன் செயல் இழந்து விடுவான்!*

*நான் கருமத்தில் கண்ணாயிருப்பவன்! ஏச்சும், உயர்வான பேச்சும், என்னைத் தளர வைத்து விடாது! என் சுய உருவெடுத்து என் சேவகத்தைத் தொடர்கிறேன். அந்தச் செங்கமலச் செல்வியை விடுவிக்க விரைகிறேன்.*

*(தன் சுய உருவில் அங்கிருந்து செல்கிறான் அனுமன்.)*

## காட்சி-396

*பாதாள லோகம்*

[சந்திரசேனையோடு ராமலட்சுமணர்களைச் சந்திக்கிறான் அனுமன். சந்திரசேனை, கண்ணில் திரளும் கண்ணீரோடு ராமரை வணங்குகிறாள்.]

**அனுமன் :** ஐயனே! இந்த நாக கன்னிகையின் நாமம் சந்திர சேனை. மயில் ராவணனால் சிறை வைக்கப் பெற்ற மாது. இவர்கள் உதவியால்தான், அந்த அரக்கனின் உயிர் இருக்கும் இடம்தெரிந்து, அவனை அழித்தது நமது செயல் ஆயிற்று!

**ராமர் :** தர்மம் வெல்ல, இந்தத் தையலாள், தன் பங்கைச் செய்திருக்கிறாள்! இவளைப் பாராட்டுவது, என் பேச்சுக்கு அழகு சேர்க்கும்.

**அனுமன் :** ஐயனே! இந்தக் கன்னிகை, தங்களை மணக்கத் தவம் இருக்கும் நல்லாள்!

இப்பிறவியும், இவ்வுடலும் ராமபிரானுக்கே என்று தீர்மானித்துத் தீக்கனலாகத் தேகத்தை வாட்டிக் காத்திருக்கும் கன்னிகை!

**ராமர் :** அனுமான்! இந்த மாதுக்கு, இப்பிறவியில் கிடைக்காதது இன்னொரு பிறவியில் கிடைக்கும்! இதற்கு நான் உறுதி கூறுகிறேன்! என் வார்த்தை, உருக்குலையாத சத்தியமாகும்!

**அனுமன் :** ஐயனே! தாங்கள் கூறுவது...

**ராமர் :** அயோத்தி ராமன், ஓர் ஏக பத்தினி விரதன்! இப்பிறவியில், இன்னொரு பெண்ணிற்கு என் வாழ்வில் பங்கில்லை! இது வேதம் போல் விளங்குகின்ற உண்மை!

துவாபர யுகத்தில், நான் கிருஷ்ணனாக அவதரிக்கும் போது, சத்யபாமா என்னும் நாமத்தோடு இருக்கும் இந்தப் பெண்ணை, நான் மணந்து கொள்கிறேன்!

யுகம் மாறி, இவள் கொண்ட தவம் பலிக்கட்டும்!

[இதைக் கேட்டவுடன், மகிழ்ச்சியோடு கை குவித்துக் கண்ணீர் அஞ்சலி செய்கிறாள் சந்திரசேனை.]

**ராமர் :** அனுமான்! உனக்கொரு புத்திரன், இங்கிருப்பதாக அறிந்தேன். அவனுக்குச் செய்ய வேண்டிய சீரைச் செய்து விட்டு, இங்கிருந்து கிளம்புவோம்.

ராவணன், தன் மரணத்திற்காக நம்மை எதிர்பார்த்துக் கொண்டிருப்பான்!

## காட்சி-397

*பாதாள லோகம்*

**ராமர் :** அனுமான்! நீ அறியாமற் பிறந்த உன் மகன், இந்த மகரத்துவஜன். மகனுக்காக இதுவரை நீ எதுவும் செய்த தில்லை! இப்பொழுது மொத்தமாக உன் அன்பைக் கொட்டிவிடு! இவன் சிரசிலே, மணிமுடியை, உன் கையால் சூட்டி, இந்தப் பாதாள லோகத்திற்கு மன்னன் ஆக்கிவிடு! உன் விருப்பம், என் கட்டளையாக வேஷம் இட்டு வந்து விட்டது. அதை நிறைவேற்றி வை.

[அனுமன், மகரத்துவஜனின் தலையில் மணிமுடியைச் சூட்டுகிறான். சுற்றியிருப்போர், மலர்களைச் சொரிகின்றனர்.

மகரத்துவஜன் ராமலட்சுமணரையும், தாய் தந்தையரையும் வணங்கி எழுகிறான்.]

**சுவர்ச்சலா தேவி :** (மகிழ்ச்சியோடு) என் கனவு மெய்யானது! என் கர்ப்பம், என் எண்ணம்போல் உருவானது!

பிள்ளையும் பிறந்தது; பெற்றவர் கையால் சிறப்பும் பெற்றது!

இனி நான் வேண்டுவது எதுவுமில்லை! (அனுமனை நோக்கி) நீங்கள் வேண்டுகின்ற பிரம்மச்சரிய விரதத்திற்கு, இனி நான் இடையூறாக இருக்கப் போவதில்லை!

மகனோடு இங்கு தங்கி விடுகிறேன். இந்த மகான்களோடு நீங்கள் சென்று, மாதரசியை மீட்டு, இந்த மண்ணிலே, தர்மத்தை வாழவையுங்கள்!

**ராமர் :** தர்ம தேவதை போல் தக்கன பேசிவிட்டாள், இந்த மாது.

அனுமான்! இங்கிருந்து நாம் எப்படி வெளியேறுவது?

**அனுமன் :** ஐயனே! நீங்கள் இருவரும் என் இரு தோளில் ஏறிக் கொள்ளுங்கள். நான் எறும்பு உரு எடுக்கும்பொழுது நீங்களும் குறுகிய உடலெடுத்து விடுவீர்கள்! மண்ணைக் கிளைத்து, மேலேறி, மண்ணுலகு சென்று விடலாம்.

**ராமர்** : *அனுமான்! தர்மத்தை வாழ்விக்க வந்த வள்ளல் நீ! நீ என்றும் நிலைத்திருந்தால்தான், இந்த நீள் உலகில் தர்மம் பிழைத்திருக்கும்!*

**அனுமன்** : *சூத்திரதாரி ஒதுங்கியே இருப்பார்! சுற்றிவிடும் பொருள் போல் ஆடிக் கொண்டிருக்கிறேன்! இதில் பெருமையும் புகழும் யாரைச் சேரும்? இந்தப் பாருக்குத் தெரியாதா, மூர்த்தி யாரென்பது?*

## காட்சி-398

*லங்கையில் ராவணன் அரண்மனை*

**ராவணன்** : *(அதிர்ச்சியோடு) இறந்து விட்டானா என் மயில் ராவணன்?*

*கடல் வற்றினாலும் அவன் கைவாள் தோற்காதே!*

*வானம் உதிர்ந்தாலும், அவன் வல்லமை வீழாதே!*

*யார் தேடினாலும், அவன் உயிர் இருக்கும் இடம் தென்படாதே!*

*எல்லாமே போயிற்றா? மலை ஆக இருந்தவன், மண்ணிலே விழுந்த பிணமாகி விட்டானா?*

*இனி என்னை நம்பியே நான் இருக்க வேண்டும்! வல்லமை பல பெற்ற நான், வரங்கள் பல பெற்ற நான், சிவன் கொடுத்த வாள் பெற்ற நான், களத்திலே இறங்காமல், பிறர் கையை நம்பி இருப்பதா?*

*வானம் உறுமாமல், அங்கு வட்டமிடும் பறவைகளை உறுமச் சொல்லிக் கேட்டுக் கொண்டிருப்பதா?*

*கொண்டு வாருங்கள் என் தேரை! - பகைவரைக் கொன்று குவிக்கும் என் திருவை!*

*நான் களம் சேர்ந்தால், அந்தச் சீதை, தன் கைகளால், தன் வயிற்றில் அடித்துக் கொண்டு அழவேண்டும்!*

அல்லது, அந்த அவலத்தை என் மண்டோதரி செய்ய வேண்டும்!

இந்த இரண்டில் ஒன்று, இன்று நடக்கும்படிச் செய்து விடுகிறேன்!

## காட்சி-399

*போர்க்களம்*

**ராவணன் :** வந்துவிட்டேன் போர்க்களம்! பாவம்! வான் உலகில், தேவமகளிர் ஒருவரையொருவர் பயத்தோடு பார்த்துக் கொள்கின்றனர்.

அந்த ராமலட்சுமணரை மாய்ப்பேன்! இல்லையென்றால் மாய்வேன்!

இதுதான் ராவணனின் சரிதம்! யுகம் மாறினாலும், இடம் பெறப் போகும் வீர சாஸ்திரம்!

## காட்சி-400

*கயிலை மலை*

**சிவனார் :** (உமையம்மையிடம்) மூண்டுவிட்ட போர், இன்றோடு முற்றுப் பெறும். இனி வெற்றி, வீர ராமனுக்கே!

**உமையம்மை :** அந்த ராவணனை இந்த அளவு, நீங்கள் வலிமை பெற விட்டிருக்க வேண்டாம்!

**சிவனார் :** செய்த தவத்தின் பயனை அனுபவித்தான். சாமவேதம் பாடினவனுக்குச் சன்மானம் தர வேண்டாமா?

அதைத்தான் தந்தேன்.

மங்கல நீர் ஆடிய பிறகு, மண் சேற்றிலே புரண்டு எழுந்தான். மாற்றான் மனைவியை அவன் நினைக்க ஆரம்பித்தவுடன், அவன் மனதிலிருந்து நான் வெளியேறி விட்டேன். மரணத்தை இன்று தழுவப் போகிறான்.

எமனுக்கு அச்ச மூட்டியவன், தன் புகழையெல்லாம் தொலைத்து, எச்சமாகப் பிணமாக எமன் கையில் சாயப் போகிறான்!

## காட்சி-401

*ராவணன் அரண்மனை*

[மண்டோதரி பூஜை செய்யக் கற்பூரம் ஏற்றும்பொழுது, அது எரிய மறுக்கிறது. இதைக் கண்டு மண்டோதரி குமுறிக் குமுறி அழுகிறாள்.]

**மண்டோதரி :** கற்பூரம் எரிய மறுக்கிறது! லங்கையின் பொற்காலம் பொசுங்கப் போகிறதா?

## காட்சி-402

*அசோகவனம்*

[அசோகவனத்தில் இருக்கும் சீதையின் மேல் பூக்கள் கொட்டுகின்றன.]

**சீதை :** (திரிசடையிடம்) திரிசடை! என் மேல் பூக்கள் உதிர்கின்றனவே!

**திரிசடை :** ஆமம்மா. இப்பொழுதுதான் தர்மம், தன் தடத்தைப் புரிந்து கொண்டு நடக்க ஆரம்பித்து விட்டது! இந்த நிமித்தம், அதைத்தான் உணர்த்துகிறது.

ராமபிரான் வெற்றிபெற்று, இன்று உன்னை மீட்கப் போகிறார்!

காலம் காலமாகப் பேசப்பெறும் ஒரு காவியம், மங்கலமாக முற்றுப் பெறப் போகிறது!

## காட்சி-403

*லங்கை நகர வீதி*

[அரக்க மகளிர் தங்கள் வீடுகளில் இருந்து, அலறியபடி வெளியே ஓடிவந்து கூடுகின்றனர்.]

**ஓர் அரக்கி :** *என் வீட்டுக்குள்ளே பேய் புகுந்து விட்டது!*

**இன்னொருத்தி :** *என் வீட்டுக்குள்ளேயும் ஒரு பேய் புகுந்து ஆட்டம் போடுது!*

**மற்றொருத்தி :** *என் வீட்டுக்குள்ளே புகுந்த பேய், அடுப்பு நெருப்பை அள்ளி அள்ளிச் சாப்பிடுகிறது!*

**வேறொருத்தி :** *போர்க்களம் போயிருக்கும் நம் மன்னர் திரும்புவாரா?*

*மண்டோதரியின் மங்கல நாண், அவள் கழுத்தில் அறுபடாமல் தொங்குமா?*

## காட்சி-404

*வானம்*

[வானத்திலே ராம பாணங்கள், ஒன்றன்பின் ஒன்றாகப் பறந்து செல்கின்றன.]

**ஒரு தேவர் :** *அதோ, ராம பாணங்கள் பறந்து செல்கின்றன. ராவண வதம், அதர்மம் பதறப் பதற நிகழப் போகிறது!*

## காட்சி-405

*போர்க்களம்*

[போர்க்களத்தில் நின்று அனுமன் கர்ஜிக்கிறான்.]

**அனுமன் :** *ராவணா! என் பெருமான், சிவனோ, பிரம்மனோ, திருமாலோ, தவமுனிவனோ என்று மயங்குகிறாயா?*

*வேதம் உரைக்கும் பரம்பொருள் இவனே! இவனே!*

இவன் கையால் உனக்கு மரணம் ஏற்படுவது, நீ விரும்பி ஏற்கும் வரமாகும்!

## காட்சி-406

*வான் உலகு*

[வான் உலகில் தேவர்கள் 'ராம்! ராம்!' என்று ராம மந்திரத்தைச் கூறிக் கொண்டிருக்கின்றனர்.]

## காட்சி-407

*போர்க்களம்*

[அனுமன் கர்ஜனை செய்கிறான்.]

## காட்சி-408

*போர்க்களம்*

[ராவணன், அம்பு பட்டுக் கீழே சாய்கிறான்.]

## காட்சி-409

*தேவலோகம்*

[இதைப் பார்க்கின்ற தேவர்கள், தங்கள் மேலாடையை உயரே வீசி, மகிழ்ச்சியில் ஆர்ப்பரிக்கின்றனர்.]

## காட்சி-410

*போர்க்களம்*

**அனுமன் :** *ராவணனின் முக்கோடி வாழ்நாளும், முயன்றுடைய பெருந்தவமும், முதல்வன் முன் நாள், எக்கோடி யாராலும் வெல்லப்படாய் எனக் கொடுத்த வரமும், ஏனைத் திக்கொடும் உலகு அனைத்தும் செருக் கடந்த புயவலியும், என் பிரானின் பாணத்தால் தின்னப்பட்டு விட்டன! இந்த ராமபாணம், ராவணன் மார்பில் புகுந்து உயிர் பருகிப் புறம் போயிற்று!*

## காட்சி-411

*போர்க்களம்*

[மண்ணிலே விழுந்து கிடக்கும் ராவணனைக் கண்ணீர் வழியப் பார்க்கிறான் விபீஷணன்.]

**ராமர் :** *(விபீஷணனை நோக்கி) விபீஷணா! இறந்தவர் மேல் பகை கொள்வது முறையாகாது. உன் அண்ணனுக்குச் செய்ய வேண்டிய ஈமக் கடன்களைச் செய்வாயாக.*

*[ராவணனின் சடலத்தைப் பார்த்துப் புலம்புகிறான் விபீஷணன்.]*

**விபீஷணன் :** *போர் மகளைக் கலைமகளைப் புகழ் மகளைத் தழுவிய கையோடு, நீ தரணியை ஆண்டிருக்கலாம்.*

*சீர் மகளைத் திருமகளைத் தேவர்க்கும் தெரிவு அரிய தெய்வக் கற்பின் பேர் மகளை, வேத நாயகனின் சீதா தேவியைத் தன் சிந்தையால் தவறாக நினைத்து, தன் உயிர் கொடுத்துப் பழி கொண்டா பித்தா!*

*திசையானையைத் தழுவி வென்ற உன் மார்பு, இப்பொழுது பார்மகளைத் தழுவிப் பிணமாகச் சாய்ந்திருக்கிறது!*

[இப்பொழுது மண்டோதரி ஓடிவந்து ராவணன் உடல்மேல் விழுந்து அழுகிறாள்.]

**மண்டோதரி** : தேவர்க்கும், திசை யானைகளுக்கும், சிவனார்க்கும், பிரம்மனுக்கும், செங்கண் மாலுக்கும், பிறருக்கும் இல்லாத வலிமை, உனக்கு உண்டென்று நம்பினேன். உனக்கு இறப்பு, ஒரு நாளும் வராது என்று இருந்தேன். நீ செய்த தவமும், நீ பெற்ற வரமும், ஒரு மானிடனால் சிதைக்கப்பட்டு விட்டதே!

பாற்கடல் போல் வரம் பெற்றிருக்கிறாய் என்று இறுமாந்து இருந்தேன். பிரையாக, அந்தச் சீதையைக் கொண்டு வந்தாய். அந்தப் பிரையால், விதி, பாற்கடலையே பாழாக்கி விட்டதே!

சீதையை எண்ணிய உன் நெஞ்சை, அந்த ராமன் பாணம் துளைத்துத் தேடியதோ!

இப்படித் துடிப்பின்றிக் கிடக்கின்றாயே! உலகத்து உயிர்கள் எல்லாம், உன் ஆணைப்படி நடித்துக் கொண்டிருந்ததே, என் நாயகா!

கற்புக்கரசிகளின் கண்ணீர், ஒரு பிரளயத்தையே உண்டு பண்ணும் என்பதை அறியாமற் போனாயே!

வேதம் அறிந்த உனக்கு, இந்த விவேகம் இல்லாமற் போயிற்றே!

உன் உயிர் நீங்கியபின், என் உயிர் தங்குமா?

[இவ்வாறு கூறி, ராவணன் உடல்மீது விழுந்து உயிர் துறக்கிறாள்.]

## காட்சி-412

*இடுகாடு*

[சங்கொலி முழங்க, விபீஷணன் ராவணன் சிதைக்குத் தீயிடத் தீ கொழுந்து விட்டு எரிகிறது.

விபீஷணன் கண்களில் இருந்து, கண்ணீர் வழிகிறது.]

**அனுமன் :** வேதம் ஓர் ஆயிரமும், விளங்கும் கலைகளும் ஓதிக் கற்றவன், மனதைப் போகாத வழியில் போகவிட்டதால், தீயிற் பொசுங்கி விட்டான்!

ஓராயிரம் ஆண்டு உபவசித்துச் செய்த தவம், ஒரு கற்புத் தெய்வத்தால் தீப்பட்டு அழிந்தது!

பிதாமகன் பிரம்மன் உவந்த அளித்த பெருவரங்கள், சீதாப்பிராட்டியால் சிதறுண்டு போனது!

பன்னரும் சாமகீதம் பரிவுடன் பாடிய வாய், பெண் தெய்வத்தைத் தரங்கெடப் பேசியதால், பேச்சொழிந்து பஸ்பம் ஆயிற்று!

பாடல் கேட்டுப் பரமன் மகிழ்ந்தழைத்து, முவ்வகை உலகும் ஆள, மூன்றரைக் கோடி ஆண்டும், எவ்வகைப் படையும் வெல்லும் சந்திரவாளும் ஈந்த அந்த வரலாறு, கரையில்லாத ஒரு பெருமாட்டியை நினைத்ததால் கறைபட்டுப் போயிற்று!

குறைப்பட்டுப் போயிற்று! அவன் பெருமைகள் அதர்மத்தால் கொள்ளை போயிற்று!

## காட்சி-413

*ஒரு சோலை*

**ராமர் :** (லட்சுமணனை நோக்கி)

லட்சுமணா! இந்தச் சோலையிலே நான் தங்கி இருக்கிறேன். நீ அனுமனோடு சுக்ரீவனோடு, லங்கை ஊருக்குள் சென்று, அரண்மனையை அடைந்து, இந்த நீதியான் விபீஷணனுக்கு, ஆதிநாயகனாம் திருமால் ஆக்கிய வேத முறைப்படி முடி சூட்டிவிடு.

## காட்சி-414

*லங்கை அரண்மனையின் அரசவை*

**அனுமன் :** என் ஐயன் ஆணையால் நம் இளையவர், விண்ணோர் வாழ்த்த நின்றுகொண்டிருக்கும் இந்த விபீஷணருக்கு, லங்காபுரியின் அரசாட்சியை ஒப்படைக்கும் அடையாள மாக இந்த மணி மகுடத்தைச் சூட்டுகிறார்.

[இவ்வாறு அனுமன் கூற, பல் வாத்தியங்களின் முழக்கத்திற்கிடையே, லட்சுமணன் மகுடத்தை விபீஷணனுக்கு அணிவிக்கிறான்.]

## காட்சி-415

*சோலை*

**ராமர் :** அனுமனே! அசோகவனத்தில் எனக்காகக் காத்திருக்கும் அந்தக் கற்பு மயிலிடம், நாம் வெற்றி பெற்று விட்டதை, விண்ணதிரக் கூறிவிட்டு வா!

**அனுமன் :** என் பிறப்பு, புனிதம் பெற்று விட்டது பெருமானே! இந்தத் தேகம் பெருமை பெற்று விட்டது! இந்த வானரன், ராமரின் உண்மையான அடிமை என்ற வரம் பெற்று விட்டான்!

போகிறேன், பிரானே போகிறேன்! புதுப் புனலாக அசோகவனம் போய், என் பெருமாட்டியின் காதில் தேனைச் சேர்க்கிறேன்!

## காட்சி-416

*சோலை*

[மகிழ்ச்சியோடு கர்ணம் அடித்தபடி சென்று கொண்டிருக்கிறான் அனுமன்.]

## காட்சி-417

*அசோகவனம்*

[தன் தலை மீது கை வைத்துத் தொழுதபடி, அனுமன், சீதை இருக்குமிடம் வருகிறான்.]

**அனுமன் :** *தாயே! மங்கலம்! தர்மமே! மங்கலம்! பெண் தெய்வமே! மங்கலம்! பெருமாட்டியே! மங்கலம்!*

*ராவண அரக்கனை, எம் பிரான் ராமரின் பாணம் வீழ்த்தியது! வெற்றி விளைந்தது!*

*அரக்கன் மாண்டான்! அதர்மம் அழிந்தது! அறம் மீண்டது!*

*இந்த மங்கலச் செய்தியைத் தங்களிடம் தெரிவிக்க, என் பெருமான், என்னை இங்கு அனுப்பி வைத்தார்!*

[இவ்வாறு கூறிவிட்டு அனுமன் குதித்துக் கூத்தாடுகிறான்.

இப்பொழுது மகிழ்ச்சியோடு எழுந்து நிற்கிறாள் சீதை. பரவச உணர்ச்சி, அவள் முகத்தில் கூத்தாடுகிறது. ஆழ்ந்த சிந்தனை வயப்படுகிறாள்.]

## காட்சி-418

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

*கன்னி மாடம்*

[கன்னி மாடத்தில் சீதை நின்று கொண்டிருக்கிறாள். முனிவரோடும் தம்பியோடும் வீதியிலே வருகின்றார் ராமர். சீதையும் ராமரும் ஒருவரையொருவர் ஆர்வத்தோடு பார்க்கின்றனர்.]

***பின்னணிக் குரல் :*** *கண்ணோடு கண் இணை கவ்வி ஒன்றை ஒன்று உண்ணவும் நிலைபெறாது, உணர்வும் ஒன்றிட, அண்ணலும் நோக்கினான். அவளும் நோக்கினாள்.*

## காட்சி-419

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

*அரசவை*

[ராமர் வில்லை முறிக்கிறார்.]

***பின்னணிக் குரல் :*** *ராமர் வில்லை எடுத்தது கண்டனர். அந்த வில் இற்றது கேட்டார்!*

## காட்சி-420

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

*கன்னி மாடம்*

[நீலமாலை என்னும் தோழி, பரவசத்தோடு பரபரப்போடு சீதை இருக்குமிடத்திற்கு வருகிறாள்.]

***சீதை :*** *நீலமாலை! ஏன் இந்தப் பரவசம்? பரபரப்பு? என்ன செய்தி?*

***நீலமாலை :*** விஸ்வாமித்திர முனிவரோடு வந்த அந்த மேக வண்ணன், செந்தாமரைக் கண்ணன், வில்லை முறித்து விட்டாரம்மா?

***சீதை :*** *(மிக்க மகிழ்ச்சியோடு) அப்படியா!*

## காட்சி-421

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

*திருமணக் காட்சி*

[சீதையின் கரம் பற்றி, வேள்வித் தீயை வலம் வருகிறார் ராமர்.]

***பின்னணிக் குரல் :*** தையலின் தளிர்க்கையைத் தன் தடக்கையால் பிடித்து, வேள்வியின் வெங்கனலை வலம் வருகின்றார்

*ராமர். உடம்பு உயிரைத் தொடர்கின்றதைப் போல், மாசறு சிந்தையாள், மணாளன் பின் நடக்கின்றாள்.*

## காட்சி-422

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

*திருமணக் காட்சி*

[சீதை அம்மி மிதித்து, அருந்ததி பார்க்கிறாள்.]

***பின்னணிக் குரல் :*** *அம்மி மிதித்து, எதிர் நின்ற கலங்கல் இல் கற்பின் அருந்ததி காண்கிறாள்.*

## காட்சி-423

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

*திருமணக் காட்சி*

[மட்டின்றி மகிழ்ச்சி ஆரவாரம் கேட்கிறது]

***பின்னணிக் குரல் :*** *ஆர்த்தன பேரிகள்! ஆர்த்தன சங்கம்! ஆர்த்தன நான்மறை! ஆர்த்தனர் வானோர்! ஆர்த்தன வண்டு இனம்! ஆர்த்தன கடல் அலை!*

## காட்சி-424

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

*அயோத்தி அரண்மனை*

[ராமர் முன், வாட்டத்தோடு நின்று கொண்டிருக்கிறாள் சீதை.]

***சீதை :*** *(ராமரை நோக்கி)* என் நாயகரான நீங்கள் வனம் செல்லப் போகிறீர்கள் என்பதாலோ, அரசாளும் மண்ணை இழந்து விட்டீர்கள் என்பதாலோ. நான் வருந்தவில்லை!

"நீ வருந்தாமல் இங்கு இரு; நான் நீங்குகிறேன்" என்று எனைப் பார்த்துச் சொன்ன தீயவெஞ்சொல், என் செவிசுடத் தேம்புகிறேன்! விம்முகிறேன்!

**ராமர் :** *சீதை! உன் பாதங்கள் தாங்க முடியாத அழல் காட்டில் உன்னால் நடந்து வர இயலுமா?*

*சீதை : நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு?*

## காட்சி-425

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

*கங்கை நதி*

[கங்கையிலே குகன் படகைச் செலுத்த, மூவரும் கங்கையைக் கடக்கின்றனர். அப்பொழுது ராமரும் சீதையும், ஒருவர் மேல் ஒருவர் நீரை அள்ளி வீசி மகிழ்கின்றனர்.]

**பின்னணிக் குரல் :** குகனின் படகில், கங்கையைக் கடக்கும் பொழுது பால் உடை மொழியாளும், பகலவன் அனையானும், சேலுடை நெடு நல் நீர் சிந்தி விளையாடுகின்றனர்.

## காட்சி-426

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

*கங்கைக் கரை*

**ராமர் :** *(குகனை நோக்கி) என்னோடு சித்திர கூடத்திற்கு வருவதாகக் கூறும் குகனே! உன் அன்பு கண்டு, மனம் நெகிழ்கின்றேன்! என் உயிர் அனையாய்! நீ என் இளவல்! லட்சுமணன் உன் இளையான்! இந் நன்னுதலால், உனக்கு உறவினள்! நால்வராகப் பிறந்த நாங்கள், இனி உன்னோடு சேர்ந்து ஐவராய் ஆகிவிட்டோம்!*

## காட்சி-427

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

*சித்திர கூடம்*

[பரதன் ராமரிடமிருந்து பாதுகை பெற்று, அவற்றைத் தன் தலைமேல் வைத்துக் கொண்டு போகின்றான்.]

***பின்னணிக் குரல் :*** *விம்மிய பரதன் திருவடித்தலம் தந்தீக என வேண்ட, அவ்வாறே ராமரும் அருள, அந்த அடித்தலம் இரண்டையும், அழுத கண்ணினான், தன் முடித்தலம் இவை என்று, தலையில் சூடிப் போகின்றான்!*

## காட்சி-428

*முன்னர் நடந்த நிகழ்ச்சி*

*பஞ்சவடி பர்ணசாலைக்கு வெளியே*

**சீதை :** *(ராமரை நோக்கி) கொற்றவன் மைந்த! அந்தப் பொன்மானைப் பிடித்துக் கொடுத்தால், பொழுதெல்லாம் இனிமை காண்பேன். நான் கேட்டுத் தாங்கள் மறுக்கலாமா? என் இதயம் அதைத் தாங்குமா?*

*[இவ்வாறு கூறிச் சீதை கண் கலங்குகிறாள்.]*

**ராமர் :** *இந்தக் கானில் உலவும் மயில் அனையாளே! அந்த மானைப் பற்றி வருவேன். வேல் நகு சரமும், வில்லும் வாங்கி விரைகின்றேன். (லட்சுமணனை நோக்கி) என் கண்ணான இளவலே! இங்கு காவல் இரு. அது மானல்ல என்ற உன் மறுப்புரை, என் மனதை மாற்றவில்லை. மாதரசியின் சினம் காணும் ஆற்றல் அற்றவன் நான்!*

*[வில் அம்பெடுத்து அங்கிருந்து விரைகிறார் ராமர்]*

## காட்சி-429

*அசோகவனம்*

[சீதை, சிந்தனை வயப்பட்டு, மௌனமாக இருப்பதைப் பார்க்கிறான் அனுமன்.]

**அனுமன் :** *தாயே! இந்த மௌனம் ஏன்?*

**சீதை :** *பழைய பசுமையான நிகழ்ச்சிகள், என் நெஞ்சில் நினைவுகளாக நிழலாடின.*

*முன்னை நீ வந்து, நீக்குவேன் என் சிறை என்று பேசினாய்!*

*பேசியபடியே இன்று வந்து உவகையைப் பேசுகிறாய்!*

*இந்தப் பேற்றினைத் தந்த உனக்கு, நான் பிரதி உபகாரமாக என்ன செய்வது?*

*இதை உன்னி நோக்கி, உரை மறந்து மௌனமானேன்!*

*உலகம் மூன்றும், நீ செய்த உதவிக்கு விலை ஆகாது!*

*உன்னைத் தலையால் தொழுவதைத் தவிர, தகுதி வாய்ந்த செயல், வேறு இருப்பதாகத் தெரியவில்லை!*

**அனுமன் :** *(பதறியபடி) தாயே! தங்களைத் தொழும் கையும் தலையும் என்னுடையது! என்னுடையது!*

*ராமர் பணிக்கென, இந்த வானரமாக வந்திருப்பவன் நான்! என் பிறப்பு இதனால் பெருமையுறும்!*

**சீதை :** *அனுமான்! நான் உனக்கு ஏதாவது செய்யவேண்டாமா?*

**அனுமன் :** *எனக்கு அனுமதி அளியுங்கள்! அதுபோதும்!*

**சீதை :** *எதற்கு?*

**அனுமன் :** *திரிசடையைத் தவிர, மற்ற அரக்கியரைச் சுட்டெரிக்க! தங்களைத் துன்புறுத்திய துஷ்டப் பிறவிகள் அவர்கள்!*

**சீதை :** *வேண்டாம் அனுமான்! என் தாயை விட., எனக்கு நீ தக்கது செய்கின்றாய்!*

நான் இழைத்த வினையினால், எனக்கு இந்த இடர் வந்தது!

கூனிபோல் கொடியரோ இவர்கள்? இல்லவே இல்லை. அந்த ராவணன் சொன்ன சொற்படி நடந்தனர். வேறு வழி இல்லை அவர்களுக்கு.

இந்த அரக்கியர்க்கு வாழ்வு அளித்தால், எனக்கு நீ வரம் அளித்ததாகக் கொள்வேன்!

**அனுமன் :** தாயே! தங்கள் சொல்லே எனக்கு வேத மந்திரம்!

**சீதை :** அப்படியானால், வேத நாயகனை, நான் விரைந்து காண, என்னை அழைத்துச் செல்வாயா?

**அனுமன் :** தூது போகின்றவனுக்குத் தோதானதல்ல இந்தக் கௌரவம்!

லங்கையின் மன்னர் விபீஷணர், தங்களை என் பிரானிடம் அழைத்துச் செல்ல, இங்கு வருவார்!

எனக்கு இப்பொழுது விடை கொடுங்கள். தர்மத்தின் வடிவுடையவரைத் தக்கவரோடு வந்து காணுங்கள்!

[இவ்வாறு கூறிச் சீதையை வணங்கி நிற்கிறான் அனுமன்.]

## காட்சி-430

*சோலை*

[ராமபிரானிடம் வந்து சேர்கிறான் அனுமன்.]

**அனுமன் :** அன்னையார், தங்களைக் காணத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

'மன்னர் விபீஷணர் வந்து அழைத்துச் செல்வார்?' என்று கூறிவிட்டு வந்திருக்கிறேன்.

**ராமர் :** நான் பேச வேண்டியதை, நீயே பேசி விட்டாயா?

**விபீஷணன் :** (அவசரத்தோடு) நான் இப்பொழுதே புறப்பட்டுப் போகிறேன்!

(இவ்வாறு கூறி, விபீஷணன், ராமரைப் பார்த்துக் கை குவித்து நிற்கிறான்.)

**அனுமன் :** (விபீஷணனைப் பார்த்து) தாமதிக்காதீர்கள்! பெருமானைப் பிறகு சாவகாசமாக வணங்கிக் கொள்ளலாம்!

[இதைக் கேட்டு, விபீஷணன் அங்கிருந்து ஓட்டமெடுக்கிறான்.

ராமர் அர்த்தத்தோடு அனுமனைப் பார்க்க, அனுமனோ, 'ராம்! ராம்!' என்று முணுமுணுத்துக் கொண்டிருக்கிறான்.]

## காட்சி-431

*சோலை*

[ராமர் இருக்குமிடத்திற்கு, விபீஷணனோடு வருகிறாள் சீதை]

**அனுமன் :** தாயே! பச்சிலை வண்ணமும், பவள வாயும், கைச்சிலை ஏந்தி நிற்கும் காகுத்தன் இதோ தாயே!

**சீதை :** பிறப்பினும் துணைவர் இவர்! பிறவிப் பேரிடர் துறப்பினும், எனக்குத் துணைவர் இவரே!

[இவ்வாறு கூறி, ராமரை விழுந்து வணங்குகிறாள். பின்னர், ராமரைக் கண்ணீர் வழியப் பார்க்கிறாள். ராமரோ, சீதையைக் கடுமையாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்.]

**அனுமன் :** ஐயனே! கற்பினுக்கு அரசு, பெண்மைக் காப்பு, பொற்பினுக்கு அழகு, புகழின் வாழ்க்கை, தங்கள் முன் நின்று கொண்டிருக்க, தாங்கள் மௌனம் சாதிப்பதேன்?

**ராமர் :** (கடுகடுத்த முகத்தோடு) பேச ஆரம்பித்தால், தீயைத்தான் வீச வேண்டி வரும்! (சீதையை நோக்கி) சிறை இருந்து, நிறை இழந்த சீதையே! நீ, அரக்கனின் மாநகரிலே, பத்து மாத கால

*அளவு உறைந்து இருந்தாய்! ஒழுக்கம் பாழ்பட, அவன் கொடுத்த உணவை உண்டு உவந்து இருந்தாய்! இத்தனைக்கும் பிறகும், உன்னை விரும்பி ஏற்றுக் கொள்வேன் என்று கருதி இங்கு வந்தாயா?*

[இதைக் கேட்டு, அனுமன் பதறுகிறான்.]

**அனுமனின் மனக்குரல் :** *பகவானே! இது என்ன சோதனை? சீதா தேவிக்காக ஏங்கித் துடித்தவர், இப்பொழுது கோபத்தில் வீங்கி வெடிக்கிறாரே!*

*தங்கத்திலே சேறுபட்டு விட்டால், அதன் தரம் குறைந்து விடுமா?*

*பின் எதற்காகப் படையெடுத்து வந்து, ராவணனைக் கொல்ல வேண்டும்!*

**ராமர் :** *(கோபத்தோடு) தன் மனைவியைக் கவர்ந்தவனைக் கொல்லாவிட்டால், எனக்குப் பழி வந்து சேரும்!*

*அந்த இழிவை நீக்கி, ஷத்திரிய வீரத்தைக் காட்டவே, இங்கு வந்து ராவணனைக் கொன்றேன்! வேறு எவரையும் மீட்டுச் செல்ல அல்ல!*

**அனுமன் மனக்குரல் :** *ராம்! ராம்! இது நடிப்பா? இல்லை.... மாற்றான் வீட்டில் இருந்தவளை ஏற்றுக் கொண்டால், அபவாதம் வரும் என்று அச்சத்தால் வாய் பிதற்றுகிறாரா?*

**ராமர் :** *(சினத்தை முகத்தில் காட்டி, சீதையை நோக்கி)*

*நீ புழுப் போலப் பூமியில் இருந்து தோன்றியவள்தானே! நல்ல குலத்தில் பிறந்திருந்தால்......*

[இப்பொழுது சீதை, இதைக் கேட்கப் பொறுக்காமல் குமுறி அழுகிறாள்.]

**அனுமனின் மனக்குரல் :** *இறைவா! இந்தப் பேச்சைக் கேட்டு விட்டு, நான் சிரஞ்சீவியாய் வாழ வேண்டுமா? எனக்கு இறப்பு எவ்வளவு சீக்கிரம் வருகிறதோ, அவ்வளவுக்கு நல்லது!*

**ராமர் :** *(சீதையை நோக்கி) கற்பு நெறிக்குப் பங்கம் வரும் பொழுது, உயிரை விட்டுப் பழியைத் துடைப்பர், உயர்குலப் பெண்கள்!*

உன்னை இறக்கும்படி நான் வற்புறுத்தவில்லை. உன் மகன் ஸ்தானத்தில் இருக்கும் லட்சுமண பரதனிடமோ, சத்துருக்கன் சுக்ரீவனிடமோ, இந்த விபீஷணனிடமோ, அடைக்கலப் பொருளாகி, அவர்களை அண்டி வாழலாம்!

உயிரைப் பெரிதாய் மதிப்பவர்களுக்கு, இந்த உபாயம் இருக்கவே செய்கிறது!

**அனுமனின் மனக்குரல் :** இது அக்கிரமம்! அநீதி! தன் கையே தன் கண்ணைக் குத்துவதா? பகைவன் இப்படிப் பேசியிருந்தால், அவனைப் பல கூறாகப் பிளந்திருப்பேன்! என் இறைவன் பேசும்பொழுது, எதிர்ப்பைக் காட்டாமல் கட்டுண்டு நிற்கிறேன்!

இதைத்தான் விதி என்று சொல்கிறார்களா?

**சீதை :** (கண்ணீரைத் துடைத்துக் கொண்டு மனதைத் திடப்படுத்தியவளாய்)

வள்ளலே! பிறர் வாழ வகை செய்யும் நீங்கள், நான் செத்திருக்க வேண்டுமென்று, என் சிந்தை நோகப் பேசுகிறீர்கள்!

ஆனால், நான் சாவதற்கு நீங்கள் அனுமதி தரவில்லை. இந்த அனுமனைத் தூதாக அனுப்பி, என்னை மீட்க வருவதாகச் சொல்லி அனுப்பினீர்கள்!

தந்தையின் வாக்கைக் காக்கத் தரணியைத் துறந்தவர் ஆயிற்றே நீங்கள்! உங்கள் வாக்கை நம்பி, உயிர் தரித்து இருந்தேன்!

**அனுமனின் மனக்குரல் :** ஆஹா! தர்ம தேவதை பேச ஆரம்பித்து விட்டால், பகவானும் பதுங்க வேண்டியதுதான்!

**சீதை :** மறை வடிவானவரே! மறைவின்றித் தங்கள் எண்ணத்தைக் கூறி வீட்டீர்கள். என் ஒழுக்கத்தைத் தாங்கள் ஒப்புக் கொள்ள வில்லையானால், எனக்குச் சாதல்தான் சிறந்தது! எங்கோ வாழ்தல் எனக்கு உடன்பாடு அன்று!

**அனுமனின் மனக்குரல் :** தாயே! நீங்கள் செத்து விட்டால், இந்த ராமர் உயிர் தரிப்பாரா? மாட்டாரம்மா மாட்டார்! ஊர் உலகத்திற்காக இப்படிப் பேசுகிறார்!

மனையாளை அப்படியே ஏற்றுக் கொண்டால், தன் மாண்பு குறைந்து விடுமென்று, அறியாத மொழியாம், அவதூறைப் பேசுகிறார்!

அதைப் பொறுத்துக் கொள்ளுங்கள் தாயே! உங்கள் இருப்பு, இங்கு இருந்தால்தான் தர்மத்திற்கு அது சிறப்பு!

**சீதை :** (லட்சுமணனை நோக்கி) இளையவரே! காடேகும் பொழுது, என்னைத் தாயாக எண்ணும்படி, உம் தாய் பணித்தார்கள்! அந்த உரிமையில் கேட்கிறேன். எனக்கு உதவ இப்பொழுது ஒன்று செய்யும்!

நான் தீக்குளிக்க, நெருப்பை மூட்டும்படி வேண்டுகிறேன்! உன் அண்ணன் வெளிப்படுத்த எண்ணும் ஆணை இதுதான்! பெண்களை எரிப்பதில் நெருப்புக்கு விருப்பம் அதிகம்! அன்று மாயமான் என்று நீர் பேசியதற்காக, மரியாதை இன்றி உம்மைப் பேசிய எனக்கு, நீர் தரும் தண்டனையாகவும், இதை ஏற்றுக் கொள்கிறேன்!

அண்ணனை ஏன் பார்க்கிறீர்?

அண்ணன் மனையாள் சொன்ன சொல், கட்டளை ஆகாதா? அதற்குக் கௌரவம் கிடையாதா?

[லட்சுமணன் கண்ணீரோடு ராமரைப் பார்க்க, ராமர் அவ்வாறே செய்யுமாறு தலையசைக்கிறார்.]

**அனுமனின் மனக்குரல் :** (அதிர்ச்சியோடு) என்ன! தீக்குளிப்பதா! இந்தத் தெய்வம் தீயில் கருகிவிட்டால், திசைகளெல்லாம் கருகிவிடாதா? கடல் வற்றி விடாதா? மலைகள் நிலை குலைந்து விடாதா? மேகங்கள் நெருப்பைப் பொழிந்து, இந்நீள் உலகைச் சுட்டெரித்து விடாதா? அக்கினி தேவனே பழியேற்றுப் பஸ்பம் ஆகிவிட மாட்டானா?

## காட்சி-432

*சோலை*

[நெருப்பு கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருக்கிறது. சீதை கை குவித்தபடி அருகில் நின்று கொண்டிருக்கிறாள்.]

**சீதை :** நான் களங்கம் உடையவள் என்றால், இந்தத் தீ என்னைக் கருக்கி உதிர்க்கட்டும்!

**அனுமன் மனக்குரல் :** வேண்டாம் தாயே இந்தச் சோதனை! நெருப்பிலே களங்கம் இருக்க முடியுமா? தர்மதேவதை சந்திக்கு வந்து, தான் தூயவள் என்று மெய்ப்பிக்கத் தேவையில்லை தாயே!

[சீதை தீயை மும்முறை வலம் வந்து, தீக்குள் பாய்ந்து விடுகிறாள். 'ஆ!' என்று பெருங்குரலெடுத்து அனுமன் கதறுகிறான். தீ அவிந்து விடுகிறது. தீப்பட்ட அடையாளமே இன்றி, சீதை நின்று கொண்டிருக்கிறாள். ராமரைத் தவிர, அங்குள்ள எல்லோரும், 'மாதா சீதாதேவி!' என்று உணர்ச்சி வசப்பட்டுக் கூவி, அவள் முன் விழுந்து வணங்குகின்றனர்.

இப்பொழுது அக்கினி தேவன் தோன்றி, ராமரிடம் பேசுகிறான்]

**அக்கினி தேவன் :** அயோத்தி ராமா! இந்த அக்கினி தேவன் சொல்லைக் கேள்!

இந்த அன்னையின் கற்பு எனும் பொங்கு வெந்தீச் சுடப் பொறுக்க முடியாது அணைந்து விட்டேன்!

மங்கையர்பால் ஐயம் இருந்தால், அதைப் போக்கிக் கொள்ள, என்னிடம் சான்று கேட்கலாம் என்று மறைகள் சொல்லும்!

பொய்யில்லாத அனுமன் சொல்லைப் புறக்கணித்தாய்!

அன்னை சீதையின் மெய் தொட இயலாத, என் சொல்லையாவது இப்போது கேள்! இந்தப் பெருமாட்டியை ஏற்று, நீ பேசிய களங்கத்தையெல்லாம் துடைத்தெறி!

**ராமர் :** என் சீதை, பழி இல்லாதவள் என்பதை நான் அறிவேன். அதை இந்த உலகம் உணர்ந்துகொள்ள, அக்கினி தேவனே! உன் சான்று தேவைப்பட்டது! அதற்காகவே இந்த நாடகத்தை அரங்கேற்றினேன்!

**அனுமன் மனக்குரல் :** பயங்கரமான நாடகம்! இப்படிப்பட்ட சோதனைகளைக் குலமகளிர் சாதனைகளாக்கிக் கொள்ள வேண்டுமா? கேட்கவே சங்கடமாக இருக்கிறது. நல்ல வேளை, நான் கல்யாணம் பண்ணிக் கொள்ளவில்லை. இல்லையென்றால் நானும் இந்தப் பழியைச் செய்திருப்பேன்!

[இப்பொழுது அக்கினி தேவன் மறைய, பிரம்மன் அங்கு தோன்றுகிறான்.]

**பிரம்மன் :** பிரம்மன் நான், உன்னிடம் சில பேச வந்திருக்கிறேன்.

ராமா! நீ சூரிய குலத்தில் உதித்த ஒரு மனிதன் மாத்திரமல்ல; நான் மறை முடிவாக விளங்குகின்ற திருமால்! இந்தத் தாய், உன் மார்பில் குடியிருக்கும் திருமகள்! உன்னைத் தொடர்ந்து இம்மானிடப் பிறப்பு எடுத்தவள்! இவளை நீ ஏற்றுக் கொள்ளாவிட்டால், பிள்ளைகளாகிய நாங்கள் பித்தேறி அலைய வேண்டுமே!

[இப்பொழுது பிரம்மன் அங்கிருந்து மறைய, காளை வாகனமோடு, சிவன் அங்கு தோன்றுகிறார்.]

**சிவனார் :** இந்தச் சிவன் சொல்லும் உன் சிந்தையிற் சேரட்டும்.

ஆதி மூர்த்தி நீ! உன்னில் குடியிருக்கும் தெய்வ மாது இந்தச் சீதை! இவளை நீ துறந்தால், இறக்கும் பல உயிர்! இப்பழி நீ ஏற்கலாமா?

(இப்பொழுது சிவனார் அங்கிருந்து மறைய, தசரதர் ஆவி உருவில் அங்கு தோன்றுகிறார்.)

**தசரதர் :** ராமா!

['அப்பா!' என்று கூறி, ராமரும், லட்சுமணனும், சீதையும், அனுமனும், அவர் காலடி விழுகின்றனர். எல்லோரையும் கை தூக்கி ஆசீர்வதித்துத் தசரதர் பேசுகிறார்.]

**தசரதர் :** சீதாதேவி! வெளிப்படும் சூரியனைப் போல், உன் கற்பின் பெருமையை வெளிப்படுத்த, நீ தீ புகுந்திட, என் ராமன் அனுமதித்தான்!

அதைத் தவறாக எடுத்துக் கொள்ளாதே! இந்த உலகமும், அதைக் குறையாகக் கொள்ள வேண்டாம்.

நீ வான் நின்று வந்த தெய்வம்! உன் பேரில், யார் வசை சொல்ல முடியும்?

ராமா! இவளை நீ ஏற்று, என்னை வானில் ஏற்று!

**அனுமன் மனக்குரல் :** ஆஹா! என் அன்னைக்கு ஆதரவாக, அக்கினி தேவன், பிரம்மன், சிவன், தசரதர், இவர்களெல்லாம் வந்து பேசிவிட்டார்கள்.

இனிப் பேச வேண்டிய, என் ராமபிரான் பேச வேண்டும்!

என் பெருமாட்டி, 'அனுமான்' என்று எனை அழைத்து, நாளெல்லாம் ஆணையிட்டுப் பேச வேண்டும்!

**ராமர் :** சீதா! உன்னை நான் ஏற்றுக் கொள்கிறேன்! இடையில் நடந்தவை எல்லாம், இந்த உலகின் பார்வைக்காக நடந்தவை! அவை வெறும் சம்பிரதாயம்! உன்னை நான் விரும்புவது சத்தியம்!

[இவ்வாறு கூறித் தன் இரு கைகளை விரித்து நிற்கிறார் ராமர். சீதை முக மலர்ச்சியோடு ராமரை நோக்கி நடக்கிறாள்.

இதை மனத் திருப்தியோடு பார்க்கின்ற தசரதர், வானில் மறைகிறார்.]

## காட்சி-433

*சோலை*

[அனுமன் 'ராம்! ராம்!' சீதாராம்! சீதாராம்!' என்று கூவிக் கூத்தாடுகிறான்.]

## காட்சி-434

*சோலை*

***ராமர் :*** *விபீஷணா! அமர பட்சத்தின் இடையில், அஷ்டமி திதியில், சுவேல மலையில் வந்து தங்கி, போர் தொடங்கி, அந்த அமர பட்சத்தின் இறுதி நாளாகிய அமாவாசையில் ராவணனை வென்று, இன்று பஞ்சமி திதியில், அயோத்தி புறப்பட எண்ணியுள்ளேன்.*

*இப்பொழுது அங்கு நான் போய்ச் சேராவிட்டால், என் பரதன், தீயிடைப் புகுந்து, உயிரை விட்டு விடுவான்!*

*அவன் மாண்டு விட்டால், என் குலமே பட்டுப் போய்விடும்!*

*என் அன்னை கூறிய பதினான்கு ஆண்டுகளும் இன்றோடு முடிவுற்றன. வேகமாக அயோத்தி போக ஊர்தி ஒன்று கிடைக்குமா?*

***அனுமன் :*** *நான் இருக்கிறேனே! - ஊர்தியாக! என் உடல் வேறு எதற்காக இருக்கிறது?*

***விபீஷணன் :*** *அனுமன் பணியை மறுப்பதாக எண்ண வேண்டாம். இங்குள்ள யாவரும் அயோத்தி செல்வதற்கு ஏதுவாக, குபேரனின் புஷ்பக விமானம் இருக்கிறது.*

*அனுமனே! ராம பிரானின் பட்டாபிஷேகத்தை, நீ மட்டும் பார்த்தால் போதுமா?*

*எங்கள் கண்களை, வெறும் புண்களாக்கிக் கொள்ள, நாங்கள் சம்மதிக்க மாட்டோம்!*

***அனுமன் :*** *அப்படியானால், அந்தப் புஷ்பக விமானத்தைக் கொண்டு வாருங்கள்.*

*கறை சுமந்த அந்த விமானம், என் பிரான் காலடிபட்டு, அந்தக் களங்கத்தைக் கழுவிக் கொள்ளட்டும்!*

## காட்சி-435

*வானம்*

[ராமர், சீதை, லட்சுமணர் உட்பட எல்லோரும் அமர்ந்திருக்கப் புஷ்பக விமானம் வானில் செல்கிறது.]

## காட்சி-436

*சேதுக்கரை*

[சேதுக்கரையில் புஷ்பக விமானம் இறங்குகிறது.]

**ராமர் :** *(விபீஷணனைப் பார்த்து) பிரம்ம குலத்தில் தோன்றிய உங்கள் குலத்தவரை அழித்து விட்டதால், எனக்குப் பிரம்மஹத்தி தோஷம் பிடித்திருக்கும். அதைப் போக்க இந்தக் கடற்கரையிலே, சிவபூஜை செய்ய நினைக்கிறேன்.*

*லங்கை செல்ல அணை கட்டிய இந்தச் சேதுக் கரையில், என் மனம் அமைதி பெற, ஒரு லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபாடு செய்யப் போகிறேன்.*

**விபீஷணன் :** *உத்தமமான காரியமது. லிங்கத்தை எங்கிருந்து கொண்டு வருவது? இந்தப் பணியினை யாரிடம் ஒப்படைப்பது?*

**ராமர் :** *அனுமன் இருக்க, அயர்வு எதற்கு நமக்கு? நான் நினைப்பதை நிகழ்த்திக் காட்டுபவன் அவன்.*

**அனுமன் :** *கட்டளையிடுங்கள் பிரபு! எந்த லோகத்தில் இருந்து லிங்கம் கொண்டு வர வேண்டும்?*

*தங்கள் கண் அசைவுதான், நான் கற்கின்ற வேதம்!*

**ராமர் :** *அனுமான்! சிவன் உறையும், நம் சிந்தை கவர்கின்ற கைலாச மலையில் இருந்து, சிவலிங்கம் எடுத்து வா!*

*உருவத்திலும் அருவத்திலும் இறைவனைக் காட்டுவது, லிங்க உருவமாகும்!*

*இங்கு அதை நான் பிரதிஷ்டை செய்துவிட்டால், யுகம் கடந்தும், இந்தச் சேதுக்கரை, பக்தியைப் பறைசாற்றிக் கொண்டிருக்கும்!*

**அனுமன் :** *தங்கள் நல் ஆணைப்படி, கைலாசம் சென்று, கையில் லிங்கமோடு வருகிறேன் ஐயனே!*

*[ராமரை வணங்கிவிட்டு, அனுமன் அங்கிருந்து புறப்படுகிறான்.]*

## காட்சி-437

*சுபர்வகிரிப் பிரதேசம்*

*அஞ்சனையின் வீடு*

**ஒரு முனிவர் :** *(கேசரி, அஞ்சனையை நோக்கி) உங்கள் புத்திரன், ஆஞ்சநேயன் துணையோடு, ராமபிரான், சீதையை மீட்டு விட்டார்!*

**கேசரி, அஞ்சனை இருவரும் :** *ஜெயராம்! ஜெயராம்!*

**முனிவர் :** *சஞ்சீவி மலையைத் தூக்கி வந்து, இளையவர் லட்சுமணருக்கு உயிர் கொடுத்தவர், உங்கள் உதரம் தந்த செல்வன்தான்!*

**அஞ்சனை :** *இதையெல்லாம் கேட்கின்ற பேறோடு, என்னுடைய இப்பிறப்பு முடிந்துவிடவேண்டும்!*

**முனிவர் :** *ராமபிரான், ஆஞ்சநேயனைத் தன் மார்போடு அணைத்து, நெஞ்சு நெகிழப் பாராட்டி மகிழ்ந்தார்!*

**கேசரி :** *என் மகனைத் தெய்வமே பாராட்டும்பொழுது, பெற்றவன் நான், அவனைப் பாராட்டுவதா, துதிப்பதா என்று தெரியவில்லை!*

**முனிவர் :** *சீதையாக வந்த அந்தச் செங்கமலத்துத் தாய், ஆஞ்சநேயனைத் தன் தலையால் தொழவேண்டும் என்று, தன் கண்ணீர் கலந்து கற்கண்டுச் சொற்களை உதிர்த்திருக்கிறாள்!*

**அஞ்சனை, கேசரி இருவரும் :** *சீதாராம்! சீதாராம்!*

**முனிவர் :** *ராம நாமத்தைக் கூறியபடி, யுகம் கடந்தும், என்றும் சிரஞ்சீவியாய் இருக்கப் போகிறவன் ஆஞ்சநேயன்!*

**அஞ்சனை :** *ராம்! ராம்! ஆஞ்சநேயன் என்றும் சிரஞ்சீவியாய் வாழ, என் உயிர் கொடுத்து வாழ்த்துகிறேன்!*

*[இவ்வாறு கூறியபடி, அஞ்சனைக் கண்மூடிச் சாய்கிறாள். அவளைத் தாங்கிப் பிடித்துக்கொள்கிறார் கேசரி]*

**கேசரி :** *நானும் அஞ்சனையின் வழியிற் சென்று, ஆஞ்சநேயனை வாழ்த்துகிறேன்!*

*[இவ்வாறு கூறிய கேசரியின் கண்களும் மூடுகின்றன.]*

## காட்சி-438

*கைலாச மலை*

[கைலாச மலையில், அனுமன் அங்கும் இங்கும் ஓடிஓடி, லிங்கத்தைத் தேடுகிறான். அவன் கண்களுக்கு, எந்த லிங்கமும் தென்படவில்லை]

**அனுமன் :** *(அயர்ச்சியோடு) கைலாச மலையில், காணுமிடமெல்லாம் லிங்கம் இருக்கும் என்று சொல்வார்களே! அது மெய்தானே? நான் இப்பொழுது காண்பது, பொய்யான தோற்றமா?*

## காட்சி-439

*கைலாச மலையில் சிவன் இருக்கும் இடம்*

**உமையாள் :** *(சிவனை நோக்கி) பாவம் அனுமான்! லிங்கத்தைத் தேடிப் பரிதவிக்கிறான்!*

உங்கள் அம்சம்தானே அவன்! அவனை இப்படி இம்சிக்கலாமா? லிங்கத்தை அவன் கண்ணிலிருந்து மறைக்கக் காரணம் என்ன சுவாமி?

**சிவனார் :** சேதுக்கரையில், அம்மை சீதாதேவி, லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்யவேண்டுமென்பது, என் ஆசை!

அதற்காக, அனுமனை, நேரங்கடந்து, இங்கிருந்து அனுப்பி வைக்கப் போகிறேன்!

**உமையாள் :** அனுமன் கையில் லிங்கம் கிடைக்காவிட்டால், கைலாச மலையையே, கையோடு கொண்டு போய்விடுவான்!

**சிவனார் :** கவலைப்படாதே! இருக்கின்ற இடத்தை இழந்துவிட மாட்டேன்! அனுமனை லிங்கமோடுதான் அனுப்பி வைப்பேன் - முகூர்த்த நேரங்கடந்து!

## காட்சி-440

*சேதுக்கரை*

**ராமர் :** (கூடியிருப்போர்களிடம்) முகூர்த்த நேரம் நெருங்கி விட்டதே! இன்னும் அனுமனைக் காணோமே!

**விபீஷணன் :** நேரம் தவறிவிடக் கூடாது ஐயனே! தாயாரையே, அவர்கள் கைகளால், மணலில் லிங்கத்தை உருவாக்கும்படிக் கூறுங்கள்.

லோக மாதாவின் கைகளால், இந்த லோகம் வணங்கி வளம் பெற, ஒரு சிவலிங்கம், இங்கு பிரதிஷ்டை செய்யப் பெறட்டும்!

**கூடியிருப்போர் :** (ஒரே குரலில்) அவ்வாறே செய்துவிடலாம்!

**ராமர் :** (சீதையை நோக்கி) சீதா! எங்கள் விருப்பப்படி, உன் கைகளால், ஒரு சிவலிங்கத்தை உருவாக்கு!

**விபீஷணன் :** இதுவே, சிவன் விருப்பமாகவும் இருக்கும்!

[சீதை, வானத்தை நோக்கிக் கை கூப்பித்
தொழுதுவிட்டு, மணலில் ஒரு சிவலிங்கத்தை
உருவாக்குகிறாள். எல்லோரும், கூப்பிய
கரமோடு, 'சிவ! சிவ!' என்று வாய்விட்டுக்
கூவுகின்றனர்.]

## காட்சி-441

*வானம்*

[கையில் லிங்கமோடு, வான வீதியில் பறந்து வந்து கொண்டிருக்கிறான் அனுமன்]

## காட்சி-442

*சேதுக்கரை*

[பூ இட்டு, மணல் லிங்கத்திற்கு, ராமர் தீப ஆராதனை செய்கிறார்.

எல்லாரும் பய பக்தியோடு கும்பிடுகின்றனர்.

இப்பொழுது அனுமன், பரபரப்போடு, கையில் லிங்கத்தோடு, அங்கு வந்து குதிக்கிறான். மணல் லிங்கத்தை, ஏளனமாகப் பார்க்கிறான்]

**ராமர் :** *அனுமான்! முகூர்த்த நேரத்தில் பிரதிஷ்டையை முடிக்க வேண்டும் என்பதற்காக, இந்த மணல் லிங்கத்தை உருவாக்கி விட்டோம்!*

**அனுமன் :** *கல் எல்லாம், மாணிக்கக் கல்லாகி விடுமா ஐயனே?*

*சொல் எல்லாம், இறைவனைப் பேசும் சொல்லாகி விடுமா?*

*கைலாச மலையில் இருந்து, கொண்டு வந்த இந்த லிங்கமெங்கே!*

*நம் காலடி பட்ட மணலை எடுத்துப் பிடித்து வைத்த இந்த லிங்கமெங்கே?*

**ராமர் :** *இப்பொழுது என்ன செய்யலாம் என்று சொல்கிறாய்?*

**அனுமன் :** *இந்த மணல் லிங்கத்தை அப்புறப்படுத்திவிட்டு, அந்த இடத்தில், இந்தத் தெய்வ லிங்கத்தை வைத்துவிடலாம்!*

**மற்றவர்கள் :** *(ஒரே குரலில்) கூடாது! கூடாது!*

**ராமர் :** *(குரல் கொடுத்தவர்களைப் பார்த்து) கொஞ்சம் பொறுங்கள்!*

*(அனுமனை நோக்கி) அனுமான்! உனக்கது சரி என்று பட்டால், எனக்கும் சம்மதம்தான்!*

*மணல் லிங்கத்தை அப்புறப்படுத்துவதையும், கைலாச லிங்கத்தை, அந்த இடத்தில் வைத்து விடுவதையும், உன் கைகளால் செய்துவிடு!*

*சஞ்சீவி மலையைத் தூக்கினவனுக்கு, இந்தச் சாதாரண மணல் லிங்கம் ஒரு பொருட்டா?*

**அனுமன் :** *அப்படியே செய்துவிடுகிறேன் ஐயனே! மலை எடுத்தவனை, மணல் எடுக்கச் சொல்கிறீர்கள்! தங்கள் ஆணை என்பதால், மனமொப்பிச் செய்கிறேன்!*

*[இவ்வாறு கூறிவிட்டு, அனுமன், மணல் லிங்கத்தைத் தன் கைகளால் தூக்க முயல்கிறான்.*

*அவனால் முடியவில்லை. முக்கி முனகி முயல்கிறான். அவன் முயற்சி தோற்றுப் போகிறது.*

*கூடியிருப்போர், இதுகண்டு, கைகொண்டு வாய் புதைத்துக் கள்ளத் தனமாக, ஏளனமாகச் சிரிக்கின்றனர்.*

*பின்னர், அனுமன், மணல் லிங்கத்தைத் தன் வாலால் கட்டிப் பலம் கொண்ட மட்டும், இழுத்துப் பார்க்கிறான்.*

*லிங்கம் அசையவில்லை. அனுமனோ வேர்த்து விறுவிறுத்துப் போகிறான்.*

*கூடியிருப்போர், அனுமன் பார்க்காதபடி, திரும்பி நின்று, ஏளனமாகச் சிரிக்கின்றனர்.*

*ராமரோ, அனுமனைப் பரிதாபத்தோடு பார்த்தபடி நிற்கிறார்]*

## காட்சி-443

*கயிலை மலை*

**சிவன் :** *(சிரித்தபடி) என் அம்சம் ஆனாலும், என் உருவத்தை அசைக்க முடியாது!*

*பிரும்ம ஞானியான அனுமானாலேயே, லிங்கத்தின் மகிமையைப் புரிந்துகொள்ள முடியவில்லை.*

*யாரும் அறிய முடியாத சூட்சமம், லிங்க வடிவம்!*

*எண் திசையெல்லாம் அதுவே!*

*எண்ணெண் கலையும் அதுவே! இயங்கும் உலகமும் அதுவே!*

## காட்சி-444

*சேதுக்கரை*

['ராம்! ராம்!' என்று முணுமுணுத்தபடி, தலையில் கைவைத்தவனாகச் சோர்வோடு அமர்ந்திருக்கிறான் அனுமான்]

**அனுமன் :** *(ராமரை நோக்கி) என் அன்னையின் கைபட்டு உருவான லிங்கமது என்பதை, இங்கு எனக்குச் சொல்லியிருந்தால், நான் இப்படி இளைத்துக் களைத்துத் தோற்று இருக்கமாட்டேன்!*

*அன்னையின் கையால் அடி வாங்கியதை, ஒரு மகன், தண்டனையாகக் கொள்ள முடியுமா? தக்க பாடமாகத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும்!*

**ராமர் :** *அனுமான்! உன் வால் தழும்புகூட, அந்த மணல் லிங்கத்தில் பதிந்துவிட்டது!*

*அந்த அடையாளத்தைப் பெற, சிவனே, இந்த நாடகத்தை நடத்தியிருக்கிறார் என்று எடுத்துக்கொள்.*

*இருப்பவர், அங்கேயே இருக்கட்டும்! வந்தவரை, அருகிலேயே, இடப்பக்கத்தில் அமர்த்திவிடலாம்! அதை*

*அங்கு பிரதிஷ்டை செய்துவிடுவோம்! அனுமத் லிங்கம் என்ற நாமத்தோடு, உன் பெயரையும் இணைத்து, அது காலமெல்லாம் பேசப் பெறும்!*

**அனுமன் :** *இறைவன் சித்தம் அதுவாக இருப்பதால், அப்படியே செய்துவிடுவோம் ஐயனே!*

## காட்சி-445

*சேதுக்கரை*

[இடப்புறம் வைக்கப் பெற்ற கைலாச லிங்கத்தின்மீது, பூச்சொரிகிறான் அனுமன்]

## காட்சி-446

*கயிலை மலை*

[சிவனார் மேல், பூக்கள் வந்து விழுகின்றன. சிவகணங்கள், 'ஓம்!' என்ற மூல மந்திரத்தை முழங்குகின்றனர்]

## காட்சி-447

*சேதுக்கரை*

[அனுமன் கவலையோடு சமுத்திரத்தில் நீராடுகிறான்]

**ராமர் :** *அனுமான்! சமுத்திரத்தில் குதித்துக் கூத்தாடும்நீ, இன்று வாட்டத்தோடு நீராடுகிறாயே! என்ன காரணம்?*

**அனுமன் :** *ஐயனே! எல்லோரும் சேர்ந்து, என்னைச் சிரஞ்சீவி ஆக்கிவிட்டீர்கள்!*

*ஆனால், என் பெற்றோர், இப்பொழுது இறந்து விட்டதை என் மனது உணர்த்துகிறது.*

அவர்களுக்குச் செய்யவேண்டிய சடங்காக, இந்தப் புனித சமுத்திரத்திலே நீராடுகிறேன்.

**ராமர் :** அனுமான்! பித்ருக்களுக்காக, இந்தத் தீர்த்தக் கட்டத்தில் நீராடும் புனித காரியத்தை நீ தொடங்கிவிட்டாய்!

காலம் காலமாக மக்கள், இந்தக் கைங்கர்யத்தைச் செய்ய, இங்கு வந்து நீராடுவர்!

இது அக்கினி தீர்த்தம் என்று அவனியோரால் இனிப் பேசப் பெறும்!

## காட்சி-448

*கயிலை மலை*

**உமையாள் :** (சிவனாரை நோக்கி) சுவாமி! ராமரால் பிரதிஷ்டை செய்யப் பெற்ற ஈஸ்வரன் அங்கு இருப்பதால், அந்த ஸ்தலத்தை, 'ராமேஸ்வரம்' என்று அழைக்கலாமா சுவாமி?

**சிவன் :** பொருத்தமான பெயர்! பொங்கு கடல், அங்கு புண்ணிய வழிபாடு நிகழ்த்துவதுபோல், அமைதியாக இருக்கும்!

அண்ட லிங்கமாக, பிண்ட லிங்கமாக, சதாசிவ லிங்கமாக, சிவலிங்கமாக, ஆத்ம லிங்கமாக, ஞான லிங்கமாக அழைக்கப் பெறும் நான், அங்கு ராமலிங்கமாகக் கொண்டாடப் பெறுவேன்! வழிபடுவோர் வினையறுக்கும் வினையை ஆற்றிக் கொண்டிருப்பேன்!

**உமையாள் :** வழிபாட்டை முடித்துவிட்டுச் சேதுக் கரையிலிருந்து புறப்பட்டு விட்டார்கள்.

## காட்சி-449

*வானம்*

[வானிலே புஷ்பக விமானம் சென்று கொண்டிருக்கிறது].

**ராமர் :** கங்கையோடு, யமுனை, கோதாவரி, நர்மதை, காவேரி, எப்படிப் பல பொங்கு நீர் நதிகளில் தீர்த்தமாடினாலும்

*போகாத புன்மை, சங்கு எறியும் அலைகடலாம், அந்தச் சேதுவில் தீர்த்தமாடினால், தீர்ந்துவிடும்! அந்தப் பயனை நாம் பெற்றுவிட்டோம்.*

**சீதை :** *சுவாமி! இப்பொழுது நாம் அயோத்திக்குத்தானே போகிறோம்?*

**ராமர் :** *சித்திர கூடத்தில் வாழும் பரத்வாஜ முனிவர் பிரானைத் தரிசித்துவிட்டுப் போகலாம்!*

*அந்த மறைத் தபோதனரின் ஆசிகள், மன்னர் பரம்பரையினர் பெறவேண்டிய பிச்சைகள்!*

*சீதா! அதோ பார்! இந்திரனும் வணங்கும் எழில் சித்திர கூட மலை! நம் முனிவர் பிரானும், தன் ஞானப் பார்வையால், நாம் வருவது அறிந்து, நம்மை வரவேற்கக் காத்திருக்கிறார், பார்! விபீஷணா! விமானத்தைக் கீழே இறக்கு!*

## காட்சி-450

*சித்திர கூடம்*

[அனைவரும் மாமுனிவரை விழுந்து வணங்குகின்றனர். ராமரைக் கட்டி அணைத்துக் கொள்கிறார் முனிவர்.]

**முனிவர் :** *ராமா! இன்று எம்மோடு விருந்து அருந்திப் பின்னர் அயோத்தி செல்லலாம்.*

**ராமர் :** *மாதவர் சொல், இந்த மானிடனுக்கு வேதம் அது!*

## காட்சி-451

*சித்திர கூடம்*

(இலை முன், ராமர் உட்பட, எல்லாரும் சாப்பிட அமர்ந்திருக்கின்றனர்.)

**ராமர் :** அனுமான்!

(ராமர் இவ்வாறு கூப்பிட, அனுமன், ராமரின் முன்பு, பணிவோடு வந்து நிற்கிறான்.)

**ராமர் :** நாம் இங்கு இருக்கும் காலதாமதத்தால், என் பரதன், செய்யக் கூடாதன செய்து விடுவானோ என்று அச்சமாக இருக்கிறது! அவன் அயோத்தி புகாமல், நந்தியம் பதியில், என் வரவுக்காகக் காத்திருப்பான். நான்சொன்ன கெடு முடிந்து விட்டது என்று கருதி, என் பரதன், தீக்குளித்து விடுவானோ என்று அஞ்சுகிறேன்!

ஆதலால், நீ உடனே அங்கு சென்று, நான் வருவதை அவனுக்கு உணர்த்தி, தென் திசையையே பார்த்தபடி இருக்கும், என் தென்றலைப் பாதுகாத்திடு!

இதோ, என் மோதிரத்தை, அடையாளமாகப் பெற்றுக் கொள்!

(அனுமன் பணிவோடு மோதிரத்தை வாங்கி, இடுப்பில் முடிந்து கொள்கிறான்.)

**அனுமன் :** இப்பொழுதே புறப்படுகிறேன் ஐயனே!

**ராமர் :** சாப்பிட்டு விட்டுப்போ! இலை முன் உட்கார்ந்து இருந்தவனை, ஏவல் செய்ய அழைத்து விட்டேன். எங்கே போகிறாய்?

நாம் இருவரும் இப்பொழுது ஒரே இலையில் சாப்பிடுவோம்! உட்கார் என் எதிரில்!

**அனுமன் :** (நடுங்கியபடி) ஐயனே! ஒரு விலங்கோடு, ஓரிலையில், தாங்கள் உண்பதா?

**ராமர் :** அனுமான்! நீ செய்த கடலளவு உதவிகளுக்குக் கைம்மாறு செய்ய வகையறியேன்!

குற்றமற்ற வாய்மையின் வடிவமாக இருக்கும் உன் கூட அமர்ந்து, ஒரே இலையில் உண்ணும் உவகையை, எனக்கு அளிக்க மறுக்க மாட்டாயே!

**அனுமன் :** (பதறியபடி) ஐயனே! இது என்ன சோதனை!

[சட்டென அனுமன், ராமர் எதிரில் அமர்ந்து கொள்கிறான்.]

**ராமர் :** பரிமாறப்பட்ட கனிகளை எடுத்துச் சாப்பிடு!

[அனுமன் கனிகளைச் சாப்பிட, ராமரும் அதே இலையில் உள்ள கனிகளை எடுத்து உண்கிறார்.]

**ராமர் :** நான் இதுவரை, யாரோடும் ஸஹபோஜனம் செய்ததில்லை! அந்தப் பெருமையை, இன்று நீ எனக்கு அளித்து விட்டாய்!

**அனுமன் :** (மனநெகிழ்வோடு) ஐயனே! குரங்கைக் கொண்டு வித்தை காட்டுவார்கள்! தாங்கள், என்னைக் கொண்டு, வேதத்திற்கு விளக்கம் சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள்!

காலடி பற்றியவனை, மடி மீது இருத்தி, மங்கலங்கள் செய்கிறீர்கள்! அந்தக் குகனைப்போல, நானும் ஏனோ கொண்டாடப்படுகிறேன்!

**ராமர் :** நினைவூட்டி விட்டாய், அனுமான்! போகும் வழியில் சிருங்கிபேரபுரத்தில் உள்ள, அந்தக் குகனைச் சந்தித்து, நான் வருவதைக் கூறிவிட்டுச் செல். நால்வராகப் பிறந்த நாங்கள், அந்த வேடனோடு ஐவரானோம்!

**அனுமன் :** அப்படியே செய்கிறேன் ஐயனே!

## காட்சி-452

நந்தியம்பதி

[பரதன், சத்ருக்கனிடம் வாட்டத்தோடு பேசுகிறான்.]

**பரதன் :** தம்பி சத்ருக்கனா! சொன்ன நாளில், என் அண்ணன் ராகவன் வரவில்லை, ஆதலால், மின்னு தீயிடை நான் வீழ்ந்து உயிர் துறப்பேன்! பின்னர் என் சொல்லை மறுக்காது, நீ அயோத்திக்கு மன்னனாகு!

**சத்ருக்கன் :** கான் ஆள, நிலமகளைக் கைவிட்டுப் போன அண்ணனைக் காக்கப் பின்தொடர்ந்த லட்சுமணனும் ஒரு தம்பி!

அண்ணன் வரவில்லையென்று, உயிர்விடத் துணிகின்ற நீயும் ஒரு தம்பி!

இவர்களோடு பிறந்திருக்கும் நான், நாணமின்றி, இந்த அரசை ஆள்வேனோ? தம்பி என்ற சொல்லுக்கே, பழி சேர்த்து வைப்பேனோ?

## காட்சி-453

*வானம்*

[வான வீதியிலே, அனுமன், ராமநாமத்தை ஜெபித்தபடி வந்து கொண்டிருக்கிறான்.]

## காட்சி-454

*நந்தியம்பதி*

[தீ,திகுதிகுவென எரிந்து கொண்டிருக்கிறது.]

**பரதன் :** நான் இறந்து விட்டால், இந்த அயோத்தியை அரசனின்றி, அனாதையாக, ராமபிரான் விட்டுவிடமாட்டார்! உடனே இங்கு ஓடி வந்து விடுவார்! எனவே, நான் தீக்குள் புகுவதே, சரியான தீர்மானமாகும்

[இவ்வாறு பேசியபடி, பரதன் தீயை நோக்கி நடக்கிறான். இப்பொழுது கோசலை ஓடி வந்து, பரதனைத் தடுக்கிறாள்.]

**கோசலை :** பரதா! ராமன் வரும் நாள் என்று அறிந்து, இங்கு வந்தோம்.

சொன்னபடி வரவில்லை என்று, எங்களைத் துறந்து, உயிர் விடத் துணிந்தாயா?

வேண்டாம் இந்த முடிவு! என் சொற்கேள்! இந்தக் கோசலையும் உனக்குத் தாயல்லவா?

என்னோடு மந்திரியர், தந்திரியர், வள நகரத்தவர், மறையோர், மற்றும் சுற்றச் சுந்தரியர், இங்கு வந்திருக்கின்றனர்.

நீ தீ புகுந்தால், நாங்கள் அனைவரும் தீயிற் புகுவோம்!

தர்மமும் தீயில் விழ, இந்த உலகமே, தன் நிலை அழியும்!

எண்ணில் கோடி ராமர்கள் என்னினும், அண்ணல் நின் அருளுக்கு அருகு ஆவரோ?

புண்ணியனே! உன் உயிர் போனால், மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ?

[இப்பொழுது 'ராம்! ராம்!' என்ற சொற்கள், வானிலிருந்து கேட்கின்றன. எல்லோரும் ஆவலோடு வானத்தையே பார்க்கின்றனர்.

அனுமன், ராமநாம ஜபத்தோடு அங்கு வந்து குதிக்கிறான்.]

## காட்சி-455

*கைலாயம், வைகுண்டம்*

**திருமால் :** வேண்டும் போதெல்லாம் தாண்டி வந்து குதிக்கும் சிவனார் அம்சத்திற்கு, என் சிந்தை ததும்பிய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்

**திருமகள் :** ராம அவதாரத்தின் பெருமையே, அந்த அனுமனின் துணைதான்!

**உமையாள் :** ராவணனை வளர்த்து விட்ட பாவத்திற்குச் சிவனார் பிராயச்சித்தம் தேடுகிறார் என்பது பொருத்தமான கருத்தாக இருக்கும்!

**சிவனார் :** நல்லவர்கள் வாழ, பொல்லாதவர்கள் வீழ, துணை நிற்பதுதான், தர்மம் ஆகும்.

வேதம் பேசும் நாதனாக நான் இருக்கும்பொழுது, தர்மத்தைக் காக்க வேண்டாமா?

அனுமனாக வந்து, அங்கங்கு என் பங்கைப் பரிமளிக்கச் செய்திருக்கிறேன்!

ராம கதை எனும் சுவையான வரலாற்றில், நானும் கனிச்சுவையாகச் சேர்ந்து விட்டேன்!

## காட்சி-456

*நந்தியம்பதி*

[எரிகின்ற தீயை, முழுவதுமாக அணைத்து விடுகிறான் அனுமன்.]

**அனுமன் :** நம் ஐயன் வந்து கொண்டிருக்கிறார்! ஆரியன் வந்து கொண்டிருக்கிறார்!

பரதரே! இப்பொழுது நீங்கள் உங்கள் உயிரைப் போக்கிக் கொண்டால், உய்யுமோ, என் ஐயன் உயிர்?

ஐயம் வேண்டாம்! என் சொல் பொய்க்குமாயின், எரி நெருப்பை நான் மூட்டி, உங்களுக்கு முன்பு, நான் அதில் விழுந்து விடுகிறேன்!

மாமுனிவன் பரத்துவாஜன் ஆசி பெற வேண்டி, சித்திர கூட மலையில் இறங்கி வருகிறார், தர்மத்தின் செல்வம்! அதனால்தான் இந்தக் கால தாமதம்.

என் சொல்லை, நீங்கள் நம்புவதற்காக, என் நாதன், எனக்கு அருளிய, அடையாள மோதிரம் இதோ!

எல்லோரும் காணுங்கள்!

[அந்த மோதிரத்தைக் கண்டவுடன், எல்லோரும் மகிழ்ச்சியோடு, 'ராம்! ராம்!' என்று கூவுகின்றனர்.

அந்த மோதிரத்தை வாங்கிப் பரதன் கண்களில் ஒற்றிக் கொண்டு, 'ராம்! ராம்!' என்று கூத்தாடுகிறான். அனுமனைக் கும்பிடுகிறான்.]

**பரதன் :** (அனுமனைப் பார்த்து) நீயார் அப்பனே?

எங்கள் உடலுக்கு உயிர் ஊட்டிய உத்தமனே! நீ மும்மூர்த்திகளில் ஒருவனோ? எங்கள் முன்னோர் செய்த தவப்பயனோ?

**அனுமன் :** *நான் வானர குலத்தில் பிறந்த, அஞ்சனை மைந்தன், அனுமன். கிஷ்கிந்தை மன்னன் சுக்ரீவன் அமைச்சர்களில் ஒருவன். உங்கள் அண்ணன் ராமபிரானுக்கு, அடிமைத் தொழில் செய்யும் ஏவலாளன்!*

*என் பெருமான் வனத்திற்கு வந்த பிறகு, நடந்தவற்றை நான் உரைக்கின்றேன்.*

*தீயிற் பொன்னாக, என் தெய்வம் பிரகாசித்ததை, நீங்கள் தெரிந்து கொள்வீர்கள்!*

## காட்சி-457

*காடு*

[காடு கடந்து குகன் ஓடி வருகிறான்.]

**குகன் :** *ராமா! ராமா! அடியேனுக்கு, உனது அருள் உண்டு என்பதை நினைக்கப் பெருமையாக இருக்கிறது. ஊர் திரும்புவதைத் தூதுவன் மூலம் உரைத்திருக்கிறாய். உன்னைக் காணாமல், இத்தனைநாள் கழித்தேனே, இந்தப் பாவி! உன் இளையவன் லட்சுமணன்செய்த கைங்கர்யத்தை, நான் செய்யத் தவறி விட்டேனே! இந்த வேடனையும் உடன்பிறப்பு என்று ஏந்திய ஏந்தலே! உன்னைக் கண்ணாரக் காண்பதுதான், என் துன்பத்தைப் போக்கும்! என் பிறவியை இனிதாக்கும்! உன் அயோத்திக்கு ஓடி வருகிறேன்! நான் கால்கள் பெற்ற பயனை, இப்பொழுதுதான் உணர்கிறேன்!*

## காட்சி-458

*நந்தியம்பதி*

[புஷ்பக விமானம் தரையில் இறங்குகிறது. ராமரும் மற்றவர்களும், விமானத்திலிருந்து வெளியே வர, அங்கு கூடியிருப்போர், 'ராம்! ராம்!' என்று கூத்தாடுகின்றனர்.

பரத சத்துருக்கன், ராமரின் அடிதொழ, அவர்களை எடுத்து அணைத்துக் கொள்கிறார் ராமர். கைகேயியை வணங்க வருகிறார் ராமர்.]

**கைகேயி :** *கோசலையை முதலில் வணங்கு ராமா!*

**ராமர் :** *இளம்பிராயத்தில், எனக்குத் தாயாக முதலில் தெரிந்தது, நீங்கள்தான் தாயே!(கைகேயியை விழுந்து வணங்குகிறார். கைகேயி, ராமரை எடுத்துப்பாசமோடு அணைத்துக் கொள்கிறாள். பின்னர் ராமர், கோசலையைச் சுமித்திரையை வணங்குகிறார்.)*

**ராமர் :** *(அனுமனைப் பார்த்து) அனுமான்! நாங்கள் செய்த தீவினையால், எங்களுக்கு நேர்ந்த தீங்கையெல்லாம், நீ உன் வல்லமையால் தீர்த்து வைத்தாய்!*

*தாயிற் பெரியோனே! நாங்கள் செய்த மாதவத்தால்தான், நீ எங்கள் மடியில் வந்து விழுந்திருக்கிறாய்!*

**அனுமன் :** *பெரிய வார்த்தைகளை, இந்தச் சிறிய திருவடி நோக்கிச் சிந்தி விட்டீர்கள் ஐயனே!*

**பரதன் :** *(ராமரைப் பார்த்து) அண்ணா! சித்திர கூடத்தில், இந்த நாட்டை, என்னிடம் ஒப்படைத்தீர்கள்! வனவாசம் முடிந்து, வாங்கிக் கொள்வதாகக் கூறினீர்கள்!*

*வலிய காளை சுமக்க வேண்டிய பெரும் பளுவைக், கன்றுக்குட்டி சுமப்பதுபோல், சுமந்திருந்தேன்; பொறுத்தி ருந்தேன்.*

*குதிரையின் கம்பீர நடையைக் கழுதையிடம் காண முடியுமா?*

*அன்னத்தின் அழகு நடையைக் காகத்திடம் காணமுடியுமா?*

*ஆனாலும், உங்கள் வருகைக்காக, நாட்களை எப்படியோ கழித்திருந்தேன்!*

*இப்பொழுது அயோத்தி வந்து, நீங்கள் பட்டாபிஷேகம் செய்துகொள்ள வேண்டும்! எங்கள் வயிற்றில் பால் வார்க்க வேண்டும்!*

சூரியனும், நீங்கள் முடி சூடுவதைக் காண, விழி மூடாது விழித்திருக்கிறான்!

உங்கள் ராமராஜ்யம், தர்ம ராஜ்யமாக, யுகம் கடந்தும் பேசப்பெற வேண்டும்!

இப்பொழுது அயோத்தி செல்லலாமா அண்ணா? (ராமர், சரியென்று தலையசைக்கக், கூடியிருப்போர், 'ராம்! ராம்!' என்று கூவுகின்றனர்.)

## காட்சி-459

அயோத்தி அரண்மனை

**சுக்ரீவன் :** அனுமான்! வைகுந்தத்தில் இருக்கின்ற பேறுபோல, இந்த அயோத்தி அரண்மனையில் இப்பொழுது இருக்கின்றோம்.

பட்டாபிஷேகத்தன்று, நம் ஐயனை நன்னீராட்டுவதற்கு, ஏழு கடல் நீரும், மற்றுமுள்ள புண்ணிய நதி நீரும் வேண்டும். அதைத் தாமதம் இல்லாது, நீயே கொண்டு வரவேண்டும்.

**அனுமன் :** இதை விட, என் பிறப்பிற்கு, என்ன பயன் இருக்க முடியும்?

சூழ்புவி அதனை எல்லாம் கடந்து, நீங்கள் சொன்னபடி, மங்கல நீர் கொண்டு வருவேன்.

ஏழ்கடல் நீரோடும், ஆழ்திரை ஆற்றின் நீரோடும் வருவேன்.

[இவ்வாறு கூறிவிட்டு, அனுமன் அங்கிருந்து புறப்படுகிறான்.]

## காட்சி-460

*அயோத்தி அரண்மனை*

[பட்டாபிஷேகம் நடைபெறுகிறது. சீதையோடு ராமரை அரியணையில் அமரச் செய்கின்றனர். மண்டியிட்டு, அனுமன் அரியணையைப் பற்றி இருக்க, அங்கதன் உடைவாளை ஏந்தி நிற்க, பரதன் வெண்குடை பிடித்து நிற்க, லட்சுமணனும் சத்துருக்கனும் வெண்சாமரம் வீசி நிற்க, மறையவர் வேத மந்திரம் முழங்க, வசிஷ்ட மாமுனிவர், ராமர் தலையில், மணிமுடியைச் சூட்டுகிறார். கூடியிருப் போர், மலர் சொரிந்து கூத்தாடுகின்றனர்.]

***பின்னணிப் பாடல் :***

*'அரியணை அனுமன் தாங்க, அங்கதன் உடைவாள் ஏந்த,*

*பரதன் வெம்குடை கவிக்க, இருவரும் கவரி பற்ற*

*விரை செறி கமலத்தாள் சேர் வெண்ணையூர்ச் சடையன் தங்கள்*

*மரபுளோர் கொடுக்க வாங்கி, வசிட்டனே புனைந்தான் மௌலி'*

## காட்சி-461

*தேவலோகம்*

[தேவலோகத்தில், வாத்தியங்கள் முழங்க, தேவமங்கையர், 'ராம்! ராம்!' என்ற மந்திரத்தை, இசையோடு குழைத்துக் கூவிக் கூத்தாடுகின்றனர்.]

## காட்சி-462

*அயோத்தி நகர வீதி*

[அயோத்தி மக்கள், நகர வீதியிலே, 'ராம்! ராம்!' என்று முழங்கி, ஆடுகின்றனர்; ஓடுகின்றனர்; குதிக்கின்றனர்; கைதட்டி ஆர்ப்பரிக்கின்றனர்.]

## காட்சி-463

*அயோத்தி அரசவை*

[ராமர், சீதையோடு அரியணையில் அமர்ந்து, எல்லோர்க்கும் பரிசளிக்கிறார்.

மறையவர்கள் வரிசையாக வந்து, பரிசுகளைப் பெற்றுச் செல்கின்றனர்.]

**அனுமன் மனம் :** *மறையவர் தங்கட்கு எல்லாம், மணியோடு முத்தும் பொன்னும், நிறைவளம் பெருகு நிலமும், நிறை குடம் கறக்கும் பசுவும், குறைவறக் கொடுக்கின்ற கோமான் இவர்! கொற்றவன் இவர்!*

*[சுக்ரீவனுக்குப் பரிசளிக்கிறார் ராமர்.]*

**அனுமன் மனம் :** *உம்பர் தம் பெருமான் இந்திரன் ஈந்த ஒளிமணிக் கடகத்தை, சூரியன் மகன் சுக்ரீவருக்கு ஈந்தார், என் ஐயன்.*

*[அங்கதனுக்குப் பரிசளிக்கிறார் ராமர்.]*

**அனுமன் மனம் :** *அங்கதன் என்னும் நாமம் அழகுற விளங்குவதுபோல், அயனாகிய நான்முகன் கொடுத்த, அங்கதம் என்னும் தோள்வளையை, அங்கதனுக்குக் கொடுத்தார்.*

*[ஜாம்பவானுக்குப் பரிசளிக்கிறார் ராமர்.]*

**அனுமன் மனம் :** *இந்திரற்கு ஏய்ந்ததாகும் என்னும் முத்தாரத்தை, கரடிகளின் வேந்தனுக்கு, நம் காதலன் உதவினார்.*

[நீலனுக்குப் பரிசளிக்கிறார் ராமர்.]

**அனுமன் மனம் :** அக்கினி பெற்றெடுத்த நீலன், நவமணி முத்தும் மாலையும், நலங்கொள் ஆடையும், உவமை மற்றில்லா பொன் பூணும் பெற்றான்.

**ராமர் :** விபீஷணா! உனக்கு ஒப்பாகக் கூடியவர்கள், உன்னைத் தவிர, வேறு யாரும் இல்லை.

பொன்னும் இரும்பும் ஒன்றாக முடியுமா? அதுபோல், மற்றவர்களை உன்னோடு ஒப்பிட முடியாது. என் பரிசாகப் பாராட்டாக, அமரர் ஈந்த, இந்த ஒளிமணிக் கடகத்தை, உனக்கு அளிக்கின்றேன். ஏற்றுக்கொள்.

**ராமர் :** (குகனை நோக்கி) சிருங்கபேரம் என்று ஓதும் செழுநகருக்கு இறைவா! என் தம்பி குகனே! உனக்கு நான் உரைக்கவோ, கொடுக்கவோ, பெரிதாக என்ன இருக்கிறது?

என் ஆத்ம திருப்திக்காகக் களிறும் மாவும், பொன்னும் பொருளும் பெற்று, என்னை நினைத்தபடி, என்னிடமிருந்து விடைபெறு.

[பின் அனுமனைப் பாசத்தோடு பார்க்கிறார் ராமர்.]

**ராமர் :** அனுமான்! உதவிடுதற்கு உன் போல் யார் உளர்? உனக்குக் கைம்மாறாக, நான் செய்யக் கூடியது எதுவும் இல்லை.

என் மனம் மகிழ, திண் தோளாய்! என்னை அணைத்துத் தழுவிக் கொள்வாயாக! அந்த ஆனந்தத்தை, நான் ஐஸ்வர்யமாக, உன்னிடமிருந்து பெற்றுக் கொள்கிறேன்!

[இவ்வாறு ராமர் கூற, அனுமன் விம்மலோடு ஓடி வந்து, ராமரின் காலடி விழ, அனுமனை எடுத்து அணைத்துக் கொள்கிறார் ராமர்.]

**சீதை :** எல்லோர்க்கும் பரிசு கொடுத்துவிட்டு, அனுமனைத் தவிர்க்கலாமா?

**ராமர் :** அந்த தர்மத்தை, நீ செய்யலாமே!

**சீதை :** பாமறைக் கிழத்தியான கலைமகள் ஈந்த பருமுத்து மாலையை, நாளெல்லாம் நம் இடர் களைந்த நல்லோன் அனுமனுக்கு அளிக்கின்றேன்.

[இவ்வாறு கூறி, அனுமனுக்கு முத்து மாலையைப் பரிசளிக்கிறாள் சீதாப் பிராட்டி.]

**ராமர் :** எல்லோரும் அவரவர் இடத்திற்கு ஏகி, நல்லோர்கள் சொன்ன வண்ணம், நனிவாழ்வு வாழ்வீராக!

**அனுமன் :** என்னைத் தவிர, மற்ற எல்லோரும்....

**ராமர் :** ஏன் அப்படி?

**அனுமன் :** ஆண்டானை விட்டு, அடிமை எங்கு செல்ல முடியும்? ராம நாமத்தை ஜெபிப்பவன், ராமபிரானை விட்டு நீங்க முடியுமா? நீரை விட்டுப் போ என்று மீனைச் சொல்வதைக் கருணை என்று கொள்ள முடியுமா?

**சீதை :** (ராமரைப் பார்த்து) தேன் துளியாகச் சுவைக்க வேண்டிய அன்பு, தேன் அருவியாக விழுந்து, உங்களைத் திக்குமுக்காடச் செய்யப் போகிறது!

**ராமர் :** அப்பொழுது, எல்லோரையும் போல, நானும் 'ராம்! ராம்!' என்று கூறி, ஆறுதல் பெற்றுக்கொள்ள வேண்டியதுதான்!

[இதைக்கேட்டு, அனைவரும் சிரிக்கின்றனர்.]

## காட்சி-464

*அயோத்தி நகர வீதி*

[அயோத்தி நகர வீதியில் நின்றபடி, அனுமன், சீதாதேவி பரிசளித்த முத்து மாலையிலுள்ள முத்துக்களை ஒவ்வொன்றாக எடுத்துக் கடித்து, உடைத்து, வீசி எறிகிறான். இதைக் காண்போர் பதறி, 'அபச்சாரம்! அபச்சாரம்!' என்று கத்துகின்றனர்.]

**ஒருவர் :** அன்னை சீதாதேவி கொடுத்த முத்து மாலையை, ஏன் கடித்து உடைத்து எறிகிறாய்?

**அனுமன் :** முத்திற்குள், என் ராமபிரான் இருக்கிறாரா என்று பார்க்கிறேன்.

என் பெருமான் இல்லாத எந்தப் பொருளும், எனக்கு வேண்டாத பொருள்தான்!

**மற்றொருவர் :** அப்படியானால், உனது உடலிற்குள், ராமபிரான் இருக்கிறாரா? இல்லையே!

உன் உடம்பை வேண்டாமென்று, பிளந்துவிட உன்னால் முடியுமா?

**அனுமன் :** என் இதயத்தில், ராமபிரான், பிராட்டியோடு எழுந்தருளியிருக்கிறார்!

எப்படி இந்த உடம்பை, என்னால் அலட்சியப்படுத்த முடியும்?

**வேறொருவர் :** என்ன! உன் இதயத்தில், ராமபிரான் எழுந்தருளியிருக்கிறாரா? காட்டு பார்க்கலாம்!

[அனுமனைப் பார்த்து, இப்பொழுது அங்கு கூடியிருப்போர், ஏளனமாகச் சிரிக்கின்றனர். உடனே, அனுமன், தன் மார்பைப் பிளந்து காண்பிக்க, அங்கு ராமபிரானையும் சீதையையும் பார்க்கின்றனர். 'ராம்! ராம்!' என்று பதறிக் கூறி, விழுந்து சேவிக்கின்றனர். பின்னர் அனுமனைச் சுற்றி வந்தும் கும்பிடுகின்றனர்.]

## காட்சி-465

*அயோத்தி அரசவை*

**ராமர் :** (அனுமனைப் பார்த்து) அனுமான்! அயோத்தி எங்கும் சுற்றி விட்டு வந்திருக்கிறாயே! என்னவெல்லாம் கண்டாய்?

**அனுமன் :** ஐயனே! இந்த மாநிலத்தைக் காக்க, இறைவனாகிய தாங்கள் இசைந்த பின்பு, நடக்கின்ற அற்புதங்கள் எண்ணில; வரம்பில. ஆயுதங்களால், யார்க்கும் சாக்காடு இல்லை. சிங்கம் யானைக்குச் சத்துரு இல்லை. வேங்கைப் புலி, மானோடும் பசுவோடும் உறவோடு பழகுகின்றது. நீரால்,

நெருப்பால், எங்கும் சேதம் இல்லை. புத்திரர் மரணத்தைத் தந்தை காண்பதில்லை. நோயுறுவார் இல்லை. மூத்தோர் உயிர் கவரும் கூற்றமும் இங்கு நடமாடவில்லை. மங்கலம் இழந்த மகளிர் இல்லை. இங்கு வீசுகின்ற காற்றும், தென்றலாகத்தான் இருக்கின்றது. ஆயிழை யாரெல்லாம், தம் விருப்பம்போல், ஆண் மகவைப் பெறுகிறார்கள். மண்ணுலகு உள்ள மன்னர் மைந்தர்கள், அவர் மங்கைமார்கள் எண்ணிடுவதெல்லாம், இந்த ஞாலம் முழுவதையும், ராமபிரானே ஆளவேண்டும் என்பது தான்!

மண்ணெல்லாம் ராமராஜ்யமானால், மக்களெல்லாம் வளம் கண்டு, நலம் கொண்டு, மங்கலம் பெறுவார்கள்!

**பரதன் :** நான் சொல்ல நினைத்ததை, அனுமன் சுவைபடச் சொல்லி விட்டான்!

**ராமர் :** புகழ்வதற்குப் புலவர்கள் இருக்கிறார்கள். குறை இருந்தால் கூறுங்கள். அதற்கே இந்த அரசவை இருக்கிறது!

## காட்சி-466

*அயோத்தியில் ராமரின் மாளிகை*

**அனுமன் :** (ஓடிவந்து, சீதையை நோக்கி) எம்பெருமான் எழுந்து விட்டார்! அவரை நீராட்டி விடப்போகிறேன்.

[இவ்வாறு கூறிவிட்டு, அங்கிருந்து விரைகிறான் அனுமன்.]

**சீதை :** (தனக்குள்) நான் இங்கு எதற்கு இருக்கிறேன் என்றே புரியவில்லை!

## காட்சி-467

*அயோத்தியில் ராமரின் மாளிகை*

**பரதன் :** *(வேகமாக வந்து, சீதையை நோக்கி)* குளித்தவுடன், அண்ணன் உடுத்திக் கொள்ள உடைகளை எடுக்கப் போனால், அதற்கு முன்பே, அந்தப் பணியை அனுமன் செய்து விடுகிறான்.

எந்த ஒரு கைங்கர்யத்தையும் என்னால், அண்ணனுக்குச் செய்யமுடியவில்லை. என் மனம் மிகவும் வேதனைப் படுகிறது.

## காட்சி-468

*ராமரின் மாளிகை*

**சத்ருக்கனன் :** *(சீதையிடம்)* அண்ணன் பூஜை செய்ய, நான் மலர் பறித்துக் கொண்டு போனால், அனுமன் முந்திக் கொண்டு, மலர் பறித்துக் கொடுத்து விடுகிறான்.

அண்ணனும் அதைக் கொண்டு, பூஜையை ஆரம்பித்து விடுகிறார்.

அண்ணனிடம், இந்த அனுமனுக்கு மாத்திரந்தான், உரிமை இருக்கிறதா?

## காட்சி-469

*ராமரின் மாளிகை*

**லட்சுமணன் :** *(சீதையிடம்)* உறங்காவில்லியாக, காட்டிலே அண்ணனுக்குக் காவல் இருந்தவன் நான். இப்பொழுது அண்ணனைத் தனிமையில் சந்தித்துச் சில வார்த்தை பேச முடியவில்லை. எப்பொழுதும் அந்த அனுமன்,

*அண்ணனிடம் தத்துவங்களைப் பேசிக் கொண்டிருக்கிறான். அனுமன் இல்லாமல், அண்ணனைப் பார்த்து, மனம் விட்டுப் பேச முடியாதோ என்ற ஏக்கம் வந்து விட்டது எனக்கு!*

**சீதை :** *கட்டிய மனைவி நானே விலகி விலகி இருக்கிறேன்! அன்னியன் முன்னிலையில், எல்லை மீற முடியுமா?*

## காட்சி-470

*ராமரின் மாளிகை*

[சகோதரர்கள் மூவரும், சீதையைச் சூழ்ந்து நிற்கின்றனர்.]

**லட்சுமணன் :** *என்னதான் அனுமன் உதவியிருந்தாலும், அவன் எங்களை ஒதுக்கிவிட்டு, இப்படி அண்ணனின் மடியிலேயே கிடப்பதா?*

*இதற்கொரு முடிவு கட்ட வேண்டும்!*

**மற்றவர்கள் :** *ஆமாம்.*

**சீதை :** *உங்கள் அண்ணனிடம், நம் ஏக்கத்தைத் தெரிவிப்போம். அனுமனுக்குத் தடைவிதிக்க, அவரால் மட்டுமே முடியும். அனுமனும் அதற்குக் கட்டுப்படுவான்.*

## காட்சி -471

*ராமரின் மாளிகை*

**அனுமன் :** *(ராமரை நோக்கி) ஐயனே! தங்களிடம் ஒரு விளக்கம் வேண்டும்.*

**ராமர் :** *என்ன விளக்கம்?*

[இப்பொழுது சீதை, லட்சுமணன், பரதன், சத்ருக்கனன் ஆகியோர் அங்கு வருகின்றனர்.]

**ராமர் :** (அவர்களைப் பார்த்து) சேர்ந்து வந்திருக்கிறீர்கள்! உட்காருங்கள்.

**அனுமன் :** ஐயனே! ஞானம் என்றால் என்ன? அஞ்ஞானம் என்றால் என்ன?

**ராமர் :** சூரியனிடம் வேதம் கற்றவனுக்கு, இதற்கு விளக்கம் தேவைதானா?

கேட்டதால் சொல்கிறேன். கேட்டவரெல்லாம், பொருளை உணர்ந்தாரே தவிர, அதில் பொதிந்துள்ள உண்மையை ஏற்றார் இல்லை.

தேகமே நான் என்று நினைப்பது, அஞ்ஞானம். நான் ஆத்ம ஸ்வரூபி என்பதை உணர்வது ஞானம்.

**அனுமன் :** மனிதனுக்குச் சத்துரு என்று யாரைச் சொல்வது ஐயனே?

**ராமர் :** அவன் கொள்ளும் காமக் குரோதமே, அவனுக்குச் சத்துரு!

**அனுமன் :** ஞானம் சித்திக்க, உபாயம் எது ஐயனே?

**ராமர் :** பற்று அற்றுக் கர்மங்களைச் செய்ய வேண்டும். 'நான்' என்னும் அகங்காரமற்று இருக்க வேண்டும். இன்பம் கண்டபோது கூத்தாடவோ, துன்பம் வந்தபோது, துவண்டு விடவோ கூடாது.

வருவது எதுவானாலும், மனச் சலனமின்றி எதிர்கொள்ள வேண்டும்.

ஞானம் சித்திக்க, இந்த ஞாலத்தார் தெரிந்து கொள்ள வேண்டிய வழிகள் இவை.

**அனுமன் :** ஞானம்பெற, பக்தியின் பங்கு பற்றிக் கூறுங்கள் ஐயனே!

**ராமர் :** இருளிலே, பொருட்களை, நம்மால் பார்க்க முடிவதில்லை. விளக்கின் ஒளியால், அவற்றைப் பார்க்கிறோம். பக்தியும் ஞானத்தை நமக்குத் தெளிவாகக் காட்டும் பவித்திரமான விளக்கு.

சீதை : (ராமரை நோக்கி) அனுமனோடு ஆத்ம விசாரம் செய்வதை நிறுத்திக் கொண்டு, எங்கள் எண்ணத்தை அனுமனிடம் தெரிவிப்பீர்களா?

**ராமர் :** (அனுமனை நோக்கி) அனுமான்! உன்னிடம் ஒன்று சொல்ல மறந்து விட்டேன்.

இவர்கள் குறையெல்லாம், 'இவர்கள் என்னை நெருங்க முடியவில்லை; எனக்கு எந்தக் கைங்கர்யமும் செய்ய முடியவில்லை'- என்று கூறுகிறார்கள்.

அவர்கள் ஆசைப்படி, அவர்களே எல்லாவற்றையும் செய்யட்டுமே!

**அனுமன் :** தாரளமாகச் செய்யட்டும் ஐயனே! தங்கள் கட்டளை அதுவானால், நான் தலையிட மாட்டேன்!

**ராமர் :** (சீதை முதலியவர்களைப் பார்த்து) போதுமா? (அனுமனைப் பார்த்து) உனக்கென்று எந்த வேலையும் இனிமேல் இருக்காதே! என்னை விட்டு அகன்று விடுவாயா அனுமான்?

**அனுமன் :** அது எப்படி முடியும் ஐயனே! விடுபட்ட வேலையை நான் செய்கிறேன்!

**லட்சுமணன் :** (ஏளனமாக) எந்தக் கைங்கர்யமாவது எங்களால் செய்யாது விடுபட்டுவிட்டால், அதை அனுமன் தாராளமாகச் செய்யட்டும்!

**பரதன் :** இதற்குச் சம்மதிக்கிறோம்.

**சத்ருக்கனன் :** அவ்வளவு கவனக் குறைவாக, நாங்கள் இருப்போம் என்று, அனுமன் எண்ணுகிறானா?

**அனுமன் :** உங்கள் செயலில் குறை வரும் என்று கூறவில்லை. நீங்கள் செய்ய நினைக்காத பணியை, நான் செய்கிறேன்.

**சீதை :** அந்தப் பணி எதுவாக இருந்தாலும், அதை அனுமன் செய்து மகிழட்டும்.

**அனுமன் :** இதற்கு அனுமதியளித்த என் தாயாருக்கு, என் நெஞ்சு நிறைந்த வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**ராமர் :** என்ன பணி அது? எனக்குக் கூடத் தெரியாமல், எனக்குச் செய்யப் போகும் பணி!

சொல்லின் செல்வனே! உன் சொற்களால் ஆவலை விதைத்து விட்டாய். அது என்னவென்று நீ சொல்லா விட்டால், இன்று இரவு எங்களுக்குத் தூக்கம் இல்லாமற் போய் விடும்.

**அனுமன் :** *ஐயனே! பெருமையிற் பெரியோனாக நீங்கள் இருக்க, நான் பெரிதாக என்ன செய்து விடப் போகிறேன்!*

*அரசர் கொட்டாவி விடடால், வாயருகில் கைசொடுக்குப் போடவேண்டும் என்பது அரச வழக்கம்!*

*அந்தப் பணியை, மன்னருக்குப் பதிலாக, நான் செய்து விட்டுப் போகிறேன்!*

*[இதைக் கேட்டு, எல்லோரும் சிரிக்கின்றார்கள்.]*

## காட்சி-472

*ராமர் மாளிகை. அதிகாலை நேரம்*

[ராமர் எழுந்தவுடன், அனுமன், அங்கு ஓடிவந்து நிற்கிறான். இப்பொழுது பரதனும் அங்கு வருகிறான்.]

**பரதன் :** *அண்ணா! தங்களை நீராட்டும் கைங்கர்யத்தைச் செய்வதற்கு, எனக்கு அனுமதி அளியுங்கள்.*

*(அனுமனைப் பார்த்து, எரிச்சலோடு) நீ ஏன் இப்பொழுது இங்கு வந்து நிற்கிறாய்?*

**அனுமன் :** *(அமைதியாக) எம்பெருமான் எழுந்தவுடன், கொட்டாவி விடுவதற்கு வழி உண்டே! இப்போது பெருமானை என்னால் பிரிந்திருக்க இயலாதே!*

*கொட்டாவியும், தும்மலும், காலநேரம் கணித்துக் கொண்டா வரும்?*

*[இதைக் கேட்டுப் பரதன் முகம் சுளிக்க, ராமர் புன்னகை செய்கிறார்.]*

## காட்சி-473

*ராமர் மாளிகை*

[பூஜைக்கான மலர்களோடு, ராமரிடம் வருகிறான் சத்ருக்கனன். இங்கு அனுமனைப் பார்த்தவுடன், அவன் முகம் சிவக்கிறது.]

**சத்துருக்கனன் :** *(அனுமனைப் பார்த்து) பூஜை வேளையில், இங்கு உனக்கு என்ன வேலை? போஜன வேளை என்றால், ஏதாவது கிடைக்கலாம்!*

**அனுமன் :** *ஐயனுக்குக் கொட்டாவி, எந்த நேரத்திலும் குதிக்கும்!*

*எப்பொழுதும் ஆயத்தமாக இருக்க வேண்டியது, என் கடமை அல்லவா?*

**சத்ருக்கனன் :** *(எரிச்சலோடு) செ! பூஜை நேரத்தில், இறைவனை நினைக்க முடியாதபடி செய்து விட்டாயே!*

*[ராமர், இதை ரசித்துப் புன்னகை செய்கிறார்.]*

## காட்சி-474

*ராமர் மாளிகை*

[அண்ணனைச் சந்திக்க லட்சுமணன் வருகிறான். அங்கு ஒரு மூலையில், ராமரையே பார்த்தபடி, கைகட்டி நின்று கொண்டிருக்கிறான் அனுமன்.]

**லட்சுமணன் :** *(அனுமனைக் கோபத்தோடு பார்த்து) அண்ணனிடம் நாலு வார்த்தை, தனிமையில் பேச விட மாட்டாயா?*

**அனுமன் :** *அந்த நேரத்தில், ஐயனுக்குக் கொட்டாவி வந்து விட்டால், என்ன செய்வது?*

என் பணியை, நான் செய்யாமற் போனால், என் உடம்புக்கு, அது பிணியாகிவிடும்

[லட்சுமணன் கோபத்தில் பற்களைக் கடிக்க, ராமர் புன்னகை செய்கிறார்.]

## காட்சி-475

*ராமர் மாளிகை. இரவு நேரம்*

[சீதை , மஞ்சத்து அருகில் நின்று கொண்டிருக்க, ராமர் படுக்கை அறையில் உலவிக் கொண்டிருக்கிறார். ராமரைப் பார்த்த படியே, அவர் நடக்க நடக்க, அவர் முன் இருக்கும் அனுமனும் பின்னுக்கு நடந்து கொண்டிருக்கிறான்.

ராமர் கொட்டாவி விட, அவர் வாயருகில் கை சொடுக்குப் போடுகிறான் அனுமன்.]

**சீதை :** (எரிச்சலோடு) இந்தக் கூத்தைத் தயவு செய்து நிறுத்திக் கொள்ளச் சொல்லுங்கள்!

**ராமர் :** நீங்கள் எல்லோரும் சேர்ந்துதான், இந்தப் பணியை, அனுமனுக்குக் கொடுக்கச் சம்மதித்தீர்கள்!

இப்பொழுது வேண்டாம் என்று கூறுகிறீர்கள்!

**சீதை :** எப்பொழுதும்போல், அனுமன், தன் பணிகளைச் செய்யட்டும்! இந்தக் கைசொடுக்கு போடும் வேலையெல்லாம் வேண்டாம்!

இரவிலும் பூதம் போல் கூடவே இருப்பதை, எப்படிச் சகிப்பது?

**அனுமன் :** (கை கூப்பியபடி) மாதா சொன்னபடி, நான் பழைய படி, என்னால் முடிந்த கைங்கர்யங்களைச் செய்கிறேன். இப்பொழுது எனக்கு விடை கொடுங்கள்.

[இவ்வாறு கூறிவிட்டு, அங்கிருந்து சென்று விடுகிறான் அனுமன்.]

**ராமர் :** அனுமனைப் பூதம் என்று சொல்லி, உன் பொல்லாத கோபத்தைக் காட்டி விட்டாய்!

**சீதை :** அந்த வார்த்தை தவறென்று, தணல் சுட்ட பின்பு, கை, தன் வலி உணர்வதுபோல், உணர்கிறேன்!

**ராமர் :** அனுமான் செய்த உபகாரங்களை நினைத்துப் பார்த்தாயா?

**சீதை :** அதற்கு இந்த ஒரு பிறவி போதாது!

[இவ்வாறு கண்கசியக் கூறுகிறாள் சீதை.]

## காட்சி-476

ராமர் மாளிகை. பகல்

**சீதை :** (அனுமனிடம்) அனுமான்! உன் மனம் புண்படும்படி பேசிவிட்டேனோ என்று என் மனம் வருந்துகிறது. நீ செய்த உதவிகளை நினைத்துப் பார்த்தால், நீ எப்பொழுதும் விஸ்வரூப கோலத்திலேயே எங்களுக்குக் காட்சி தருகிறாய்!

எத்தனை பிறவி எடுத்தாலும், எங்களால் உனக்குக் கைம்மாறாக எதுவும் செய்ய முடியாது!

**அனுமன் :** தாயே! இந்த அடிமையிடம் கருணை காட்டுங்கள்! அதுவே நான் யாசிப்பது! என் தலையில் கிரீடத்தைச் சூட்டினால், அது அங்கு தங்கியிருக்காது! மரத்திலிருந்து கனி பறிக்கக் கல்லாகப் பயன்பட்டுவிடும்! இரக்கம் காட்ட வேண்டிய விலங்கிடம், ஏற்றம் பார்க்கவேண்டாம்!

**சீதை :** வியாகரணப் பண்டிதன் நீ! உன்னை விலங்கென்று சொல்பவர்கள், அறிவில் விலங்காகத்தான் இருக்க வேண்டும்! என் பிரானோடு, சத் விஷயங்கள் பற்றித் தர்க்கம் புரிபவன் நீ! உன்னோடு வார்த்தையாட, என்னால் இயலாது.

என் மன ஆறுதலுக்காக, இன்று நான் சொன்னபடி, நீ கேட்கவேண்டும்.

**அனுமன் :** சித்தமாயிருக்கிறேன்.

**சீதை :** என் கையால், இன்று உனக்கு உணவு சமைத்திருக்கிறேன். அதை உனக்குப் பரிமாறப் போகிறேன். நீ அமர்ந்து சாப்பிடவேண்டும்.

**அனுமன் :** தாயே! இது உபச்சாரமா? உங்களுக்கு நான் செய்யும் அபச்சாரமாக ஆகிவிடாதா?

**சீதை :** கேள் அனுமான்! நான் கேட்டுக்கொண்டபடி நீ நடக்காவிட்டால், உன் விசுவாசத்தில், நான் ஐயம் கொள்ள நேரிடும்!

**அனுமன் :** ஐயோ தாயே! அப்படியெல்லாம் ஐயப்பட வேண்டாம். இந்த அனுமானால், அதைத் தாங்கிக் கொள்ள முடியாது!

இதோ, உட்கார்ந்துவிட்டேன். இலையைப் போடுங்கள்.

**சீதை :** திருப்தியாகச் சாப்பிட வேண்டும்!

**அனுமன் :** அன்னையின் கை படைக்கும் அமிர்தத்தை, மிச்சம் வைக்காமல் சாப்பிடுவேன். நீங்களே மிரண்டு போவீர்கள், இந்த அனுமனுக்கு இவ்வளவு பெரிய வயிறா என்று!

## காட்சி-477

*கயிலை மலை*

**உமையாள் :** (சிவனிடம்) என்ன இப்படிச் சாப்பிடுகிறீர்கள்

அந்தச் சீதை, எத்தனை முறை சமைத்துக் கொண்டு வருகிறாள்!

திரிபுரம் எரித்த நெருப்புப் போல, அவ்வளவு பசியா? பாவம் சீதை! தளர்ந்து விட்டாள்!

## காட்சி-478

*ராமர் மாளிகை*

**அனுமன் :** *(இலைமுன் அமர்ந்து சாப்பிட்டபடி) தாயே! பாற்கடல் அமிர்தம், உங்கள் கை மணத்தோடு பரிமாறுகின்ற உணவுக்கு ஈடாகாது தாயே!*

*இன்னும் பசியடங்கவில்லை! அன்னத்தைப் போடுங்கள் தாயே!*

*[சீதை அனுமனை அர்த்தத்தோடு உற்றுப் பார்க்கிறாள்.*

*சிவனார் சிரித்தபடி அமர்ந்திருப்பது, அவள் கண்களுக்குத் தெரிகிறது]*

**சீதை :** *(கையெடுத்துக் கும்பிட்டபடி) ஓம் நமச்சிவாயா!*

*(இவ்வாறு கூறிவிட்டு, உணவைப் பரிமாறுகிறாள்)*

**அனுமன் :** *(சாப்பிட்டபடி) போதும் தாயே, போதும்! வயிறும் மனமும் நிறைந்துவிட்டன!*

## காட்சி-479

*கயிலை மலை*

**உமையாள் :** *(சிவனிடம்) திருப்தியாகச்சாப்பிட்டீர்களா? பூமியில் அன்னதானம் நடக்கும் இடங்களில் எல்லாம், நீங்கள்தான் அமர்ந்து சாப்பிடுகிறீர்களா?*

**சிவனார் :** *இதை உலகமெல்லாம் எடுத்துச் சொல்லு. அப்படியாவது, அன்னதானம் எங்கும் சிறக்கட்டும். பசிக்கிற வயிறுக்குச் சோறிடுபவன்தான், இறைவனுக்கு நைவேத்தியத்தைப் படைப்பவன்!*

# காட்சி-480

*ராமர் மாளிகை*

*[ராமர் சீதையின் முன்னால், அனுமன் நின்று கொண்டிருக்கிறான்]*

**ராமர் :** அனுமான்! நீ சாப்பிடும்பொழுது, சீதை, உன்னைச் சிவபெருமானாகப் பார்த்திருக்கிறாள்!

நான் கும்பிடும் தெய்வம், எனக்குக் குற்றேவல் செய்துகொண்டிருப்பதா?

இந்த அபவாதத்திற்கு, நான் ஆளாக வேண்டுமா?

**அனுமன் :** (அச்சத்தோடு) என் ஐயன், என்ன சொல்ல நினைக்கிறீர்கள்?

**ராமர் :** இனிமேல் நீ எனக்குப் பணிவிடை செய்தால், என் உடல் பதறும்!

வரங் கொடுக்கவேண்டிய தெய்வத்தை, வாசலில் கைகட்டி நிற்க வைப்பதா?

**அனுமன் :** ஏதேதோ பேசுகிறீர்கள்! என்னை இங்கிருந்து போகச் சொல்லிவிடாதீர்கள்!

ராம சேவைதான், நான் இந்த ஜென்மம் எடுத்ததற்கே காரணம்!

**சீதை :** அனுமான்! ராம நாமம் உன்னால் வாழட்டும்! ராம மந்திரம், உன்னால் இந்த மண்ணுலகு எங்கும் முழங்கட்டும்! என் பிரான் கடைப்பிடிக்கும் தர்மம், யுகம் மாறினாலும், உன்னால் கட்டிக் காக்கப்படட்டும்!

பெரியதை எண்ணி, இப்பொழுது எங்களை விட்டுப் பிரிந்து விடு!

**அனுமன் :** (நடுக்கத்தோடு) தாயே!

**ராமர் :** எங்கும் வீசினால்தான், அது தென்றல்! எங்கும் பாய்ந்தால்தான், அது நதி!

ஓரிடத்தில் ஒடுங்கிக் கிடப்பதால், எதுவும் பயனின்றிப் பாழாகிவிடும்!

**சீதை :** நீ செல்லுமிடமெல்லாம், ராம நாமம் சொல்லப் பெறும்! ஐயனுக்கு அருகில் இருப்பதைவிட, ஐயன் புகழை அகில மெங்கும் பரப்புவது, உயர்ந்த பணிவிடை இல்லையா?

**ராமர் :** இந்த ராமனைப் பார்த்திருப்பதைவிட, ராம நாமத்தைப் பிறர் சொல்லக் கேட்டிருப்பது, நீ பெரிது உவக்கும் பேரின்பமாக இருக்கும்!

[இப்பொழுது, 'ராம்! ராம்! ராம்!' என்ற குரல், காற்றோடு கலந்து வருகிறது.]

**அனுமன் :** (உணர்ச்சி வயப்பட்டவனாக) ராம்! ராம்! யாரோ ராம மந்திரத்தைக் கூறிக் கொண்டிருக்கிறார்கள்!

**ராமர் :** இமயமலைச் சாரலில், தவ முனிவர்கள், என் நாமத்தைக் கூறிக் கொண்டிருக்கிறார்கள். உன்னை, அந்தச் சப்தம், வா... வா... என்று அழைக்கவில்லையா அனுமான்?

என் நாமம் கேட்கும் இடத்திலே, என் நினைவு உனக்கு இருக்காதா? நான் அங்கு இருக்கமாட்டேனா?

[மீண்டும் 'ராம்! ராம்!' என்ற குரல் கேட்கிறது]

**அனுமன் :** ராம்! ராம்! ராம நாமத்தைக் கூறுபவர்களைக் குளிர நோக்காமல், என்னால் இருக்க முடியாது ஐயனே! இப்பொழுது நான் இமயமலைச் சாரலுக்குச் சென்று, என் இதயத்தைக் குளிர்விக்கிறேன்.

**ராமர் :** பொருத்தமான நேரத்தில், உன்னை நினைப்பேன். உனக்கு உணர்த்துவேன். அப்போது வந்துவிடு.

ஏழு கடலுக்கு அப்பால், உயிரை வைத்திருப்பார்களே, அதுபோல், உன்னை எங்கோ அனுப்புகிறேன்.

[இப்பொழுது மீண்டும் 'ராம்! ராம்!' என்ற குரல் கேட்கிறது]

**அனுமன் :** ராம்! ராம்!

[ராமரையும், சீதையையும் மும்முறை சுற்றி வந்து கும்பிடுகிறான் அனுமன்]

**அனுமன் :** *நாமம் அழைக்க, நாதனை விட்டுச் செல்கிறேன்! வேத மந்திரம் அழைக்க, வேத முதல்வனை விட்டுச் செல்கிறேன்! அமிர்தம் அழைக்கப் பாற்கடலைப் பிரிந்து செல்கிறேன்!*

*[கூப்பிய கரமோடு, அனுமன் பின்னோக்கி நடந்து, அங்கிருந்து சென்று விடுகிறான்]*

## காட்சி-481

*வானம்*

['ராம்! ராம்!' என்ற குரல் கேட்க, அது கேட்கும் திசை நோக்கி, வானில் பறந்து செல்கிறான் அனுமன்]

## காட்சி-482

*இமயமலைச் சாரல்*

[இமயமலைச் சாரலில், தவ முனிவர்கள், கண் மூடி, ராம மந்திரத்தைக் கூறிக் கொண்டிருக்கின்றனர்.

அவர்கள் நடுவில் அமர்ந்து, அனுமனும் ராம மந்திரத்தை ஜபிக்கிறான்.

முனிவர்கள் கண் திறந்து, அனுமனைப் பார்க்க, அவர்களிட பேசுகிறான் அனுமன்].

**அனுமன் :** *பரம்பொருளைப் பார்க்காமலேயே, அவர் பெருமை அறிந்து, அவர் நாமத்தைக் கூறி மகிழ்கிறீர்கள்!*

*என் ஐயன் ராமபிரான், அலகு இலா விளையாட்டு உடையார்! அறம் இதுவெனச் சொல்ல எடுத்த மானிட அவதாரம்! அவர் நாமம் சொல்வது, நம் செவி நுகர் கனிகளாகும்! அவர் கை வண்ணம், கால் வண்ணம் பேசப் பேச, அந்த மைவண்ணன் மலர்ப்பாதம், நம் நெஞ்சில் தங்கும்!*

## காட்சி-483

*கயிலை மலை*

**உமையாள் :** *(சிவனிடம்) என்ன அக்கிரமம் இது! கர்ப்பம் தரித்த சீதையை, யாரோ ஏதோ சொன்னார்கள் என்று, ராமன் ஏவ, லட்சுமணன் காட்டிலே கொண்டு போய்விட்டு விடுகிறான்.*

## காட்சி-484

*கானகம்*

[லட்சுமணன் கலக்கத்தோடு சீதையிடம் பேசுகிறான்]

**லட்சுமணன் :** *அண்ணன் கட்டளையை மறுக்க அஞ்சி, இன்று தங்களை, இந்தக் கானகத்தில் கொண்டு வந்து விட்டுச் செல்கிறேன்.*

**சீதை :** *(கண்ணீரோடு) என் தாயும், தந்தையும், என் ஆருயிர்த் தோழியரும், தன்னேர் இலாத தாசரதியார் செய்த, இந்த இன்னாத செயலைக் கேட்டால், என்ன பாடுபடுவார்கள்? தர்மம் கோலோச்சும் ராம ராஜ்யத்தில், நான் மட்டும், தணல்பட்ட புழுவாகத் துடிக்கவேண்டுமா?*

*நெய்யாலே நெருப்பை அணைக்க நினைப்பதுபோல, ஒரு பழியை மறைக்க, இன்னொரு பழியைச் செய்வதா?*

*கன்னெஞ்சராய் என்னைக் காட்டில் விடச் சொன்னாரே, அவரா....*

*இல்லை... வன்னெஞ்சராய் அதற்கு இசைந்து, இங்கு எனைக் கொண்டு வந்த நீயா...*

*இல்லை... நன் நெஞ்சம் உடைய நங்கை மார் நகைக்க, இன்னும் சாகாது இருக்கின்ற நானா...*

*யாருக்கு நெஞ்சு உரம் அதிகம்? சொல்லப்பா லட்சுமணா சொல்!*

பெண் எனப் பிறந்தார்கள், நான் பட்ட பெருந்துயர் போல, யார் பட்டிருப்பார்கள்? கட்டினவளை, வாயும் வயிறுமாக இருப்பவளை, வாட்டும் கானகத்தில் தவிக்க விடுகிறீர்களே!

மனுக் குலத்தில் பிறந்தார்க்கு, இதுதான் மனுநெறியா?

## காட்சி-485

*இமயமலைச் சாரல்*

**அனுமன் :** (உணர்ச்சி வசப்பட்டவனாக) முனிவர் பிரானே! என் தெய்வம் தவறு இழைத்துவிட்டது!

என் தாய் கண்ணீர் சிந்தி விட்டாள்!

தர்மம் நாணித் தலை கவிழ்ந்துவிட்டது!

இதைத்தான் விதி என்கிறார்கள்! வினைப் பயன் என்கிறார்கள்!

நளன், நிலைகெட்டு, நேரிழையை நெடுங்கானகத்து இடைவிட்டு, மடைப் பள்ளியில் ஊழியம் செய்தது, விதியால்தானே!

தன்னேரில்லாத அரிச்சந்திரன், தன் மைந்தனையும். மனையாளையும் விற்று, இடுகாடு காத்து நின்றது, இட அளிக்கும் விதியால்தானே!

யாரையும் நோவதால், நேரப் போவது ஒன்றுமில்லை! என் அன்னையின் இடர் நீங்க, அருந்தவம் செய்கிறேன்! என் ஐயன் ராமன் செய்த குறை நீங்க, ராம நாமத்தைக் கூறி வழிபடுகிறேன்! ராம்! ராம்! ராம்! ராம்!

## காட்சி-486

*கயிலை மலை*

**உமையாள் :** (சிவனை நோக்கி) சுவாமி! ஜனகன் பயந்த மடப் பாவை, மங்கை சீதை, தவமுனிவன் வால்மீகி ஆஸ்ர மத்திலே, செங்கமல விழிச் செவ்வாய், சிறுவர் இருவரைப் பெற்றெடுத்திருக்கிறாள்.

**சிவனார் :** பொன்னகரில் பிறக்க வேண்டியவர்கள், புலி உலவும் காட்டில் பிறந்திருக்கிறார்கள்!

எவ்வண்ணம் ராமன் இருக்கும் இலக்கணங்கள் அவை யாவும், இலங்கித் தோன்றி, அவ்வண்ணத்து அவ்வுருவாய், பிள்ளைகளும் அவதரித்திருக்கிறார்கள்!

கோதறு மந்திரங்கள் சொல்லி, மைந்தர் இருவரும், குசலவர்கள் என்று பேர் ஆயினர்.

## காட்சி-487

*இமய மலைச் சாரல்*

[அனுமன், குட்டிக் கர்ணங்கள் போட்டுத், தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்துகிறான்.]

**அனுமன் :** முனிவர் பிரானே! என் ஐயனுக்குச் செல்வங்கள் பிறந்திருப்பது கேட்டு, அயோத்தி மாநகர், குதூகலித்துக் கொண்டாட வேண்டாமா?

பொய்யாத வேதியர்க்குப் பூதானம், கோதானம் முதலியன பண்ணிக், கையார நிதி வீசிக், காகுத்தன் காளையர்கள் பிறந்தாரென்று, மையார் பூம்பொழில் நகரில் மகிழ்வெய்தி, மணிமுரசும் அறைந்து நின்று, நெய்பூசி நீராடி, அயோத்தி மக்கள் களிக்கும் காட்சி, இல்லாத ஒன்றாக ஆகிவிட்டதே!

நான் இருக்கின்றேனே, இந்தக் கொடுமையைக் கண்டு!

[வாய்விட்டு அழுகிறான் அனுமன்.]

## காட்சி-488

*அயோத்தியில் ராமர் மாளிகை*

[தம்பியர் மூவரும் இருக்க, ராமர் அவர்களிடம் பேசுகிறார்.]

**ராமர் :** எனைத் தாங்கும் தம்பியரே! என் உள்ளத்தை உறுத்தும் எண்ணத்தைக் கூறுகின்றேன். நான் பாபங்கள் செய்திருப் பேனோ என்று பரிதவிக்கிறேன். இரவில், உறக்கம், என்னைத் துறந்து சென்று விட்டது. அன்னம் சுவைக்காது போக, அதை ஏற்க, என் நா மறுக்கின்றது. காரணம் இல்லாமல், உடம்பு பதறுகிறது. உள்ளம் கவலையில் சிதறுகிறது.

**லட்சுமணன் :** அண்ணா! அசுவமேத யாகம் செய்தால், அல்லல் தீரும். முன்பு, விருத்திராசுரனைக் கொன்ற பாவத்தை, இந்திரன் தொலைத்தது, இந்த அசுவமேதயாகம் பண்ணித் தான்! கொற்றவன் இளன் முன்பு சிவன் சாபத்தால் சீரழிந்த போது, இந்த அசுவமேதயாகம் செய்வித்தே, சாபம் நீங்கப் பெற்றான்!

**ராமர் :** நன்று சொன்னாய் லட்சுமணா! நைமி சாரணியம் தன்னில், தவத்தோர் எல்லாம் வந்து திரளட்டும். எல்லா இலக்கணமும் உடைய நன் குதிரையை, மந்திரத்தில் வித்தகர் மந்திரித்து, இத் தரணியெங்கும் செல்ல விடட்டும்.

அதற்குப் பாதுகாவலாக, அனுமனையும் வரவழைத்து அனுப்பி வைக்கிறேன். நல்லன எல்லாம், அந்தச் சேவகன் செயலால் பிறக்கும்!

## காட்சி-489

*வீரமணியின் அரண்மனை*

**சேவகன் :** சிவ சிவா! மாமன்னா! அயோத்தி ராமரின் அசுவமேதக் குதிரை, நம் நகரில் நுழைந்து விட்டது. அதற்குக் காவலாக, சத்ருக்னனும், பரதன் மகன் புஷ்கரனும், பகை அஞ்சும் அனுமனும், வந்து கொண்டிருக்கிறார்கள்.

**வீரமணி :** இந்த வீரமணியின் அரண்மனையில், சிவனே காவலாக அமர்ந்திருக்கிறான்!

என் மண்ணிலே, என் வீரத்தை மிதிக்க, இன்னொரு நாட்டுக் குதிரை வரலாமா? அதைக் கட்டிப்போடா விட்டால், என் கீர்த்தி வெட்டி வீசப்பட்டு விடாதா?

குதிரையைச் சிறைப் பிடியுங்கள்! எந்தக் கொற்றவனுக்கும், நான் குறைந்தவன் இல்லை என்பதைக் குவலயம் உணரட்டும்!

## காட்சி-490

*அரண்மனை பூஜை அறை*

**சிவன் :** வீரமணி! ராமனை எதிர்ப்பது விபரீதமாயிற்றே! அவன் பக்கம் அனுமனும் இருக்கின்றான்!

**வீரமணி :** அஞ்செழுத்து மந்திரத்திற்கு உரியவன், அஞ்சுவது போல நடிப்பது, நல்ல அழகு!

போர் என்று வந்து விட்டால், கயிலை வாசா!, உன் சூலம் சுழல வேண்டும். பகை நிர்மூலமாக வேண்டும், பக்தனைக் காப்பவன் சிவன் என்ற எண்ணம் திண்ணமுற வேண்டும்.

**சிவன் :** வீரமணி! ராமன் குதிரையை விட்டு விடேன்! உனக்கு வேண்டுமானால், இன்னொரு குதிரையைக் குட்டியோடு பிடித்துத் தருகிறேன்!

அந்த அனுமனோடு போர் என்பது, அவ்வளவு எளிதான செயலல்ல!

அவன் கடித்து விட்டால், அந்த ரணம் ஆறப் பல யுகங்கள் ஆகலாம்!

**வீரமணி :** திரிபுரம் எரித்தவர், மரத்துக்கு மரம் தாவும் ஒரு விலங்கைக் கண்டு கலங்குவதா?

அச்சம் இருந்தால், அரண்மனையில் பத்திரமாக இருங்கள்...உமையம்மைக்கு இது உடன்பாடு என்றால்!

போருக்கு வந்தால், அந்த அனுமனை, நான் பூமிக்குள் புதைக்கிறேன்!

**சிவன் :** நானும் வருகிறேன். ஒதுங்கி இருந்தால், எனக்குப் பிறகு பூஜை இல்லாமற் போய் விடும்!

## காட்சி-491

*போர்க்களம்*

[வீரமணியை அடித்து வீழ்த்துகிறான் அனுமன். வீரமணி மயங்கி விழுகிறான். சிவன் சூலத்தோடு அங்கு வருகிறார்.]

**சிவன் :** (அனுமனைப் பார்த்து) அனுமான்! பக்தனைக் காக்கச் சூலம் ஏந்தி வந்து விட்டேன். என்னை நம்பியவன், அடிபட்டு மயங்கிக் கிடந்தால், என்னால் செயலற்று இருக்க முடியுமா? இந்த ஜெகம், இதைக் கண்டு சிரித்து விடாதா?

ஆயுதம் எடுத்துவா. உன்னை வென்று, என் வல்லமையை மெய்ப்பிக்கிறேன்.

இல்லையென்றால், திரிபுரம் எரித்ததை, திரித்து விட்ட கதை என்று சொல்லி விடுவார்கள்!

**அனுமன் :** (பணிவோடு) பெருமானே! உன்னோடு நான் போர் புரிவதா? உன் அம்சம், நான் என்று கூறுவார்கள்! கடல்வீசும் அலை, கடலைக் குடித்துவிட முடியுமா? விளைகின்ற பயிர், வயலுக்கு அயலானதா?

**சிவன் :** இந்தப் பேச்சையெல்லாம் கேட்டுப் புளித்து விட்டது! எங்களிடம் உள்ள குறைபாடே, ஸ்தோத்திரத்திற்கு மயங்குவது! அதை, நீங்களெல்லாம் தோதாகப் பயன் படுத்திக் கொள்கிறீர்கள்!

ஏதாவது ஆயுதமெடுத்து என்னோடு மோது! வெறுங்கை யோடு இருக்கும் உன்னை வீழ்த்திக் காட்டினால், சிவகணங்களே, மறைவாகப் போய்ச் சிரிப்பார்கள்!

**அனுமன் :** உன்னோடு போர் புரிய, நான் எடுத்தாளும் ஆயுதம், என் ஐயன் நாமந்தான்! ராம நாமந்தான்!

(இவ்வாறு கூறி, அனுமன் 'ராம்! ராம்!' என்ற ராம மந்திரத்தை, இசையோடு பாடி ஆடுகிறான்.)

**சிவன் :** இது போரா? புலன்களைக் கட்டிப் போடும் வசியமா?

ராம்! ராம்! ராம்! ராம்!

[சிவனாரும், ராமமந்திரத்தைப் பாடி, உடன் ஆட ஆரம்பித்து விடுகிறார்.

இப்பொழுது வீரமணி மயக்கம் தெளிந்து எழுந்து, இந்தக் கோலாகலத்தைப் பார்க்கிறான். தன்னையறியாமல் வீரமணியும் ராமமந்திரத்தைப் பாடி ஆடுகிறான்.]

## காட்சி-492

*கயிலை மலை*

**உமையம்மை :** (சிவனாரைப் பார்த்து) இப்படி வீரமணியிட மிருந்து யாகக் குதிரையை, அனுமன் மீட்டுச் செல்ல, ஆடிப்பாடி உதவியிருக்கிறீர்கள்!

**சிவன் :** முரட்டுப் பக்தனை வழிக்குக் கொண்டு வர, வேறு என்ன செய்ய முடியும்?

பக்தனும் கையை விட்டுப் போகக் கூடாது. ராம கைங்கர்யமும் பழுதின்றி நடக்க வேண்டும்.

**உமையம்மை :** இப்பொழுது யாக பூமிக்குக் குதிரையோடு, அனுமன் போய்ச் சேர்ந்து விட்டானே! இனி என்ன நடக்கும்?

**சிவன் :** ஏதோ நடக்கக் கூடாதது, நடக்கப் போகிறது என்பதைக் குறிப்பால் கூறுகிறாயா?

## காட்சி-493

*யாக சாலை*

**ராமர் :** *என்ன! என் சரிதத்தை, சிறுவர் இருவர், இசையோடு பேசுகிறார்களா?*

**சேவகன் :** *ஆம் மன்னா! லவகுசர்கள் அவர்கள் நாமம். வால்மீகி முனிவரின் வளர்ப்புச் செல்வங்கள்.*

**ராமர் :** *அவர்களை இங்கு அழைத்து வாருங்கள். அனுமனும், குவித்த வெற்றியோடு, குதிரையோடு வந்து விட்டான்! யாகம் பூர்த்தியாகும் இந்நன்னாளில், அந்த அரும்புகள் உதிர்க்கும் அமிழ்தைப் பெறுவோம்!*

## காட்சி-494

*வால்மீகியின் ஆஸ்ரமம்*

**சீதை :** *(வால்மீகி முனிவரைப் பார்த்து) என்ன சொல்கிறீர்கள்! என் மைந்தர்கள், அவர்கள் தந்தையிடம், அவர் கதையைப் பாடப் போயிருக்கிறார்களா?*

**வால்மீகி :** ஆம். தந்தை புத்திரர்களுக்குத் தக்க கதை சொல்வது வழக்கம்.

இங்கு புத்திரர்கள் தந்தைக்குப் புண்ணிய கதையைச் சொல்லப் போயிருக்கிறார்கள்.

**சீதை :** *மன்னர், தன் மைந்தர்களை, இனம் கண்டு கொள்ள மாட்டாரா?*

**வால்மீகி :** அனுமன் அவையில் இருப்பதால், அது நடந்தே தீரும். உன்னை அழைத்து வரும்படியும், மன்னரின் ஆணை பிறக்கும்.

**சீதை :** புத்திரர்களைப் பெற்ற பின்பு, என் வாழ்வு முற்றுப் பெற்று விட்டதாக உணர்கிறேன்.

**வால்மீகி :** *செல்வங்களுக்குரிய சிம்மாசனத்தில், அவர்களைச் சேர்க்க வேண்டிய பொறுப்பு இருக்கிறதல்லவா?*

*பெற்றெடுத்த ரத்தினங்களைக் காட்டில் தூவி விட்டுச் செல்ல முடியுமா?*

## காட்சி-495

*யாக சாலை*

**ராமர் :** *(இன்ப அதிர்ச்சியோடு) என்ன! என் கதையைப் பாடிய, இந்தச் சிறுவர்கள், என் புத்திரர்களா?*

*இந்தப் பேசும் பொற்சித்திரங்கள், என் சீதை பெற்றெடுத்த, என் பிள்ளைகளா?*

**அனுமன் :** *ஆம் ஐயனே! வால்மீகி முனிவரின் அரவணைப்பிலே, வளர்ந்த கொழுந்துகள்!*

*தங்கள் உருவும் திருவும், இவர்களிடம் எதிரொலிக்கின்றனவே!*

*இந்தச் சிறார்களைக் காண்போர், ஸ்ரீராமரையே காண்பர்! முனிவர் ஒருவர்மூலம், இம்மொட்டுக்கள், வால்மீகி முனிவரிடம் வளர்வதைத் தெரிந்துகொண்டேன்.*

*(பிள்ளைகளை அணைத்து மகிழ்கிறார் ராமர்.)*

**ராமர் :** *என் சீதை நலமா?*

**அனுமன் :** *வரச் சொல்லி, அந்த வைதேகித் தாயாரிடமே, நலமா என்று கேட்டு விடுங்கள்!*

*என் தாயார் இருக்கும் பொழுது, தாயாரைப் போன்ற உருவம் செய்து, வேள்வியைச் செய்ய நினைப்பானேன்?*

**ராமர் :** *(பணியாட்களை நோக்கி) வால்மீகி முனிவர் ஆஸ்ரமத்தில் இருக்கும், இந்நாட்டு அரசியை, உடனே அழைத்து வாருங்கள்!*

# காட்சி-496

*வால்மீகியின் ஆஸ்ரமம்*

**வால்மீகி :** சீதாதேவி! தேர் வந்து, வாசலில் நிற்கிறது. மன்னரிடமிருந்து அழைப்பு வந்து விட்டது.

**சீதை :** என்னை மன்னர் ஏற்றுக் கொள்ளப் போகிறார் என்று நினைக்கிறீர்களா?

**வால்மீகி :** வருவதை எதிர்கொள்வோம்.

வரும் காலத்திற்கு, உன் சரிதம், சன் மார்க்கமாகத் திகழும்!

# காட்சி-497

*யாக சாலை*

[யாக சாலைக்கு முனிவரோடு வருகிறாள் சீதை. பிள்ளைகள் ஓடிவந்து, அம்மாவைக் கட்டிப் பிடித்துக் கொள்கின்றனர்.

கணவனை வணங்குகிறாள் சீதை. முனிவர் பெருமானை வணங்குகிறார் ராமர். சீதையைப் பார்த்து, ராமர் மௌனமாக அழுகிறார்.]

**ராமர் :** சீதை! மன்னர் என்ற முறையிலே, என் மனம் ஒப்பா முறையிலே, உன்னைப் பிரிந்திருக்கச் செய்தேன். இது தவறுதான்! ஆனால், மணிமுடி என் தலையிலே இருப்பதால், இந்தத் தவறை, நான் செய்தே ஆக வேண்டும்! மக்களின் பேச்சைக்கேட்டு, உன்னைத் துறந்தேன்! மன்னனாக வாழ்ந்தேன்! ஒரு கணவனாக வாழும் வாழ்வை இழந்தேன்!

**சீதை :** அதை அறிவேன் ஐயனே! நான் பிரிந்த பின்பும், தாங்கள் இன்னொரு பெண்ணோடு, வாழ்வைப் பகிர்ந்து கொள்ளவில்லை.

இந்தப் பேராண்மைதான், பிரபஞ்சம் அழிந்தாலும், அழியாத பெரும் புகழாக நிலைத்து நிற்கும்!

**அனுமன் :** ஐயனே! இப்பொழுது என் தாயாரை, யாக குண்டத்தின் எதிரே, தங்களுடன் அமரச் செய்து, வேள்வியைச் செய்து முடியுங்கள்.

**ராமர் :** அருந்ததி நாணும் கற்பினாள் என் மைதிலி என்பதை நான் அறிவேன்!

அன்று அப்பால் உள்ள லங்கை கண்ட அற்புதத்தை, இன்று இந்த அயோத்தி நாடு காணவேண்டும்!

என் அகத்து உறைபவள், அப்பழுக்கு அற்றவள் என்பதை, இந்த அயோத்தி வாழ்மக்கள், ஐயம்திரிபு அற உணரவேண்டும்!

**அனுமன் :** ஊரார் சான்று அளித்தால்தான், மனையாளுக்கு வாழ்வு உண்டா?

**ராமர் :** ஊராளும் மன்னருக்கு அதுதான் விதி! மன்னன் ஆனபிறகு, மக்களின் எண்ணமே, என் எண்ணமாக வேண்டும்! தனி மனிதனாக, நான் தனி வழியே போகமுடியாது! மணிமுடி சுமப்பவன், மக்கள் ஆட்டிவைக்கிறபடி ஆடுபவனே!

**அனுமன் :** ஐயனே! இதைச் சொல்லவா, மாதாவை அழைத்து வரச் சொன்னீர்கள்?

**ராமர் :** முன்பு லங்கையிலே, தீப்புகுந்து வெளிவந்ததைப் போல, இப்பொழுது இங்கும் ஓர் அருஞ்செயலைச் செய்து விட்டால், இந்த ஊரார் தெளிவு பெறுவர்! பின்னர், மனம்போல் வாழ்வு எனக்குக் கிடைக்கும்! சீதை, என் அரியாசனத்தில், சரியாசனமாக அமர்ந்திருப்பாள்!

**அனுமன் :** ஐயனே! இப்படி, ஒவ்வொரு ஊரிலும் வைக்கும் சோதனையில் தேற வேண்டுமா? இதை அறம் என்று, எந்தத் தெய்வமாவது கூற முடியுமா?

**சீதை :** (உணர்ச்சி வசப்பட்டவளாக) அனுமான்! சோதனை எனக்கில்லை! தர்மத்திற்கு! மன்னர் பேசுவதெல்லாம், விதி எழுதித் தயாரித்த பேச்சு! இதில் யாரையும் நோவதற்கில்லை! வெந்து நொந்து அழுது துடிக்க வேண்டிய வாழ்வு, என் வாழ்வு என்பது, எப்போதோ முடிவெடுக்கப்பட்ட தீர்மானம்!

அயோத்தி நாட்டு மக்களே! மன்னரே! இந்த மிதிலையின் புத்திரி, கறை இல்லாதவள் என்பதைக் காணுங்கள்!

என் சொல் உண்மையானால், இந்தப் பூமி பிளந்து, நான் ஒடுங்க இடம் கொடுக்கட்டும்!

[இவ்வாறு சீதை கூறியவுடன், பெருத்த ஓசையுடன் பூமி பிளவுபட்டு, சீதையை விழுங்கிப் பின் மூடிக் கொள்கிறது.

சிறுவர்கள் இருவரும், 'அம்மா! அம்மா!' என்று கதறி அழுகின்றனர்.

வால்மீகி முனிவர், சிறுவர்களை ஆதரவாக அணைத்துக் கொள்கிறார்.]

**ராமர் :** என் சீதா, பூமியில் மறைந்து விட்டாளா?

**அனுமன் :** (வேதனையோடு) என் ஐயன் ஆசைப்பட்டபடி, அற்புதம் நிகழ்ந்து விட்டது!

கண்ணைப் பறிகொடுத்துச் சித்திரத்தை வாங்கி விட்டோம்!

மக்களுக்காக மன்னர் வாழட்டும்! அதோடு, இந்தத் தாயில்லாப் பிள்ளைகளுக்குத் தந்தையாகவும் இருக்கட்டும்!

வேள்வி என்று வேட்கையோடு வந்தேன்! வெறும் மயானத் தீயைத்தான், இங்கு கண்டேன்!

என் மனம் அமைதி பெற, இப்போது இமயமலைச் சாரலுக்குப் போகிறேன். என் ஐயன் நாமம் சொல்லி, என் உள்ளம் ஆறுதல் பெற அகல்கிறேன்.

ராம்! ராம்!

[ராமரை வணங்கி விட்டு, அங்கிருந்து போகிறான் அனுமன்.]

## காட்சி-498

[இமயமலைச் சாரலில், அனுமன் அமைதியின்றி உலவிக் கொண்டிருக்கிறான். இப்பொழுது வானிலிருந்து ஓர் அசரீரி கேட்கிறது.]

***அசரீரி :*** *அனுமான்! அமரர் வேண்ட, திருமால், ராவணனைக் கொல்ல, ராமனாக அவதரித்தார். திருமகளும், சீதையாக அவதரித்து, ராமனைக் கைப்பிடித்தாள். அவதார நோக்கம் நிறைவேறியவுடன், பிராட்டி முன்னதாகத் தங்கள் இடமான வைகுந்தம் சேர்ந்து விட்டாள்!*

*இதில் நீ வருத்தப்பட என்ன இருக்கிறது? சீதைக்கு வந்த இடர் எல்லாம், சீதையின் பெருமையைத் தான் பேசும்! காவியச் சித்திரமாக, அவள் கதை என்றும் நிலைத்து நிற்கும்!*

*இதில், உன் பங்கும் பரிமளிப்பும், பலாச் சுளையெனத் தித்திக்கும்!*

*உன் பணி, இனி, ராம மந்திரத்தை, ஞாலமெல்லாம் பரப்ப வேண்டியது!*

*இனிவரும் உலகம், சீலத்தோடு வாழ, நீ தேவைப் படுகிறாய்! உன் ராம நாமம் தேவைப்படுகிறது! ராமகாதை தேவைப்படுகிறது!*

*ராம்! ராம்! ராம்! ராம்!*

***அனுமன் :*** *(உரத்த குரலில்) ராம்! ராம்!*

## காட்சி-499

*அயோத்தி அரண்மனை வாயில்*

[முனிவர் ஒருவர் வந்து, அரண்மனை வாயிலில் நிற்கும் லட்சுமணனிடம் பேசுகிறார்.]

***முனிவர் :*** *லட்சுமணா! கலைமானும், கொல்லும் புலியும், ஒரே துறையில் நீர் அருந்த, நீதி வழுவா ஆட்சி செய்யும், உன் அண்ணன் ராமனைப் பார்க்க வந்திருக்கிறேன்.*

**லட்சுமணன் :** வாருங்கள் சுவாமி! அண்ணனிடம் அழைத்துப் போகிறேன். தவமுனிவர்களுக்கு இங்கு ஏது தடை? அவர்கள் வரவு, வேந்தர் பெறுகின்ற வரமாகும்.

[முனிவரை உள்ளே அழைத்துச் செல்கிறான் லட்சுமணன்.]

## காட்சி-500

*ராமர் இருப்பிடம்*

**ராமர் :** (முனிவரை நோக்கி) முனிவர் பிரானே! என் பணி என்னவென்று, தாங்கள் உரைத்தால், அதைச் செய்யச் சித்தமாயிருக்கிறேன்.

**முனிவர் :** பித்தம் கொண்ட மனிதர், நாம் பேசுவதைக் கேட்கக் கூடாது!

**ராமர் :** இங்கு அன்னியர் யாருமில்லை சுவாமி!

**முனிவர் :** நம் இருவரைத் தவிர, மற்றவரெல்லாம் அன்னியரே! யாராவது, இங்கு நம் பேச்சைக் கேட்டாலோ, நாம் பேசும்போது உடனிருந்தாலோ, அவர்களைக் கொன்றுவிட வேண்டும்!

காரணம் கேட்காதே! பூரண ஞானம் பெற்ற முனிவன், பொருத்தமில்லாமல் பேசமாட்டான்!

**ராமர் :** முனிவர்களின் வாக்கிலே, சத்தியம் ஒலிக்கும் என்பது, இந்த ஷத்திரியனுக்குத் தெரியாதா சுவாமி?

(லட்சுமணனை நோக்கி) லட்சுமணா! முனிவர் பிரான் என்னோடு பேசிக் கொண்டிருக்கும்பொழுது, யாரையும் இங்கு அனுப்பி விடாதே! வாயிலில் காத்து நில்! பாதியில் ஓர் உயிர் பறிபோக, இடம் கொடுத்து விடாதே!

**லட்சுமணன் :** தங்கள் கட்டளைப்படி நடக்கிறேன் அண்ணா!

[லட்சுமணன் அங்கிருந்து செல்கிறான்.]

**முனிவர் :** ராமா! பதினோராயிரம் ஆண்டுகள், நாட்டை ஆண்டு விட்டாய். அலுக்க வில்லையா உனக்கு? உன் கணக்கு முடியப் போகிறதே!

**ராமர் :** சுவாமி!

**முனிவர் :** என்னை யாரென்று தெரியவில்லையா? எமன் நான்! உன் ஆயுள் முடியப் போகிறது என்பதை அறிவிக்க வந்தேன்!

நீ திருமால் ஆனாலும், மானிடனாகப் பிறந்து விட்டாய்! பிறந்தவர் இறப்பது நியதி அல்லவா?

## காட்சி-501

*அரண்மனை வாயில்*

[துர்வாச மகரிஷி வந்து கொண்டிருப்பதை, அரண்மனை வாயிலில் நின்று கொண்டிருக்கும் லட்சுமணன் பார்த்துத் திடுக்கிடுகிறான்.]

**லட்சுமணன் :** (தனக்குள்) ஐயோ! இந்த நேரத்தில், கோபத்திற்குப் பெயர் போன துர்வாச மகரிஷி வந்து கொண்டிருக்கிறாரே!

இவரைத் தடுத்து நிறுத்தினால், அடுத்து, நம் சந்ததியையே சாபமிட்டு அழித்து விடுவாரே!

[முனிவர் அருகில் வந்து விட, லட்சுமணன் அவரை விழுந்து வணங்குகிறான்.]

**லட்சுமணன் :** முனிவர் பிரானுக்கு, என் பணிவான வணக்கங்கள்.

**துர்வாசர் :** நலமே பெறுக! நான், மன்னர் ராமரை உடனே பார்க்க வேண்டும்.

**லட்சுமணன் :** தங்களுக்கு வேண்டியது எதுவோ, அதைச் செய்திட அடியேன் காத்திருக்கிறேன். மன்னவன் செய்யும் பணியை, இந்தச் சின்னவன் செய்ய மாட்டேனா?

**துர்வாசர் :** (கோபத்தோடு) மன்னனைப் பார்க்க வேண்டும் என்று சொன்னால், மறித்து நிற்கிறாயே! என் சினம், உன் குலத்தை அழித்து விடாதா? இந்தக் கொற்றத்தைச் சிதைத்து விடாதா?

**லட்சுமணன் :** (தனக்குள்) நான் இப்பொழுது அங்கு போனால், என் ஆயுள்தான் போகும்! பரவாயில்லை! என் குலமும், அண்ணனின் கொற்றமும், இவர் சாபத்திலிருந்து மீளும்!

(முனிவரைநோக்கி) இதோ, அண்ணனிடம் போய்த் தங்கள் வரவைத் தெரிவிக்கிறேன் சுவாமி!

வாழ்த்த வேண்டிய வாயால், என் குலத்தைத் தாழ்த்தி விடாதீர்கள் சுவாமி!

[லட்சுமணன் அங்கிருந்து போகிறான்.]

## காட்சி-502

*ராமர் இருப்பிடம்*

**ராமர் :** (எமனிடம்) மனிதன் மரணத்தைத் தவிர்க்க முடியாது என்பது, மண் ஆளும் மன்னனுக்குத் தெரியாததா?

இருந்தாலும், நினைவூட்ட வந்ததற்காக, என் நெஞ்சு நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பாசக் கயிறோடு வராவிட்டாலும், உங்களோடு உடன் நடக்கச் சித்தமாயிருக்கிறேன்.

**எமன் :** வைகுந்தம் சேர வேண்டியவர், இந்த வையத்தில, இதற்குமேல் இருத்தல் ஆகாது!

[இப்பொழுது திடீரென, லட்சுமணன் அங்கு வந்து நிற்கிறான்.

ராமர், அவனைப் பார்த்து, அதிர்ச்சியடைகிறார்.]

**லட்சுமணன் :** அண்ணா! துர்வாச மகரிஷி, தங்களை உடனே பார்க்க வேண்டும் என்று, அரண்மனை வாயிலில் காத்து நிற்கிறார்!

**எமன் :** (எழுந்து நின்றபடி) நான் போகிறேன் ராமா! நாம் பேசிக்கொண்டிருக்கும் பொழுது, வந்து விட்ட லட்சு மணனுக்கு மரண தண்டனை அளித்து விடு!

*சத்தியம் காப்பவன் நீ என்று சரித்திரம் படைத்து விட்டாய்! அதை மறந்து விடாதே!*

*கதைமுடியப் போகும் நேரத்தில், கறையைப் பூசிக் கொள்ளாதே!*

*[எமன் அங்கிருந்து சென்று விடுகிறான்.]*

## காட்சி-503

*ராமர் இருப்பிடம்*

[வசிஷ்டர் முன்னிலையில், ராமர் கவலையோடு அமர்ந் திருக்க, லட்சுமணன் கலக்கத்தோடு அருகில் நின்று கொண்டிருக்கிறான்.]

***ராமர் :*** *அவசரமாக வந்த துர்வாச மகரிஷி, ''அருந்தவம் செய்தேன்; பசிக்கிறது; அன்னமிடு'' என்று கூறி நின்றார்.*

*அவ்வாறு செய்து, அவரைக் குளிர்வித்து அனுப்பி வைத்தேன்.*

*துர்வாசரின் கோபத்திற்கு அஞ்சி, என் இனிய தம்பி லட்சுமணன், எமன் வைத்த பொறியில் வந்து மாட்டிக் கொண்டான்!*

*அவனுக்கு நான் மரண தண்டனை அளிப்பதா? அவன் செய்தசேவைக்கு, அதுதான் சன்மானமா? என்னால் எண்ணிப் பார்க்கவே முடியவில்லை! எப்படி நான் அப்படிக் கட்டளையிடுவேன்?*

***லட்சுமணன் :*** *அண்ணா! உன்கையால் மரணமடைந்தால், ஒப்பற்ற வைகுந்தம் கிட்டும் எனக்கு!*

*பகைவர்கள் பெற்ற பேறை, நான் பெறக்கூடாதா? ஒரு சொல், ஒரு வில், ஒரு இல்-என்பது தானே ராமனின் அடையாளம்!*

*ராமன் சொல் மாறலாமா? மாறியிருந்தால், தந்தை தசரதர் பிழைத்திருப்பாரே!*

சிற்றன்னைக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற, நீ நாடு துறந்து, காடு ஏகினாய்!

எமன் விஷயத்திலே, அந்த நல்ல தர்மம், என்னால் பாழ்படலாமா?

**வசிஷ்டர் :** லட்சுமணன் பேசுவதிலே உண்மை இருக்கிறது.

தம்பி லட்சுமணனைத் தள்ளிவை! அது, அவனுக்கு மரணம் அளிப்பதற்கு ஒப்பானது!

லட்சுமணன், ராமன் முன்னிலையில் வரக்கூடாது! ராமனுக்கு, எவ்விதத்திலும் சேவை செய்யக்கூடாது! ராமன் இருக்குமிடத்தில் ஒதுங்கக் கூடாது!

**லட்சுமணன் :** ராமன் இல்லாமல், லட்சுமணனுக்கு ஏது வாழ்வு?

அண்ணா! விதி வலியது! அதன் வல்லமைக்கு அடி பணிகிறேன்! தங்கள் அடி தொழுகிறேன்!

[ராமரையும் முனிவரையும் சாஷ்டாங்கமாக விழுந்து கும்பிடுகிறான்.]

**லட்சுமணன் :** அண்ணா! தங்கள் நினைவோடு பிரிகிறேன்! இந்தப் பிரிவால், உங்கள் தர்மம் சிறப்பதால், மகிழ்கிறேன்!

[லட்சுமணன், அங்கிருந்து சென்று விடுகிறான். ராமர், வாய்விட்டு அழுகிறார்.]

## காட்சி-504

*சரயு நதி*

['ராம்! ராம்!' என்ற சொற்களோடு, கூப்பிய கரங்களோடு, சரயு நதியில் மூழ்கிவிடுகிறான் லட்சுமணன்.]

## காட்சி-505

*ராமர் இருப்பிடம்*

[பரதன், சத்ருக்னன், விபீஷணன், ஜாம்பவான், சுக்ரீவன், அனுமன் ஆகியோர், கவலையோடு ராமரைச் சூழ்ந்து நிற்கின்றனர்.]

**ராமர் :** *(உருக்கத்தோடு பேசுகிறார்.)*

*இங்கு எனக்கு ஒதுக்கப்பட்ட காலம் முடிந்து விட்டது! எமன், இதை, இங்கு வந்து சொல்லி விட்டுப் போய் விட்டான்! என்னோடு கானகம் வந்த தம்பி லட்சுமணன், எனக்கு முந்திச் சென்று விட்டான்!*

*உங்களிடமிருந்து விடைபெறவே, உங்களை இங்கு அழைத்தேன்!*

*உங்களோடு பழகியதால், இப்பிறவி, பழுதிலாப் பிறவியானது!*

*பழகியவனை மகிழ்வோடு அனுப்பி வையுங்கள்! அந்தப் பாச நெகிழ்ச்சி, பிரியும் எனக்குப் பெரும் பலத்தைக் கொடுக்கும்!*

**அனுமன் :** ஐயனே! தாங்கள் இல்லாமல் நான் இருப்பதா? தலை இல்லா முண்டமாக, இங்கு நான் உலவிக் கொண்டிருப்பதா?

**ராமர் :** அனுமான்! நீ என்றும் வாழ வேண்டிய சிரஞ்சீவி! இனிவரும் உலகுக்கெல்லாம், என் நாமத்தைச்சொல்ல, நீ வேண்டும்! தர்மம் வாழ, தடந்தோளா! உன் நடமாட்டம் எப்போதும் இருக்க வேண்டும்! நான் வாழ்ந்திருப்பதை விட, நீ வாழ்ந்திருப்பதால், எனக்குப் பெருமை உண்டாகும்! என் நாமத்திற்கு மகிமை உண்டாகும்! என் கதை, புண்ணிய கதையாக, மண்ணுள்ள வரை, மணம் வீசிக் கொண்டிருக்கும்!

**விபீஷணன் :** அனுமன் இங்கு இருக்கட்டும் ஐயனே! அடியேனைத் தங்களோடு அழைத்துச் செல்லுங்கள். என்னை, இங்கு வேதனையில் விட்டுவிட்டுச்சென்று விடாதீர்கள்.

**ராமர் :** விபீஷணா! லங்கையின் சொத்து நீ! உன்னைச் சூறையாட, நான் ஒருப்படேன்! லங்கை மண் உள்ள அளவும், இருக்க வேண்டிய இனியவன் நீ! என்றும் வாழ வேண்டியவர்களை, என்னோடு அழைத்துச் சென்றுவிட்டால், இந்த வையகத்தில், என்றும் நான் புகழோடு வாழவேண்டாமா?

**சுக்ரீவன் :** அவர்களிடம் பேசிய பேச்சை, என்னிடம் பேசி விடாதீர்கள்!

**மற்றவர் :** ஆமாம். நாங்களும் தங்களோடு வருகிறோம்.

**சுக்ரீவன் :** தங்களோடு சரயு நதியில் இறங்கும் சௌபாக்கியத்தை எங்களுக்கு அளியுங்கள் ஐயனே!

**ராமர் :** பாலுக்கு அழும் குழந்தைபோல, என்னோடு வரும் மரணத்தை யாசிக்கிறீர்கள்! கேட்டதைக் கொடுக்கா விட்டால், கெட்டவன் ஆகிவிடுவேன்! உங்களுக்கெல்லாம் வசதியான நகரத்தை வானில் அமைத்திட, பிரம்மனை வேண்டுகிறேன்.

இப்பொழுது எமன் என் கண்ணுக்குத் தெரிகிறான். புறப்படுகிறேன்! புண்ணிய கதையைப் பூர்த்தி செய்துவிட்டு! புண்ணிய வாழ்வை, இந்தப் பூதலத்திற்குப் பாடமாக்கி விட்டு!

[ராமர் எழுந்துகொள்ள, எல்லோரும் 'ராம்! ராம்!' என்று முழக்கமிடுகின்றனர்]

## காட்சி-506

*சரயு நதி*

[ராமர் சரயு நதியில் மூழ்கிவிட, மற்றவர்களும், அவரைப் பின்பற்றி, அவ்வாறே செய்கின்றனர்.

சரயு நதிக்கரையில், அனுமன், அழுது விழுந்து, 'ராம்! ராம்!' என்று புலம்புகிறான்]

## காட்சி-507

*கடல்*

[கடல் குமுறி எழப் பிரளயம் ஏற்படுகிறது]

## காட்சி-508

*ராமேஸ்வரம் கடற்கரை*

[கடல் இப்பொழுது அமைதி பெறுகிறது. கடற்கரையில் அனுமன் நின்று கொண்டிருக்கிறான்]

**அனுமன் :** *பிரளயத்தால், என் ஐயன் அவதரித்த திரேதாயுகம் முடிந்து, துவாபரயுகம் நடந்துகொண்டிருக்கிறது.*

*தர்மம், திரேதாயுகத்திலே செழித்திருந்தது. இந்தத் துவாபர யுகத்திலே சிறுத்திருக்கிறது.*

*இந்தச் சேதுக்கரை என் ஐயன், சிவலிங்கப் பிரதிஷ்டை செய்த திருத்தலம்!*

*இங்கு இருக்கும் ராமநாத சுவாமி, தன்னை வழிபடுவோர்க்கு வாழ்வளிக்கும் வரப் பிரசாதி!*

*அதோ, பஞ்ச பாண்டவர்களில், வலிமையில் மிஞ்சி நிற்கும் அர்ச்சுனன் வருகிறான்.*

*பரமசிவனிடமிருந்து பாசுபதா அஸ்திரத்தைப் பெற்றுவிட்டோம் என்று கர்வத்தோடு வருகிறான்.*

*சிவனைக் கும்பிட வந்தவனின் மனதிலே, குளுமை இல்லை! பணிவு இல்லை!*

*இறுமாப்பு, அவன் நெஞ்சிலே, நஞ்செனைக் கொட்டிக் கிடக்கிறது!*

*இந்த யுகத்திலே, தர்மம் தத்தளித்துக் கொண்டிருப்பது, நன்கு தெரிகிறது.*

*[இப்பொழுது அர்ச்சுனன், அனுமனை நெருங்கி வந்து விடுகிறான்]*

**அர்ச்சுனன் :** (அனுமனைப் பார்த்து அலட்சியமாக) வானரமே! உன் மூதாதையர் அனுமன், சுக்ரீவன் காலத்தில், ராமன், இங்கு கல்லால் அணை கட்டினானாமே! தன் வில்லால், அஸ்திரத்தால் கட்டியிருந்தால், அவனை வீரன் என்று போற்றியிருப்பேன்!

**அனுமன் :** என் ராம பிரானை மிஞ்சும் வீரனோ நீ?

**அர்ச்சுனன் :** சந்தேகமென்ன! அந்த ராமன், தன் வில்லால் சாதிக்க வேண்டியதை, வானரங்களின் கைகளால் சாதித்திருக்கிறான்!

**அனுமன் :** அஸ்திரங்களால் கட்டும் அணை பலமானதாக இருக்குமா?

[இதைக் கேட்டு, அர்ச்சுனன் ஏளனமாகச் சிரிக்கிறான்]

**அர்ச்சுனன் :** என்னைப் போன்ற வல்லவன் விடும் அம்புகள், மலை என நிலை குலையாமல், இங்கு பாலமாக நிற்கும்.

வீரனுக்கு வில், கீழே விழுந்து விடாமல், ஊன்றிச் செல்வதற்கு அல்ல!

**அனுமன் :** உன் வாய் வண்ணத்தைக் கேட்டுவிட்டேன். எங்கே, உன் கை வண்ணத்தைக் காட்டு பார்க்கலாம்! உன் அஸ்திரங்களால், இங்கு ஒரு பாலத்தைக் கட்டு. அதன்மேல் நான் ஏறி நடக்கிறேன். அது மூழ்காவிட்டால், உனக்கு நான் அடிமையாகிவிடுகிறேன்! என் ராம பிரான் புகழை ஒதுக்கிவிட்டு, உன் புகழ் பாடுகிறேன்!

**அர்ச்சுனன் :** அப்படியே செய்யலாம். சிவனிடம் அஸ்திரம் பெற்று வந்தவனிடம், சிறு குரங்கு, வித்தை காட்டச் சொல்கிறது!

உடன்படுகிறேன். உன் கூனல் உடம்பின் சுமை தாங்காது, நான் கட்டுகின்ற அஸ்திரப் பாலம் கடலில் மூழ்கி விட்டால், நான் தீக்குளித்து விடுகிறேன்!

**அனுமன் :** இப்படியொரு முடிவு, உனக்குத் தேவையா?

**அர்ச்சுனன் :** மூடனே! வெல்லப் போவது நான்! என் பாதம் பற்றிப் பணியப் போவது நீ!

**அனுமன்** : அதையும் பார்த்து விடலாம். (அர்ச்சுனன், தன் அஸ்திரங்களால், கடலில் பாலத்தைக் கட்டுகிறான்)

**அர்ச்சுனன்** : வானரமே! இப்பொழுது நீ இந்த அஸ்திரப் பாலத்தின்மீது நடந்து போ! குதித்துப் போ! உருண்டு புரண்டு போ! கர்ணம் அடித்துப் போ!

ராமனை மிஞ்சியவன் நான் என்பதை ஒப்புக்கொண்டு வா!

**அனுமன்** : நான் கால் வைக்கப் பாலம் உடைந்து, நான் கடலில் மூழ்கி விட்டால், என்னைக் காப்பாற்றி விடு!

நீ தர்மபுத்திரர் தம்பி என்பதால், இந்தத் தயவை, உன்னிடமிருந்து எதிர்பார்க்கிறேன்!

[இவ்வாறு கூறிவிட்டு, அனுமன் அஸ்திரப் பாலத்தின்மீது காலை வைக்க, அது உடைந்து நொறுங்குகிறது.

இதனால் கடலில் மூழ்கிய அனுமன், பின்னர் கரையேறுகிறான்]

**அனுமன்** : உன்னை வீரன் என்று நினைத்தேன். வீணான வார்த்தைகளைப் பேசும் வீணன் நீ என்பது தெரிந்துவிட்டது.

தீக்குளிக்கப் போகின்றவனைப்பற்றி, இதற்குமேல், தீ எனத் தகிக்கும் வார்த்தைகளைப் பேச விரும்பவில்லை!

## காட்சி-509

*துவாரகாபுரி அரண்மனை*

**ருக்மிணி** : (கிருஷ்ணரைப் பார்த்து) எங்கே கிளம்பி விட்டீர்கள்?

**கிருஷ்ணர்** : ருக்மிணி! அர்ச்சுனன், ராமேஸ்வரம் கடற்கரையிலே, தீக்குளித்து உயிர் விடப் போகிறான்!

**ருக்மிணி** : தீர்த்தமாடி வருவதாகத்தானே போனார்! துரியோதனனை வெல்ல, இவரைத்தானே, தர்மர் நம்பியிருக்கிறார்!

**கிருஷ்ணர் :** தீர்த்த மாடப் போனவர், சிந்தை திரிந்து விட்டதால், சேற்றிலே சிக்கிக் கொண்டார்! அர்ச்சுனனை இப்பொழுது காப்பாற்றா விட்டால், துரியோதனன் கை ஓங்கி விடும். தர்மம் கால் ஒடிந்து வீழ்ந்து விடும்!

## காட்சி-510

*ராமேஸ்வரம் கடற்கரை*

[வயோதிக அந்தணர் உருவில், கிருஷ்ணர், அனுமன் அர்ச்சுனன் நடுவே நின்று கொண்டிருக்கிறார். அர்ச்சுனனால் மூட்டப்பட்ட தீ, திகுதிகுவென எரிந்து கொண்டிருக்கிறது.]

**அந்தணர் :** வேதம் ஓதும் அந்தணன் நான்! நான் பேசும் வார்த்தையிலே, வேதத்தின் நாதம் கேட்கும்! நான் சொல்வதை, இருவரும் இப்பொழுது கேளுங்கள்.

என் முன்னிலையிலே, அர்ச்சுனன், தன் அஸ்திரத்தால், மீண்டும் பாலம் கட்டட்டும். வானரம் நீ, அதன் மேல் நடந்து சோதித்துப் பார்க்கட்டும். தோற்றவர் தண்டனை பெறட்டும். வென்றவர், ராமனா, அர்ச்சுனனா என்பதை, மந்திரமொழி பேசும் என் வாயால் சொல்லிவிடுகிறேன்.

**அனுமன் :** அந்தணரே! உம் எண்ணப்படியே நடக்கட்டும். எத்தனை முறை முயன்றாலும், முயலால் கர்ஜிக்க முடியாது!

**அந்தணர் :** அர்ச்சுனா! வில்லெடுத்து அம்புதொடு. உன் போதாத வேளை, மந்தியைக் கொஞ்சும் இந்த வானரம், உன்னை மிஞ்சிப் பேசுகிறது!

[அர்ச்சுனன் மீண்டும் அஸ்திரப் பாலம் கட்டி முடிக்கிறான்.]

**அந்தணர் :** வானரமே! நீ இப்பொழுது செல்லலாம். திறமை இருந்தால் வெல்லலாம்.

(அனுமன் இப்பொழுது பலமாகப் பாதங்களை ஊன்றிப் பாலத்தின் மீது நடந்து பார்க்கிறான். குதித்துப் பார்க்கிறான். 'ராம்! ராம்!' என்று கூவிக் கூத்தாடிப்

*பார்க்கிறான். பாலம் அசைந்து கொடுக்க வில்லை. வியப் போடு, அந்தணரின் அருகில் வந்து நிற்கிறான் அனுமன்.)*

**அனுமன் :** *(அந்தணரை நோக்கி) யார் நீங்கள்? என் முயற்சியை முறியடித்துக் காட்டும் மாயம் கற்றவர் நீங்கள்!*

*நீங்கள் வேதம் ஓதும் அந்தணரா? பாதம் பெயர்த்து, இந்த உலகை அளந்த திருமாலா?*

**அந்தணர் :** *நீ விஸ்வரூபம் காட்டாத அனுமான்! நான், நல்லவர்கள் விரும்பித் தொழும், துவாரகாபுரி மன்னன், கிருஷ்ணன்!*

*[இப்பொழுது கிருஷ்ணர், தன் சுய உருவில் காட்சி அளிக்கிறார்.*

*கிருஷ்ணரின் தோளெல்லாம், ரத்தக்கிளறியாக இருக்கிறது.]*

**அர்ச்சுனன் :** *கிருஷ்ணா! என்ன இது! தோளெல்லாம் ஒரே ரத்தம்!*

**கிருஷ்ணர் :** *ஆற்றல் சேர் அனுமன் குதிக்கக் குதிக்க, அணையைத் தோள்களால் தாங்கி இருந்தேன்! அர்ச்சுனா! உன் உயிரைக் காக்க, ரத்தம் சிந்தினேன்!*

*நீ வென்று விட்டதாக, இப்பொழுது எண்ண மாட்டாயே?*

**அர்ச்சுனன் :** *என்னை மன்னித்துக் கொள் கிருஷ்ணா! இவர் ஆஞ்சநேயர் என்பதை அறியாமல் பேசிவிட்டேன்!*

**கிருஷ்ணர் :** *(அர்ச்சுனனை நோக்கி) பிழை பொறுக்க, அந்தப் பெருமானிடம் மன்றாடு! ராமர் வென்றது இவரால்தான்! தர்மம் வென்றது, இவர் துணையால்தான்!*

*[அர்ச்சுனன், அனுமானின் காலடி விழப் போகிறான். அனுமன் தடுத்து, அர்ச்சுனனை ஆரத் தழுவிக் கொள்கிறான்.]*

**கிருஷ்ணர் :** *ஆஞ்சநேயரே! ஆலிங்கனத்தோடு, உம் ஆதரவை நிறுத்திக் கொள்ளக் கூடாது. நடக்கும் இருக்கும் தர்மப் போரிலே, அர்ச்சுனன் தேரிலே கொடியாக நின்று, வெற்றிக் கனியை, அவனுக்குக் கொய்து தரவேண்டும்.*

**அனுமன் :** என் ராமன் மேல் ஆணையாகக் கூறுகிறேன் - அதைச் செய்து தருவேன்.

ராம்! ராம்! ராம்! ராம்!

என் ஐயனின் நாமத்தை, நீங்களும் பேசுங்கள்!

**கிருஷ்ணர், அர்ச்சுனன் :** (இருவரும்) ராம்! ராம்!

## காட்சி-511

*இமயமலைச் சாரல்*

[இமயமலைச் சாரலில், பீமன் நடந்து வந்து கொண்டிருக்கிறான்]

**பீமன் :** (தனக்குள்) புண்ணிய ஷேத்திரங்களைத் தரிசித்து வருகையிலே, திரௌபதி, அபூர்வமான சௌகந்திகா புஷ்பம் ஒன்றைக் கண்டெடுத்து விட்டாள்.

அதன் வாசம், அவளை வசீகரித்து விட்டது.

அதன் மணம், காற்றிலே கலந்து வருவதால், அந்தச் செடி, இங்கு எங்கோ இருக்கிறதென்பதை உணர்ந்து கொண்டாள்.

'துரியோதனன் துடையைப் பிளப்பதைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம்; முதலில் இந்தப் பூவைக் கொத்தாகப் பறித்துக் கொண்டு வாருங்கள்' - என்று, இந்தப் பீமனைப் பார்த்துப் பிரியமுடன் கட்டளையிட்டு விட்டாள்.

மன்னவன் கட்டளை என்பதைவிட, மாதுவின் கட்டளை என்றால், எல்லோரும் நிறைவேற்றுவர்.

இது உலக இயல்பு.

அந்த மலரின் வாசம் வரும் திசை நோக்கி நடக்கிறேன். கையில் மலரோடு திரும்பினால், அந்த மலர் அனையாள், என்னை மதிப்பாள். இல்லையேல், என் கௌரவம் மிதிபட்டு விடும்.

[பாறைகளுக்கு நடுவே உள்ள குறுகலான மலைப் பாதையில், வயோதிகக் கோலத்தில், அனுமன் படுத்திருக் கிறான். பீமன் இங்கு வருகிறான்.]

**பீமன் :** வானரமே! வழியை விடு, யாரையும் தாண்டிச் செல்வது, வீரனுக்கு அழகல்ல!

**அனுமன் :** (படுத்தபடி) நீ வீரனா? யாரப்பா நீ? உன் வீரத்தை, இங்கே காட்டி விட்டுப் போயேன்!

**பீமன் :** ஏ குரங்கே! என்னை யாரென்று தெரியாமல் பேசிக் கொண்டிருக்கிறாய்.

நான் தர்மபுத்திரர் தம்பி, தடந்தோள் பீமன்! வாயுவின் மைந்தன்! ராமதூதன் ஆஞ்சநேயனின் சகோதரன்!

**அனுமன் :** வாலே சொத்தாக வாழ்ந்து கொண்டிருக்கிறானே, அந்த ஆஞ்சநேயனா?

**பீமன் :** ஏகுரங்கே! என் அண்ணனைப் பற்றி, அவமரியாதையாக எதுவும் சொல்லாதே!

அவரைப் பார்க்காமலே, அவர்மேல் பித்தாக இருக்கும், பாசச் சித்தன் நான்!

**அனுமன் :** ரெம்ப மகிழ்ச்சி! ராஜ்யத்தை இழந்து, அண்ணன் தம்பிகள் இப்படித் திரிந்து கொண்டிருக்கிறீர்களே! அந்த வால் உள்ளவனையா நம்பிக் கொண்டிருக்கிறீர்கள்!

**பீமன் :** (கோபத்தோடு) அதற்காக, உன் உதவியை, நாங்கள் நாடப் போவதில்லை. இப்பொழுது வழியை விடு.

**அனுமன் :** வழியை ஏற்படுத்திக்கொள்.

**பீமன் :** நீ குறுக்கே படுத்திருக்கிறாயே!

**அனுமன் :** ஆண்மை இருந்தால், என்னை அப்புறப்படுத்தி விட்டு மேலேபோ!

**பீமன் :** என் கால் விரலால், உன்னைக் காத தூரம் பறக்க வைப்பேன்!

**அனுமன் :** உன்னால் முடிந்ததைச் செய்வதாகச் சொல்லு!

திரௌபதியின் தலைமுடியைச் சீவி முடிக்கவே, உங்களால் முடியவில்லையே!

**பீமன் :** *உன்னை விட்டு வைத்தால், நீ பேசிக் கொண்டே போகிறாய்!*

**அனுமன் :** *என் வாலையாவது, உன்னால் தூக்க முடியுமா என்று பார்!*

*வாளைத் தூக்கிப் போராடும் ஷத்திரியனே! முயன்று பார்!*

*[பீமன், தன் கால் விரலால், அனுமன் வாலை அப்புறப்படுத்த முயல்கிறான். முடியவில்லை. கைகொண்டு தூக்க முயல்கிறான். அப்பொழுதும் அவனால் முடிய வில்லை. பெருமுயற்சி எடுத்தும், பீமன் உடம்பெல்லாம் வியர்வை வழிகிறதே தவிர, அனுமனின் வாலை, அவனால் அசைக்கக்கூட முடியவில்லை! இப்பொழுது அனுமனை, வியப்போடு பார்க்கிறான் பீமன்.]*

**பீமன் :** *பாறைபோல் இறுகி இருக்கிறாய்! நீ சாதாரண குரங்கு அல்ல! நீ யட்சனா? கந்தர்வனா?*

**அனுமன் :** *(எழுந்து நின்றபடி)' ஆஞ்சநேயனா?'- என்று மட்டும்,ஏன் கேட்கத் தவறுகிறாய்?*

*என் தம்பியை, நான் கண்டு கொண்டேன்! உன் அண்ணனை, நீ கண்டு கொள்ளவில்லை!*

*நானே, வாயுபுத்திரன், அனுமன்!*

**பீமன் :** *(உணர்ச்சி வசப்பட்டவனாக) அண்ணா! (அனுமனை விழுந்து கும்பிடப் போகின்ற பீமனை, அனுமன் தடுத்து, அணைத்துக் கொள்கிறான்.)*

**அனுமன் :** *பீமா! பாஞ்சாலிக்கு மலர் பறிக்க, மனிதர்கள் செல்லக் கூடாது என்று மறிக்கப்பட்ட பாதையில், சென்று கொண்டிருக்கிறாய்.*

*இது, யட்சர்களும் கந்தர்வர்களும், தேவலோகம் செல்ல, நடக்கும் பாதை!*

*உனக்கு அதனால் ஆபத்து வரும் என்று அறிந்து, இங்குவந்து படுத்துக்கிடந்தேன்.*

நீ நாடும் மலர், அதோ அங்கிருக்கும் ஓடையில், வாடாமல் பூத்திருக்கிறது. வேண்டுமளவு பறித்துச் சென்று, பாஞ்சாலியின் வேட்கையைத் தீர்த்து விடு!

**பீமன் :** (மன நெகிழ்ச்சியோடு) அண்ணா! நான் அரண்மனையில் வாசம் செய்தபோது, தாங்கள் வரவில்லை! எனக்கு ஆபத்து வந்த இப்போது, வந்து காத்தீர்கள்!

**அனுமன் :** சகோதர பாசம், என் ஐயன் வாழ்ந்து காட்டிய பாடம்!

**பீமன் :** அண்ணா! தங்களின் விஸ்வரூப தரிசனத்தைக் காண வேண்டும் என்று, எனக்கொரு ஆசை!

**அனுமன் :** போர்க்களத்திலே விஸ்வரூபம் எடுப்பேன்! என் தம்பி, பார்த்துக் களிக்கவும், இப்பொழுது விஸ்வரூபம் எடுக்கிறேன்!

[அனுமன் விஸ்வரூபம் எடுக்க, பீமன் கைகூப்பி வணங்கியபடி, 'ராம்! ராம்!' என்று கூறுகிறான். பின்னர், அனுமன், தன் சுய உருவம் கொள்கிறான்.]

**பீமன் :** அண்ணா! தர்மம் வெல்ல, தங்கள் தடந்தோள் துள்ளும் என்று சொல்வார்கள்!

நாங்கள், பாண்டவர்கள் ராஜ்யம் பெறவும், தங்கள் பார்வையை, நாங்கள் பெறவேண்டும் அண்ணா!

**அனுமன் :** பீமா! நடக்க இருக்கும் தர்மப் போரில், அர்ச்சுனன் தேரில் கொடியாக இருந்து, வெற்றியைக் குவிப்பதாக, உறுதி அளித்திருக்கிறேன்.

போர்க்களத்திலே, நீ சிம்மநாதம் செய்யும் பொழுது, பகைவர் பதற, உன் குரலிலே, நானே கர்ஜிப்பேன்!

**பீமன் :** இது போதுமண்ணா! களத்திலே தாங்கள் இருந்தால், கையிலே வெற்றிகிட்டி விடும்!

**அனுமன் :** என் ஐயன் நாமம் சொல்லி, இப்பொழுது எனக்கு விடைகொடு.

[பீமன் கை குவித்து நின்றபடி, 'ராம்! ராம்!' என்று கூறுகிறான். அனுமன் அங்கிருந்து நடக்கிறான்.]

# காட்சி-512

*துவாரகாபுரி அரண்மனை*

[கிருஷ்ணர் முன்னிலையில், நாரதர் பணிவாக நின்று கொண்டிருக்கிறார்.]

**கிருஷ்ணர் :** நாரதரே! மனதிலே, அகந்தை என்னும் குப்பை சேரும்போது, அதை அப்புறப்படுத்தி விடவேண்டும்.

**நாரதர் :** (பயத்தோடு) பெருமானே! அந்தத் தவறு, என்னிடம் இருக்கிறதா சுவாமி?

**கிருஷ்ணர் :** நான் உம்மைச் சொல்லவில்லை. உமக்குக் கலகமூட்டத் தெரியுமே தவிர, கர்வம் கொள்ளத் தெரியாது.

உம் கலகமும் நன்மையில்தான் முடியும். அதற்காகவே, உம்மை இப்பொழுது அழைத்தேன்.

**நாரதர் :** தங்கள் லீலா விநோதங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது, நான் பயிற்சி இல்லாத பாலகன் சுவாமி!

இப்பொழுது யாருக்குப் பாடம் புகட்ட வேண்டும்?

**கிருஷ்ணர் :** என் அண்ணன் பலராமர், அவரால்தான், நான் ராஜ்யத்தை ஆண்டு கொண்டிருப்பதாகப் பலபேரிடம் சொல்லிக் கொண்டிருக்கிறார்.

என்னை அவர் ஆட்டுவிப்பதாகக், காண்போரிடம் ஆர்ப்பரிப்பு செய்கிறார்!

**நாரதர் :** தமையனிடம் தவறான எண்ணம் புகுந்து விட்டது! அந்த எண்ணத்தைத் களைய வேண்டும். அண்ணன் என்றாலும், அழுக்கு அழுக்குத்தானே!

**கிருஷ்ணர் :** அந்த அழுக்கு, தங்கமேனி சத்யபாமாவிடமும் சேர்ந்து விட்டது!

தன் அழகுக்குக் கிருஷ்ணர் அடிமை என்ற எண்ணம், அவள் இதயத்தை இருட்டாக்கி விட்டது!

**நாரதர் :** (தயக்கத்தோடு) இப்பொழுது நான் மௌனம் காப்பதுதான், என் தகுதிக்கு ஏற்புடையதாக இருக்கும்!

[இப்பொழுது பலராமர் அங்கு வருகிறார்.]

**பலராமர் :** கிருஷ்ணா! நீ அழைத்ததாகக் கூறினார்கள். என்னால் நம்பமுடியவில்லை. தேவை இருந்தால், கிருஷ்ணன், என் மாளிகைக்கு வருவானே என்று கூறினேன். உனக்கு உடல் நலம் இல்லையோ என்று இப்பொழுது வந்தேன்.

**கிருஷ்ணர் :** *அண்ணா! நான் நலமே. உங்களால் ஒன்று எனக்கு ஆகவேண்டும்.*

**பலராமர் :** *(பெருமையோடு) வேராகத்தான் நான் இருக்கிறேனே! நீ காணும் விழாக்களுக்கெல்லாம், ஆதார புருஷனாக, உன் அண்ணன் இருக்கிறேனே!*

*சொல்ல வந்ததைச் சொல். தம்பி வாழ, இந்தத் தரணிக்கு வந்தவன் நான்!*

**கிருஷ்ணர் :** *இந்தப்பேறு பெற்ற எனக்குப் பெரிதாக மனக்குறை ஒன்றுமில்லை அண்ணா! ராமதூதர் ஆஞ்சநேயர், யமுனா நதிக்கரையில் தியானம் செய்து கொண்டிருக்கிறாராம். அந்தப் புண்ணியனைப் பார்க்க வேண்டுமென்று ஆவல்! தாங்கள், நாரதரோடு சென்று, அவரை, இங்கு அழைத்து வந்தால் நல்லது!*

**பலராமர் :** *ஆஞ்சநேயனை அழைக்க, நான் போக வேண்டுமா?*

*நாரதனோடு, ஒரு சேவகனை அனுப்பினால் போதாதா?*

*ஆஞ்சநேயன் என்னைக்கண்டு, 'நீங்கள் என்னை அழைக்க, இப்படி வரலாமா?' என்று தொழுது விழுந்து புலம்புவானே!*

**நாரதர் :** *ஆஹா! அந்தக் காட்சியை, நான் கண்ணாரக் காண வேண்டும்! புவனம் தோறும் சென்று, அதை நான் பேசவேண்டும்!*

*ராமதூதன், பலராமரைத் தொழுது கூத்தாடிய கோலா கலத்தைப் பழுதிலா இசையில் பகர வேண்டும்!*

**பலராமர் :** *(பெருமையோடு) நாரதனே! வாரும்! தம்பியின் எண்ணப்படி, அந்த ஆஞ்சநேயனை அழைத்து வருவோம்.*

*பட்டத்து அரசர், பட்டத்து யானையை அழைக்கப் போவதுபோல் இருக்கிறது!*

[*பலராமர், நாரதரோடு அங்கிருந்து வெளியேறுகிறார்*]

## காட்சி-513

*யமுனா நதிக்கரை*

[யமுனா நதிக்கரையில், அனுமன், கண்மூடி, ராம நாமத்தைக் கூறித் தியானம் செய்து கொண்டிருக்கிறான். பலராமரும், நாரதரும் இங்கு வருகின்றனர்]

**பலராமர் :** *(அதட்டலாக) ஆஞ்சநேயா! ஓய்ந்த நேரத்தில் தியானம் செய்துகொள்! கண்ணைத் திறந்து, யார் வந்து நிற்கிறார்கள் என்று பார்!*

*[அனுமன் கண்ணைத் திறந்து பார்க்கிறான்]*

**அனுமன் :** *(எரிச்சலோடு) தியானத்தைக் கலைத்துவிட்டீர்களே!*

**பலராமர் :** *(கர்வத்தோடு) வந்திருப்பது யார் என்று தெரிகிறதா?*

**அனுமன் :** *நாரதரோடு, நரன் ஒருவரைப் பார்க்கிறேன்!*

**பலராமர் :** *(கோபத்தோடு) நரனா!*

**அனுமன் :** *நீங்கள் அரக்க ஜென்மம் என்று என்னால் அனுமானிக்க முடியவில்லை!*

**நாரதர் :** *(அவசரமாக இடைமறித்துப் பேசுகிறார்)*

*ஆஞ்சநேயா! துவாரகாபுரி கிருஷ்ணர், உன்னை அழைத்து வர, எங்களை அனுப்பியிருக்கிறார்.*

**அனுமன் :** *துவாரகாபுரியில் எனக்கென்ன வேலை?*

**பலராமர் :** *(ஆத்திரத்தோடு) யாரிடம் பேசிக்கொண்டு இருக்கிறாய் என்று தெரிகிறதா?*

*துவாரகைக்கு ராஜாக்கள் நாங்கள்!*

**அனுமன் :** *உங்கள் பெயரைச் சொன்னால், பெரிய உபகாரமாக இருக்கும்!*

*நரன் என்று மீண்டும் மீண்டும் உங்களைச் சொல்வது நாகரிகமாக இராதே!*

**பலராமர் :** *(கர்வத்தோடு) நான்தான் பலராமர்!*

**அனுமன் :** *(கலவரத்தோடு) ப...ல...ரா...ம...ரா!*

**பலராமர் :** ஆம். இந்தப் பார் அஞ்சும் பலராமர்!

**அனுமன் :** *(கோபத்தோடு) என் ஐயன் ராமரைவிட, நீர் பலமுள்ளவரா? பல... ராமரா நீர்!*

*பழுதாகப் பெயர் வைத்திருக்கிறீர்!*

**பலராமர் :** *(கர்வத்தோடு) பல ராமரைப் புறம் காணும் பலராமர் நான்!*

**அனுமன் :** என்ன நெஞ்சழுத்தம் இருந்தால், என் முன்னே நீச வார்த்தைகளைப் பேசுவீர்!

*[இவ்வாறு கூறி, அனுமன் பலராமர் மேல் பாய்ந்து, அவரை அடித்து உதைத்து உருட்டி எடுக்க, நாரதர், 'ராம்! ராம்!' என்று அங்கு புலம்பிக் கொண்டு நிற்கிறார்.*

*அனுமனின் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல், பலராமர் அங்கிருந்து ஓட்டமெடுக்கிறார். நாரதரும், பலராமரைப் பின் தொடர்கிறார்]*

## காட்சி-514

*துவாரகாபுரி அரண்மனை*

[முகமெல்லாம் வீங்கிய நிலையில், பலராமர், நாரதரோடு அரண்மனைக்கு வருகின்றார்]

**கிருஷ்ணர் :** *(பதறியபடி) அண்ணா! என்ன இப்படி, முகமெல்லாம் வீங்கியிருக்கிறது! உங்கள் கை முஷ்டியால் குத்துப்பட்டுச் சாய்ந்தவர்களைத்தானே, சரித்திரம் சொல்லிக் கொண்டிருக்கிறது!*

**நாரதர் :** *(வேதனையோடு) அந்தச் சரித்திரம் சரிந்துவிட்டது! அந்த ஆஞ்சநேயன், இவரை அடித்துத் துவைத்துவிட்டான்!*

**கிருஷ்ணர் :** *என் அண்ணன் அப்போது இளைப்பாறிக் கொண்டா இருந்தார்?*

**நாரதர் :** எதிர்த்துப் பார்த்தாரே! முடியவில்லை! இன்னும் கொஞ்ச நேரம் இவர் அங்கே நின்றிருந்தால், அந்த ஆஞ்சநேயன், பலராமர் அவயங்களை உருவி, ஆகாசத்தில் வீசியிருப்பான்! உயிர் பிழைக்க, ஓடிவந்துவிட்டோம்!

**கிருஷ்ணர் :** என் அண்ணனின் வீரமென்ன! தீரமென்ன! ஒரு குரங்கால், குலை நடுங்க இங்கு ஓடிவந்து விட்டார், என்று கூறுகிறீரே! இதை நம்புவதற்கு, என்னால் இயலவில்லை!

**பலராமர் :** (அமைதியாக) கிருஷ்ணா!

என் அகந்தை அழிய, நடந்த சம்பவமாக, இதை எண்ணுகிறேன். நெஞ்சிலே கறை ஏறினால், கையிலுள்ள வலு குறைந்துவிடும்.

மேலும், ஆஞ்சநேயன், ராமருக்காகத் தன்னைத் தியாகம் செய்தவன்! அந்த நினைப்பின்றி அடக்கமாக இருப்பவன்! அதற்கு மாறாக இருந்த நான், வேரோடு பறிக்கப்பட்ட மரம்போல வீழ்ந்தேன்!

**கிருஷ்ணர் :** அண்ணா! அப்படியெல்லாம் பேசாதீர்கள்! வெற்றியும், தோல்வியும், வீரனுக்கு ஒன்றுதான். எப்பொழுதும் வெற்றியே பெற்றுக் கொண்டிருந்தால், திகட்டி விடும்!

நான் பகைக்கு அஞ்சித்தானே, கடலிலே பட்டணம் அமைத்திருக்கிறேன்!

ஆனால், அந்த ஆஞ்சநேயன் எதற்காக உங்க[illegible]ா எதிர்க்கவேண்டும்?

**நாரதர் :** பலராமர் என்ற இவர் பெயரைக் கேட்டவுடன், 'என் ராமரை விடப் பலவானா? இப்படிப் பெயர் வைக்கலாமா?' என்று பாய்ந்து பந்தாடி விட்டான்!

**கிருஷ்ணர் :** ஆஞ்சநேயன் ராம பக்தன்! அவன் சிந்தனையிலே, ராமரைத் தவிர, வேறு சிறப்பானவர் எவரும் இல்லை!

அவன் வாசிக்கத் தகுந்த நல்ல காவியம்! அண்ணா! ஆஞ்சநேயனை, உன் ராமர் அழைத்து வரச் சொன்னார் என்று [illegible] வாருங்கள்!

**பலராமர் :** *(அதிர்ச்சியோடு) நானா! மறுபடியுமா!*

**நாரதர் :** பலராமருக்கு இப்போது போதாத வேளை! அவரை அந்தப்புரத்திற்கு அனுப்பி வைப்பது, பொருத்தமான செயலாக இருக்கும்!

**கிருஷ்ணர் :** அந்த ஆஞ்சநேயனை, என் அண்ணன் அழைத்து வரவேண்டும். இந்தத் தம்பிக்கு அந்தப் பாக்கியம், என் அண்ணனால் கிடைக்கவேண்டும்!

**நாரதர் :** அந்தக் குரங்குமேலே விழுந்து பிடுங்கினால்...

**கிருஷ்ணர் :** ராம நாமத்தைக் கேட்டால், அந்த ஆஞ்சநேயன் உருகிவிடுவான்! உங்களைக் கௌரவிப்பான்!

நாரதரே! நீரும், அண்ணனோடு சென்று வாரும்.

**நாரதர் :** உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு போகிறோம். பலராமரைப் போல, அடி தாங்க, எனக்கு உடம்பு இல்லை! நான் கானம் இசைப்பவன். கையையும், காலையையும் வீசி, மல்யுத்தம் செய்பவன் இல்லை!

**பலராமர் :** நாரதரே! தம்பி சொல்வதிலே, பொருள் இருக்கும். வாரும், அங்கு போய் வருவோம்.

[பலராமரும், நாரதரும் அங்கிருந்து செல்கின்றனர்].

## காட்சி-515

*யமுனா நதிக்கரை*

[ஆஞ்சநேயன், 'ராம்! ராம்! ராம்!' என்று பரவசத்தோடு ஆர்ப்பரிக்கிறான்.

எதிரில், பல ராமரும் நாரதரும் நின்று கொண்டிருக்கின்றனர்]

**அனுமன் :** *(மகிழ்ச்சியோடு)* என் ஐயன், ராமபிரான் என்னை அழைத்தாரா?

என் தெய்வம், என்னைத் தேடுகிறதா?

இதை முன்பே சொல்லியிருந்தால், உங்களைக் கும்பிட்டுக் கூத்தாடி இருப்பேனே!

வரம்பு மீறி நடந்துகொண்ட, என் புன் செயலைப் பொறுத்துக் கொள்ளுங்கள்!

அது, குறைமதி உடைய குரங்கின் செயல் என்று மறந்துவிடுங்கள்!

என் தோளில் ஏறி அமருங்கள். என் ஐயனிடமிருந்து தூது வந்த உங்களைச் சுமப்பதால், என் உடல் புண்ணியம் பெறும்!

**நாரதர் :** (சங்கடத்தோடு) ஆஞ்சநேயா! நான் நடந்தே வருகிறேன். தோளில் ஏறிவிட்டால், தூர எறியப்பட்டு விடுவோமோ என்ற அச்சம் இருந்துகொண்டே இருக்கும்! உன் சித்தம் மாறினால், என் சிரசு போய்விடும்!

**அனுமன் :** என்மீது நம்பிக்கை இல்லையா? ராமரை நம்பியவர்கள், நலமே கண்டார்கள்! இந்த ராம பக்தனை நம்பியவர்களுக்கும், நல்லதே நடக்கும்!

(பலராமரை நோக்கி) நீங்கள், என் தோளில் ஏறிக் கொள்ளுங்கள்.

[பலராமர் தயக்கத்தோடு அனுமன் தோளில் ஏறிக்கொள்கிறார். அவர்கள் அங்கிருந்து புறப்படுகின்றனர்].

## காட்சி-516

துவாரகாபுரி அரண்மனை

[நாரதரும் பலராமரும் கிருஷ்ணரை வந்து பார்க்கின்றனர்]

**நாரதர் :** (கிருஷ்ணரைப் பார்த்து) பகவானே! அந்த ஆஞ்சநேயனை அழைத்து வந்து, அரண்மனைத் தோட்டத்தில் அமர வைத்திருக்கிறோம்.

ராம மந்திரத்தைக் கூறித், தியானம் செய்யுமாறு, விட்டுவிட்டு வந்திருக்கிறோம்.

கடல் கட்டுண்டு இப்பொழுது அங்கு இருக்கிறது.

தாங்கள், சீதாதேவியோடு ராமராகச் சபையிலே காட்சி யளியுங்கள்!

அப்போது சபைக்கு ஆஞ்சநேயனை அழைத்து வருகிறோம்.

[இதைக் கேட்டு, அருகில் இருக்கும் சத்யபாமா எழுந்து கொள்கிறாள்]

**சத்யபாமா :** சீதையாகத்தானே காட்சி கொடுக்க வேண்டும்! விரைவிலே அவ்வாறு அலங்கரித்துக் கொண்டு வருகிறேன்!

**கிருஷ்ணர் :** சத்ய பாமா! அந்த ஆஞ்சநேயன், உன்னைச் சீதை என்று நம்பவேண்டும்!

**சத்ய பாமா :** என் மேனியிலே உள்ள தெய்வீகக் களை, அந்தப் பக்தனை, என்னை அன்னை சீதா என்று சொல்ல வைத்து விடும்!

என் அருமையை, நீங்கள் முழுமையாக உணரவில்லை! அதுபோல், எல்லாரும் இருப்பார்கள் என்று எண்ணு கிறீர்களா?

[இவ்வாறு கூறிவிட்டுச் சத்யபாமா, அங்கிருந்து சென்று விடுகிறாள்]

## காட்சி-517

*அரசவை*

**நாரதர் :** ஆஞ்சநேயரே! வரவேண்டும்! சீதாராம தரிசனத்தைப் பெறவேண்டும்!

[அரசவையில் வந்து நிற்கும் அனுமன், ராமர் உருவில் இருக்கும் கிருஷ்ணரை, மெய்ச் சிலிர்ப்போடு, கைகுவித்து வணங்குகிறான்.

'ராம்! ராம்!' என்று பரவசத்தோடு கூறுகிறான். பக்கத்தில் இருக்கும் சத்ய பாமாவைப் பார்த்து, முகம் சுளிக்கிறான். அனுமன் முகத்தில், கோபம் குதிக்கிறது.]

**அனுமன்** : (கோபத்தோடு) ஐயனே! தங்கள் அருகில், என் அன்னை இருக்கவேண்டிய இடத்தில், யாரோ இருக்கிறார்களே! யார் இந்த நாடகக்காரி? காமதேனு இருக்கவேண்டிய இடத்தில் கரடியா? பார்த்தாலே கண் எரிகிறது! உடல் பதறுகிறது! பாய்ந்து அவளை அப்புறப்படுத்த, அங்கமெலாம் துடிக்கிறது!

[இதனால் அதிர்ச்சியடைந்து, வீரிட்டு அழுத வண்ணம் சத்யபாமா, அங்கிருந்து விரைந்து செல்கிறாள்].

## காட்சி-518

*அந்தப்புரம்*

**சத்யபாமா** : (கண்ணீர் வழியப் பேசுகிறாள்) ருக்மிணி அக்கா! என்னை வேஷம் போடும் நாடகக்காரி என்று, அந்த ராம பக்தன் கூறிவிட்டான்!

என்னைச் சீதையாக, அவன் கண் காணவில்லை!

சபையிலே என்னை அவமானப்படுத்தி விட்டான்!

என் அகம்பாவத்திற்குக் கிடைத்த அடி அது! பகவானே, என் பாதம் பிடித்துவிடப் பாக்கியம் செய்திருக்கவேண்டும் என்று திமிர்கொண்டு, மனதைத் திரியவிட்டேன்!

அதற்கான தீர்ப்பை, இப்போது பெற்றுவிட்டேன்!

சபையிலே மன்னர் தனித்திருக்கிறார். அந்த ராம பக்தன் காத்திருக்கிறான். நீ சென்று, மன்னரின் அருகிலே அமரு!

நீ சீதையாக, அந்தப் பக்தன் கண்களுக்குத் தெரிவாய்! அப்போதுதான், வந்தவனுக்கு வாக்குக் கொடுத்தபடி, கண்ணுக்கு நிறைவாக, சீதாராம தரிசனத்தைத் தந்தருள முடியும்!

**ருக்மிணி** : நான் சீதாவாகக் காட்சி கொடுப்பதா? என்னால் இயலுமா?

அந்தப் பெருமாட்டி எங்கே? நான் எங்கே?

***சத்ய பாமா :*** *இந்த அடக்கம்தான், உனக்கு ஐஸ்வர்யம்! நான் இழந்துவிட்ட இனிய குணம்!*

*மனதிலே மாசு இல்லாவிட்டால், உடற்கோலத்திலே புனிதம் பொதிந்துவிடும்!*

*உடனே அரசவைக்குப் புறப்படு அக்கா! தனித்திருக்கும் மன்னருக்கு, தவித்திருக்கும் பகவானுக்குத் துணையாகப் போய்ச் சேர்!*

*சீதையைக் கொண்டாடும் பக்தனுக்கு, மனநிறைவைக் கொடு!*

## காட்சி-519

*அரசவை*

[பரபரப்போடு அரசவைக்கு வருகின்ற ருக்மிணி, அச்சத்தோடு, கிருஷ்ணரின் அருகிலே அமர்கிறாள். பதைபதைப்போடு அனுமனைப் பார்க்கிறாள். அனுமன் முகம் இப்பொழுது மலர்கிறது.

'மாதாவே!' என்று கூவித் தலைமேல் கைகுவித்து, ருக்மிணியை வணங்குகிறான்].

***அனுமன் :*** *(மகிழ்ச்சியோடு) இப்பொழுது, என் ஐயனோடு, அன்னையையும் கண்டுவிட்டேன்! என் கண்ணுக்கு ஒளி கிடைத்துவிட்டது! என் நாவுக்கு, அறுசுவை கிடைத்துவிட்டது! என் காதுக்கு, இசை கிடைத்துவிட்டது! என் நாசிக்கு, மணம் கிடைத்துவிட்டது! என் உடலுக்கு, உயிர் கிடைத்துவிட்டது! ராம்! ராம்! ராம்! ராம்!*

*[இவ்வாறு கூறி, ராம மந்திரத்தை உச்சரித்துத் தன்னை மறந்து கூத்தாடுகிறான்].*

## காட்சி-520

*கடல்*

[கடல் குமுறிக் கொந்தளிக்கிறது. வானத்தில் பறந்த நிலையில், அதைப் பார்த்தபடி இருக்கிறான் அனுமன்]

## காட்சி-521

*ஒரு குடிசைக்கு வெளியே*

[ஒரு வயதான பெண்ணைக் குடிவெறியில் அடித்து உதைத்துக் கொண்டிருக்கிறான் ஓர் இளைஞன்.

அங்கு நின்றுகொண்டிருக்கும் ஆஞ்சநேயர், அதைக் கோபத்தோடு பார்க்கிறார். ஆஞ்சநேயர், அங்கு நிற்பது, அவர்கள் கண்களுக்குத் தெரியவில்லை]

**ஆஞ்ச நேயர் :** *(தனக்குள்) துவாபர யுகம் முடிந்து, கலிகாலம் தொடங்கிவிட்டது.*

*பெற்றெடுத்தவளைப் போதையிலே அடித்து உதைக்கிறான், பெரும் பாவி!*

*கலியின் லட்சணம் இதுதானா?*

*[ஆஞ்சநேயர், இப்பொழுது சிறு குரங்காக மாறி, அடாது செய்யும் மகனின் மீது விழுந்து கடிக்கிறார். மகன் அலறுகிறான். தாய் பரிதவிக்கிறாள்]*

**தாய் :** *ஆஞ்சநேயா! என் மகனை ஒன்றும் செய்துவிடாதே! அவன் தெரியாமல் செய்கிற தவறு இதெல்லாம்!*

*நான் கொடுத்த பால்தான், அவன் கையை வீசி, என்னை அடிக்க, வலு கொடுத்திருக்கிறது! அவனை மன்னித்து விடப்பா!*

*[இப்பொழுது தாக்கிய குரங்கு விலகிச் சென்று விடுகிறது.*

*ஆஞ்சநேயர் அங்கிருந்து நடக்கிறார்]*

**ஆஞ்சநேயர் :** *(தனக்குள்) துவாபரயுகத்திலே சிறுத்துக் கிடந்த தர்மம், இந்தக் கலியுகத்திலே, அங்கங்கே சிதறித்தான் கிடக்கிறது!*

*அதிலும், இந்தத் தாய்மார்கள்தான், தர்மம் மாயாமல், வாழ வைத்துக்கொண்டிருக்கிறார்கள்!*

*இந்தக் கலியுகத்திற்குத்தான், என் பங்கும் பணியும் பெரிதும் தேவைப்படுகின்றன!*

*ராம நாமம் எங்கும் பரவ, இயன்றதைச் செய்வேன்!*

*ராமன் நுழைந்த நெஞ்சில், காமம், லோபம், நுழைய முடியாது!*

## காட்சி-522

*ஒரு வீட்டின் பூஜை அறை*

[இளம் பெண் மமதா, கண்மூடித் திருமால் விக்கிரகத்தின் முன் அமர்ந்து, தியானம் செய்துகொண்டிருக்கிறாள்.

அப்பொழுது அங்கு வருகின்ற துளசி, ஆசையோடு அவளை அணைத்துத் தன் மடியில் கிடத்துகிறான்.

அவள் எதிர்ப்புத் தெரிவித்துக் கத்திக் கதறி, அவனிடமிருந்து விடுபடுகிறாள்.

இந்தக் கூக்குரல் கேட்டு, துளசியின் தாய், இங்கு விரைந்து வருகிறாள்]

**தாய் :** *மமதா! என்னம்மா! என்ன! என்ன நடந்தது?*

**மமதா :** *(எரிச்சலோடு) உங்கள் அருமைப் பிள்ளைக்குப் பூஜை நேரத்திலும், என்னை விட்டு வைக்க மனமில்லை!*

**தாய் :** *என்ன துளசி, இதெல்லாம்!*

**துளசி :** *அம்மா! உன்னிடம் பேசுகின்ற பேச்சு இல்லை இது! கையிலே தேனைக் கொடுத்துவிட்டு, வாயைக் கட்டிக்கொள் என்று யாராவது சொல்வார்களா?*

**மமதா :** எதற்கும் ஒரு நேரம் காலம் வேண்டாமா? எப்பொழுதும் இந்தச் சேட்டைதானா?

**தாய் :** துளசி! உன் அப்பா, ஒரு வேத வித்தகர்! நைமிசாரணியத்தில், லோக க்ஷேமத்திற்காகத் தியானம் செய்துகொண்டிருக்கிறார்! உனக்கும் வேதம் கற்பித்தார். ஒரு நல்ல மகன் ஆகத்தான், உன்னை உருவாக்க நினைத்தார்.

**மமதா :** ஆனால், பிள்ளையார் பிடிக்கப் போய், பெருச்சாளி உருவந்தான் கிடைத்திருக்கிறது! வேத வித்து ஆத்ம ராம் புத்திரன் இவர் என்று சொல்ல முடியுமா? இவர் வாயிலிருந்து, வேத சுலோகங்கள் வருவதில்லை! வேசிகளிடம் பேசவேண்டிய பேச்சை, சந்தி தோறும் வந்தனம் செய்து கொண்டிருக்கிறார்!

**துளசி :** வேத முனிவர்களே, மனைவியரோடுதான் வாழ்ந்திருக் கிறார்கள்!

**மமதா :** அவர்கள் வேறு பணியும் செய்திருக்கிறார்கள். வேள்வித் தீ மூட்டாமல், காமத் தீ மூட்டி, அதில் மட்டும் சுகம் கண்டுகொண்டிருக்கவில்லை.

அக்பர் பாதுஷாவின் அரண்மனையில், உங்களுக்கு ஓர் அலுவல் வாங்கிக் கொடுத்தார், உங்கள் அப்பா. அதைக் காப்பாற்றிக் கொண்டீர்களா? அரண்மனைக்குப் போவதே கிடையாது! ஊரிலுள்ள பொது மகளிர் வீடுகளில் எல்லாம் விருந்தாடி வருகிறீர்கள்! அப்படியும் தினவு தீராமல், கட்டினவளைப் பூஜை அறையிலும் சீண்டுகிறீர்கள்!

**தாய் :** துளசி! உன் கவலைதான், என்னைக் கொன்று கொண் டிருக்கிறது!

முதலில் அரண்மனைக்குப் போய், அலுவலைப் பார். தாகத்திற்குத் தண்ணீர் அருந்தலாமே தவிர, எப்பொழுதும் தண்ணீரிலேயே மூழ்கிக் கொண்டிருக்கக் கூடாது.

**துளசி :** சிவனே, அர்த்த நாரீஸ்வரர் ஆகத்தான் இருக்கிறான்! மனையாள் மேல் மையல் கொள்வதைப் பாவம் என்று, எந்த வேதமும் சொல்லவில்லை!

நான் அரண்மனைக்குச் செல்லப் போவதில்லை. அரண்மனையில் கழிக்கும் நேரத்தை, அகமுடையாளோடு கழித்தால், இந்தப் பிறவி இனிமை பெறும்! இன்பத்தை நாடுவது தவறென்று, பித்தன்தான் சொல்வான்! தெளிந்த சித்தம் உள்ளவன் சொல்லமாட்டான்!

[இப்பொழுது வீட்டு வாசலில், அரண்மனைச் சேவகன் வந்து நிற்கிறான்]

**சேவகன் :** அரண்மனையிலிருந்து வருகிறேன். பாதுஷா அவர்கள், துளசி ஐயாவை அழைத்து வரச் சொன்னார்கள்.

(இதைக் கேட்டுத் துளசி தயங்குகிறான்)

**மமதா :** கையோடு அழைத்துப் போங்கள். மறுத்தால், விலங்கிட்டு இழுத்துச் செல்லுங்கள்!

**தாய் :** துளசி! மன்னர் அழைத்தால், மறுக்காது போகவேண்டும்!

[அரைகுறை மனதோடு, துளசி, அரண்மனைச் சேவகனோடு செல்கிறான்]

## காட்சி-523

*அக்பர் பாதுஷா அரண்மனை*

**அக்பர் :** (துளசியைப் பார்த்து) துளசி! உன் அப்பாவும், நானும், உன்னைப் பற்றிப் பெருங்கனவு கண்டு கொண்டிருக்கிறோம்.

நீ காலத்தால் அழியாத காவியம் படைப்பாய் என்று காத்துக் கொண்டிருக்கிறோம்.

நீ வேதச் சுவடிகளை எடுத்துப் படிக்க, உனக்கு வேளையும் வசதியும் தரத்தான், உன்னை நாள்தோறும் அரண்மனைக்கு வரச் சொல்கிறேன்.

பெற்றவர் நைமிசாரணியத்தில் இருப்பதால், உன் மேல் பிரியம் வைத்திருக்கும் என் பொறுப்பு, இப்பொழுது கூடுகிறது.

உன்னைப்பற்றி, நான் கேள்விப்படுவதெல்லாம், என் இதயத்தைக் கிழிக்கிறது. போகக் கூடாத இடங்களுக்குப் போய் புரண்டு கொண்டிருக்கிறாய் என்று சொன்னார்கள். துடித்துப் போனேன்!

நடந்ததை மறந்துவிடுவோம். இனி வரும் நாள், தந்தைக்குப் பெருமை சேர்க்கும் நாளாக, இந்த மன்னனுக்கு மகிழ்வூட்டும் நாளாக, நீ பிறந்த இடத்தின் கீர்த்தியைப் பேசும் நாளாக அமையட்டும்! என்ன சொல்கிறாய்?

**துளசி :** *(அச்சத்தோடு)* மன்னரின் கட்டளைப்படி நடக்கிறேன். என் தாய்க்கும் தாரத்திற்கும் இப்பொழுது சற்று உடல்நலமில்லை! ஓர் இரண்டு நாட்கள், அவர்கள் உடன் இருந்து பராமரித்துவிட்டு, அரண்மனை திரும்பி விடுகிறேன்.

**அக்பர் :** அப்படியே செய்யலாம். மாங்கன்று வேப்பங்காய்களை விளைவித்துக் கொண்டிருக்கக் கூடாது! மாங்கனிகளை, இந்த மண்ணிலே உதிர்க்கவேண்டும்!

## காட்சி-524

*துளசியின் வீடு*

[இடி மின்னலோடு பெரு மழை பெய்துகொண்டிருக்கிறது. இரவும் வந்துகொண்டிருக்கிறது. முழுக்க நனைந்தபடி, வீட்டிற்குள் வருகிறான் துளசி]

**அம்மா :** துளசி! இப்படி நனைந்துவிட்டாயே! மழை பெய்துகொண்டிருப்பதால், அரண்மனையிலேயே தங்கி இருக்கக் கூடாதா?

*[அம்மா, ஒரு துண்டு எடுத்துத், துளசியின் தலையைத் துவட்டி விடுகிறாள்]*

**துளசி :** எங்கே மமதா?

**அம்மா :** அவள், தாய் வீட்டிற்குப் போயிருக்கிறாள். இரண்டு நாள் கழித்து வருவதாகச் சொல்லியிருக்கிறாள்.

**துளசி** : *(எரிச்சலோடு) புருஷன் வீடு வந்த பிறகு, தாய் வீட்டு நினைப்பு இருக்கலாமா?*

*யாகத்துக்கு வந்த நெய், பசுவின் மடியை நினைத்துக் கொண்டிருக்கலாமா?*

*அவள் இங்கு இருப்பாள் என்றெண்ணி, இடி மழையோடு இங்கு வந்தேன்!*

**அம்மா** : *உன் வீட்டுக்கு, நீ வருவதற்கு, யார் இருக்கவேண்டும்? ஆடை மாற்றிக்கொள். சாப்பாடு போடுகிறேன்.*

**துளசி** : *அம்மா! நான் மமதாவைப் பார்க்க, அவள் பிறந்த வீட்டிற்குப் போகிறேன்.*

**அம்மா** : *இந்த வேளையிலா?*

**துளசி** : *பக்கத்து கிராமந்தானே! பத்து எட்டுப் போட்டுவிட்டால், மாமியார் வீடு வந்துவிடும்!*

**அம்மா** : *துளசி! இடியும் மழையுமாக இருக்கிறது! இந்த இரவு நேரத்தில் செல்லவேண்டுமா? காலையில் போய்க் கொள்ளலாம்.*

**துளசி** : *அம்மா! அப்பா நைமிசாரணியம் போய்விட்டால், மகனும் சந்யாசம் வாங்கிக் கொள்ளவேண்டுமா? உன் மருமகள் வாழவேண்டியவள்! உன்னைப் போல உலர்ந்து போக, இன்னும் காலம் இருக்கிறது! நான் போய் வருகிறேன்.*

*[துளசி அங்கிருந்து செல்ல, அதிர்ச்சியோடு நின்று கொண்டிருக்கிறாள் அம்மா]*

## காட்சி-525

*காட்டு வழி*

[காட்டு வழியிலே, பெரு மழையிலே, நடந்து சென்று கொண்டிருக்கிறான் துளசி.

நடந்துகொண்டிருக்கும்போதே, மமதாவைக் கட்டி அணைப்பதை, மனக் கண்ணால் பார்த்துக் கிறங்குகிறான்.

இப்பொழுது மரம் ஒன்று, வேரோடு சாய்ந்து விழ, மயிரிழையில் தப்பித்து விடுகிறான்]

## காட்சி-526

*மமதாவின் பெற்றோர் வீடு*

[இரவு நேரம். இன்னும் மழை இரைச்சலாகப் பெய்து கொண்டிருக்கிறது. மாமியார் வீட்டின் வெளிப்புறம் வந்து நிற்கிறான் துளசி. நள்ளிரவு ஆனதால், சுற்றுச் சுவர் வெளிக்கதவு அடைக்கப்பட்டிருப்பதைப் பார்க்கிறான்]

**துளசி :** *(தனக்குள்) கதவு அடைத்திருக்கிறது! ஏறிக் குதிக்க வேண்டியதுதான்!*

*அதோ, தோட்டத்து மரத்திலிருந்து, ஒரு கயிறு தொங்கு கிறது. அதைப் பிடித்தபடி, மதில் சுவரைத் தாண்ட வேண்டியதுதான்!*

*பஞ்சணை சுகத்திற்காகத்தானே மனிதன் பிறக்கிறான்! அதை இழந்து வாழ்வதிலே, அர்த்தமே இல்லை! ராத்திரி நேரம், உயிர் ரமிக்கிற நேரம்! அப்போது உறங்கிக் கழிப்ப வர்கள் மதியிலிகள்!*

[*மரக் கிளையில் தொங்கும் மலைப் பாம்பைக் கயிறு என்று எண்ணி, அதைப் பற்றிக் கொள்கிறான். அதைப் பிடித்து, ஊஞ்சலாடியபடி, சுவரைத் தாண்டி விழுகிறான். மலைப்பாம்பு இப்பொழுது, அவனுடைய மேனியைப்பற்றி இறுக்குகிறது. கூக்குரல் இடுகிறான். சத்தம் கேட்டு, மமதாவும், அவள் பெற்றோரும் ஓடி வருகின்றனர். மலைப்பாம்பிடமிருந்து, துளசியை விடுவிக்கின்றனர்*].

## காட்சி-527

*மமதாவின் பெற்றோர் வீட்டின் உட்புறம்*

[மமதா ஆத்திரத்தோடு கணவரிடம் பேசுகிறாள்]

**மமதா :** *நேரம் காலம் தெரியாமல், இடி மழையிலே வந்து நிற்கிறீர்களே!*

*பாம்பைக் கயிறு என்று எண்ணிப் பற்றியிருக்கிறீர்களே! காமம் அப்படி, உங்கள் கண்களைக் குருடாக்கி விட்டதா? பெண்ணின் உடம்பிலே, மலமும் மூத்திரமுந்தானே இருக்கிறது!*

*அதன்மேல் இவ்வளவு மோகமா?*

*வேதம் கற்ற நீங்கள், சிற்றின்ப விளையாட்டே வாழ்வு என்று எண்ணலாமா?*

*என்னை நினைக்கும் நேரத்தில், இறைவனை நினையுங்கள்!*

*அது தவமாகும்! எனக்கும் அதுதான் பெருமையாகும்! என்னைச் சுற்றி வரும் பூனையாக இருக்காதீர்கள்! இறைவன் நினைவைச் சுமக்கும் யானையாக இருங்கள்!*

*பிறந்தவர் மடிவதற்கு முன், எத்தனை இரவு, மனை யாளோடு இருந்தோம் என்று கணக்குப் பார்க்க மாட்டார்கள்!*

*இந்த உலகம் பேசும்படி, ஏதாவது செய்திருக்கிறோமா என்றே எண்ணிப் பார்ப்பார்கள்!*

*என்னைக் கொஞ்சினால், அதை வெளியே சொல்ல முடியாது! இறைவனைக் கொஞ்சினால், அதுவே இலக்கியம்!*

*அந்த இலக்கு நோக்கிச் செல்லுங்கள்! மனதைத் தியானத்தில் நிறுத்துங்கள்!*

*அப்போது, மை வண்ணன் ராமனின் தரிசனம் கிட்டும்! இந்த மானிட வாழ்வு அதனால் சிறக்கும்!*

> [‘மை வண்ணன் ராமனின் தரிசனம் கிட்டும்’ என்ற வார்த்தைகள் , துளசியின் காதுகளில் திரும்பத் திரும்ப ஒலிக்கின்றன. ஆழ்ந்த சிந்தனை வயப்பட்டவனாக, அங்கிருந்து வெளியேறுகிறான் துளசி].

# காட்சி-528

*காசி க்ஷேத்திரம்*

**துளசி :** (தனக்குள்) புனித கங்கை புரளும், காசி க்ஷேத்திரத்திற்கு வந்துவிட்டேன்!

காணுமிடமெல்லாம், ராமநாமம் சொல்லியபடி, தவ முனிவர்கள் தியானத்தில் இருக்கிறார்கள்.

ராம தரிசனத்தைப் பெறும் பேறு, இங்குதான் எனக்குச் சித்திக்கவேண்டும்!

அதோ, அந்தத் தவமுனிவரிடம், என் தாகத்தைக் கூறுகிறேன்.

['ராம்! ராம்!' என்று உச்சரித்துக் கொண்டிருக்கும் முனிவரை, நெருங்குகிறான் துளசி]

**துளசி :** (முனிவரை நோக்கி) சுவாமி!

**முனிவர் :** ராம தரிசனத்தைப் பெறவேண்டுமென்று துடிக்கிறாய்! அது கிட்டுவதற்கு, ஆஞ்சநேயரைப் பற்றவேண்டும்!

**துளசி :** ஆஞ்சநேயரை எங்கு போய்ப் பார்ப்பது?

**முனிவர் :** ராமாயணக் கதை சொல்லுமிடமெல்லாம், அந்த ராமதூதர் அமர்ந்திருப்பார்!

நாலாவது தெருவிலே, ராமாயணக் கதை சொல்கிறார், ஒரு புராணிகர். நாளை அங்கு போய், ஆஞ்சநேயரைப் பாரும்! அந்த அனுமனிடம், ராமதரிசனம் பெறவேண்டு மென்று மன்றாடும்!

**துளசி :** ஆஞ்சநேயர், தன் உருவிலா அங்கு வந்திருப்பார்?

**முனிவர் :** அப்படி வந்திருந்தால், பக்த கோடிகள், அவருக்கு ஆரத்தி காட்டி, தங்கள் ஆசைகளை நிறைவேற்றச் சொல்லி வேண்டி, ராமன் கதையைக் கேட்காமல் விட்டு விடுவார்களே!

ஒரு கிழ அந்தணர் உருவத்திலே, ஆஞ்சநேயர், கதை கேட்டுக் கொண்டு இருப்பார்!

*அடையாளம் கண்டு, அவர் அருளால், ராம தரிசனத்தைப் பெற்றுப் பெருமை கொள்வாயாக!*

***துளசி :*** *வழிகாட்டிய தங்களுக்கு, என் விழி கொட்டும் நன்றிக் கண்ணீரைக் காணிக்கையாக்கி, விடைபெறுகிறேன் சுவாமி!*

*[துளசி அங்கிருந்து செல்கிறான்.*

*முனிவர் இப்பொழுது ஆஞ்ச நேயராக மாறித் தோற்றமளிக்கிறார்].*

## காட்சி-529

*உபன்யாசம் நடக்கும் இடம்*

[உபன்யாசம் கேட்க வந்த மக்களோடு துளசியும் அமர்ந்திருக்கிறான்.

அவன் கண்கள், அங்குள்ள மக்கள் ஒவ்வொருவரையும் உன்னிப்பாகப் பார்க்கின்றன.

இப்பொழுது அவன் கண்கள் கண்டு கொள்கின்றன, ஒரு வயோதிக அந்தணரை!

அவர்தான் ஆஞ்சநேயர் என்று தீர்மானம் செய்துகொள்கிறான்.

அவரை நோக்கித் தன் இரு கரங்களைக் கூப்பி, வணக்கத்தைச் செலுத்துகிறான்.

இப்பொழுது உபன்யாசம் தொடங்கி விடுகிறது.]

***உபன்யாசகர் :*** *எம்பெருமான் ராமபிரான், சீதையோடு, லட்சுமணனோடு, வனவாசத்திற்காக, அயோத்தியை விட்டுச் செல்லத் தேரில் ஏறுகிறார்.*

*தேர் வீதியிலே செல்கிறது. தேம்பி அழுகின்றனர், நகர மக்கள்!*

*[இப்பொழுது அந்த வயோதிக அந்தணர், தன் கண்ணீரைத் துடைத்துக் கொள்வதைப் பார்க்கிறான் துளசி].*

**உபன்யாசகர் :** திரண்டிருந்த மக்கள், தேரை மறிக்கின்றனர். எங்கள் தேயா நிலவின் முகம் பார்க்கவேண்டும் என்று அடம் பிடிக்கின்றனர்.

'சீதையும் லட்சுமணனும் உடன் செல்கிறார்களே; அவர்கள் கொடுத்து வைத்தவர்கள்!' என்று கூறுகிறார்கள்.

'வனவாசம் முடிந்து, எங்கள் வள்ளல் திரும்பும் பொழுது, நாங்கள் எத்தனை பேர் உயிரோடு இருப்போம் என்பது, எங்களுக்குத் தெரியாதே!' என்று கூறி அழுகின்றனர்.

[இப்பொழுது, அந்த வயோதிக அந்தணரும்
அழுவதைத் துளசி பார்க்கிறான்]

**உபன்யாசகர் :** சாரதி சுமந்திரன், கூட்டத்தை அரும்பாடுபட்டு விலக்கிவிட்டுத் தேரைச் செலுத்துகிறான்.

இப்பொழுது தந்தை, மன்னர் தசரதர், மகனைப் பார்க்க வேண்டும் என்ற பாசத்தால், அரண்மனையிலிருந்து வீதிக்கு ஓடி வருகிறார். 'ராமா! ராமா!' என்று கதறிக் கொண்டு, தேரின் பின்னால் ஓடிச் செல்கிறார்.

[இப்பொழுது அந்த வயோதிக அந்தணர், வாய்விட்டு
அழுவதைத் துளசி பார்த்துக் கண் கலங்குகிறான்]

**உபன்யாசகர் :** தேரின் வேகத்திற்கு ஈடு கொடுக்க முடியவில்லை மன்னரால்!

சென்றுகொண்டிருக்கும் தேரை, உயிரைத் தின்று கொண்டிருக்கும் துயரத்தோடு பார்த்துக் கொண்டு நிற்கிறார்.

தேர் மறைந்துவிட, மன்னர் மண்ணிலே சாய்கிறார்.

அவரை அரண்மனைக்குத் தூக்கிச் செல்கின்றனர்.

[இப்பொழுது, அந்த வயோதிக அந்தணர், வாய்
பொத்தி அழுவதைத் துளசி பார்க்கிறான்].

## காட்சி-530

*துளசியின் வீடு*

**மமதா :** (மாமியாரிடம்) உங்கள் பிள்ளை, காசி க்ஷேத்திரத்தில், ராம நாமத்தைச் சொல்லித் தியானத்தில் இருப்பதாக, அங்கு இருந்து வந்தவர்கள் சொன்னார்கள்.

**துளசியின் தாய் :** வேத வித்துக்குப் பிறந்தது, சொத்தை ஆகுமா? அவனுக்கிருக்கும் புலமைக்கு, அவன் ராமன் கதையைப் பாமரரும் தெரியச் சொல்லலாம்!

**மமதா :** ஆஞ்சநேயரின் அருள் வேண்டி, சித்தமெலாம் பக்தியிற் சேர்த்து, அங்கு காத்திருக்கிறாராம்!

**தாய் :** என் பிள்ளை, அந்தக் குகனைவிட, விபீஷணனை விட மேலானவன்! அந்த அயோத்தி ராமனின் அரவணைப்பு, அவனுக்கு நிச்சயமாகக் கிடைக்கும்!

**மமதா :** ராமன் இருக்குமிடந்தானே சீதைக்கு அயோத்தி! நானும் காசி க்ஷேத்திரத்திற்குச் சென்று, அவர் செய்யும் சேவையிலே சேர்ந்துகொள்ளலாம் என்று நினைக்கிறேன்!

**தாய் :** நான் மட்டும் பாவ ஜன்மமா? பகவத் சேவை, எனக்கு மறுக்கப்பட்டு விட்டதா? உன்னோடு நானும் வருகிறேன். புத்திரனைத் துறக்க முடியாது என்பதால்தான், பெண்களுக்குச் சன்யாசம் கிடையாது என்று வைத்திருக்கிறார்கள்!

## காட்சி-531

*உபன்யாசம் நடக்கும் இடம்*

[உபன்யாசம் முடிந்து, எல்லோரும் கலைந்து செல்கின்றனர். அந்த வயோதிக அந்தணரின் காலடியில் விழுந்து வணங்குகிறான் துளசி]

**துளசி :** ஆஞ்சநேய சுவாமி! ராம தரிசனம் எனக்குக் கிட்டத் தாங்கள் அருள் புரியவேண்டும்!

**அந்தணர் :** எழுந்திரு அப்பா! யாரை ஆஞ்சநேயர் என்று கூறுகிறாய்?

**துளசி :** தங்களைத்தான்! ராம கதை கேட்க வந்திருக்கிறீர்கள்!

**அந்தணர் :** உனக்கென்ன பைத்தியமா? இந்த ஈனமான மனுஷனைப் போய், அந்தச் சிரஞ்சீவி ஆஞ்சநேயர் என்று கூறுகிறாயே!

தெய்வ குற்றம் வந்துவிடப் போகிறது!

**துளசி :** தாங்கள் உள்ளம் உருக, கண்ணீர் திரள, வாய்விட்டு அழுது, ராம கதையைக் கேட்டதைப் பார்த்தேன்!

**அந்தணர் :** அதனால் நான் ஆஞ்சநேயர் ஆகிவிடுவேனா? நெஞ்சு இருப்போரெல்லாம் நினைந்து உருகும் காவியம் அது!

போகிற வழிக்குப் புண்ணியம் கிடைக்கட்டும் என்று இங்கு வந்து அமர்ந்திருக்கிறேன்!

**துளசி :** வயோதிக அந்தணர் உருவில், ஆஞ்சநேயர் கதை கேட்க வருவார் என்று, ஒரு முனிவர் எனக்குக் கூறினார்.

**அந்தணர் :** அந்த நல் ஆத்மா நான் இல்லை! என்னை விட்டுவிடு!

**துளசி :** (அந்தணரின் கைகளை இறுகப் பிடித்துக் கொண்டு) உங்களை நான் விடமாட்டேன்!

சீதாதேவியோடு, ராமரை நான் தரிசிக்கவேண்டும்!

**அந்தணர் :** அதற்குக் கோயிலுக்குப் போய்ப் பார்! கையை விடு.

**துளசி :** அப்படியானால் காலைப் பற்றுகிறேன்!

**அந்தணர் :** ஆஞ்ச நேயரின் வாலைக் கும்பிட்டால், வைகுந்தம் சேரலாம்! அது உண்மை.

என் காலை இப்படிப் பற்றினால், நான் கீழே விழுந்து விடுவேன்!

விழுந்த அதிர்ச்சியிலே, எனக்குத்தான் வைகுந்தம் கிடைக்கும்!

[இப்படிக் கூறி, அவனிடமிருந்து விடுபட்டு, கூட்டத்தில் மறைந்து விடுகிறார், அந்த அந்தணர்.]

## காட்சி-532

*கங்கைக் கரை*

**முனிவர் :** *(துளசியிடம்) அந்த வயோதிக அந்தணர் ஆஞ்ச நேயரேதான்! ஐயமே இல்லை!*

*நீ அவரை விட்டு விட்டால், கிட்டாது ராமதரிசனம்! நீ அவரைக் கட்டிக் கொள்! ஒட்டிக்கொள்! அவர் வெட்டிக்கொள்ள இடம் கொடுத்து விடாதே!*

*நாளை கதை கேட்க வருவார். உனக்கான வேளை அது! ஓய்ந்து விடாதே! அவர் உண்மை உருவைப் பார்க்காது ஒதுங்கி விடாதே!*

*கண்ணெதிரே தெய்வத்தைப் பார்த்தும், கை நழுவ விடலாமா?*

## காட்சி-533

*உபன்யாசம் நடக்கும் இடம்*

[உபன்யாசம் நடக்கும் இடத்தில், அந்த வயோதிக அந்தணர் அமர்ந்திருப்பதைத் துளசி பார்க்கிறான். அவர் இருக்கும் திக்கு நோக்கிக் கும்பிடுகிறான்.]

**உபன்யாசகர் :** *எம்பெருமான் ராமபிரான், சீதாப்பிராட்டியோடு, தம்பி லட்சுமணனோடு, சித்திர கூடத்தில், வனவாசம் மேற்கொண்டு இருக்கையிலே, அண்ணனை அயோத்திக்கு அழைத்துச் செல்வதற்காகப் பரதன் பெரும் படையோடு வருகிறான்.*

*இந்த ஆரவாரம் கேட்டு, யார் வருவது என்று அறிய, லட்சுமணன் மரத்தின் மீது ஏறிப் பார்க்கிறான். படையையும் பரதனையும் பார்த்தவுடன், லட்சுமணன் பரதனைப் பற்றித் தவறாகக் கருதிக் கொள்கிறான். தங்களைப்பரதன் கொல்ல வருவதாகக் கோபப்பட்டுப் பேசுகிறான். தன் தாயால் நாடு கிடைத்தும், அந்த நயவஞ்சகனுக்குத் திருப்தி இல்லை*

போலும் என்று பேசுகிறான். அந்தப் பரதனையும், அவன் பெரும் படையையும் அழித்தொழிக்க அனுமதி கொடுக்குமாறு, அண்ணனை வற்புறுத்துகிறான்.

என் எம்பெருமானோ, சாந்தம் தவழும் முகத்தோடு, தன் தம்பியை அமைதிப்படுத்துகிறார்.

''தந்தையின் வாக்கைக் காப்பாற்றக் காட்டிற்கு வந்தோம்; அப்படியிருக்கத் தம்பியைக் கொன்று, நாட்டைக் கைப்பற்றினால், தர்மத்தைக் கொன்றவன் ஆவேன்!; எனக்குத் தர்மத்தின் மேல் நாட்டமே தவிர, நாட்டின் மீது அல்ல'' என்று எம்பெருமான் கூறுகிறார்.

[இந்தப் பேச்சை, அந்த வயோதிக அந்தணர், அனுபவித்துக் கேட்டுக் கொண்டிருப்பதைத் துளசி பார்க்கிறான்.]

**உபன்யாசகர் :** ''தம்பியைக் கொன்று, தன் தலையிலே, இந்த ராமன், மணிமுடியைச் சூடிக் கொள்வான் என்று நினைத்து விட்டாயே! இதுவே எனக்கு வேதனையைத் தருகிறது'' என்று எம்பெருமான் பேசுகிறார்.

[அந்த வயோதிக அந்தணர், தலையை ஆட்டி அனுபவிப்பதைத் துளசி பார்க்கிறான்.]

**உபன்யாசகர் :** ''லட்சுமணா! பரதன், உத்தம குணங்கள் உறையும் திருஉருவம்; அவனைப் பற்றித் தவறாக எண்ணுவது, தர்மம் ஆகாது; அவனைக் கொல்வேன் என்ற கூச்சல், என்னைக் குலைநடுங்கச் செய்கிறது!; லட்சுமணா! உனக்கு நாட்டை ஆள ஆசையென்றால் சொல்லு; பரதனிடம் பேசி, உனக்கு நாட்டைப் பெற்றுத் தருகிறேன்; என் பேச்சை, என் பரதன் தட்ட மாட்டான்!'' - என்று எம்பெருமான் பேச, லட்சுமணன் அழுதபடி, எம்பெருமானிடம் மன்னிப்புக் கோருகிறான்.

['ஆஹா!' என்று கூறி, அந்த வயோதிக அந்தணர், பேச்சை அனுபவித்துக் கொண்டிருப்பதைத் துளசி பார்க்கிறான்.]

## காட்சி-534

*கங்கைக் கரை*

**முனிவர் :** *(மமதா, துளசியின் தாய் இவர்களைப் பார்த்து) நீங்கள் தேடுகின்ற துளசி என்பவர், ராமாயணக் காலட்சேபம் கேட்க, நாலாவது தெருவிற்குச் சென்றிருக்கிறார். பொறுத்திருங்கள். இங்கு வந்து விடுவார்.*

## காட்சி-536

*வீதி*

[உபன்யாசம் முடிந்து திரும்பிக் கொண்டிருக்கும் அந்த வயோதிக அந்தணரின் கையோடு, தன் கையையும், ஒரு துணியால் கட்டிக் கொண்டு, அவரோடு நடக்கிறான் துளசி.]

**துளசி :** *இன்று உங்களைப் பிரிவதாக இல்லை! ராமதரிசனம் பெறாமல், இந்தக் கைக்கட்டை அவிழ்ப்பதாக இல்லை!*

*நீங்கள் ஆஞ்சநேயர் என்பதில், எனக்கு ஐயம் இல்லை!*

**அந்தணர் :** நான் வேகமாக நடப்பேன். உன்னால் அதற்கு ஈடுகொடுத்து நடக்க முடியுமா?

**துளசி :** *நீங்கள் விஸ்வரூபம் எடுத்தாலும், உங்கள் கையோடு பிணைப்புண்டு, தொங்கிக் கொண்டிருப்பேன்!*

**அந்தணர் :** நான் இப்பொழுது ஓடப்போகிறேன்.

**துளசி :** *தங்களின் இன்னொரு வாலாக, நான் தரையில் உரசியபடியே வருவேன்!*

**அந்தணர் :** கூறுவதைச் செய்கிறேன். நீ கூக்குரல் இட்டால், உன்னை விட்டு விடுகிறேன்!

**துளசி :** *குருதி கொப்பளித்தாலும், குளிர் சந்தனமாக அதை ஏற்பேன்!*

[அந்தணர் வேகமாக ஓடத், துளசி தெருவில் இழுபட்டபடி வருகிறாள். துளசியின் உடம்பெல்லாம் சிராய்ப்பு ஏற்பட்டு, குருதி கொட்டுகிறது. அந்தணர் இப்பொழுது ஓடுவதை நிறுத்தி விட்டுத் துளசியை அள்ளி எடுத்து, ஆதரவாக அணைத்துக் கொள்கிறார்.]

## காட்சி-536

*கங்கைக் கரை*

[காசி க்ஷேத்திரத்தில் உள்ள கங்கைக் கரைக்கு, துளசியின் தந்தை ஆத்மராமும் வந்து விடுகிறார். அங்கு, தன் மனைவியையும், மமதாவையும் பார்த்து வியப்பு அடைகிறார்.]

**ஆத்மராம் :** (வியப்போடு) நீங்கள் எங்கே இங்கு?

**துளசியின் தாய் :** துளசி இங்கு வந்திருப்பதாக அறிந்து, இங்கு வந்தோம், நீங்கள்....?

**ஆத்மராம் :** 'காசிக்குப்போ!; பாமரனுக்கும் ராமனின் பெருமை புரிய வழி பிறக்கும்!; வாழ்த்தி விட்டு வா!' என்றொரு தெய்வீகக் குரல் கேட்டது. அதனால் இங்கு வந்தேன்.

## காட்சி-537

*காசி க்ஷேத்திரத்தில் ஒரு வீதி*

[ஆஞ்சநேயர் இப்பொழுது துளசியின் எதிரில், தன் சுய உருவோடு நிற்கிறார்.]

**ஆஞ்சநேயர் :** துளசி! அந்தணனாக வந்தது நான்தான் என்பதை, உனக்குச் சொன்ன முனிவனும் நான்தான்!

*நீ, என் ஐயன் ராமனைப் பாடப் பிறந்தவன்! இங்குள்ள பாமரனுக்கும் புரியும் இந்திமொழியில், இதிகாசம் படைக்கப் பிறந்தவன்!*

*ராமநாமம், உன் புலமையால், எங்கும் பரவும்! அதனால், தர்மம், தன் கோலம் கெடாமல், இந்த மண்ணிலே நிலைக்கும்!*

*நீ பாட ஆரம்பித்தவுடன், பகவான் ராமனின் தரிசனமும் உனக்குக் கிட்டும்!*

*உன் தந்தையும் தாயும் மனையாளும், இப்போது இங்குதான், காசி க்ஷேத்திரத்தில், உன்னைத்தேடி வந்திருக் கிறார்கள்.*

*அவர்களோடு, ஒரு கிருகத்தில் இருந்து, ராமன் கதையைப் பாடத் தொடங்கு!*

***துளசி :*** *சுவாமி! ராமன் கதை விரிவாக எனக்குத் தெரியாதே!*

***ஆஞ்சநேயர் :*** *உன் வாக்கிலே நான் இருப்பேன்! ராமனைப்பேசு! அது தர்மத்தின் பேச்சு! பகவானைப் பற்றிய பேச்சு! பாவம் தொலைக்கும் பேச்சு! கலியிலும் வாழலாம் என்று வழிகண்ட பேச்சு!*

## காட்சி-538

*ஒரு வீடு*

[காசி க்ஷேத்திரத்தில், துளசி குடியிருக்கும் வீடு, கோலமிட்டு அலங்கரிக்கப்பட்டிருக்கிறது.

அவனுடைய தாயும், தந்தையும், மனைவியும், ராமகதை கேட்க வருபவர்களை, வரவேற்றுக் கொண்டிருக்கின்றனர். ஆஞ்சநேயரும், வயோதிக அந்தணர் உருவில், அங்கு அமர்ந்திருக்கிறார்.]

***அந்தணர் :*** *துளசிதாசரே!*

***துளசி :*** *என்ன இது புதுநாம கரணம்!*

**அந்தணர் :** தூயவனை நீர்பாடப் போவதால், நீர் தாசனாகி விட்டீர்! இந்தத் தரணிக்கு ஆசானாகி விட்டீர்! இப்பொழுது ராமகதையைச் சொல்ல ஆரம்பிக்கலாம்.

**துளசி :** (கையெடுத்துக் கும்பிட்டபடி) வாக்குத் தேவியான, வாணி தேவியை முதலில் வணங்குகிறேன்.

விக்கினம் இல்லாமல், தொடங்கியதை முடித்து வைக்கும் விநாயகப் பெருமானுக்கு, என் நமஸ்காரங்கள்.

என் சிந்தையில் நிறைந்திருக்கும் சிவனாரையும், பர்வததேவி பார்வதி தேவியாரையும், நெகிழ்கின்ற நெஞ்சோடு தொழுகிறேன்.

ஆதியிலே, ராமபிரானைப் பாடிய, அருந்தவ முனிவர் வால்மீகியைக் கும்பிட்டு மனம் குளிர்கிறேன்.

அனுமன் இல்லையேல், ராமன் இல்லை என்று சொல்லும் அளவு, ராமன் வாழ்விலே ஓர் அங்கம் ஆகிவிட்ட ஆஞ்சநேயரை, அடி பணிந்துபோற்றுகிறேன்.

[இப்பொழுது துளசி, அந்த வயோதிக அந்தணரை நோக்கிக் கும்பிடுகிறான்.]

**துளசி :** ராமனாக அவதரித்த அந்த நாராயணனை, வைகுந்த வாசனை, லட்சுமி மணாளனை, பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் அந்தப் பரந்தாமனை, அந்தச் சங்கு சக்கரதாரியை, சர்வமும் அவனே என்று வேதம் சுட்டிக் காட்டும் விஸ்வரூபனை, தொழுது தொழுது அழுகிறேன்! அழுது அழுது தொழுகிறேன்!

[விம்முகிறான். வாய் விட்டு அழுகிறான்.]

**துளசி :** திரேதா யுகம்கண்ட ராமதரிசனம், இந்தக் கலியுகத்தில் காணப் பெறுவேனா?- என்ற ஏக்கத்தோடு இளைத்துக் களைத்து நிற்கின்றேன்!

தெய்வீகக் கோலத்தைக் காட்டிவிட்டால், தேனாறு என ராமசரிதத்தைப் பாயவிட்டு, என் பிறவியை இனிமையாக்கிக் கொள்வேன்!

*[இப்பொழுது ராம பிரான், சீதா தேவியோடு, அங்கு வந்து நிற்பதைப் பார்க்கிறான் துளசி.*

*அந்தணர், கை கூப்பியபடி எழுந்து நிற்க, துளசி 'ராம்! ராம்!' என்று கூத்தாடுகிறான்.]*

**துளசி :** கண்டு கொண்டேன் என் கருமணியை, அவன் கண்ணிற் பாவையோடு; கமலச்செல்வியோடு! வனவாசம் கண்டவன், என் கிருகவாசம் நாடி, இங்கு வந்து நிற்பதைக் கண்டு கொண்டேன்! முனிவர்கள் வண்டுகளாக மொய்க்கும், அவன் இருபாத மலர்களைக் காண்கிறேன்!

மூவுலகமும் இங்கு அடக்கம் என்பதைப் போல, மூன்று மடிப்பு கொண்ட, அவன் அழகான வயிற்றைக் காண்கிறேன்!

சுழித்து ஓடும் யமுனையின் வளைவை, அந்த அழகை, இங்கும் காண்கிறேன்!

மருக்கொண்ட மார்பைக் காண்கிறேன்! அதில் ஒளி விடும் மணிகளை ஆரமாகக் காண்கிறேன்!

யானையின் துதிக்கை போல, நீண்ட வலிமையான கரங்களைக் காண்கிறேன்!

சங்குக் கழுத்தை இந்தச் சர்வேஸ்வரனிடம் காண்கிறேன்!

கமலக் கண்கள், பவள இதழ்கள், பளீரென ஒளிவிடும் பற்கள், மோகத்தை வேகப்படுத்தும் மூக்கு, அணிக்கு ஓர் அணிகலனா என்பதுபோலக் காதணி அணிந்த திருக்காதுகள், வில்லாக வளைந்து நிற்கும் புருவங்கள், திருநாமம் தரித்திருக்கும் திவ்ய தேசமான திருநெற்றி, இவற்றையெல்லாம் பார்க்கின்றபோது, நிலவின் ஒளி, எனக்கு நெருப்பாகத்தான் தெரிகிறது!

அம்மையையும் அருகு காண்கிறேன்! பெண்மையைக் காண்கிறேன்! அதன் பேச இயலாப் பெருமையைக் காண்கிறேன்! ஊற்றெடுத்த இந்த உவகைப் பெருக்கோடு, இப்பொழுது ராம கதையைப்பேசத் தொடங்குகிறேன்!

## காட்சி-539

*வானம்*

[வானத்திலே, ஆஞ்சநேயரின் விஸ்வரூபக் காட்சி தெரிகிறது.]

**பின்னணிக்குரல் :** பாடினான் துளசி, பாமரனும் ராமன் கதையைத் தெரிந்து கொள்ள!

இம் மண்ணிலுள்ள கவிஞர்கள் எல்லாம், தங்கள் மொழியில் கோசலை மைந்தனைப் பாடினர்.

ஆஞ்சநேயரின் எண்ணம் இதுதானே! வண்ணமுற இது நிகழத்தானே, அவர் வலம் வந்து கொண்டிருக்கிறார்!

ராம நாமத்தை எங்கும் முழங்கச் செய்கிறார்! தர்மத்திற்கு வாழ்வை, வளமாக அளித்துக் கொண்டிருக்கிறார்!

கலியின் வலியொடுங்கத், தன் கருணையை, உயிர்களுக்கு வழங்கிக் கொண்டிருக்கிறார்!

## காட்சி-540

*பலக்ஷேத்திரங்கள்*

**பின்னணிக்குரல் :** ஊர்தோறும், ஆஞ்சநேயருக்குக் கோயில் எடுத்து, அவரைக்கும்பிட்டு, மனம் குளிர்கின்றனர் மக்கள்.

[பல ஆஞ்சநேயர் கோயில்கள் காட்டப்பெறுகின்றன.]

**பின்னணிக்குரல் :** தடை பல கடந்து, ராமனுக்கு வெற்றியைத் தேடித் தந்தவரை, வடைமாலை சாத்தி வழிபடுகின்றனர்.

[அவ்வாறு வழிபடுவது, காட்டப்படுகிறது.]

**பின்னணிக் குரல் :** தனக்குப் பரிசளித்த முத்து மாலையை உடைத்து, உள்ளே ராமர் இருக்கிறாரா, என்று பார்த்தவர் ஆஞ்சநேயர்.

அதை நினைவூட்டும் பான்மைபோல, வடையிலே துளையிட்டு, அதை அவர் கழுத்திலே மாலையாகக்

கோத்துத் தொங்கவிட்டு, துளை வழியே ராமபிரானைப் பார்க்கலாம் என்ற தோரணையிலே, இந்த வழிபாடு, உரிமை யோடு, மகிழ்ச்சியோடு செய்யப்படுகிறது.

வெற்றிலை மாலையிட்டும், இந்த வீரனை வணங்கு கிறார்கள்.

[அவ்வாறு வணங்குவது காட்டப்படுகிறது.]

**பின்னணிக் குரல் :** அசோகவனத்தில் சீதாதேவி, அனுமனை வாழ்த்தும்போது, அவர் சிரசிலே, வெற்றிலையைப் போட்டு வாழ்த்தியதாக, ஒரு கதை, நம் மக்களின் செவிகளில் சேர்ந்திருக்கிறது. அதன் காரணமாக, வெற்றிலை மாலை யிட்டுத் தர்மத்தின் தனிக் காவலனை ஆராதிக்கும் பழக்கம் இருக்கிறது.

வெண்ணை சாத்தி, ஆஞ்சநேயரை வழிபடுவதும் விசேஷமாகும்!

[அவ்வாறு வழிபடுவது காட்டப்படுகிறது.]

**பின்னணிக் குரல் :** ராம நாமத்தால், வெண்ணைபோல் உருகுபவர் ஆஞ்சநேயர்.

அந்த வெண்ணையை அவருக்குப் படைக்கும்போது, ராமநாமம், நம் நெஞ்சிலே கூத்தாடும்!

இந்தப் பக்தி கோலாகலத்தைக் காணத்தான், இந்த வழிபாடு.

ஆஞ்சநேயரின் திரு உருவிலே, வாலிலே, குங்குமப் பொட்டு வைத்து, வழிபடும் முறையையும் காண்கிறோம்.

[அவ்வாறு வழிபடுவது காட்டப்படுகிறது.]

**பின்னணிக்குரல் :** எண் சாண் உடம்பிற்குத் தலையே பிரதானம்-மற்றவர்களுக்கு!

ஆஞ்சநேயருக்கு, வாலில் வல்லமை அதிகம்! லங்கையை எரியூட்டியது அந்த வால்தான்! எதிரிகளைச் சுருட்டி வீசியதும், அந்த வால்தான்! அதைப்பொட்டிட்டுப் பூஜிப்பதால், நினைத்த காரியம் கைகூடும் என்ற நம்பிக்கை யால், இவ்வழிபாட்டை நிகழ்த்துகின்றனர்.

புலன் அடக்கம், ஆஞ்சநேயர், இந்தப் பூமிக்குத் தருகின்ற பாடமாகும்.

பேய், பிசாசு, பில்லி சூனியப்பகை, இந்தப் பெருமானைக் கண்டால், விட்டு விலகும்.

ஆஞ்சநேயரைத் தொழுதவர்க்குத் தோல்வியில்லை! இவர் சந்நிதியில் திரளும் பக்தர்களே, இதற்குச் சான்று!

## காட்சி-541

*ஒரு மண்டபம்*

[ஒரு மண்டபத்தில், 'ராம்! ராம்!' என்று பாடிப் பக்த பெருமக்கள் ஆடுகின்றனர்.

இவர்களிடையே, வேறு மானிட உருவில், ஆஞ்சநேயரும் பாடி ஆடிக் கொண்டிருக்கிறார். இடை இடையே, தன் சுய உருவிலும் காட்சியளிக்கிறார்.]

**பின்னணிக்குரல் :** *பஞ்ச பூதங்களாகிய அஞ்சிலே ஒன்றான வாயுவின் புத்திரன், அஞ்சிலே ஒன்றான ஆகாயத்தில் தாவி, அஞ்சிலே ஒன்றான நீராகிய கடலைத் தாண்டி, ஆர் உயிராகிய ராமனுக்காக ஏகி, அஞ்சிலே ஒன்றான மண்ணின் மாதா பெற்றெடுத்த அணங்கைக் கண்டு, அயலார் ஊராகிய லங்கையை, அஞ்சிலே ஒன்றான தீயை வைத்து அழித்தான்!*

*அந்த ஆற்றல் மறவன், ராமநாமம் சொல்லும் பக்தர்களைக் கருணையோடு காத்து, அவர்களுக்குத் துணையாவான்!*

*வாழ்க அனுமன் புகழ்!*

*வாழிய ராமநாமம்!*

*வாழ்க வாழ்கவே, ஆஞ்சநேய வழிபாடு!*



# ஆசிரியரின் பிற நூல்கள்

அற்புதர் இராமானுஜர்

பாண்டுரங்கன் தரிசனம்

ஆழ்வாரும் ஆண்டாளும்

108 திவ்ய தேசங்கள்

ஞானசௌந்தரி